# பாகம் 3

## 1 தமிழ்

அன்று வெள்ளித் தகட்டால் பூமியைச் சிறை வைத்ததாக வெயில் எங்கும் நெருக்கமாக எறித்தது. கோடைக்கால விடுமுறைக்கு வெளிநாட்டிற்கு ஓடும் பொருளாதார வளம் இல்லாத காலம். இருப்பவர்களும் இலங்கைப் பணத்திற்குப் பெருக்கிப் பார்த்து சொர்க்கிப் போய் பயணங்களைக் கைவிட்டு, ஒஸ்லோவில் சுற்றித் திரிந்த நேரம். பணத்தின் தேவை மலை போல வளரும் திகைப்பில் அனுபவிப்பு என்பதைத் தலை குப்பறச் சவக்குழிக்குள் தள்ள வேண்டிய சமுதாயக் கட்டாயம். சுதேசிகள் போல யாருக்கும் சேர்க்க வேண்டும் அல்லது கொடுக்க வேண்டும் என்று எண்ணாது இருக்கும் ஒரு கணம்கூட எம்மவருக்குக் கனவிலும் வராது. தாலிக்கொடி தொடக்கம் குடியிருக்கும் வீடு வரை வெளிநாட்டுப் பயணத்திற்கு முதலீடான உண்மையை மறக்க முடியாத நிதர்சனம். வந்த காசு கட்டினாலும் வாழ்க்கைப்பட்டுப் போகும் பெண் சகோதரங்களுக்குத் தாரைவார்க்க வேண்டிய லஞ்சப் பணத்தை மிச்சம் பிடிக்கும் பிரயத்தனம். அது முடிந்த பின்பு மச்சானை வெளிநாட்டிற்கு எடுப்பதற்கான முதலீட்டின் தொடக்கம். தேவைகள் முடிவிலிகளாக, நேரம் குதிரைக் கொம்பாகும் வாழ்க்கை பலருக்கு. அதன் பிடியில் இருந்து விடுபட முடியாது ஓடவேண்டிய கட்டாயம். அந்தக் கட்டாயத்திலும் சில வேளைக் களைப்பாறும் சந்தர்ப்பங்கள்.

ஒஸ்லோவில் வெயில் எறித்தால் கூடுவதற்கு அழகான பூங்காக்கள் இருந்தன. அதில் ஒன்று தொய்யன் பூங்கா. ஒரு கிலோமீற்ரருக்கு நீளும் பரப்பில் அதன் ஆட்சி. சோபியன்வர்க் தமிழர்களின் ஞானஸ்த்தலம். ஆரம்ப ஞான வளர்ச்சிக்கான அஸ்திவாரங்கள் இங்குதான் இடப்பட்டன. சோபியன்வர்க் பூங்கா என்பது ஒரு சிறிய குன்றிற்கும் மூன்று பக்கச் சந்தடியான வீதிகளுக்கும் இடையில் சிறை பிடிக்கப்பட்ட பசுமையான பகுதி. ஒரு பக்கத்தில் குழந்தைப் பிள்ளைகளைப் பராமரிக்கும் காப்பகம், அதற்கப்பால் வீடுகள், அதைத் தொடர்ந்து உதைபந்தாட்ட மைதானம், அப்பால் ஒஸ்லோவின் மிகப் பெரிய நீச்சல் தடாகம் என்பன அங்கு இருக்கின்றன. பூங்காவின்

மத்தியில் சாலையை அண்டி மூன்று நிரைக்கு அடுக்குமாடி வீடுகள் தொடராக... இடையில் வாகனங்கள் நிறுத்தும் இடமும் ஒன்று உண்டு. அது இல்லாதவர்களுக்குத் தெருவில் நிறுத்தும் வசதி. அதைத் தாண்டினால் பசும்புல் மைதானம் வருகிறது. சூரியனைக் கண்டால் மனிதர்கள் கருவாடாக முயல்வது இந்த இடத்தில் நடக்கும். கருவாடாகும் முயற்சியில் குங்கும நிறத்தில் மனிதர்கள் நடமாடுவதை "TS" பார்த்திருக்கிறார்.

ஒஸ்லோவின் தொய்யன் பகுதியில் வெளிநாட்டவர் செறிவாக வாழத் தொடங்கிய காலம். என்றாலும் சுதேசிகள் இன்னும் பெரும்பான்மையை இளக்காத கோலம். மந்திரிகள் குடியிருக்கும் வீடுகளில் ஒன்றும் அந்தப் பூங்காவிற்குள் குந்தி இருந்தது. அங்கு ஒன்றும் இங்கு ஒன்றுமாய் மரங்களின் ஆட்சி. பச்சை அலையான புல்லின் குளிர்மையான விரிப்பு. அங்கே சென்று அரைகுறை ஆடையுடன் கையைக் காலை எறிந்துவிட்டுப் படுக்கும் கலாச்சாரம் இன்னும் தமிழருக்கு அன்னியமாகவே இருந்தது. சுதேசிகள் அந்தப் பொழுதைக் குளிர்ந்த வியரோடு ஆனந்தமாகக் கழிப்பார்கள். சிலர் இறைச்சி வாட்டி அதற்கான துணை உணவோடு உண்டு மகிழ்ந்து குடும்பத்தைப் பூங்காவிலேயே நடத்துவார்கள். கறுப்பர்கள் தங்கள் தோலை எப்படி வெள்ளை ஆக்குவது என்று மூளையை நோண்ட, வெள்ளையர்கள் வெள்ளைத் தோலை எப்படி வேறு நிறமாக்கலாம் என்கின்ற ஆதங்கத்தில் வாட்டும் வெயிலில் வதங்கும் மனித வற்றல்களாக உயிரோடு காயும் கொடூரம் இங்கே. அந்தக் கொடூரத்தில் தோல் வெந்து போகாமல் இருக்கப் பூசிக் கொள்ளும் சூரியக் கதிர் எதிர்ப்புக் குளம்புகள். சிவாவிற்கு நேரம் குதிரைக் கொம்பானதோ இல்லையோ இன்று பகல் வேலை என்கின்ற வேகம். வெயிலால் ஏற்பட்ட தாகத்தில் இருப்பவர்களுக்கு வியர் பரிமாற வேண்டிய கடமை. தாமோதரன் இறைச்சி வாட்டப் போவதாய் அலை பேசியில் அறிவித்து இருந்தார். அருள், சொரூபன், றூபன், சண்முகன் எப்போதும் அதற்கு வேண்டாம் மறுப்பு சொல்லமாட்டார்கள். தாமோதரன் வியர் பிரியன். அவர் வீட்டில் எப்போதும் வியர் தயாராக இருக்கும். பொழுது போகாவிட்டால் பிள்ளைகளோடும் விளையாடலாம் என்கின்ற வசதி. பிள்ளைகளை அரச குமாரர்களாக ஏந்தும் தாமோதரன். நாட்டில் மூர்க்கமாகப் போர் நடந்து ஈழம் பிரிய வேண்டும் என்று துடிப்பவர். காசு சேர்க்கும் போது ஒளித்துத் திரியாது இயலுமானவரை

அள்ளிக் கொடுப்பவர். இலங்கை யுத்தம் என்பது தமிழருக்கு மட்டுமே இளைக்கப்பட்ட அநீதி என்பதைப் பலமாக நம்புபவர்.

"TS"சிற்கும் தாமோதரன் போன் செய்திருந்தார். "நாங்கள் வருகிறோம்." என்று சொல்லி வைத்தார். யார் யார் போவோம் என்பதில் அவருக்கு நிச்சயம் இல்லை. புவனலோசினி விருப்பம் இல்லாவிட்டாலும் "TS"சின் முகம் கோணக் கூடாது என்பதற்காகத் தாளம் போடுவாள். இப்போது அவளில் நிறையவே முன்னேற்றம். சில வேளைகளில் அவரைக் கட்டிப் பிடித்துக் கொண்டு படுப்பாள். "TS" அந்த நேரங்களில் மீண்டும் இளமை திரும்பியதாய் பூரித்துப் போவார். வயது வந்த பின்பு ஏற்படும் இழப்புக்களை மனிதர்களால் இலகுவாக ஜீரணித்துக் கொள்ள முடியும் என்று அவர் நம்பினார். சரிஸ்கா புயல் போன்றவள். எந்தப் பக்கம் எப்போது வீசுவாள் என்பது தெரியாது சுழன்று அடிக்கும் புயல்.

"TS" சரிஸ்காவை அழைத்துத் தாமோதரன் விருந்திற்கு அழைத்து இருப்பதைப் பற்றிக் கூறினார். அவள் அதிகம் யோசிக்கவில்லை.

"நான் வரேல்லை அப்பா." என்றாள். "TS" விளக்கம் கேட்கவில்லை. கேட்டால் அது குமுறல் ஆகும். அவளைக் கூடிய மட்டும் அவள் விருப்பத்திற்கு விடுவது தான் எல்லோருக்கும் நன்மை ஆனது என மருத்துவர் அறிவுறுத்தி இருந்தார். மருத்துவர் சொல்லா விட்டாலும் "TS" அவளை வற்புறுத்தியது இல்லை. இப்போது அவர் வற்புறுத்தும் மனநிலையிலும் இல்லை.

"TS"சும் புவனலோசினியும் போகும் போது சந்தியில் இருந்த "றீமி"க் கடைக்குள் புகுந்தார்கள். வாட்டுவதற்கு ஆகத் தயாரித்து வைத்து இருந்த கோழிக் கால்கள் இரண்டு பொதியையும், உருளைக்கிழங்குப் பொரியல் இரண்டு பொதிகளையும் எடுத்தார்கள். வெறுங்கையோடு போவது "TS"சிற்குப் பிடிக்காது.

இவர்கள் அங்கே போன போது இளைஞர்கள் எல்லோரும் வந்து விட்டார்கள். அவர்களின் வீட்டின் ஒரு பக்கத்தில் இருந்த இறைச்சி வாட்டும் தகர அடுப்பிற்குப் பக்கத்தில் பத்து நபர்கள் இருக்கக்கூடிய மரத்தால் செய்யப்பட்ட மேசையும், அதற்கான இருக்கையும் இருந்தது. இளைஞர்கள் அந்த இருக்கையில் ஆளுக்கு ஒரு

வியரோடு பால் போத்தலைக் கண்ட குழந்தையின் ஆர்வத்தோடு சுகித்தனர். பெண்களுக்கும் சிறுவர்களுக்கும் கடதாசிக் குவளைகளில் கோலா ஊற்றி அதற்குள் ஆலம் கட்டி போட்டுப் பரிமாறினர். தாமோதரன் நிலக்கரியைக் கொட்டித் தீ மூட்டினார். தீ மூட்டப் பாவிக்கும் திரவம் நாறியது. அதன் நாற்றம் மறைந்து நன்கு தணல் விழுந்த பின்பு இறைச்சி வாட்டத் தொடங்க வேண்டும். "TS"சையும் புவனலோசினியையும் கண்ட மாலினி பொறுக்க முடியாதவளாய்,

"எங்க சரிஸ்கா வரேல்லையே?" என்றாள்.

"இல்லை... அவளுக்கு வெயிலுக்க நிண்டாத் தலை இடிக்குதாம். இங்கத்தே வெயில் அவளுக்கு ஒத்து வருகுது இல்லை. எங்களுக்கே ஒரு மாதிரி தானே இருக்குது. மேல் எல்லாம் எரியும்... ஆனா... வேர்க்காது." என்றார் "TS" தனது சொற்களே தனக்கு அன்னியமான உணர்வோடு.

"அப்ப இனி சரிஸ்கா பார்ட்டிக்கு வந்தால் ஓட்டப் போட்டி வைப்பம்." என்றான் சண்முகன். "TS" அதற்குப் பதில் சொல்ல வில்லை. அருள் மேலும் ஒரு மிடரை இழுத்தான். சொரூபனும், றூபனும், நரேசோடும், குணேசோடும் தனகினர்.

"அக்கா... மேல போய் வாட்டுகிற சாமான்களை எடுத்து வருவமே?" என்றாள் மாலினி புவனலோசினியைப் பார்த்து.

"நாங்களும் இரண்டு பக்கேற் கொண்டு வந்தம்." என்றாள் புவனலோசினி.

"அது அப்ப இங்க இருக்கட்டும். நான் செய்து வைச்சதை எடுத்துக் கொண்டு வந்தம் எண்டா வாட்டத் தொடங்கலாம்." என்றாள் மாலினி.

"சரி வாங்க." என்று புவனலோசினி கூறிய பின்பு இருவரும் வாசலை நோக்கி நடந்தார்கள்.

மாலினி நிறைய அலுவல்கள் செய்து இருப்பது உள்ளே போன போது புவனலோசினிக்கு விளங்கியது. வாட்டுவதற்குக் கோழிக்கு உப்பு, எண்ணை, மிளகு, மற்றும் மசாலாப் பொருட்கள் இட்டுப் பிரட்டி ஊற வைத்து இருந்தாள். அதைப் போல பண்டி இறைச்சிக்கும் செய்து இருந்தாள். குழந்தைகளுக்கு "Hot dog"ம், அதை

வைத்துச் சாப்பிடும் சிறியவகை ரொட்டியும் தயாராக இருந்தன. அதைவிட ஈயத் தாளிற்குள் சுற்றப்பட்ட மீன் தயாராக இருந்தது. மீனின் வயிற்றை ஆழமாகக் கீறி அதற்குள் நெய், வெண்காயம், பச்சை மிளகாய், உப்பு, மிளகு என்பவற்றை அடைந்து ஈயத் தாளில் சுற்றி அது செய்யப்பட்டு இருந்தது. கத்தரிக்காய் வட்டமாகவும், மொத்தமாகவும் வாட்ட ஏதுவாக வெட்டி அதற்கு எண்ணெய், உப்பு மிளகு தடவி வைத்து இருந்தாள். அப்படியே குடமிளகாயும், பிறக்கோலியும் செய்து வைத்து இருந்தாள். இதற்குத் துணைச் சாப்பாடாக உருளைக் கிழங்குச் சலாத்தும் தயாராக இருந்தது. இதைப் பார்த்த புவனலோசினிக்கு மனதிற்குள் ஒருவித உறுத்தலாகிற்று. இவ்வளவு செய்வது என்றால் தானும் வந்து உதவி இருக்கலாம் என்கின்ற ஆதங்கம் ஏற்பட்டது. அவள் அதை மாலினியிடமே கூறினாள்.

"இவ்வளவு செய்யிறது எண்டா என்னையும் கூப்பிட்டு இருக்கலாமே? தனிய நிண்டு ஏன் மாஞ்சனியள்? ஊர மாதிரிச் சொந்தங்கள் எண்டு சொல்ல இங்க யார் இருக்கினம்? அப்ப எல்லா விதமாகவும் நாங்கள் பழகத் தானே வேணும். ஐஞ்சு பேர் எண்டாத் தனியச் சமைக்கலாம். அதுக்குக் கூட நாரி முறியிற வேலை எல்லோ?"

"சும்மா இருங்க அக்கா. அது தமிழ் சாப்பாடு எண்டால் நீங்கள் சொல்லுகிறது நியாயம். அப்பிடி இருந்தும் ஊரில அடுப்பை ஊதி ஊதி உதைவிட எவ்வளவு செய்திருப்பம்? இதெல்லாம் ஒரு பெரிய வேலை எண்டு சொல்லுகிறியள். சும்மா உப்பை, எண்ணெய்யைப் பூசிப் போட்டு நெருப்பில வாட்டி எடுக்கிறது ஒரு அலுவலே? சும்மா சொல்லக் கூடாது அக்கா... சிம்பிளாச் செய்தாலும் ருசியாகத் தான் இருக்குது இல்லையே?" என்றாள் அவள்.

"உண்மை தான்... உப்பு, எண்ணெய், சீனி சாப்பாட்டில சேர்த்தா ருசி வரத்தான் செய்யுது. ஆனா... அது உடம்புக்கும் கூடாதாம். அமுதம் எண்டாலும் அளவு மீறக் கூடாது. இங்க சாப்பாட்டு விலைக்கும் வருவாய்க்கும் இடையில இருக்கிற இடைவெளி அமுதத்தை அளவுக்கு மிஞ்சித் தந்து, தொண்டை விட்டு இறங்கினதும் உண்டவனை நஞ்சுண்ட மேனியர் ஆக்குது. அது சரி... இதை மூண்டு தரமாகக் கொண்டு போக வேணும் போல இருக்குது." என்றாள் புவனலோசினி.

"இல்லை... வரேக்க பெடியளையும் கூட்டிக் கொண்டு வருவம். இவங்கள் ஓடி.. ஓடி... உடற் பயிற்சி செய்கிறாங்கள். எங்களுக்குத் தான் மனசும் இல்லை, நேரமும் இல்லை." என்றாள் மாலினி.

"நாங்கள் கஸ்ரப்பட்டுச் செய்கிற வேலை எங்களைக் காப்பாத்தும் எண்டாலும் கவனமாகத்தான் இருக்கோணும்." என்றாள் புவனலோசினி.

"நீங்கள் சொல்லுகிறது உண்மை. அங்க இறைச்சி சமைக்கிறது எண்டா உருளைக் கிழங்கும் துணைக்கு வந்திடும். எத்தின துணைக்கு வந்தாலும் ஒரு நேரத்தில சட்டி கழுவி வைச்சிடுவம். ஒரு கோழியை ஆறு பேருக்குப் பங்கிடோணும். இங்கை ஒரு முழுக் கோழியை இரண்டு பேருக்குச் சமைக்கிறம். எவ்வளவு வேணும் எண்டாலும் போட்டுச் சாப்பிடுகிற சுதந்திரம். எங்களுக்கு அமுதம் நஞ்சாகிற கொடுப்பினை அதிகமா இருக்குது." என்றாள் மாலினி.

"ஊரிலேயே சோறு கறி சாப்பிடாதேங்கோ... கறி சோறு சாப்பிடுங்கோ எண்டுதானே இப்ப சொல்லுகினம். நாங்கள் அதை இங்க கவனமாச் செய்ய வேணும். கறி எண்டா அது மரக்கறியா இருக்க வேணும். எண்ணெய், உப்பு குறைக்க வேணும். எங்கடை வீட்டில உப்புக் குறைஞ்சா வாய் விட்டுச் சொல்ல மாட்டினம். ஆனா... மூஞ்சை இஞ்சி திண்ட குரங்கு ஆயிடும்." என்றாள் புவனலோசினி.

"உண்மை தான்... உப்பும், சீனியும் பழகின நாக்கு அதை விடாது. விட்டா ஏது வாழ்க்கை எண்ட மாதிரி இருக்கும்." என்றாள் மாலினி.

கீழே வந்த மாதரை இளைஞர்கள் மேலே செல்ல விடவில்லை. தாங்கள் சென்று தேவையான மீதிப் பொருட்களை எடுத்து வந்தார்கள். அதைவிடத் தங்களுக்குத் தேவையான வியர்ப் போத்தல்களையும் கவனமாகக் கொண்டு வந்தார்கள். நிலக்கரி எரிந்து பட்டை தீட்டிய சிவப்பு வயிரப் பழங்களாகப் பளபளத்தன. பக்கத்தில் நிற்க முடியாது எழுந்து வரும் அனல் அலைகளின் தாக்குதல். குழந்தைப் பிள்ளைகளுக்கு "Hot dog" ஒரு பக்கத்தில் வேக வைத்துவிட்டுக் கோழிக் கால்களை மறு புறத்தில் "Hot dog" இல் முட்டாத படி எடுத்துத் தாமோதரன் அடுக்கினார். சூட்டிற்குக் கோழியில்

இருந்து எண்ணெய்யும், நீருமாக நெருப்பில் ஒழுகப் புகை ஓமகுண்டத்தில் இருந்து கிளம்புவது போலக் கிளம்பியது. கோழிக் காலைப் புரட்டிய வண்ணமே,

"இவங்கள் இரண்டு பேரும் தமிழில கதைக்கிறது எண்டாப் பஞ்சிப் படுகினமுங்கோ. இவைக்குத் தமிழ் சொல்லிக் குடுக்க வேணும். இப்படியே விட்டாத் தமிழே என்ன எண்டு தெரியாமல் வளர்ந்திடுவாங்கள்." என்றார் தாமோதரன்.

"அதுக்கு என்ன? உங்க தொய்யனுக்க தமிழ் சொல்லிக் குடுக்கினமாம். விட வேண்டியதுதானே?" என்றான் அருள்.

"ஓ... ஓ... அங்க சேர்த்து விடுங்கோ." என்றான் சொரூபன்.

"எனக்கும் சேர்க்க விருப்பம் தான். தமிழ் மாத்திரம் இல்லை எங்கடை கலாச்சாரம், போராட்டம் பற்றியும் சொல்லிக் குடுத்து வளர்க்க வேணும்." என்றார் தாமோதரன்.

"ஏன்... பெடியளை ஊருக்குப் போராட அனுப்பப் போறியளே?" என்றான் அருள்.

"அப்படி இல்லையிங்கோ அருள்... அவங்களுக்கும் எங்கடை போராட்டம் எண்டா என்ன... யார் எங்களுக்காகப் போராடுகிறது எண்டு தெரிஞ்சு இருக்க வேணும்?" என்றார் தாமோதரன்.

"நீங்கள் அரசியல் படிப்பிக்கப் போறியளோ அல்லது மொழி படிப்பிக்கப் போறியளோ? மொழியையும், கலாச்சாரத்தையும் படிப்பிக்கிறது எண்டாச் சரி. அரசியலை அதுக்கு உள்ள நுளைக்க வெளிக்கிட்டா எல்லாம் நாறீடும் எண்டது மட்டும் நிச்சயம்." என்றான் அருள்.

"அப்பிடி இல்லை அருள். இந்தியாவிலை எங்களைவிட நிறையத் தமிழர் இருக்கினமுங்கோ. அவைய நீங்கள் எங்கை எண்டாலும் கண்டாக் கதைச்சுப் பாருங்கோ. அவையின்ரை அழகான ஆங்கிலத்தில கதைப்பினம். தாங்கள் இந்தியன் எண்டு நிறையப் பெருமைப்படுவினமுங்கோ. ஆனால் தாங்கள் தமிழர் எண்டு மாத்திரம் சொல்லச் சங்கடப்படுவினம். அதைப் பிடுங்கிப் பிடுங்கியே கேட்க வேணும். பிறகு தமிழ் எண்டு வாய் திறந்தாத் தங்லீசு சுத்தத் தமிழாய் வரும். எங்களுக்கு

அதால நவ துவாரமும் பற்றி எரியும். அவைக்குத் தமிழன் எண்டதை விட இந்தியன் எண்டதே விருப்பமான அடையாளம். இதே மனப்பான்மை தமிழர்கள் வசிக்கிற பல நாடுகளில இருக்குது. ஈழத்தமிழன்ரை சிந்தனையும் ஓர்மமும் அப்படியில்லையிங்கோ. எங்களை நாங்கள் தமிழர் எண்டு மட்டுமே அடையாளப்படுத்திக் கொள்ளலாம். சிறீலங்கன் எண்டு சொன்னா அது எங்களுக்கே அருவெருப்பாய் இருக்கும். தமிழன் சுதந்திரத்துக்குப் பிறகு இலங்கையில அனுபவிச்ச புறக்கணிப்பால அவனால இலங்கையனாக ஒரு நாளும் உணர முடிகிறது இல்லை. சிங்களமும், பௌத்தமும் பெரும்பான்மை இனத்தின்ரை அடையாளம் மாதிரி, தமிழ் எங்கடை இனத்தின்ரை ஒரே ஒரு முக்கிய அடையாளம். எங்களுக்கு மதம் முக்கியம் இல்லை. அதைத் தூக்கிப் பிடிக்கிறவனுக்கு தமிழில உண்மையான அக்கறை இருக்காது. இது மொழியால மட்டும் வந்த அடையாளம். அதை நான் சும்மா ஒப்பீட்டுக்காகச் சொல்ல இல்லை. இங்க இப்ப எங்களை இலங்கையர் எண்டு யாரும் சொல்லுகிறது இல்லை. குருடிஸ்தானில இருந்து வாறவங்களை குருடிஸ்தானியர் எண்டுகிற மாதிரி எங்களைத் தமிழர் எண்டு தான் சொல்லுகிறாங்கள். ஆனா... நாங்கள் தமிழ் நாட்டில இருந்து வர இல்லை. ஈழத்தில இருந்து வந்து இருக்கிறம். ஐஞ்சு கோடி செய்ய முடியாததை ஐஞ்சு லட்சம் செய்து இருக்கிறம். தமிழ் நாட்டில தமிழ் தமிழாய் இல்லை. உலகத்தில அவையால தமிழர் எண்டு சொல்ல முடியாது இந்தியத் தேசியம் தடை போடும். இப்ப இலங்கையில இருக்கிற அரசை ஆட்டம் காணவைக்கிற அளவுக்கு அங்க தமிழர் இல்லை. இந்த உலகம் எல்லாம் எங்களைத் தமிழர் எண்டு சொல்லுகிறத்துக்கும், எங்கடை போராட்டத்திற்கும் நெருங்கின சம்பந்தம் இருக்குதுங்கோ. எங்கடை போராட்டத்திற்கும் தமிழ் அரசியலுக்கும் நிறையச் சம்பந்தம் இருக்குது. சில அசம்பாவிதங்கள் நடந்து இருக்கலாம். அதை எல்லாம் மறந்து நாங்கள் ஒண்டு பட்டால் மட்டுமே எங்களுக்கு விடிவு வரும். எங்களுக்கு எதிரி சிங்கள அரசுதானுங்கோ. இந்த உண்மைகள் அவங்களுக்கும் தெரிய வேணும்" என்று தனது மொத்த ஞானத்தையும் பேருரையாகக் கொட்டித் தீர்த்தார் தாமோதரன்.

"உண்மை அண்ணை... நாங்களும் அதைத்தான் நினைச்சு இருந்தம். அது ஒரு நாள் பட்டப்பகலில... யாழ்ப்பாணத்தில... கனவு போலப் பொய்யாகிப்

போகேக்க... எங்களுக்குக் கண்ணீர் இல்லை இரத்தக் கண்ணீர் வந்திச்சுது. களத்தில இருந்த எங்களைத் துரோகிகளைப் போல, அன்னிய இராணுவத்தைப் போல, விரட்டி அடிச்சதை, நாங்களும் சகோதரங்களுக்குப் பயந்து, ஒளிச்சு, ஒளிச்சு ஊர் ஊராய் ஓடினதை, எப்பவும் எங்களால மறக்க முடியாது. அந்த அவலத்துக்குப் பிறகு நாங்கள் நடைப் பிணம் ஆனாலும் போராட்டம் நடைப்பிணம் ஆகக்கூடாது எண்டு நினைச்சம். இப்ப அதுவும் நடைப் பிணம் ஆகுது எண்டது விளங்குது." என்றான் அருள்.

"புலியள் அரசியலே தெரியாமல் கை வைக்க இல்லை. இனி வேறை வழி இல்லை எண்டதாலதான் அப்பிடிச் செய்திருப்பாங்களுங்கோ. நடந்ததையே கதைச்சு எங்களுக்கு உள்ள அடிபட்டுக் கொண்டு இருந்தா எங்களுக்கு எண்டு ஒரு நாடு உருவாகாதுங்கோ. எல்லாத்தையும் மறந்து போட்டு இப்ப எல்லாரும் ஒற்றுமையா உதவி செய்கிறது மட்டும்தான் புத்திசாலித்தனம் எங்கோ." என்றார் தாமோதரன்.

"அதை விடுங்க. யார் குத்தி எண்டாலும் அரிசியானால் சரி. தமிழ் படிப்பிச்சா அங்க கொண்டே விட வேண்டியது தானே? இங்க... இப்ப தமிழ் படிப்பிக்கிறதே அருமை. அதில எல்லாம் நுணுக்கம் பார்க்கக் கூடாது. அதைவிட அது உங்களுக்குக் கிட்டவா இருக்குது. தமிழர் ஒற்றுமையாக இருந்ததாக வரலாறு கிடையாது. இப்பிடிக் கூறு கூறாப் பிரிஞ்சே நிப்பினம். அதை எல்லாம் பார்த்துக் கொண்டு எங்கடை பிள்ளையளின்ரை படிப்பை விட ஏலுமே? காற்றுள்ள போதே தூற்றிக் கொள்ளுகிற மாதிரி அவை சின்னனா இருக்கேக்கையே மொழியப் படிப்பிச்சுப் போட வேணும்." என்றார் "TS".

"அப்பிடித்தான் மாலினியும் சொன்னவாங்கோ. வாற சனிக்கிழமை அதை ஆரம்பிக்க வேணும்."

மாலினி பிள்ளைகளுக்கு "Hot dog"க்கும் அதற்கான சிறிய நீட்டான பாணும் வைத்துக் கொடுத்தாள். பின்பு பெரியவர்களுக்கும் ஒவ்வொன்று தயார் செய்து கடதாசித் தட்டில் வைத்துப் பரிமாறினாள். வியர் பசியை கிளறத் தவித்தவர்கள் எந்தக் கதையும் இல்லாது அதை வாங்கிச் சாப்பிட்டார்கள்.

"உங்க தமிழ் மட்டுமே படிப்பிப்பினம்? இல்லாட்டி இசை, நடனம் அப்பிடி வேறை கலைப் பாடமும் இருக்குமோ?" என்று அருளைப் பார்த்து "TS" கேட்டார். அருள் வீணாக எதற்கு உள்ளும் தலையை நீட்டும் மனநிலையில் இருக்கவில்லை. அவன் எந்தக் கூட்டத்தோடும் இங்கே சேருவதாய் உத்தேசித்து இருக்கவில்லை. "TS" எதற்காக தன்னிடம் அந்தக் கேள்வியைக் கேட்டார் என்பது அவனுக்கு முழுமையாக விளங்கவில்லை. அவன் அதை விளங்கிக் கொள்ளவும் விரும்பவில்லை. முடிந்த கதைகள் முடிந்ததாகவே இருக்கட்டும் என்பது அவன் நிலை. குத்தகை எடுத்தவர்கள் விளைச்சலைக் காட்டட்டும் என்பது அவன் அடங்காத கோபம்.

"என்ன பேசாமல் இருக்கிறாய் அருள்? வேறை ஏதும் கலை, இலக்கியம் எண்டு மற்றதுகளும் சொல்லிக் குடுப்பாங்களோ?" என்றார் "TS".

"எனக்குத் தெரியாது அண்ணை. எனக்கு உதிலை இன்னும் ஈடுபாடு கிடையாது. அது வரேக்க பார்த்துக் கொள்ளலாம் எண்டு நான் அக்கறைப்படேல்லை." என்றான் அருள்.

அவன் அதைப் பற்றிக் கதைப்பதில் இப்போது ஆர்வம் காட்டவில்லை. தமிழ் படிப்பது என்றால் தமிழைப் படிக்க வேண்டியது தானே? அதற்குள் எதற்காக இவர்களுக்கு அரசியல்? அரசியலை இழுத்து இங்கும் பிரிவினைகளையும், பிரச்சனைகளையும் உருவாக்குவதில் யாருக்கு என்ன நன்மை? என்றாலும் அதுவே காலப் போக்கில் நடக்கும் என்பது அவன் அனுமானம். விடுதலை, போராட்டம் என்பது விடுதலைக்கான போராட்டம் மட்டும் அல்ல. அதில் பேரங்கள், வியாபாரங்கள், சுயநலங்கள் என்பனவும் ஒளிந்து இருக்கிறது. பயன்படுத்த முடியும் என்றாலும் பயன்படுத்தத் தயங்கும் தியாக புருசர்கள் இங்கு யாரும் இல்லை. நிச்சயம் அவரவர் தங்களுக்கு ஏற்ப அந்த வாய்ப்பைப் பயன்படுத்தப் போகிறார்கள். அதுவே தியாகம் என்று வாதாடப் போகிறார்கள். நயமாக நடிக்கப் போகிறார்கள். அல்லது அதை மூடமாக நம்பப் போகிறார்கள். தியாகம் செய்வதாகக் கூறிக் கொண்டு அதிகாரத்திற்கும், பணத்திற்கும் போட்டி போடப் போகிறார்கள். யேசுவைக் காட்டிக் கொடுத்தது போலக் காட்டிக் கொடுக்கவும் போகிறார்கள். இதற்குள் நான் ஏன் என்னைத் திணித்து என் நிம்மதியைக் குலைக்க

வேண்டும்? வேண்டாம் என்பது வேண்டாதது ஆகவே இருக்கட்டும். எங்கள் தியாகத்தின் முற்றுப் புள்ளிகள் நாட்டில் இருந்து விரட்டப்பட்ட போது நிரந்தரமாக வைக்கப் பட்டது. இனி அது என்றும் மாற்றப்படாது. அது வரலாற்றில் கல்வெட்டு ஆகட்டும் என்று அருள் எண்ணினான்.

"என்ன அருள் நான் ஏதும் தப்பாக் கேட்டிட்டனே? ஒரேதா மௌனம் சாதிக்கிறீர்?" என்றார் "TS" சமாதானம் செய்வது போல.

"சீ அப்பிடி இல்லை... நீங்கள் சொல்லுங்கோ." என்றான் அருள்.

"தமிழ் படிக்கிறது எண்டாத் தமிழை மட்டும் படிக்கிறது தானே? பிறகு எதுக்குச் சின்னப் பிள்ளையளுக்கு இந்தக் குப்பை அரசியல்?" என்றான் சொரூபன்.

"இந்தியாவில காந்தியத் தேசப் பிதா எண்டுகிற மாதிரி எங்கடை போராட்டம் வெல்லேக்க நாங்களும் ஒரு தேசப் பிதாவைக் காட்ட வேணுமுங்கோ? அது எங்கடை பிள்ளையளுக்கும் தெரிஞ்சு இருக்க வேணும் இல்லையா? எங்கடை காலத்திலயே இது நடந்தது எண்டதை எங்கடை பிள்ளையள் அறியத் தானே வேணுமுங்கோ. முடிஞ்சதை விட்டிட்டு இப்ப நடக்கிறதை எங்கடை பிள்ளையளுக்குச் சொல்லுகிறது எங்கடை கடமை. அரசியல் இல்லாமல் வாழ்க்கை இல்லை. நாங்கள் சாப்பிடுகிற இந்தப் பொல்சரிலையும் அரசியல் இருக்குது. அதை நாங்கள் முதல்ல விளங்கிக் கொள்ள வேணுமுங்கோ. யூதருக்கு எண்டு ஒரு அரசியல் இல்லாட்டி இஸ்ரவேல் இப்பிடி நிலைச்சு நிண்டு இருக்காது. துச்சமாக மதிச்சுத் தங்கடை உயிரையே விடுகிறவங்களின்ரை தியாகத்தை மதிக்கோணும். அவங்களுக்காக நாங்கள் இங்க இருந்து என்ன செய்ய முடியுமோ அவ்வளவும் செய்ய வேணுமுங்கோ. பிழையள் இல்லாத போராட்டம் இல்லை. சில விஷயங்கள் தவிர்க்க முடியாத நேரத்தில, தவிர்க்க முடியாத காரணங்களுக்காக நடந்து இருக்கலாம். அதையே நினைச்சுக் கொண்டு நாங்கள் அழிஞ்சு போகக் கூடாது." என்றார் தாமோதரன்.

"அதை ஒரு பாடமா ஏற்காட்டியும் நாங்கள் அழிஞ்சு போவம்." என்றான் சொரூபன்.

கோழிக் கால்கள் வெந்ததும் அதைக் கடதாசித் தட்டில் எடுத்து வைத்துவிட்டு மீதம் இருந்த இறைச்சியை மாலினி வேகப் பரப்பினாள். புவனலோசினியும் தாங்கள் கொண்டு வந்த இறைச்சியை அடுப்பில் இருக்கும் இடைவெளிகளைப் பார்த்துப் பார்த்து வேக வைத்தாள். பின்பு,

"இன்னும் ஒருக்கா இறைச்சியை வைச்சா முடிஞ்சிடும். பிறகு மீனை வைக்கலாம்." என்றாள்.

"அப்ப பிள்ளையளை அங்க சேர்க்கலாம் எண்டுறியளே "TS" அண்ணை?" என்றார் தாமோதரன்.

"ஓ... நிச்சயமா. முதல் மொழி படிக்கட்டும். அது முக்கியம். பிறகு மற்றையதைப் பார்க்கலாம்." என்றார் அவர்.

"ம்... விளங்குது." என்றார் தாமோதரன்.

எடுத்த கோழிக்கால்களுக்கு உருளைக் கிழங்குச் சலாத்தும், வாட்டிய கத்திரிக்காயும் வைத்து மாலினி பரிமாறினாள். எல்லோரும் பசியின் உக்கிரத்தில் அதைச் சுவைப்பதில் மும்மரம் ஆகினர். தாமோதரனுக்கு ஏதாவது கதைத்துக் கொண்டு இருக்க வேண்டும். அதுவும் அரசியல் கதைக்க வேண்டும். அவர் மீண்டும் தொடங்கினார்.

"புலியள் இந்தியன் ஆமிக்கு நல்ல பாடமெல்லே படிப்பிக்கினமுங்கோ. பெரிய வல்லரசையே அவங்கள் ஆட்டிப் படைக்கிறாங்கள். வியட்னாமில அமரிக்கா மாட்டின மாதிரி இவை பெடியளிட்டை மாட்டிக் கொண்டு முழிக்கினம். அவங்களும் ஒரு கரை காணாமல் அவைய விடப் போகிறது இல்லை." என்றார் தாமோதரன்.

"உங்களுக்கு உந்த விழல் அரசியல் கதைக்காமல் இருக்க ஏலாதே? கதைக்க எவ்வளவு விஷயம் இருக்குது. இதில இருக்கிற நாலு பேருக்கும் அரசியலில நாலு கருத்து இருக்குது. எல்லாரும் சந்தோஷமாய் இருக்க வாற இடத்தில உங்கடை அரசியலைக் கதைக்கிறதை விடுங்கோ. அதுக்குப் பதிலா வேறை ஏதாவது எண்டாலும் கதையுங்கோ." என்றாள் மாலினி கோபமாக. தாமோதரன் அதை எதிர்பார்க்கவில்லை. அவருக்கு என்ன சொல்வது என்று விளங்கவில்லை. தான் கோட்டைத் தாண்டியதாய் அவள் உணர்ந்து இருக்கிறாள் என்பது அவருக்கு

விளங்கியது. அவர் எதுவும் பேசாது ஒரு பக்கம் வெந்த இறைச்சியின் மறுபக்கம் வேகுமாறு அவதானமாக அதைத் திருப்பிக் கொண்டு நின்றார்.

தமிழர்களின் சமுக வட்டம் பெரிதல்ல. அரசியலுக்கு அடுத்ததாகக் குப்பையாகச் சினிமா வந்துவிடும்.

நாடு விட்டு நாடு வந்து குடி ஏறியதால் ஈசல்களான பிரச்சனைகள். அதற்கான காரணங்கள் பல. அதுவும் வேலை, வேலை செய்யும் இடங்கள், அங்கே சமாளிக்க வேண்டிய மனிதர்கள் பற்றிய ஆதங்கங்களின் ஓயாத அலைகளான படையெடுப்பு... தாமோதரன் அதன் பின்பு ஈழத்து அரசியல் கதைக்கவில்லை. மேலும் கதைத்தால் எல்லோரும் போனபிறகு வீட்டில் ஒரு யுத்த காண்டம் நடக்கும் என்பது அவருக்குத் தெரியும். அவர் அதை விரும்பவில்லை. ஆனாலும் கதைக்காமல் வாயை மூடிக் கொண்டு இருப்பதும் அவருக்குப் பிடிக்கவில்லை. மனிதன் கதைக்கும் மிருகம். கதைக்காவிட்டால் அவன் பாதி பிணமாக அலையும் உருவம்.

"அருள் நீங்கள் ஏதோ கொம்பனி தொடங்கப் போறியள் எண்டு அண்டைக்கு "TS" அண்ணை சொன்னார். அது எப்பிடி இருக்குது? சொந்தத் தொழில் தொடங்கினால் விட்டு விலக இயலாத பொறுப்பாய் இருக்கும். ஆனால் பொறுப்பு எண்டாலும் முன்னேற்றம் வரும்." என்றார் தாமோதரன்.

"நீங்கள் சொல்லுகிறது உண்மை அண்ணா. நாங்கள் ஏன் அடிமைச் சேவகம் செய்ய வேணும்? எங்களுக்கு நாங்களே முதலாளி ஆகலாம் தானே? எல்லாரும் கடை தொடங்குவினம். ஆனா... இப்ப சண்முகன் ரெஸ்ரூரண்ட் தொடங்க வேணும் எண்டுகிற ஐடியாவில இருக்கிறான். நான் சின்னதா ஒரு கழுவுகிற கொம்பனி தொடங்கலாம் எண்டு யோசிக்கிறன். கொம்பனியப் பதிவு செய்தாச்சுது. இரண்டு, மூண்டு கடையளை இப்போதைக்கு வாடிக்கையாளராய் பிடிக்கலாம் எண்ட நம்பிக்கை எனக்கு இருக்குது. பிறகு கொஞ்சம் கொஞ்சமா அதைப் பெருப்பிச்சா முன்னேறலாம் தானே? ஒஸ்லோவுக்கு எப்பவும் சனம் வரும். வேலைக்கு ஆட்களை எடுக்கிறதுக்குப் பிரச்சனை இருக்காது." என்றான் அருள்.

இறைச்சி வாட்ட வாட்ட அதைச் சாப்பிட்டுச் சாப்பிட்டு எல்லோருக்கும் வயிறு நிறைந்தது. கால் வயிறு, அரை வயிறு சாப்பிடும் பழக்கத்தை இப்போது மறந்தாகிற்று.

வாட்டிய மீனின் வாசனை அலையாக வந்து தாக்கினாலும் நாறல் மீனைப் பார்க்கும் பூனைகளாக யாரும் அதன்மேற் பரிவு காட்ட விரும்பவில்லை. வீட்டிற்குக் கொண்டு போய் இதை என்ன செய்வது என்கின்ற மண்டையிடி மாலினிக்கு. இதற்கு மேலும் மினக்கெட முடியாது என்பதாக நிழல் விழுந்து விட்டது. அதன் பின்பு அங்கிருக்க யாருக்கும் பிடிக்கவில்லை. தாமோதரன் வீட்டிற்குள் வருமாறு அழைத்தார். வீட்டிற்குள் வந்தால் வீட்டில் இருக்கும் சரிஸ்காவை மறந்து விடுவோம் என்று "TS"சும் புவனலோசினியும் புறப்பட்டார்கள். மாலினி மறக்காது எடுத்து வைத்திருந்த கோழிக் கால்களையும், ஒரு மீனையும் ஈயத் தாளில் சுற்றி ஒரு பையில் போட்டுப் புவனலோசினியின் கையில் திணித்தாள். சரிஸ்காவை எண்ணிய புவனலோசினி அதை வேண்டாம் என்று சொல்லவில்லை.

அதன் பின்பு மாலினி பிள்ளைகளுக்கு உணவைப் பங்கிடும் அலுவலில் மும்மரமாக இருக்கத் தாமோதரனிடமும், மாலினியிடமும் விடை பெற்றுக் கொண்டு "TS"சும், புவனலோசினியும் வீட்டிற்குப் புறப்பட்டார்கள். சூட்டை இழந்த காற்று குளிரில் நனைந்து வரத் தொடங்கியது. நீர் நிலையங்களில் படுத்திருந்த மனிதர்கள் வீடு நோக்கிப் போயினர். பலரது கைகளில் சூட்டைக் காரணம் ஆக்கிச் சுவைப்புக்கு உள்ளாகும் ஆலம்பழங்கள். சரிஸ்கா தனியே என்ன செய்தாளோ என்கின்ற எண்ணம் விசுக்கென்று தோன்ற இருவரும் விரைவாக வீட்டை நோக்கி நடந்தார்கள்.

# 2 நல்ல மாட்டிற்கு...

அன்று சரிஸ்கா பாடசாலையில் இருந்து மூன்றரை மணி போல வீட்டிற்கு வந்தாள். கோலில் அந்தப் பெட்டிகள் அப்படியே கிடந்தன. அப்பா இரண்டு நாட்களுக்கு முன்பு ஒஸ்லோவில் உள்ள கடை ஒன்றில் வாங்கி, வாடகைக் காரில் ஏற்றி வந்து அதை இறக்கி அங்கு வைத்து இருக்கிறார். ஒஸ்லோவின் மேற்குப் பக்கத்தில் அந்தக் கடை இருக்கிறதாம். சரிஸ்காவே கணினி வேண்டும் என்று கேட்டாள். சரிஸ்கா கேட்டு "TS" எதையும் மறுத்தது இல்லை. அவரிடம் இருக்கும் ஒவ்வொரு குரோணர்களும் அவளுக்கு மட்டுமே என்பது அவருக்குத் தெரியும். அவள் மனம் போன போக்கில் விட்டு, மன மாற்றத்தை ஏற்படுத்தி, அவளும் வாழ்வதைப் பார்க்க வேண்டும் என்பது அவருடைய அடங்காத ஆசை. அதுவே அவரது வாழ்வின் இலட்சியம். தனது இலட்சியத்திற்காக, சரிஸ்காவின் வாழ்விற்காக, அவர் செலவு செய்யும் பணத்தைப் பற்றிக் கவலை கொள்வது இல்லை. ஒஸ்லோவில் உள்ள அந்தக் கடையின் பெயர் Mac & Carry. அங்கே ஆப்பிள் கணினிகள் விற்கப்படும். கணினிகளில் தற்போது பல வகைகள் வந்து விட்டன. அமீகா என்றொரு கணினியை விளையாடப் பயன் படுத்துகிறார்கள். தொலைக்காட்சிப் பெட்டியை அதற்குத் திரையாகப் பாவித்துக் கொள்ளலாம். அதைவிட IBM வகைக் கணினிகள் ஆப்பிளைவிட மலிவாக விற்கிறது. அதைப் பயன்படுத்துவதற்கு கணினி பற்றிய அறிவு வேண்டுமாம். "TS" கணினி பற்றிய அறிவே இல்லாமல் பாவிக்கக்கூடிய கணினி எது என்று நிமலனிடம் கேட்டார். அவன் ஆப்பிள் பற்றி அவருக்கு விளக்கம் கொடுத்தான். அவன் ஏற்கனவே ஆப்பிள் கணினி வைத்து இருப்பதாகவும் அதில் தமிழில் எழுதித் தமிழிலேயே அச்சாக்கி எடுப்பதாகவும் கூறினான். அதற்காகத் தான் பதினெட்டாயிரம் குரோணர்க்கு "Laser Printer" வாங்கியதாகவும் அவரிடம் கூறினான். சரிஸ்காவும் அப்போது "TS"சுடன் இருந்தாள். அவன் அவ்வளவு பணம் செலவழித்தானா அல்லது கதை விடுகிறானா என்பது பற்றி சரிஸ்காவிற்கு நிச்சயம் இல்லை. அவன் கதை விடுவதாகக்கூட இருக்கலாம் என்று அவள் எண்ணினாள். இருந்தாலும் அவனைவிடக் கணினியில் அதிக பரிச்சயம்

உள்ளவர்கள் வேறு யாரும் இருப்பதாக அவளுக்குத் தெரியவில்லை.

"TS" நிமலன் கூறியபடி வாங்கி வந்த கணினி கோலுக்கு உள்ளேயே கிடக்கிறது. கோலுக்கு உள் ஒரு மேசை அதற்காக வாங்கி வந்து பூட்டி வைத்திருக்கிறார். கோலில் இருந்தால் எல்லோரும் பாவிக்கலாம் என்கின்ற அவிப்பிராயம் அவரிடம். தமிழில் கணினியில் எழுதலாம் என்பதை "TS"சால் இன்றுவரை நம்ப முடியவில்லை. அது எப்படி என்று பார்க்க வேண்டும் என்று அவருக்கு ஒரு நமைச்சல். அதுவும் தமிழில் அச்சாகி வரும் என்பது அவருக்கு இன்னும் விந்தையாக இருந்தது. அதைவிட நிமலன் வேறு ஏதோ சொன்னான். அவன் சொன்னது அவருக்கு விளங்கவில்லை. இன்று அவன் வந்தால் அதைப் பற்றிக் கேட்க வேண்டும் என்று அவர் எண்ணி இருந்தார்.

இப்போது வீட்டில் யாரையும் காணவில்லை. அந்தப் பெட்டிகள் அனாதையாகக் கிடந்தன. பசி வயிற்றைக் கிண்டச் சரிஸ்கா அதை மறந்து சமையல் அறைக்குச் சென்றாள். கோழி இறைச்சிக் கறி, நண்டு வறை, கத்தரிக்காய் பால் கறி, பயற்றங்காய் புரட்டல், சொதி, பாயசம் என்று சாப்பாடு அம்மாவின் இயல்புக்கும் வழமைக்கும் மாறாக அமர்க்களப்பட்டது. அம்மா வழமையாக ஒரு மரக்கறிக்கு மேல் வைப்பது இல்லை என்பது சர்வ சத்தியம். ஒரு மச்சம், ஒரு மரக்கறியே மாறாத நித்தியப் படி. அப்பா அதற்கு மேல் வேண்டும் என்றால் பெட்டித் தயிர் வாங்கிக் குளிர்சாதனப் பெட்டியில் வைத்து இருப்பார். அதைப் பயன்படுத்தி உறிஞ்சி உறிஞ்சிச் சாப்பிடுவார். அவருக்குத் தயிருக்குள் சோறு மறைந்தாலே அதில் தயிரின் சுவை தெரியும் என்கின்ற நினைவு.

சரிஸ்கா தனக்குத் தேவையான அளவு சாப்பாட்டையும் கறியையும் ஒரு தட்டில் போட்டு மைக்கிறோவேவ் அவுனில் வைத்தாள். இந்தக் குளிர் நாட்டில் சாப்பாடு எப்போதும் சூடாக இருக்க வேண்டும். சாப்பாடு சூடு இல்லாவிட்டால் சுவையும் இருக்காது. அதைச் சுவைக்கவும் அவளுக்குப் பிடிக்காது.

சரிஸ்காவும் அதை இப்போது பழகிவிட்டாள். முதலில் அப்பா மட்டுமே அப்படிச் செய்வார். சரிஸ்கா அனேகமாகச் சமையல் அறையில் இருந்தே சாப்பிடுவாள். சில வேளைகளில் சாப்பாட்டு மேசையில் வைத்துச்

சாப்பிடுவாள். சாப்பாட்டு மேசையில் இருந்து சாப்பிடுவது வசதியாக இருக்கும். அதை விட இது இன்னும் வசதியாக இருக்கும். "TS"சிற்கு அது ஏற்கனவே விளங்கிவிட்டது.

"TS" வீட்டிற்கு வந்ததும் குளித்து விட்டு, எல்லாம் ஒழுங்காக நடைபெற்று இருக்கிறதா என்று பார்ப்பார். சரிஸ்காவிடம் வந்து புதினம் விசாரிப்பார். சாப்பிட்டுவிட்டாயா என்று அவளைக் கேட்பார். புவனலோசினி அதற்கு இடையில் அவருக்கும் தனக்கும் சாப்பாடு தட்டுக்களில் போட்டு விடுவாள். அவர் தனது தட்டைத் தூக்கிக் கொண்டு சோபாவிற்குச் சென்று விடுவார். அவருக்குக் குடிப்பதற்கு நீரும், மரக்கறி என்றால் கட்டாயம் தயிரும் எடுத்துச் செல்வாள். பின்பு தனது சாப்பாட்டை எடுத்துக் கொண்டு அங்கே செல்வாள். அதற்கு இடையில் "TS" தொலைக்காட்சியை இயக்கி அதைப் பார்த்த வண்ணம் சாப்பிடத் தொடங்கி விடுவார். சாப்பிடும் போது தொலைக்காட்சியைப் பார்த்தாலும் அவர் புவனலோசினியோடு கதைப்பதற்கு மறப்பதில்லை. சாப்பாட்டு மேசையில் நடக்க வேண்டியது சோபா மேசையில் நடப்பது அனேக தமிழர் வீட்டில் பழகிப் போன ஒன்றாகி விட்டது.

இப்போது சரிஸ்காவும் தனது சாப்பிடும் பழக்கத்தை மாற்றிக் கொண்டாள். அடுக்களைக்குள் இருந்து அவள் சாப்பிடுவது இல்லை. சாப்பாட்டு மேசையிலும் அவள் மினக்கெடுவது இல்லை. அப்பாவைப் போலத் தொலைக்காட்சியை இயக்கிவிட்டுச் சோபாவில் இருந்து சாப்பிடுவாள். அம்மா வீட்டில் நின்றால் இடையில் தண்ணி தண்ணி என்று கத்துவாள். அம்மா உறைப்பு அதிகம் போட்டுச் சமைப்பதான அவிப்பிராயம் அவளுக்கு. "TS"சிற்கு அந்த உறைப்பைப் பற்றி எந்தப் பிரச்சனையும் இல்லை. அப்படி அதிகம் உறைத்தால் அவர் தயிரையே அதிகமாக விட்டுச் சாப்பிடுவார்.

சரிஸ்கா சோபாவில் இருந்து சாப்பிட்டுக் கொண்டு இருந்தாள். பார்வை தொலைக்காட்சியில் நிலைத்தது. தொலைக்காட்சியில் "Full house" போய்க்கொண்டு இருந்தது. நகைச்சுவை சில வேளை மனதின் காயங்களை, வாழ்வின் சோகங்களை சிறிது நேரத்திற்கு மறக்கடிக்கக் கூடியவை. சரிஸ்கா தனது சோகங்களை மறந்து மனம் மகிழ்ந்தாள். மகிழ்ச்சியில் சுவை பற்றிய சொரணை இல்லாது சாப்பாட்டின் வேகமான இறக்கம்.

சாப்பிட்டு முடித்தவள் தனது வீட்டுப் பாடங்களை ஒரு முறை பார்த்தாள். அது ஒருவித சுமையாக இருந்தது. செய்ய வேண்டிய கணக்கை எடுத்துக் கொண்டு வந்தாள். தொலைக்காட்சியில் அவுஸ்ரேலியாவின் இயற்கை பற்றிய ஒரு நிகழ்ச்சி போய்க்கொண்டு இருந்தது. சரிஸ்காவுக்குத் தொலைக்காட்சியை இடையிடையே பார்த்துப் பார்த்துக் கணக்குச் செய்வது ஒன்றும் பிரச்சனையாக இருக்கவில்லை. அவள் கணக்கைச் செய்து முடித்துவிட்டு எதை வாசிக்கலாம் என்று பாடங்களை ஆராய்ந்த போது திடீரென வெளிக் கதவு திறக்கும் சத்தம் கேட்டது. அப்பாவா அல்லது அம்மாவா என்கின்ற கேள்வி அவள் மனதில் எழுந்தது. அவள் புத்தகத்தை வைத்துவிட்டு வெளியே வந்து கதவை நோக்கினாள். கதவைத் திறந்து கொண்டு அப்பாவும், அம்மாவும் தம்பதிகளாக வந்தார்கள். இருவரும் ஒரே நேரத்தில் வருவது பொதுவான வழக்கம் இல்லை என்பது சரிஸ்காவிற்குத் தெரியும். பொதுவாக அப்பாவே முதலில் வேலைக்குப் போவார். அதே போல முதலில் வீட்டிற்குத் திரும்பி வருவார். அம்மா எப்பொழுதும் பிந்தி வேலை தொடங்கிப் பிந்தியே வீட்டிற்கு வருவது வழமை என்பதும் அவள் அனுபவம். இன்று இரண்டு பேரும் சொல்லி வைத்தது போலச் சேர்ந்து வந்தது பற்றிய விளக்கம் அவள் அறியாள்.

சரிஸ்காவைப் பார்த்த புவனலோசினி,

"நீ சாப்பிட்டியா?" என்று கேட்டாள்.

"ஓ... அது சரி... என்ன இரண்டு பேரும் ஒண்டா வாறியள்? அம்மா இடையிலேயே வேலையை விட்டிட்டு வந்திட்டாவா?" என்றாள் சரிஸ்கா.

"ஏன் வரக் கூடாதே?" என்றாள் புவனலோசினி. அம்மா ஒரு விதமாக இன்று சிரித்தது போல் அவளுக்குத் தோன்றியது.

"யார் அப்பிடிச் சொன்னது. ஆனா... நீங்கள் அப்பிடி வழமையா வாறது இல்லையே எண்டதால கேட்டன்." என்றாள் சரிஸ்கா.

"அதுவோ... அப்பா தன்ரை வேலையை முடிச்சிட்டு வந்து எனக்கு உதவி செய்தார். வேலை சுருக்கா முடிஞ்சுது. நாங்கள் வந்திட்டம்." என்றாள் புவனலோசினி.

"ஓ அப்பிடியா சங்கதி?"

"சரி அம்மா... நான் இன்னும் படிக்க வேணும்? இது எப்ப பூட்டுகிறது?" என்று கணினிப் பெட்டிகளைப் பார்த்துக் கேட்டாள்.

"அவதிப்படாத. அதுக்கு நிமலன் வருவான். அவன் வருவான் எண்டதால நாங்களும் வெள்ளன வந்தம்." என்றாள் புவனலோசினி.

தாயும் மகளும் கதைக்க "TS" உடுப்பு மாற்றிக்கொண்டு குளியல் அறைக்குள் சென்றார். அவருக்குப் பொதுவாக வேலையால் வந்தால் ஒரு முறை மேல் கழுவ வேண்டும். இப்படியான அடுக்கு மாடிகளில் இருப்பதால் எத்தினை தரம் மேல் கழுவுவது என்றாலும் கழுவலாம். ஒரு நாளும் சுடு நீருக்குப் பஞ்சம் இருப்பது இல்லை. சுடு நீர் இல்லாவிட்டால் இந்த நாட்டில் குளிப்பது பற்றிச் சிந்திக்க முடியாது. குளிப்பது அல்ல முகம் கூடக் கழுவ முடியாது இருக்கும். ஆதியில் இருந்தே இயற்கையோடு போராடி வாழும் வழிகளை மனிதன் கண்டுபிடித்து இருப்பது மனித வாழ்வு இங்கே தொடர்வதற்கான ஆதாரம். கனிம வளங்களும், தொழிற் புரட்சியால் வந்த பொருளாதார வளமும் அதற்கு மேலும் உறுதுணை ஆகிற்று.

"ஓ அதுவா சங்கதி?" என்றாள் சரிஸ்கா.

"ம்..."

"சரி எனக்கு நிறைய வீட்டு வேலை இருக்குது. நான் போய் அதைச் செய்ய வேணும்." என்று கூறிய சரிஸ்கா தனது அறைக்குள் சென்று கதவைச் சாத்தினாள். வீட்டு வேலையா அல்லது விவகாரத்தில் இருந்து ஓட்டமா என்கின்ற நினைவோடு புவனலோசினி தங்கள் அறைக்குள் சென்றாள்.

*

ஐந்தரை மணி போல் நிமலன் "TS" வீட்டிற்கு வந்தான். அவனுக்குச் சாப்பாடு கொடுத்து அவனோடு "TS"சும், புவனலோசினியும் சாப்பிட்டார்கள். பின்பு அவன் கணினியைக் கொழுவும் வேலையைத் தொடங்கினான். அப்போது அவன் அவரைப் பார்த்து,

"நீங்கள் கொம்யூற்றரில இருந்து தமிழில எழுதி எடுத்ததைப் பார்த்து இருக்கிறீங்களே?" என்று "TS"சைப் பார்த்து இன்று மீண்டும் கேட்டான். புவனலோசினியைச்

சாப்பாட்டிற்குப் பின்பு கோலுக்குள் காணவில்லை. சரிஸ்காவும் அவன் முன்பு வரவில்லை. மனித எதிர்பார்ப்புகள் எல்லா நேரங்களிலும் நிறைவேறுவது இல்லை. ஆசைப்படுவது எல்லாம் கிடைத்தால் அதன் அருமை தெரியாமல் போய்விடும் என்பது கடவுள் முடிவாக இருக்க வேண்டும். அவன் தனது பையில் இருந்து எடுத்துக் கொடுத்ததை "TS" ஆவலோடு பார்த்தார்.

நீ கண்ணாய் இருந்தால் நான்

பிரபஞ்சத்தையே அதனால் கண்டிருப்பேன்.

நீ காதாய் இருந்தால்

கைலாசத்தில் உறைந்தவனின்

கனவுக் குமுறலையும்

நான் கேட்டிருப்பேன்.

நீ பெண்ணாய் இருந்தால் உன்னிடம்

காதலைக் கேட்டிருப்பேன்.

நீ குழந்தையானால் உன்னிடம்

அன்பு முத்தம் கேட்டிருப்பேன்.

நீயோ குமரியான குழந்தை... உன்னிடம்

நான் என்ன கேட்பேன்?

என்று அது அழகான தமிழில் அச்சாகி இருந்தது. "TS"சிற்கு அதைப் பார்க்க ஆசையாக இருந்தது.

அதன் அர்த்தம் அவருக்கு விளங்கியது. அறிந்தும் அவனிடம் அதைக் கேட்க முடியாது என்பதும் அவர் அறிவார். அவன் இப்போது கவிஞன். அவன் கற்பனைகளை அவன் சொந்த வாழ்க்கையோடு முடிச்சுப் போட்டுப் பார்க்கக் கூடாது. அவன் மூலம் ஒரு நன்மை வரும் என்றால் "TS" அதைத் தடுக்கப் போவது இல்லை. தடுப்பதற்கு எந்தக் காரணமும் இல்லை. சொந்தச் சாதிக்கு உள்ளேயே சாதி பார்த்துத் தடிப்பு பேசும் தலைக்கனம் அவரிடம் சிறிதும் இல்லை. ஈழத்தின் அரசியில் தலைமையில்கூட அவர் சாதி பார்ப்பதை வெறுத்தார். இருந்தும் மகளுக்கு வரும் கணவன் தங்கள் சாதியில் இருந்தால் ஊரின் வாய்க்கு அஞ்ச வேண்டியது இல்லை என்கின்ற சுயநலம் சாதுவாக இருந்தது. பேசப்படும் தத்துவங்கள் வேறு. வாழ்க்கை நடைமுறை

வேறு. வேற்றுச் சாதியில் கலியாணம் செய்துவிட்டு சொந்தங்களிடம் மகளையும், மருமகனையும் கூட்டிச் செல்ல முடியாது என்பது அவரிற்குத் தெரியும். அவர்கள் இலங்கையில் இருக்கலாம், இங்கிலாந்தில் இருக்கலாம், இல்லாவிட்டால் கனடாவில் இருக்கலாம். பார்வைகளும், கேள்விகளும் மாத்திரம் எங்கும் ஒரேமாதிரியாகத்தான் இருக்கும். பேசப்படும் தத்துவங்களுக்கும் வாழப்படும் வாழ்க்கைக்கும் அனைத்து மட்டத்திலும் நிறையவே வித்தியாசம் இருக்கும் என்று அவர் எண்ணினார்.

பாரதியே ஒரு கட்டத்தில் அந்தக் கோட்டைத் தாண்டத் தயங்கியதாக ஒரு கருத்தும் உண்டு. பாரதி காலத்திற்கும் எங்கள் காலத்திற்கும் நிறைய மாற்றங்கள் ஏற்பட்டு விட்டன. அவன் காலத்தில் அவன் செய்ததை எங்கள் காலத்திலும் நாங்கள் செய்யத் துணியாத கோழைகள். சமுதாயத்தின் சாக்கடைகள் பலவும் மாறாத நாற்றத்தோடு காலங்களைக் கடந்தும் ஊருக்கு உள்ளே ஊர்ந்து ஊர்ந்து ஓடுகின்றன.

"என்ன அண்ணை... ஒண்டும் பேசாமல் பேப்பரைப் பார்த்துக் கொண்டு யோசிக்கிறியள்?" என்றான் நிமலன்.

"இல்லை... உன்ரை கவிதையைப் பற்றி யோசிச்சன். நல்லா இருக்குது. இதை மாதிரி நானும் இதில எழுதலாம் தானே?" என்றார் "TS". அவருக்குத் தொடர்ந்தும் நம்பிக்கை ஏற்படவில்லை.

"கொம்பியூற்றரில எழுதலாம். அதுக்கான புறொக்கிராமை எல்லாம் நான் கொண்டு வந்து இருக்கிறன். எல்லாம் அடிச்சுத் தந்திட்டுப் போகிறன். ஆனா... உந்த ஸ்ரையில் றைற்ரரில தமிழ் எழுத்து எழுத ஏலாது. அதுக்கு லாசர் றையிற்ரர் வேணும். அது கிட்டத்தட்ட பதினெட்டு ஆயிரம் குரோணர் வரும். நான் சேர்த்து வைச்சிருந்த காசெல்லாம் போட்டே அதை வாங்கினனான். உங்களுக்கு அந்த அளவுக்குக் காசு செலவு செய்ய வேணுமோ எண்டு யோசியுங்க... தமிழில எழுதாட்டி இந்தப் பிறின்றரே இப்போதைக்கு உங்களுக்குக் காணும். அப்படியும் தமிழில எழுத வேணும் எண்டா என்னிட்டத் தந்தா நான் பிறின்ற் செய்து கொண்டு வருவன்." என்றான் நிமலன்.

"பதினெட்டாயிரத்துக்குப் பிறின்ரர் வாங்கி நான் என்ன விஸ்னஸ்சே செய்யப் போகிறன்? இப்போதைக்கு உதுவே இருக்கட்டும். எனக்கு ஒருக்கா கொம்யூற்றரில தமிழ்

எப்பிடி எழுதுகிறது எண்டதைக் காட்டித் தரவேணும்." என்றார் "TS".

"அது பிரச்சனை இல்லை. இப்ப பெட்டியளைத் திறந்து கொம்பியூற்றரைச் செற் பண்ணுவமே அண்ணை?" என்றான் நிமலன்.

"ஓ... தொடங்குவம்." என்று கூறிய "TS" சமையல் அறைக்குச் சென்று சின்னக் கத்தி ஒன்றை எடுத்து வந்தார். நிமலன் அவரிடம் கத்தியை வாங்கி முதலில் கணினிப் பெட்டியைத் திறந்தான்.

இந்தக் கணினி இங்கே பாவனைக்கு வந்து சில காலம் ஆகி விட்டது. அதற்கு "Macintosh LC" என்று பெயர். இதில் உள்ள பெரும் வசதி என்னவென்றால் எல்லாச் செயற்பாட்டிற்கும் கட்டளைகளை எழுதத் தேவை இல்லை. எல்லாவற்றையும் இரண்டு தரம் தொடர்ந்து மவுசை அழுத்துவதால் திறந்து விடலாம். வின்டோசில் சில காலம் "Ms dos" என்னும் மென்பொருளின் மூலம் கட்டளைச் சொற்களைப் பயன்படுத்தியே மற்றைய மென் பொருட்களை இயக்க வேண்டி இருந்தது. சாதாரண மக்கள் அதைச் செய்வதில் சிக்கல் நிறைய இருந்து வந்தது. அதற்காக முதலில் கட்டளை வரிகளைப் படிக்க வேண்டிய கட்டாயம் இருந்தது. அந்தப் பிரச்சனைகளில் இருந்து விடுபடுவதற்காக இந்தப் புதிய மென் பொருளும், வன் பொருளும் உருவாக்கப்பட்டு இருக்கிறது என்றும் கூறலாம்.

நிமலன் கணினிப் பெட்டியைக் கத்தியால் கீறித் திறந்தான்.

"இது என்ன நிமலன் பாட்ஸ் பாட்சா இருக்குது?" என்றார் "TS".

"முதல்ல சில ஆப்பிள் கணினி ஒரே பெட்டியாக வந்தது. இப்ப பல விதமா வருகுது. இதுகள் பழசுகளைவிடக் கொஞ்சம் திறன் கூடினது அண்ணை. இந்தத் தட்டையா இருக்கிற பழுப்பு நீள் சதுரப் பெட்டி கொம்பியூற்ரரின்ரை மூளை மாதிரி. இதுக்கு உள்ள குறுகிய கால ஞாபகத்தில் மென் பொருளை வைச்சிருக்கிற இடம், நீண்டகால ஞாபகத்தில் மென் பொருளை வைச்சிருக்கிற இடம், கொடுக்கும் கட்டளைகளை உள்வாங்கி அதற்கான விடைகளைக் கணித்துக் கொடுக்கும் "Central processing

unit", மின்சாரத்தை வழங்குகிற பகுதி, அதை எல்லாம் பொருத்துறத்துக்கும், சமிக்கைகளை வெளியே அனுப்புவதற்கும், உள்ளே எடுப்தற்குமான ஒரு தளமான "mother board" என்கிற முக்கியமான பகுதியும் இருக்குது. இதை முதல்ல மேசையில வையுங்க." என்று நிமலன் கூறிய வண்ணம் அவரிடம் உறைகளைப் பிரித்து அதைக் கொடுத்தான். "TS" பயபக்தியோடு அதைக் கவனமாக வாங்கி மேசையில் வைத்தார். பின்பு கணினியின் திரையை எடுத்து அந்தப் பெட்டிமேல் வைத்தான். அதற்கான விசைப் பலகையையும், மவுஸ்சையும் எடுத்து வெளியே வைத்துவிட்டு அதைப் பொருத்தத் தொடங்கினான். நிமலனுக்கு அதைப் பொருத்துவதற்கு அதிக நேரம் தேவைப்படவில்லை. பின்பு அத்தோடு வந்திருந்த சிறிய ஒலி வாங்கியைப் பொருத்தினான்.

"நீங்கள் அந்தப் பெட்டியைத் திறந்து பிறின்றரை வெளியால எடுங்க... நான் இந்த வயர்களைப் கொளுவீட்டு வாறன்." என்று கூறிவிட்டு அவற்றைக் கொளுவுவதில் மும்மரமாக ஈடுபட்டான். அவன் "Wire"களைக் கொளுவி முடியவும் "TS" "Printer"ரரை வெளியே எடுத்து வைக்கவும் சரியாக இருந்தது. நிமலன் அவரிடம் இருந்து "Printer"ரரை வாங்கிக் கணினியுடன் இணைக்க வேண்டிய "Wire"களை இணைத்தான். கடைசியாக அதற்கு மின்சாரம் கொடுக்கும் "Wire"களை இணைத்துக் கணினியின் பின் பகுதியிலும் திரையின் பின் பகுதியிலும் உள்ள ஆழிகளை அழுத்தினான்.

"ஒரு வாசம் வருகுது." என்றார் "TS". சத்தத்துடன் கணினி உயிர் பெற்றதை அவரால் கேட்கவும் முடிந்தது. பார்க்கவும் முடிந்தது.

"ஓம் அண்ணை... கொம்பியூற்றர் புதுசா போடேக்க அதில இருந்து ஒருவிதமான பிளாஸ்ரிக் சூடாகிற மணம் வரும். பிறகு அது காலப் போக்கில இல்லாமல் போயிடும்." என்றான் நிமலன்.

"உது என்ன... ஏதோ அழுகிற மாதிரி ஒரு சிம்போல் வந்து இருக்குது?" என்றார் "TS".

"ஓ… ஓ… அவருக்கு இங்க டிஸ்க்குகள் இருக்குது. கொஞ்ச நேரத்தில சிரிக்க வைக்கலாம்." என்றான் நிமலன்.

சரிஸ்காவிற்குக் கணினி விழித்துக் கொண்ட சத்தம் கேட்டது. அதற்கு மேல் அவளுக்குப் பாடங்களில் கவனம் செல்ல வில்லை. அந்தக் கணினியைப் போய் பார்க்க வேண்டும் என்கின்ற ஆசை பொங்கியது. அவள் தனது புத்தகத்தை மேசையில் வைத்துவிட்டு முதலில் சமையல் அறைக்குச் சென்றாள். அங்கு புவனலோசினி எல்லாருக்கும் தேநீர் தயாரித்துச் சாப்பிடுவதற்கு வாங்கி வந்த "Cake"கையும் வெட்டித் தயார் செய்த வண்ணம் நின்றாள். சரிஸ்காவைக் கண்டதும்,

"நல்ல நேரத்துக்கு வந்தாய். கேக்கைத் தூக்கிக் கொண்டு வா." என்று கூறிவிட்டு எல்லோருக்கும் ஆன பால் தேநீரை எடுத்துக் கொண்டு கோலை நோக்கிச் சென்றாள். தேநீரைச் சோபா மேசையில் வைத்துவிட்டு,

"வாங்க வந்து ரீயக் குடிச்சிட்டுப் பிறகு உதைப் பாருங்க." என்றாள்.

"ஓம் நிமலன்… ஆற முதல் ரீயைக் குடிப்பம் என்ன?" என்றார் "TS".

இருவரும் சோபாவில் வந்து இருக்கவும் சரிஸ்கா "Cake"குடன் வரவும் சரியாக இருந்தது. எல்லோரும் தேநீரை எடுத்துப் பருகத் தொடங்கினார்கள். சரிஸ்கா ஒரு "Cake" துண்டு தனக்கு எடுத்துக் கொண்டாள்.

"நிமலன் கேக் எடுங்கோ." என்றாள் புவனலோசினி.

அதை அடுத்து நிமலன் தானும் ஒரு "Cake"துண்டை எடுத்துக் கொண்டான். "TS"சும் அதில் ஒன்றைச் சுவைத்த வண்ணம் தேநீரை அருந்தினார். இடையில் எழுந்து சென்று நிமலன் "Disk"கை மாற்றிவிட்டு வந்தான். அவன் திரும்ப வந்து இருக்கவும்,

"உது எப்ப முடியும்?" என்றாள் சரிஸ்கா.

"கொஞ்ச நேரம் எடுக்கும்." என்றான் நிமலன்.

"வேட் இருக்குமா?" என்றாள் சரிஸ்கா.

"கொம்பியூற்றரோடை வேட், தமிழ் பென்ற் வராது. நான் கொண்டு வந்திருக்கிறன். சில கேமும் கொண்டு வந்திருக்கிறன். பொறுங்க எல்லாம் அடிச்சுத் தாறன்." என்றான் நிமலன்.

"ஓ தாங்ஸ்... அப்ப நாங்கள் இனி விளையாடலாம்." என்றாள் சரிஸ்கா.

"உதுக்கு மூடம் எண்டு ஒண்டு இருக்குது. அதைப் பூட்டினா "Bulletin board system"க்கு கொனெக்ற் பண்ணலாம். பண்ணினா நிறையப் புறோக்கிராம் டவுண்லோட் பண்ணலாம். நியுஸ், சாட் மாதிரி நிறைய அதில இருக்குது. முக்கியமானது புறோக்கிராம் டவுண்லோட் பண்ணுகிறதுதான். ரெலிபோன் லைன் மூலம் தான் கொனேக்ற் பண்ணுகிறது. அதால ரெலிபோனுக்குக் காசு போகும்." என்றான் நிமலன்.

"அதெல்லாம் இப்போதைக்கு வேண்டாம். இப்போதைக்கு உதைப் பாவிக்கிற மாதிரிச் செய் நிமலன்." என்றார் "TS".

புவனலோசினி இரவுச் சாப்பாட்டைக் கவனிக்கச் சென்றாள். நிமலன் மேலும் பல "Disk"குகளை தான் கொண்டு வந்த பையில் இருந்து எடுத்தான்.

"உது என்ன டிஸ்குகள்?" என்றாள் சரிஸ்கா.

"இந்த டிஸ்குகளில வேட் புறோக்கிராம் இருக்குது. இதில தமிழ் எழுத்தும் இருக்குது. இதுகளில விளையாட்டுப் புறோக்கிராமும் இருக்குது." என்று பரவிக் காட்டினான் நிமலன்.

"அடிச்சு முடியுங்க... அதை எல்லாம் பார்க்க வேணும்."

தொலைக்காட்சியில் செய்தி தொடங்கியது. சரிஸ்கா செய்தி பார்க்கத் தொடங்கினாள். செய்தி பார்த்துக்கொண்டு இருந்த "TS" இடை நடுவில் எழுந்து சமையல் அறைப் பக்கம் சென்றார். செய்தி முடியும் தறுவாய் இருக்கும் போது நிமலன் தனது வேலைகளை முடித்துவிட்டுச் சரிஸ்காவைப் பார்த்தான். தன்னைவிட அவள் சிறிது உயரம் குறைவாக இருப்பதாய் அவனுக்குத் தோன்றியது. அவளது தலைகூட தன்னோடு ஒப்பிட்டுப் பார்க்கையில் சிறியது என எண்ணத் தொடங்கியவனின் கற்பனை எல்லை கடந்து வளர்ந்தது.

"வட்டமான முகம். மாம்பழம் போன்ற மினு மினுப்பான தோல். சாயம் பூசாமலே சிவந்த இதழ்கள். தேங்காய் முடிகள் போலத் தோன்றும் மார்புகள். அழகான அவித்த வெள்ளை முட்டைக்குள் நாவற் பழத்தை செருகிவிட்டதான கண்கள். முள்ளந்தண்டின் முடிவுவரை சந்திரனை விழுங்கும் கருநாகமாக நீண்டு கிடந்த கூந்தல். பக்கத்தில் வரும் போது மல்லிகையும் ரோஜாவும் கலந்ததான ஒரு வாசம். இவள் பெண்ணா இல்லை இந்திர லோகத்துத் தேவதையா என்கின்ற தடுமாற்றத்தைத் தரும் அவள் நடை. நடனங்கள் தோற்கும் அவள் நளினம். அவள் நளினத்தில் என்றும் தோற்கும் அவன் மனது.

என்னோடு கதைப்பதற்கு ஏன் இவள் தயங்குகிறாள்? பெண் என்பதால் தயங்குகிறாளா? நானே அவளிடம் முதலில் எனது மனக்கிடக்கையைச் சொல்ல வேண்டுமா? அதுதானே கரப்பான் பூச்சி என்று சொல்லி விட்டாள். பெண்கள் அப்படித் தான் தொடங்குவார்கள். முதலில் கரப்பான் பூச்சி என்பார்கள். பின்பு காலம் எல்லாம் நீயே என்பார்கள். இவளும் ஏதோ பயத்தில் அப்படிச் சொல்லி இருக்கிறாள். அதற்காக நான் என் முயற்சியைக் கைவிட முடியாது. அதுதானே தமிழில் சொல்லி இருக்கிறார்கள் முயற்சி உடையார் இகழ்ச்சி அடையார் என்று. நான் முயல வேண்டும். அப்போதுதான் நான் இவளை அடைய முடியும். இந்தத் தேவதை என் வீட்டு இராணியாக வேண்டும். அதற்காக எதுவும் செய்யலாம். வேறு யாராவது கேட்டிருந்தால் இவ்வளவு அக்கறையாகக் கணினி பூட்டிக் கொடுக்க வந்திருப்பேனா? இங்கு "TS" அண்ணைக்காக வந்திருக்க வேண்டும். அதைவிட்டால் சரிஸ்கா என்கின்ற மாயத்திற்காக எப்போதும் வருவேன். என் மனதில் அவள் கிளியோப்பற்றா போல. எவருக்கும் தெரியாது நான் நிரந்தரமாக அடிமைச் சாசனம் எழுதிக் கொடுத்தது போல. காதல் என்பது இப்படித்தான் இருக்குமா? மூளை மயங்கிப் பித்துப் பிடிக்குமா? இது காதலா அல்லது பெண் மோகமா? கடவுளே இவள் எனக்குக் கிடைக்க வேண்டும் என்பதைத் தவிர எனக்கு எதுவும் தெரிய வேண்டியது இல்லையே." என்று நிமலன் தனக்குள் குழம்பினான்.

பாடசாலைகளில் சுதேசப் பெண்கள் அவனை ஆவலோடு அணைத்து இருக்கிறார்கள். அவர்கள் மொழியும், கலாச்சார ஏற்றத் தாழ்வுகளும் காதலைவிடப் பயத்தையே

நிமலனுக்கு அதிகம் தந்தது. அவர்களிடம் இன்னும் வெளிப்படையாக, நேராகக் கேட்க வேண்டும். சைகைகளில் காதலை விளங்கிக் கொள்வது எல்லாம் அவர்களுக்கு அன்னியம் ஆனது. அப்படிக் காதலித்தாலும் பின்பு ஊர், உறவுகள் என்று நினைத்துப் பார்க்க முடியாது. அவன் அந்த எண்ணத்தை அங்கேயே விட்டு விட்டான்.

சரிஸ்காவை அவளுக்குத் தெரியாமல் அப்படியே பார்த்துக் கொண்டு இருக்க வேண்டும் என்கின்ற கள்ள எண்ணம் அவனுக்குத் தோன்றியது. அப்படிப் பார்த்துக் கொண்டு இருப்பதை அவள் பார்த்துவிட்டால் என்கின்ற பயமும் வந்து அவனை வெருட்டியது. பார்ப்பதா, கதைப்பதா என்கின்ற போராட்டத்தின் இறுதியில் கதைப்பது என்று அவன் முடிவு செய்தான்.

"சரிஸ்கா?"

"என்ன நிமலன். அப்பாவைக் கூப்பிடவா?" என்றாள் சரிஸ்கா.

"இல்லை... இல்லை... உங்களுக்குச் சொல்லித் தந்தாச் சரி தானே? நீங்கள் வேணும் எண்டா அப்பாவுக்குச் சொல்லிக் குடுக்கலாம்." என்றான் நிமலன்.

"இல்ல நீங்கள் அப்பாவுக்குச் சொல்லிக் குடுத்தால், பிறகு நான் அவரிட்டை இருந்து படிக்கலாம். கொஞ்சம் பொறுங்க... அப்பாவை வரச் சொல்லுகிறன்." என்றுவிட்டு அப்பா என்ற வண்ணம் சரிஸ்கா கோலை விட்டு நகர்ந்தாள். நிமலனுக்கு இப்போதே வீட்டை விட்டு வெளியேற வேண்டும் போல் இருந்தது. சமையல் அறைக்குள் ஏதோ சம்பாசனை நடப்பது அவனுக்கு விளக்கம் இல்லாத சத்தமாகக் கேட்டது. சிறிது அமைதிக்குப் பின்பு சரிஸ்கா மீண்டும் திரும்பிக் கோலுக்குள் வந்தாள். இப்போதே வீட்டை விட்டுப் போக வேண்டும் என்கின்ற நிமலனின் வீறுகொண்ட உணர்வு எங்கோ தொலைந்து போயிற்று. யார் வந்தாலும் எனக்குப் பிரச்சனை இல்லை என்பது போலக் கணினியை ஆராய்ந்தான். சரிஸ்கா அவனைப் பார்த்தாள். மனதிற்குள் சில நினைவுகள் விஷப் பாம்புகளாக உருண்டு, பிரண்டு சீறி தற்காலிகமாக அடங்கியது. எதுவும் அறியாத இவனை எதற்கு நான் வெறுக்க வேண்டும் என்கின்ற

சமாதானம் அவளிடம் பிறந்தது. பாம்பு சுருண்டு தூங்கியது. அவள் நிமலன் அருகில் வந்தாள்.

மல்லிகையும் ரோஜாவும் கலந்த மெல்லிய வாசம். காற்றிற்கே குளிர்மை தருவதான அவள் அசைவுகள். அவள் கையைத் தொட்டால் எப்படி இருக்கும் என்கின்ற எண்ணம் அவனிடம் எழுந்தது. தொட முடியாது என்பதும் அவனுக்கு விளங்கியது. காதல் இனிமை ஆனதா அல்லது கொடுமை ஆனதா? என்கின்ற கேள்வி அவனிடம் பிறந்தது. அவன் எதையும் எதிர்பார்க்காத பெரிய மனிதப் பாவனையோடு இருந்தான். அருகே வந்த சரிஸ்கா அவனோடு கதைக்கத் தொடங்கினாள்.

"அப்பா இப்ப விசியாம். எனக்கே காட்டித் தாங்க." என்றாள் சரிஸ்கா.

"ஓ அப்பிடியா? அப்பா எண்டா ஈசியா இருந்து இருக்கும். கதிரை ஒண்டைக் கிட்டக் கொண்டு வந்து போட்டிட்டு இருங்க." இது கொஞ்சம் அதிகப் பிரசங்கித் தனமாக இருந்தாலும் அப்படிப் பவுசு காட்டுவது அவனுக்குப் பிடித்து இருந்தது. சரிஸ்கா நிமலனை ஒரு முறை பார்த்துவிட்டுக் கதிரை ஒன்றை எடுத்து வந்து அவன் அருகே போட்டுவிட்டு இருந்தாள்.

முதலில் கணினியை எப்படி இயக்குவது என்பது பற்றி நிமலன் விளங்கப் படுத்தினான்.

அந்த மல்லிகையும் ரோஜாவும் கலந்த வாசம் அவனைப் பித்தாக்கியது. என்ன விதமான "Perfume" இது என்கின்ற எண்ணம் அவனுக்குத் தோன்றியது. எப்போதும் இவள் இதை வீட்டில் பாவிப்பாளா? அல்லது வீட்டிற்கு யாரும் வருவார்கள் என்றால் மட்டும் இதைப் பாவிப்பாளா? சிலர் "Perfume" அடித்தால் கோழிக் கூட்டில் இருந்து வரும் நாற்றம் போல இருப்பது உண்டு. அவர்களுக்கு அது நல்ல வாசனையாக இருக்க வேண்டும் என நிமலன் நினைத்தான். நிமலனுக்கு அப்படியான வாசனையை உடையவர்கள் பக்கத்தில் வந்தால் தூர ஓட வேண்டும் போல் இருக்கும். பேருந்துகளில் அப்படி ஆனவர்கள் ஏறும் போது ஓடவும் முடியாது, இருக்கவும் முடியாது கோழிக் கூட்டிற்குள் அகப்பட்டதாய் பல நாள் அவஸ்தைப் பட்டிருக்கிறான். பணம் கொடுத்துத் தானே அதை வாங்குகிறார்கள்? கோழியின் நாற்றத்தையும் நல்ல மணமாக சிலரால் இரசிக்க முடிவது நிமலனுக்கு வியப்பைத் தரும்.

சரிஸ்காவில் இருந்து வரும் மணம் அப்படி அல்ல. கோவில் வீதிகளில் இருந்து அந்தி வேளையில் அள்ளுப்பட்டு வரும் வாசனை போல ஒரு இதமான வாசனை அது. அவளின் அருகே சென்று முகர்ந்து கொண்டே இருக்கலாம் என்கின்ற ஒரு எட்ட முடியாத யோசனை மூளையில் பட்டென்று அவனுக்கு வெடித்தது. அருகே வந்தாலும் அவளை முகர முடியாது என்கின்ற வெட்ட வெளிச்சமான நிதர்சனம் விளங்க அவன் மனது சுருங்கியது.

"கொம்பியூற்றர் போட்டு நிப்பாட்டுகிறது பற்றித் தந்த விளக்கம் காணும்... மற்றதையும் கொஞ்சம் சொல்லித் தாங்க... எனக்குப் பள்ளிக்கூடத்திலேயே கொம்பியூற்றர் பாவிச்ச அனுபவம் இருக்குது. அதுக்கு ஏத்த மாதிரிச் சொல்லித் தாங்க..." என்றாள் சரிஸ்கா.

"சரி இதில வேட் எங்க போய் எடுக்கிறது எண்டு பாருங்க. தமிழ் எப்பிடி எடுக்கிறது பாக்கிறீங்களா? தமிழில இதில எழுதினாலும் பிறின்ற் வராது."

"சரி, என்னனென்ன கேம் இருக்கு எண்டு ஒருக்காக் காட்டித் தாங்க..."

"ம்... தாராளமா. உங்களுக்குக் காட்டித்தராமலா? வடிவாப் பாருங்க... எப்பிடி எடுக்கிறது எண்டு காட்டித்தாறன்."

"நான் கொஞ்ச நேரம் கேம் விளையாடிப் போட்டு ஓவ் பண்ணுகிறன்."

"சரி நான் போறத்துக்கு முதல்ல உங்களிட்டை ஒண்டு கேட்கலாமே?" என்று நிமலன் திடீரெனச் சரிஸ்காவைப் பார்த்து மெல்லிய குரலில் கேட்டான்.

அவள் ஒன்றும் பதில் சொல்லாது இருக்க நிமலன் மீண்டும்,

"கோவிக்க மாட்டியள் தானே?" என்று கேட்டான்.

"அது நீங்கள் கேட்கிறதைப் பொறுத்தது." என்று சரிஸ்காவிடம் இருந்து எந்த ஏற்ற இறக்கமும் அற்ற பதில் வந்தது.

"அண்டைக்குக் கலியாணம் கட்டுகிறது கரப்பான் பூச்சியை மேலில ஊர விடுகிறது மாதிரி எண்டு ஏன் சொன்னியள்?

உங்களைப் பார்க்க எனக்கும் ஆசை ஆகத்தான் இருக்குது. அது சரியா?"

"நல்ல மாட்டுக்கு ஒரு சூடு எண்டு சொல்லுவினம்... உங்களுக்கு நான் அண்டைக்குச் சொன்னது விளங்கேல்லையா? திரும்பவும் சொல்லுகிறன்... நான் கரப்பான் பூச்சிய எடுத்து என்னுடைய மேலில விடுகிறத்துக்கு றெடி இல்லை. இனிமேலைக்கு இதைப் பற்றி என்னோடை கதைச்சா நீங்கள் இங்க வரேக்க என்னப் பார்க்க மாட்டியள்." என்று கூறிய சரிஸ்கா விசுக்கென்று கதிரையை விட்டு எழுந்தாள்.

"அப்பா... நிமலன் அண்ணா போகப் போறாராம்." என்று உரக்கக் கத்திய வண்ணம் தனது அறைக்குள் சென்று கதவை அடித்துச் சாத்தினாள். எதிர்பாராத இந்த அதிர்ச்சியில் நிமலன் விறைத்துப் போய் இருந்தான்.

# 3 அருளன் குடும்பம்

புவனலோசினி ஓர் அளவிற்குப் பழைய நிலைக்கு வந்து விட்டது போல் "TS"சிற்குத் தோன்றியது. எப்போதாவது இருந்துவிட்டு மனம் குழம்பியவளாய் பேசாது இருப்பாள். அவளுக்குக் கொடுக்கப்பட்ட "Antidepressant" மருந்துகள் படிப்படியாக குறைக்கப்பட்டு இப்போது நிறுத்தப்பட்டு விட்டன. வேலை செய்யத் தொடங்கிய பின்பு அவளுக்கு இருந்த தேவை இல்லாப் பயங்களும், சந்தேகங்களும் கொஞ்சம் கொஞ்சமாக விலகத் தொடங்கி விட்டன. தான் ஒரு பத்திரமான நாட்டில் வாழ்கிறேன் என்கின்ற நம்பிக்கை சிறிது சிறிதாக அவளிற் கூடிவிட்டது. அத்தோடு சரிஸ்காவிற்கும் இந்த நாடு பாதுகாப்பு ஆனது என்கின்ற எண்ணம் உண்டாகியதாகத் தோன்றுகிறது. பணம் சேர்த்து சரிஸ்காவுக்குத் திருமணம் செய்ய வேண்டும் என்கின்ற எண்ணம் வரும் போது புவனலோசினிக்கு மீண்டும் கவலை வருகிறது. அவள் அந்த விடயத்தில் விட்டுக் கொடுப்பு இல்லாது இருப்பது புவனலோசினியையும், "TS"சையும் பயமுறுத்துகிறது. உழைப்பது எல்லாம் அவளுக்கே. ஆனால் அவள் திருமணமே செய்து கொள்ளா விட்டால் யாருக்காக உழைப்பது என்கின்ற வெறுப்புச் சில வேளை அவளிடம் வருவது உண்டு. அதனால் மனது சோர்ந்து போவாள். அப்படி உண்டாகும் கவலைகள் கூட இப்போது முன்பு போன்று கடுமையான தாக்கத்தை ஏற்படுத்துவது இல்லை. மருந்து பாவிக்க வேண்டிய எந்த அவசியமும் ஏற்படுவது இல்லை. சரிஸ்கா தொடர்ந்தும் சிறிய அளவு மருந்து பாவித்துக் கொண்டே வருகிறாள். அவள் எல்லா விதங்களிலும் குணம் அடைந்தாலும், ஒரு விடயத்தில் இன்னும் எந்த விட்டுக் கொடுப்பையும் காட்டுகிறாள் இல்லை. அடுத்த மாசத்தோடு அவளது உயர்தர வகுப்புகள் முடிவு பெறுகின்றன. அவள் அந்த வகுப்பில் நல்ல சித்தி அடைவாள் என்பதில் யாருக்கும் சந்தேகம் இல்லை. அவள் தொடர்ந்தும் ஒஸ்லோப் பல்கலைக்கழகத்தில் படிக்க வேண்டும் என்பதே "TS"சின் விருப்பம். அதில் அவளுக்கும் சம்மதமே. அப்படி என்றால் கடன் எடுக்காமல் படிக்கலாம் என்கின்ற எண்ணம் அவளிடம் உண்டு. கடன் எடுத்து விட்டுத் திருப்பிக் கட்டுவது சுமையான ஒரு காரியம் என்பது "TS"சின்

எண்ணம். தங்களுக்கு இருப்பது ஒரே பிள்ளை என்பதும், அவளின் செலவிற்கு மட்டுமே தான் உழைக்கும் பணம் போக வேண்டும் என்றும் "TS" நினைப்பார். வேறு வகையிலும் இங்கு பணம் கொடுக்க வேண்டியதாய் இருக்கிறது. அது தமிழர்களின் கடமை என்பது "TS"சின் எண்ணம். அது எவ்வளவு காலத்திற்கு இப்படிக் கொடுக்க வேண்டி வரும் என்பது அவருக்கு விளங்கவில்லை. போராட்டத்திற்கு ஒரு முடிவு வரும் என்று எண்ணியபோது அது மேலும் மேலும் சிக்கல் ஆகிக் கொண்டு போகிறது என்பதும் அவர் கவலை.

ஏன் இந்த வேலையைச் செய்தார்கள் என்பது அவருக்கு விளங்க வில்லை. நிச்சயம் அவர்கள் செய்ததற்கு ஏதாவது காரணம் இருக்கும் என்று "TS" நம்பினார். அந்த நம்பிக்கை இல்லாது போனால் எங்கள் போராட்டத்திலேயே நம்பிக்கை இல்லாது போய்விடும் என்று அவருக்குத் தோன்றியது.

ஆயிரம் பிரச்சனைகள் இருந்தாலும் வாழ்க்கை ஸ்தம்பிக்காது ஓடிக் கொண்டே இருக்கிறது. அருளும் தனது மனைவியை இங்கு எடுத்து விட்டான். அவன் அவளை இந்தியாவுக்குச் சென்று திருமணம் செய்து இருந்தான். நீலக் கடவுச் சீட்டில் இலங்கைக்குச் செல்ல முடியாது என்பதால் அப்படிச் செய்ய வேண்டி இருந்தது. அதன் பின்பு விண்ணப்பித்து அவளும் நோர்வேக்கு வந்து சேர்ந்து விட்டாள். சிவாவும் தனக்கு ஒரு வீடு வாங்கி உள்ளான். அதில்தான் றூபனும், சொரூபனும் தஞ்சமடைந்து இருக்கிறார்கள். வீடு மலிவாக விற்பதால் தாங்களும் வீடு வாங்க வேண்டும் என்பது அவர்கள் இன்றைய திட்டம். பின்பு திருமணம் செய்து மனைவிமாரை எடுக்க வேண்டும் என்கின்ற எண்ணம்.

இன்று அருள் வீட்டிற்குச் செல்ல வேண்டும். சரிஸ்காவைக் கேட்டால் என்ன சொல்வாளோ என்கின்ற பயம் "TS"சிடம். அவளைத் தனிமைப்பட விடக்கூடாது என்கின்ற எண்ணம். ஆனால் போகுமிடங்களில் உன்னுடைய கலியாணம் எப்போது என்று சட்டென்று யாராவது கேட்டு விடுவார்கள். அப்படி யாரும் கேட்டால் அவள் மன நிலை பட்டென்று மழைக் கால மேகமாக மாறிவிடும். பின்பு பேய் அறைந்தது போலவே அங்கு முறைத்துக் கொண்டு இருப்பாள். வீட்டிற்கு வந்தும் கோபம் மாறாமல் உறுமுவாள். சாப்பிடாது போய் படுத்துக் கொள்வாள். இப்பிடிச் செய்கிறாளே என்று பேசாமல் விட்டால் அவள்

தனித்து இருக்க வேண்டும் என்கின்ற ஆதங்கம் "TS"சிடம் உண்டு. அவளை ஓரளவு கட்டாயப் படுத்தக் கூடிய மன வலிமையை அவள் பெற்று விட்டதாய் அவர் எண்ணினார். அவர் எப்போதும் ஏதாவது சொல்லி அவளை அழைத்துச் செல்வதே வழமையானது. முதலில் மறுத்தாலும் மீண்டும் மீண்டும் அப்பா கெஞ்சுகிறாரே என்று அவளுக்கு இரக்கம் வந்துவிடும். இன்றும் கேட்ட உடன் எப்படியும் மறுப்பாள் என்பதில் அவருக்குச் சந்தேகம் இல்லை. அதற்குத் தான் என்ன பதில் சொல்வது என்கின்ற யோசனையோடு கடையில் இருந்து பொருட்களைக் காவிய வண்ணம் வீட்டிற்கு வந்தார். இப்படிப் பொருட்களைக் காவ முடியாது என்பது "TS"சின் தற்போதைய நிலை. விரைவாக ஒரு கார் வாங்கிவிட வேண்டும் என்று அவர் நினைத்துக் கொண்டார். மத்திய கிழக்கில் பாவித்த அனுமதிப் பத்திரத்தை வந்த உடனேயே மாற்றி வைத்தது எப்போது கார் வாங்கினாலும் பாவிக்கும் சுதந்திரத்தைத் தந்து இருந்தது. இனி அதை வாங்காமல் இருப்பதற்கு எந்தக் காரணமும் இல்லை என்று அவருக்குத் தோன்றியது. கையில் காவி வரும் இம்சை தீர வேண்டும் என்கின்ற முடிவு அவரிடம்.

கார் வாங்கினால் வாழ்க்கைச் செலவு அதிகரிக்கும் என்பதும் உண்மை. அதற்காகப் புவனலோசினியை அல்லது சரிஸ்காவைப் பொருட்களைக் காவி வாருங்கள் என்று சொல்ல முடியாது. இருந்தும் புவனலோசினி இடைக்கிடை காவி வருவது உண்டு. வந்த பின்பு கையைத் தூக்கிக் கொண்டு திரிவாள். வின்டோஜன் பூசிவிடச் சொல்லி "TS"சைக் கேட்பாள்.

"TS" வீட்டிற்குள் வந்த போது சரிஸ்கா கோலில் இருந்து தொலைக்காட்சி பார்த்தாள். அப்பா பாரத்தோடு வருவதைப் பார்த்துவிட்டு அவர் நிலத்தில் வைத்த பொருட்களைத் தூக்கிக் கொண்டு சமையல் அறைக்குச் சென்றாள். பின்பு அவற்றை எடுத்து அந்தந்த இடங்களில் அடுக்கத் தொடங்கினாள். "TS" தனது மேலங்கியைக் கழற்றிக் கொளுவி விட்டுச் சமையல் அறைக்கு வந்தார். சரிஸ்கா தொடர்ந்தும் பொருட்களை எடுத்து வைத்த வண்ணம் நின்றாள்.

"பிள்ளை கெட்டிக்காரி." என்றார் "TS".

"உது என்னத்துக்கு இப்ப? சோழியன் குடுமி சும்மா ஆடாது. அப்பாவின்ரை குடுமியும் ஆடினா அப்பிடித்தான் எண்டு எனக்குத் தெரியும்."

"நல்ல பிள்ளை எல்லே சரிஸ்கா? கொஞ்ச நேரத்தில அப்பாவும், அம்மாவும் அருள் வீட்டை போகப் போகிறம். தயவு செய்து மறுக்காமல் நீயும் எங்களோடை வெளிக்கிட்டு வரவேணும். தயவு செய்து அப்பாவுக்காக நீ கட்டாயம் இண்டைக்கு வரவேணும். சரியா?"

"ம்... அப்பா... எனக்குத் தெரியும் நீங்கள் அப்பிடி ஏதோ கேட்கப் போறியள் எண்டு. உது என்னிட்டை இண்டைக்கு வாய்க்காது... நான் வரேல்லை அப்பா. அங்க வந்தாத் தேவை இல்லாத கதை வரும். பிறகு கவலையா இருக்கும்." என்றாள் சரிஸ்கா.

"மனிசர் எல்லாரும் ஒரே மாதிரி இருக்க மாட்டினம். நாலுபேர் நாலு மாதிரித் தான் இருப்பினம். நாலுபேர் நாலு விதமாகத்தான் கதைப்பினம். நல்ல விஷயத்தை நாங்கள் எடுத்துக் கொள்ள வேணும். தேவை இல்லாத விஷயத்தைக் கண்டு கொள்ளாமல் விட்டிட வேணும். அதைப் பழகினாத்தான் இந்த உலகில வாழ முடியும்." என்றார் "TS".

"அது எல்லாம் சொல்லுகிற மாதிரி இல்லை அப்பா. அதை அனுபவிக்கிறது கொடுமையிலும் கொடுமை. அதை நான் மட்டுமே அனுபவிக்க முடியும்." என்றாள் சரிஸ்கா.

"நீ அனுபவிக்கிற வேதனை எனக்குத் தெரியும் செல்லம். என்ன செய்கிறது? அது அப்பிடி அமைஞ்சிட்டுது. அதையும் சமாளிச்சு வாழ வேணும் சரிஸ்கா. தேவை இல்லாததைக் காதில வாங்காமல் இருக்க முயற்சிக்க வேணும். வெளிக்கிடு சரிஸ்கா... போயிட்டு வருவம். நீ வராட்டியும் ஆயிரம் கேள்விகள் வரும். அது கைகால் முளைச்சுப் பெரும் கதையா நடமாடும். நீ வந்தா உன்னிட்டை ஆக மிஞ்சினா ஒரு கேள்வி கேட்பினம்." என்றார் "TS".

"நீங்களும் நல்ல சுயநலவாதிதான் அப்பா..."

"ம்... என்ன செய்கிறது? வாழ்க்கை அப்பிடித்தான். சுயநலத்திற்குப் பிறகே பொது நலம்..."

*

அருளின் வீடா என்கின்ற அதிர்ச்சி "TS"சைத் தாக்கியது. பெண்களின் இரசனைக்கும் ஆண்களின் இரசனைக்கும் சில வேளைகளில் மலைக்கும் மடுவுக்குமான வித்தியாசம் இருக்குமென அவருக்குத் தோன்றியது. இரண்டும் பல வேளை இரண்டு உலகங்கள். இவ்வளவு நீற்றாக அருளின் வீட்டை மாற்றி அமைக்க முடியுமா என்கின்ற அதிர்ச்சியில் இருந்து அவரால் விடுபட முடியவில்லை. புவனலோசினிக்கும், சரிஸ்காவிற்கும் அருளின் வீடு முதலில் எப்படி இருந்து இருக்கும் என்கின்ற கற்பனை இல்லாத சௌகரியத்தில் அமைதியாகச் சென்று சோபாவில் அமர்ந்தனர். ஏற்கனவே சண்முகன் வந்திருந்தான். அவனுக்குப் பால்த் தேநீரை விட வெறும் தேநீர் தான் அதிகம் பிடிக்கும். ரூபா அதை அவனுக்குத் தயாரித்துக் கொடுத்து இருந்தாள்.

ரூபா பெயருக்கு ஏற்ப ரூபமாயே இருந்தாள். அண்டத்தையே ஆட்கொள்ளும் அகலக் கண்கள் அவளுக்கு. சந்திரனும் பொறாமையில் மயங்கும் வட்டமுகம். மன்மதனையும் கவரும் கவர்ச்சியான இதழ்கள். கரு கருவென்ற குயிலிறகின் நிறத்தில் சுருண்ட கட்டையான கூந்தல். அருளை விடச் சற்று உயரம் குறைவு. அழகாக நீலச் சுடிதார் அணிந்து இருந்தாள். கழுத்தில் முறுக்குத் தளராத தாலிக்கொடி. நெற்றியில் ஒட்டுக் குங்குமப் பொட்டு. வில்லாக வெட்டப்பட்ட புருவ உரோமங்கள். வெள்ளி முத்துக் கரைந்து வழியும் புன்னகை. கறுப்பும் அழகு என்பதிற்கு மாற்றுக் கருத்து இல்லை என்பதான அவள் உருவம். அதில் உக்கிரமாகத் தெறிக்கும் கவர்ச்சி. அருள் அதிஸ்ரக்காரன் என்பது "TS"சின் அவிப்பிராயம். சொத்தை போகாத அவனது தாய் தகப்பனின் தேடலாக அவள். இவர்களைக் கண்டதும்,

"இவர் "TS" அண்ணா, இவ புவனா அக்கா, இவ சரிஸ்கா. நான் சொல்லுகிறது சரியா?" என்று மூவரையும் பார்த்து அவள் சிரித்த வண்ணம் கேட்டாள்.

"அருள்... நீ நல்லா வீட்டுப் பாடம் எடுத்து இருக்கிறாய் போல இருக்குது." என்றார் "TS".

"உங்களைப் பற்றிச் சொல்லாட்டி வேறை யாரைப் பற்றிச் சொல்லுகிறது சொல்லுங்க பார்ப்பம்? நீங்கள் எனக்கு

இங்க இருக்கிற ஆட்களில முக்கியமான ஒரு ஆள் இல்லையா?" என்றான் அருள்.

"அப்ப நாங்கள் முக்கியம் இல்லை ஆக்கும்?" என்றான் சண்முகன்.

"அவர் மட்டுமே முக்கியம் எண்டு ஒரு வசனம் சொன்னனா? தமிழ். நாங்கள் கதைக்கிறது தமிழ். அவர் முக்கியமான ஆட்களில ஒருத்தர் எண்டு மட்டும்தான் சொன்னனான். அப்பிடி எண்டா நீங்களும் முக்கியமான ஒரு ஆளாய் இருக்கலாம் தானே? ஆனா... இந்த முக்கியம் விளம்பரத்தாலையும் வரக் கூடாது. அதே வேளை ஊமையா இருந்து வராமலும் விடக்கூடாது. ஒரு புகழ் சுய விளம்பரங்களால வாறதிலும் வராமலே விடலாம். அதே வேளை நிறையப்பேர் அப்பிடிச் சுய விளம்பரம் தேடத் தெரியாமலே செத்துப் போயிருக்கினம். இந்தச் சமுதாயம் ஊமைகளை ஏன் என்றும் கேட்பது இல்லை. எண்டாலும் அவையின்ரை புகழ் செத்துப் போகாது. அது வர வேண்டிய நேரத்தில தானா முன்னுக்கு வரும். என்ன... அவதிப்படாமல் இருக்கோணும். சில வேளை அந்தக் காலத்துக்கு உள்ள அவர்களுடைய ஆயுளும் முடிஞ்சு போயிடும்." என்று அருள் விளக்கத் தொடங்க,

"பிச்சை வேண்டாம் நாயப் பிடியுங்க சாமி. நான் முக்கியம் இல்லாமலே இருந்திடுறன்... என்ன விட்டிடய்யா அருள்." என்று சண்முகன் சிரிக்க எல்லோரும் சிரித்தார்கள்.

"வீடு கோயில் மாதிரி மாறீட்டுது?" என்றார் "TS".

"அது தெய்வம் வந்திட்டுது தானே...? இனி வீடு இப்படித்தான் இருக்கும்." என்றான் சண்முகன் நக்கல் சிரிப்போடு.

"அப்பா சண்முகா... எங்களை மனிசராகவே வாழ விடுங்கோ. உங்கடை தெய்வங்களும், தேவர்களும் உங்களோடையே இருக்கட்டும்." என்றான் அருள்.

"நீங்கள் கேட்டாலும் உங்களை ஒருத்தரும் தேவர் எண்ட மாட்டினம். சும்மா அவதிப்படாமல் இருங்கோ. என்ன "TS" அண்ணை நான் சொல்லுகிறது சரியே?" என்று "TS"சைத் தன் கட்சிக்கு இழுக்க அவரும் அதன் சூட்சுமம் விளங்காது,

"ஓ நீ சொன்னா அதில நிச்சயம் அர்த்தம் இருக்கும்." என்றார்.

"என்ன அர்த்தம்? எல்லாம் சுத்திச் சுத்தி சுப்பற்ற கொல்லேக்க வாற அர்த்தம் தான்." என்றான் அருள்.

"சும்மா இருங்கோ அப்பா." என்ற வண்ணம் றூபா எழுந்து சமையல் அறைக்குச் செல்ல அவள் பின்னால் புவனலோசினி சென்றாள். அதைப் பார்த்த சரிஸ்காவும் மெதுவாக எழுந்து அங்கே சென்றாள்.

"அவை என்ன மாதர் மாநாடு அங்க நடத்தப் போகினமே?" என்றான் சண்முகன் எள்ளலாக.

"இங்க தானே எல்லா உரிமையும் இருக்குது. என்னத்தை ஆவது நடத்தட்டும்." என்றான் அருள்.

"எப்பிடி நீர் வாங்கின வீடு? அங்காலை வரோணும் எண்டு நினைச்சன்... எங்க நேரம்?" என்றார் "TS" சண்முகனைப் பார்த்து.

"பருவாய் இல்லை. இப்பிடித்தான் அந்த வீட்டின்ரை கொண்டிசனும். எதுவும் புதுசாய் செய்ய வேணும் எண்டு இல்லை' என்றான் சண்முகன்.

'சொறியனும், ரூபனும் வீடு பாக்கினம். அவைக்கு இனித் தனிய இருக்க ஏலாதாம்." என்றார் "TS".

அடுக்களைக்குள் சென்றதும் புவனலோசினி றூபாவைப் பார்த்து,

"ஊரில நிலைமை எப்பிடி இருக்குது பிள்ளை?" என்றாள்.

"ஐயோ அக்கா அதை ஏன் கேட்கிறியள்? உயிரையும் மானத்தையும் கையில பிடிச்சுக் கொண்டு வாழ வேண்டி இருந்திச்சுது. நாயளைக் கொல்லுகிற மாதிரித் தான் அவங்கள் தமிழரைக் கொல்லுகிறாங்கள். இவங்களுக்குச் சிங்கள ஆமியே மேல் எண்டு இருந்திச்சுது. எந்த ஆமி வந்தாலும் இப்படித்தான் செய்வாங்கள் போல இருக்குது. புலியளும் சும்மா இருக்கிறது இல்லை. சனங்களைப் பற்றிக் கவலை இல்லாமல் சிங்கள ஆமியைச் சுரண்டி உசுப்பேத்துகிற மாதிரி இவங்களும் ஏதாவது செய்வாங்கள். சனம் அல்லோல கல்லோலப் படுகுதுகள். எல்லாத்தையும் செய்து போட்டு அவங்கள் வழமை போல ஓடிடுவாங்கள். ஆப்பிர்ற அப்பாவியளை எல்லாம் புலியாக

நினைச்சுக் கொண்டு புலியளுக்குப் பதிலா அப்பாவிச் சனங்களைப் பழி வாங்குவாங்கள். கண்மண் தெரியாமல் சுட்டுத் தள்ளுவாங்கள். வீட்டோடை வைச்சு வொம் பண்ணு வாங்கள். பொம்பிளையளைக் கொண்டு போனப் பிறகு வொடி கூடக் கிடைக்காது. புலியள் செருகத் தொடங்கினது தொடக்கம் கொஞ்சம் கொஞ்சமாய் அவங்களும் தங்கடை குணத்தைக் காட்டத் தொடங்கீட்டாங்கள். சனத்தைப் பற்றிப் புலிகளுக்கோ, இந்தியன் ஆமிக்கோ, சிலோன் ஆமிக்கோ, ஏன் சிலோன் கவன்மென்றுக்கோ துளி அக்கறையும் கிடையாது அக்கா. பழிவாங்குகிறது மட்டும் அப்பாவிச் சனத்தைத்தான். அதுக்கு அரசாங்கம் எந்தக் கவலையும் இல்லாமல் நிறையச் செலவழிக்கத் தயாராக இருக்குது. இந்தியன் ஆமி நிறையச் செய்து போட்டுது. அங்கை, இஞ்சை எண்டு அடிக்கடி அது நடக்கும். அதை ஒரு நாள் அல்லது இரண்டு நாள்ல சனமும் மறந்து போயிடும். எங்கையும் பெரிசா நடந்தாக் கொஞ்ச நாளைக்கு ஞாபகம் வைச்சிருக்குங்கள். கொக்குவிலுக்க நாற்பது பேரைச் சுட்டது பெரிசா இருந்திச்சுது. அதுக்குப் பிறகு யாழ்ப்பாணம் ஆஸ்பத்திரிக்க சுட்டுத் தள்ளினாங்கள். நேர்ஸ், டொக்ரர், நோயில படுத்து இருந்தவங்கள் எண்டு எந்த வித்தியாசமும் இல்லாமல் வேட்டையடினாங்கள். பிறகு வடமாராச்சியில, சந்தைக்கு உள்ள, புலியள் குண்டுவைச்சு, ஆறு ஆமியைக் கொண்டாங்கள். அறுவார் அவ்வளவு சனம் கூடுற இடத்தில யாருக்கும் தெரியாமல் குண்டை வைச்சிருக்கிறாங்கள். அதுதான் திரும்பவும் சொல்லுகிறன் சனங்கள் சாகிறதைப் பற்றி யாருக்கும் அக்கறை கிடையாது அக்கா. அவங்களும் விட்டாங்களே...? பயந்து பயந்து வீடு வீடாச் சரணடைஞ்சு நிண்ட சனங்களை எல்லாம் பிடிச்சுச் சுட்டுத் தள்ளினாங்கள். அறுபத்தி நாலுபேரைச் சுட்டவங்களாம். ஆற்ரை கையில ஆயுதம் இருந்தாலும் அக்கா அப்பாவிச் சனத்தின்ர தலையில குண்டேத்துகிறதே அவையின்ரை வேலை. அது ஆமியா இருந்தா என்னப் புலியளா இருந்தா என்ன? எல்லாம் மனிசரைக் கொல்லுகிற கொலைகாரக் கூட்டம் அக்கா." என்றாள் றூபா.

"எனக்கு நல்லாத் தெரியும் றூபா... எல்லாம் ஈன இரக்கம் இல்லாத மிருகங்கள். ஆயுதம் இருந்தாத் தாங்களே மனிசரைப் படைச்ச கடவுள் எண்ட நினைப்பு அவைக்கு வந்திடும். இப்பிடி அநியாயம் செய்யிறவங்களின்ரை குடும்பங்களும் அப்படித்தான் அநியாயமாய் ஒரு

நாளைக்கு அழிஞ்சு போயிடும்." என்றாள் புவனலோசினி ஆற்றாமையோடு. அவள் ஏதோ நினைவுகளில் உணர்ச்சி வசப்பட்டு இருந்தாள். அவள் கைகள் கட்டுப்பாடு இல்லாது நடுங்கின. முகம் விகாரமாகி இருந்தது. வியர்வைத் துளிகள் அரும்பி மின்னொழியில் கடும் குளிர்ப் பனித் துகளாய் மினுங்கிற்று. சரிஸ்கா பேசாது விறைத்துப் போய் நின்றாள். மீண்டும் கூட்டிச் சென்று நரகத்திற்குள் தள்ளி விட்டதான அனுபவத்தைப் பெற்றது போன்று இருந்தது அவளுக்கு. ஏன் ஓடிவந்து இதைக் கேட்டேன் என்று புவனலோசினி கவலைப்பட்டாள்.

"ஏன் அக்கா ஒரு மாதிரி நிக்கிறியள்? உங்களுக்கு வேர்க்குது போல இருக்குது." என்றாள் ரூாபா.

"ஓ... ஏதோ சாதுவாத் தலைச் சுத்துகிற மாதிரியும் இருக்குது. அது இப்பிடித் தான் வரும்... போகும். எங்கடை வாழ்க்கை அப்பிடித்தான். அதை விடும். ரீ ஒரு மிடறு குடிச்சா சரியாப் போயிடும்." என்றாள் புவனலோசினி குலைந்த வசனங்களாக.

"ஒரு நிமிசம் அக்கா... முடிஞ்சிடும்." என்றாள் ரூாபா.

*

நேற்று அது நடந்தது. பல தொலைக்காட்சிகளில் அதுவே பெரிய செய்தியாகி இருந்தது. அருளோடு சண்முகன் அதைப் பற்றிக் கதைக்க விரும்பவில்லை. கதைத்தால் ஏதாவது குதர்க்கமாகக் கதைப்பான். அவர்கள் செய்த வேலைக்கு இதுவே நல்ல முடிவு என்பது சண்முகனின் எண்ணம். எங்கள் சனங்கள் அழிவதற்குக் காரணமாய் இருந்தவர்கள் பழிவாங்கப்பட்டது ஒன்றும் தப்பில்லை. அப்போதுதான் எங்கள் மீது கைவைக்க மற்றவர்களுக்குப் பயம் இருக்கும். இப்படியே ஒரு முடிவு வரும் என்று சண்முகன் எண்ணி இருந்தான். தலைவர் இப்படியான ஒரு முடிவுக்கு வருவார் என்பதாய் அவன் உத்தேசித்து இருந்தான். மீண்டும் வந்து எங்களை அழிக்கத் தலைவர் இடம் கொடுக்கவில்லை. இதை அருளனுக்குச் சொன்னால் விளங்காது என்பது சண்முகனின் எண்ணம். "TS"சோடு அதைப் பற்றிக் கதைக்கலாம். அவர் தானாக அதைப் பற்றிக் கதைப்பார் என்கின்ற நம்பிக்கையும் இல்லை. சண்முகனுக்கு அதைப் பற்றிக் கதைக்க வேண்டும் போல் இருந்தது. இல்லாவிட்டால் தலை வெடித்து விடும் என்கின்ற அவஸ்தை.

அதற்கிடையில் றூபா தேநீரும் ஊரில் இருந்து கொண்டு வந்த மிக்சர், பயத்தம் பணியாரம் ஆகியவற்றுடன் கோலுக்கு வந்தாள். சண்முகனுக்கு மீண்டும் மறக்காமல் வெறும் தேநீர் கொண்டு வந்தாள். அவளைப் பார்க்கும் போது சண்முகனுக்கு ஒருவித பொறாமை உண்டாகியது. தனக்கு இப்படி ஒருத்தி வந்து வாய்ப்பாளா என்று அவனுக்கு ஆதங்கம் ஏற்பட்டது. யாராவது தோட்டத்தில் வேலை செய்பவளைப் பிடித்து அனுப்பி வைத்தாலும் வைப்பார்கள் என்கின்ற பயமும் எட்டிப் பார்த்தது. இங்கு அழகோடு அறிவுள்ள பெண்களாகவும் இருந்தாலே வாழ்வு சிறக்கும் என்பது அவன் அவிப்பிராயம். அழகு அனுபவிக்க, அறிவு பணம் சம்பாதிக்க அவனைப் பொறுத்த வரையில் மிகவும் முக்கியமான தகமைகள். படித்தவர்கள், அறிவு உள்ளவர்களே விரைவாக மொழியையும் படிப்பார்கள் என்று அவன் நம்பினான்.

தேநீர் பரிமாறி முடியும் போது மீண்டும் அழைப்பு மணி ஒலித்தது. அது சிவாவாக இருக்கும் என்பது அருளுக்குத் தெரியும். அவன் சென்று கதவைத் திறந்தான். சிவாவோடு சமையல் வாசம் வந்தது. அவன் வேலை இடத்தில் இருந்து இங்கே நேராக வருகிறான் என்பதை அருளால் விளங்கிக் கொள்ள முடிந்தது. வீட்டிற்குப் போய் திரும்பி வருவது என்றாலும் அதற்கு நேரம் எடுக்கும். சிவா உள்ளே வந்த போது பலர் இருப்பதைப் பார்த்துவிட்டு,

"அப்ப இண்டைக்கு இங்க தான் மாநாடு போல?" என்றான்.

சண்முகனுக்குச் சிவா எதைக் கூறுகிறான் என்பது விளங்கி விட்டது. இனி தான் தொடக்கத் தேவை இல்லை... எப்படியும் சிவா தொடக்குவான் என்கின்ற நம்பிக்கை. அவன் எதாவது எதிர்க் கருத்துக்களைக் கண்டு பிடித்துக் குதர்க்கம் பண்ணுவான். அதற்குத் துணையாக அருள் நிற்பான். "TS" எப்போதும் வலு அவதானமாகத்தான் கதைப்பார். பிழை என்றாலும் சரி என்று கடுமையாக வாதாடமாட்டார். அப்படி வாதாடாமல் விட்டால் அது பிழை என்பதாய் ஒப்புக் கொள்வது போல இருக்கும் என்பதை அவர் ஏன் விளங்கிக் கொள்கிறார் இல்லை என்பது அவனுக்குத் தெரியவில்லை.

"என்ன மாநாடு?" என்றான் எதுவும் தெரியாதவனாய் சண்முகன்.

"இங்க பாருங்க... ஒண்டும் தெரியாத பாப்பா கண்ணை அடிச்சாளாம் எண்ட மாதிரி இருக்குது. இரவு பகலா ரீவியோடைதான் இருந்திருப்பார். இப்ப நான் கதைக்கிறது விளங்க இல்லை ஆக்கும்? சண்முகா நீ எனக்குக் குருவாக முடியாது. நான் அந்தச் சுடலைப் பொடி பூசிச் சுடலையில ருத்திர தாண்டவம் ஆடுகிற பித்தன் இல்லை. பூமியிலே இரண்டு காலையும் கவனமா ஊன்றி நிற்கும் சாதாரண மனிதன் அப்பா." என்றான் சிவா.

"சிவா வந்தால் சிவன் வாற மாதிரி இல்லை. அதுக்குப் பதிலா நாரதர் வாற மாதிரி. இனி இங்க கலகம் தான். அதுக்கு இண்டைக்கு நானே கிடைச்சன்? நாங்கள் சும்மாய் இருந்தாலும் உனக்கு வாய் சும்மா இருக்காது. சொல்லு... சொல்லு... என்ன சொல்லுகினம்? எல்லாத்தையும் கேட்டு வைப்பம். கண்டதையும் கற்கப் பண்டிதன் ஆவான் எண்டுவினம். பண்டிதன் ஆகிறமோ பண்டியள் ஆகிறமோ விஷயத்தைக் கேட்பம்." என்றான் சண்முகன் நக்கல் சிரிப்புச் சிரித்த வண்ணம்.

"சிவா அண்ணா ஐஞ்சு நிமிசம் பொறுங்கோ... ரீயோடை வாறன்." என்றாள் றூபா.

"என்ன ரீயா? நான் சாப்பிடத் தான் இங்க வருவன்."

"அதுக்கு என்ன? கட்டாயம் இருந்து சாப்பிட்டிட்டுப் போங்கோ." என்ற வண்ணம் அவள் சமையல் அறைக்குள் மறைந்தாள்.

"என்ன புவனா அக்கா பேசாமல் இருக்கிறியள்?" என்றான் சிவா.

"நாங்கள் என்னத்தைக் கதைக்கிறது? பொது சனத்தைப் பற்றி யாரும் எப்பவும் அக்கறைப் படுகிறாங்களே? இங்க இருந்து நாங்கள் எதையும் கதைக்கலாம். யாருக்கும் சப்போட் பண்ணலாம். அங்க ஆயுதத்தோடை வந்து நிக்கிறவங்களிட்டை என்ன பதில் சொல்ல முடியும்? ஒரு நாய்க்கு இருக்கிற மதிப்புக்கூட அவங்களுக்கு முன்னால எங்களுக்கு இருக்காது" என்றாள் புவனலோசினி.

"நீங்கள் சொல்லுகிறது உண்மை அக்கா. இந்த ஆயுதத்தால வாற அராஜகத்தை, மனிதநேய மறுப்பைப் பார்க்கப் பார்க்கத்தான் போராட்டத்திலேயே வெறுப்பு வந்தது. இப்ப நாலு பொதுசனம் சாக நான் காரணம் இல்லாமல் இருக்கிறன் எண்டதே பெரிய நிம்மதி. என்னப்

பொறுத்தவரை சிலரின்ரை சுயநலத்திற்காக அப்பாவித் தமிழ் சனத்தின்ரை உயிரை விலை கொடுத்துக் கொண்டு இருக்கினம். அதுகளின்ரை ஈனத்தில இங்க வெளிநாட்டில படம் ஓடுது. பணம் புரளுது. உலகம் சுத்துகிற மாதிரி பாவ புண்ணியங்களும் சுத்திச் சுத்தி வருமாம்." என்றான் சிவா.

"பாவ புண்ணியம் யாரையும் சுத்தி வந்த மாதிரித் தெரிய இல்லை. சிங்கள அரசாங்கத்தில இருந்த யாரையும் சுத்தினதாகவும் தெரியேல்லை. தமிழரை மட்டும்தான் அது சுத்தும் ஆக்கும்? சிவா, உது என்ன கதை கதைக்கிறாய்? உனக்குச் சுடலைப் பொடி பூசாமலே பித்து ஏறிப்போய் நிக்கிறாய்." என்றான் சண்முகன்.

"இருக்கலாம் சண்முகா. நான் அப்படி இருந்தாலும் அரசன் அன்று அறுப்பான் தெய்வம் நின்று அறுக்கும் எண்டு சொல்லுவினம். அரசர்கள் அப்பாவிகளை அறுக்கிறார்கள். தெய்வம் அரசர்களை எப்பவாவது அறுக்கும் எண்டு நம்புவம்." என்றான் சிவா.

"சிவா நீ முக்கியமான விஷயம் ஒண்டைக் கதைக்கிறாய் இல்லை." என்றான் சண்முகன்.

"நீ விளங்கிக் கதைக்கிறியோ விஷமத்துக்குக் கதைக்கிறியோ எனக்கு அதைப் பற்றிப் பிரச்சனை இல்லை. எங்கடை தலைவர் கெட்டிக்காரன் எண்டு இப்ப சொல்லலாம். ஆனா... உது வாசுதேவனை விட அவனுடைய படைகள் போதும் எண்டு நினைச்ச துரியோதனனைவிட மட்டமான அரசியல் எண்டதை எங்கடை இனத்தின்ர இரத்தம் எழுதப் போகுதோ எண்டு பயமா இருக்குது." என்றான் சிவா.

"என்ன சிவா? எல்லாரையும் பயமுறுத்த வேணும் எண்டே யோசிச்சுக்கொண்டு வாறனி? இண்டைக்கு செத்தா நாளைக்குப் பால். அது சனம் கெதியா மறந்து போயிடும்." என்றான் சண்முகன்.

இருவர் கதைப்பதையும் அதுவரை கேட்டுக் கொண்டிருந்த அருள் கதைக்கத் தொடங்கினான்.

"வேற யாரையும் கொன்று இருந்தால் சனம் மறந்திடும். இது யாற்ற குடும்பம் தெரியும் தானே? அதே குடும்பத்தில இருந்து ஆட்சிக்கு திரும்பவும் ஆட்கள் வருவினம். அப்ப அவை என்ன யோசிப்பினம்? அவை என்ன செய்யலாம்

எண்டு உங்கடை தலைவர் யோசிக்க இல்லை ஆக்கும்? தலைவருக்குத் தெரிஞ்ச மருந்து துரோகிகள் எண்டு சொல்லித் தலையில போடுகிறது மட்டும் தானே? அது ஒரு நாளைக்குத் திசை மாறித் திரும்பும். அப்ப தெரியும் எல்லாம்." என்றான் அருள்.

"ஏன் அருள் இப்பிடிச் சொல்லுகிறா? இப்படி எல்லாம் பிரச்சனை வரும் எண்டு அவங்களும் யோசிப்பாங்கள் தானே? சில வேளை அவங்கள் இதைச் செய்து இருக்க மாட்டாங்கள்." என்றார் "TS".

"அவங்கள் செய்து இருக்கக் கூடாது எண்டுகிற உங்கடை ஆசை எனக்கும் விளங்குது. அப்பிடி அவங்கள் செய்யாமல் இருந்து இருந்தால் அது எங்கடை போராட்டத்திற்குச் செய்த உதவியாய் இருக்கும். ஆனா... அதை உண்மை ஆக்கிறத்துக்கான சாத்தியக் கூறுகள் கொஞ்சமும் இல்லை. அதுக்கு முதல் காரணம் என்ன எண்டாத் தற்கொலைக் குண்டுதாரி. இரண்டாவது தமிழ்நாடு. மூன்றாவது இப்ப அவைதான் எண்டும் சொல்லி ஆச்சுது. அவை செய்து இருப்பினம் எண்டதுக்கு நிறையக் காரணங்கள் இருக்குது. இருந்தாலும், நாட்டுக்கு வெளிய அவை செய்திருக்கிற முதலும் கடைசியுமான அரசியல் தலைவரின் கொலையாக இது இருக்கலாம். எங்கடை சனத்துக்குக் காதுக்க வைக்கிறதை அவை தொடரத்தான் செய்வினம். அவை அப்படிச் செய்தா நாலுபேர் எதிராக் கத்துவினம். அந்த வாயை மூடுறத்துக்கு ஆயிரம் ஆயிரம் பேர் இருக்கேக்க அவையின்ர குரல் எங்க எடுபடப் போகுது?" என்றான் சிவா.

"சிவா... நீர் ஆகவும் கற்பனை செய்யாதீர். அவங்கள் இதுவரையும் நீ சொன்ன மாதிரி வெளிநாட்டில எல்லாம் கொலை செய்தது இல்லை. இதையும் செய்திருக்க மாட்டாங்கள். இந்தியாவில நிறைய இடங்கள்ல பிரச்சனை இருக்குது தானே? யாராவது செய்து இருப்பாங்கள்." என்றார் "TS".

""TS" அண்ணை, இதுதான் உங்களிட்டைப் பிடிக்கிற விஷயம். இது செய்யக் கூடாத ஒரு விஷயம் எண்டு உங்களுக்குத் தெரியுது. செய்யாமல் இருக்க வேணும் எண்ட ஆதங்கம் இருக்குது. செய்தால் என்ன விளைவு வரும் எண்ட பயமும் உங்களிட்டை இருக்குது. ஆனா... இது இருக்க வேண்டிய இடத்தில இருக்குதா

எண்டுகிறதுதான் கேள்வி? இருந்தால் உண்டு உய்வு. இல்லையேல் உய்வு இல்லை எமக்கு என்றும்." என்றான் சிவா.

"ஏற்கனவே அங்க இலட்சக்கணக்கா நிண்டவை தானே? அதைவிட என்ன செய்யப் போகினம்? அமைதிப்படை எண்டு போயிட்டு யுத்தம் செய்கிற பாரத தேசத்துப் பண்பை இழந்த இராணுவம் தானே அது? அங்க சனத்தை உயிரோடை வெடிக்க வைக்கிறவைக்கு அதுகின்ரை கொஞ்ச வலி எண்டாலும் தெரியத் தானே வேணும்? நாங்கள் எப்பவாவது அவைய ஈழத்திற்கு வரச் சொல்லிக் கேட்டோமா? எங்களைத் தொந்தரவு செய்ய வேண்டாம் எண்டு சொன்னம். அதை விளங்கிக் கொள்ளாட்டிப் புலியள் என்ன செய்கிறது?" என்றான் சண்முகன்.

"அப்பிடி இல்லை சண்முகன். நாங்கள் பக்கத்தில இருக்கிற ஒரு வல்லரசை பகைச்சுக் கொண்டு வாழுகிறது சாத்தியம் இல்லை. அவங்களை மீறி யாரும் எங்களுக்கு உதவி செய்யப் போகிறேல்லை. இந்தியாவின்ரை பொருளாதாரம் அங்க கிடைக்கப் போகிற சந்தை எங்களைவிட மிகப் பாரியது. ஒரு கடுகளவு இருக்கிற எங்களுக்காக யாரும் மலையளவு இருக்கிற பொருளாதார வளங்களை விட்டிட்டு வரப் போகிறது இல்லை. இந்தியன் ஆமியோடை மோதினாலும் ஒரு நாளைக்கு அவங்களோடை சமாதானம் ஆக வேணும். இந்தியாவை, அவங்கடை அரசியலை நம்ப முடியாது. அதைவிட இலங்கையை இன்னும் நம்பவே முடியாது. எத்தின சிங்கள அரசுகள் மாறி மாறி வந்தாலும் தமிழருக்கு ஒரு துரும்பு கூடத் தரப் போகிறது இல்லை. நாங்கள் எங்கடை உரிமையளைப் பெறத் தந்திரமாப் போராட வேணும். அதைத்தான் அவங்கள் செய்கிறாங்கள். ஆனா... என்ன சில வேளை முற்கோபி மாதிரி எல்லாரோடையும் பகைக்கிறாங்கள். என்னைப் பொறுத்த வரை அது நல்லது இல்லை எண்டு சொல்லுவன். நாங்கள் இராணுவத்தில பலமா இருக்கிற மாதிரி அரசியல்லையும் இன்னும் பலமா இருக்கோணும். அரசியலால வெட்டி ஓட வேணும். அது செய்யாட்டி யார் எண்டாலும் அழிஞ்சு போயிடுவினம். எங்களுக்கு அரசியல் செய்கிறத்துக்கு ஆட்கள் இருக்கினம். அவை இதைப் பற்றிச் சிந்திப்பினம் எண்டு நினைக்கிறன்." என்றார் "TS".

"அது இப்ப தலைக்கு மேல தண்ணி ஏறின மாதிரி. உந்தக் கொலை நடந்து இருக்கக் கூடாது. உதில இருந்து மீள முடியும் எண்டு நான் நினைக்க இல்லை. மீண்டாலும், அரசியலை விளங்கி வெட்டி ஓட நினைச்சாலும், தலைவர் ஓட விடுவாரா எண்டுகிறது சந்தேகம். உடும்புப் பிடி பிடிச்சுக் கொண்டு அழிஞ்சு போகிறதா எங்கடை போராட்டம் முடிஞ்சாலும் முடிஞ்சிடும்." என்றான் அருள்.

"அருள்... அவங்களை நீங்கள் எப்பவும் குறைச்சு மதிப்பிடுகிறியள். அப்பிடித்தான் அங்க சுளிபுரத்துக்கை நீங்கள் செய்தீங்கள். அவங்கள் யாரும் எதிர் பார்க்காத மாதிரி திரும்பவும் எழுந்து நிற்பாங்கள். அது பல முறை நடந்து இருக்குது. இருந்து பாரும்... எங்களுக்கான தனி நாட்டையும் அதன் முன்னேற்றத்தையும். புதிய சிங்கப்பூராய் பல மடங்கு உத்வேகத்தோடை அது வளரும்." என்றான் சண்முகன்.

"மனிதனுக்கு நம்பிக்கை இருக்கத்தான் வேணும். நான் குறைச்சும் மதிப்பிடேல்லை. சுழிபுரத்தில வெட்டித் தாட்டதைச் சரி எண்டும் நான் சொல்லேல்லை. நல்ல சந்தர்ப்பமாய் நுகத்துக்க கொண்டு வந்து கழுத்தைத் தந்தவை. அதை வைச்சுத் தந்திரமா வண்டில் ஓட்டத் தெரியாமல் எருதை அவுட்டுக் கலைச்சுப் போட்டு நாங்களே நுகத்தடியப் பிடிச்சுக் கொண்டு வண்டில் இழுக்கிற மாதிரி எங்கடை போராட்டம் போகுது. இது தலைக்கணமா? பேராசையா? பித்துக் குணமா? தெரிய இல்லை. இந்தியாவோடை பகைச்சுக் கொண்டு, அதுவும் இந்தியாவில கை வைச்சிட்டு, எங்கடை போராட்டத்திற்கு அங்கீகாரமும், வெற்றியும் கிடைக்கும் எண்டு எதிர் பார்க்கிறதை என்னால விளங்கிக் கொள்ள முடிய இல்லை. இப்ப பலருக்கும் பழிக்குப் பழி எண்டு சந்தோஷமாய் இருக்கும். அதுகின்ரை விளைவை வரும் காலம் தான் சொல்ல வேணும். காந்தியின்ரை அகிம்சையைத் தூக்கிக் கொண்டு இந்திய இராணுவம் இலங்கைக்கு வரேல்லை. தான் ஒரு வல்லரசு எண்ட வைராக்கியத்தில அது வந்தது. அந்த வைராக்கியத்தில இலங்கையால எதுவும் செய்ய முடியேல்லை. ஆனா... இலங்கை அரசின்ரை வலைக்குள்ள விழுந்த பொடிப் பயல்கள் தங்களை ஆட்டம் காண வைச்சாங்கள் எண்டதை அவங்கள் லேசில மறக்க மாட்டாங்கள். அதுக்கு எல்லாம் மகுடம் வைச்ச மாதிரிக் காந்தி

குடும்பத்தில போய் யாரும் சிந்திக்கிறவன் கை வைப்பானா? அதுவும் வேற ஒரு நாட்டில இருந்து வந்து கை வைப்பானா? இதுக்குத்தான் நீண்டகால அரசியல் பார்வை வேணும் எண்டு சொல்லுகிறது. அது இல்லாட்டிப் போராட்டத்தில நீண்ட தூரம் செல்ல முடியாது." என்றான் அருள்.

"என்ன அருள் பிரசங்கம் முடிஞ்சுதே? கொஞ்சம் இடம் கொடுத்தாலும் உங்கடை வேலையைத் தொடங்கீடுவீங்கள். பிறகு அதை நிப்பாட்ட யாராலும் ஏலாது. என்ன யார் எப்படியாவது செய்யட்டும், துப்பாக்கி முனையிலதான் அதிகாரம் பிறக்கும் எண்டதை நான் முழுமையா நம்புகிறன். அதை அவங்கள் உண்மையோடை செய்கிறாங்கள். அதுக்கு நான் எப்பவும் முழுமையான ஆதரவு. அதில எந்த மாற்றமும் எப்பவும் வராது." என்றான் சண்முகன்.

"எல்லாற்றை கையிலையும் துப்பாக்கிதான் இருந்தது. அதிகாரம் பிறக்குமா அழிவு பிறக்குமா என்கிறது அதைத் தலைமை தாங்குகிறவனைப் பொறுத்தது. கிட்லர், முசோலினி, லெனின், ஸ்ராலின், மாகோ, போல்பொட், இப்படிக் கனபேர் இந்த வரிசையில... அதிகாரம் பிறந்திச்சோ இல்லையோ மறுக்க, மறைக்க முடியாத பிணக் காடுகள் உலகத்தின் பல இடங்களில் உருவாகிச்சுது. ஆர்ற்றை கையில துப்பாக்கி இருந்தாலும் விளைவு ஒண்டாகத்தான் இருந்திச்சுது. நாங்கள் சுட்டாலும் அவங்கள் சாவாங்கள். அவங்கள் சுட்டாலும் நாங்கள் சாவம். துப்பாக்கியால அதிகாரம் பிறக்காது. துப்பாக்கியால பயம், அராஜகம், சா போன்றவையே விளையும். மனிசன் சிந்திக்கத் தெரிந்த அற்புதமான மிருகம். அவன் சிந்தனை இன்னும் மிருகமாகச் சிந்திக்கிறதில இருந்து பெரிசாக வித்தியாசப் படாமலே இருக்குது. அது இன விருத்திக்கு அடிபட்டால் என்ன? பொருளாதார விருத்திக்கு அடிபட்டால் என்ன? மனிசனுக்கு மொழியையும், மூளையையும் கடவுள் தந்தது பிரச்சனையைப் பேசித் தீர்க்கிறதுக்கு. மனிசன் பிரச்சனையைத் தீர்க்க வேணும் எண்டு பேசத் தொடங்குகிறான். அல்லது தொடங்குமாறு கட்டாயப்படுத்தப் படுகிறான். பேசத் தொடங்கிய உடனேயே தன்னுடைய சுயநலத்தை எப்பிடிப் பாதுகாக்கிறது எண்டு விட்டுக் கொடுப்பு இல்லாமல் சிந்திக்கத் தொடங்குகிறான். விளைவு இழுபாடு.

பேச்சுவார்த்தையால பிரச்சனையைத் தீர்க்க முடியாது எண்டு ஆயுதத்தைத் தூக்குகிறான். ஆயுதம் தூக்கினாப் போல விடுதலை வந்திடாது. அவலம்... இரத்தம்... இதை மறைச்சு யாரும் சுயநலம் உள்ளவன் அதைப் புரட்சி எண்டு புகழ்ந்து திரியலாம். அந்தப் புரட்சி எண்ட போர்வேக்க நினைத்தவற்றை தம் இச்சைப்படி செய்யலாம் என்கின்ற கள்ளர் கூட்டத்தின் ஆசை ஒளிந்து இருக்கலாம். இதுக்கு எல்லாம் ஒரு முடிவு வரவேணும். அகிம்சை பேசிய காந்தி தேசத்தின் புத்திரர்களே அகிம்சை மறந்தனர். வன்முறையால் வல்லரசாக நினைத்தனர். காந்தியின் அகிம்சா முகங்கள் தொலைந்து போகப் பேரரசாகும் பேய் முகங்கள் முன்னே நிற்கின்றன. அந்தப் பேய் முகத்தின் வாயருகே சென்று சுரண்டியது போலப் போய்விட்டது எங்கள் போராட்டம்." என்றான் சிவா.

"நாங்கள் இங்க இருந்து வாய்க்கு வந்தமாதிரி வியாக்கியானம் செய்கிறது எல்லாம் அழகு இல்லை. அங்க தளத்தில நிண்டு போராடுகிறவங்களுக்கு உது எல்லாம் விளங்காமலே இருக்கும்? நாங்கள் வாழோணும் எண்டால் எதிரி அடிக்கிறதிலும் பார்க்கப் பலமாகத் திருப்பி அடிக்க வேணும். அதைத்தான் அவங்கள் செய்கிறாங்கள். அதை விட்டிட்டு கண்டபாட்டிற்கு வியாக்கியானம் செய்து கொண்டு இருந்தால் நாங்கள் அழிஞ்சு போயிடுவம். நான் வெளிக்கிடப் போகிறன். கடை அலுவலா ஒருத்தனைச் சந்திக்க வேணும்." என்றான் சண்முகன்.

"சரி வெளிக்கிடு. பலமா அடிக்கிறதைவிடத் தந்திரமா அடிக்க வேணும் எண்டதை நினைவு வைச்சுக்கொள். அது வியாபாரத்துக்கும் உதவும். எது நிலையா வலிக்கும் எண்டு யோசிச்சுக் கொண்டு போ. இண்டைக்கு நான் சாப்பிட்ட பிறகுதான் அருளின்ரை வீட்டை விட்டு வெளிக்கிடுவன்." என்றான் சிவா.

# 4 கடைத் திறப்புவிழா

சனிக்கிழமை காலை பத்து மணிக்குக் கடைத் திறப்புவிழா என்று சண்முகன் கூறி இருந்தான். இதற்கும் சரிஸ்காவை அழைத்துக் கொண்டு போகலாம் என்று "TS" நினைத்தார். அது முடியாமற் போய்விட்டது. அதற்கான காரணங்களும் இருந்தன. சரிஸ்காவிற்கு மருத்துவம் படிப்பதற்குக் கிடைக்கும் என்கின்ற எதிர்பார்ப்பு இருந்தது. அதற்கு மதிப்பெண்கள் காணாமற் போய்விட்டது. மறுபடியும் பரிச்சை எழுதி விண்ணப்பிக்குமாறு அவளுக்கு "TS" புத்திமதி கூறினார். மிகவும் கெட்டிக்காரர்களான மனிதர்களே மற்றைய மனிதர்களின் வாழ்வையும், சாவையும் நிர்ணயிப்பவர்களாக இருக்க வேண்டும். மருத்துவர் என்பவர் அப்படியானவரே. அதில் விட்டுக் கொடுப்புகள் இருக்கக் கூடாது. வியாபாரம் அதில் சற்றும் நுழையக் கூடாது. அப்படி நடந்தால் அது சொந்த மனச்சாட்சிக்கும் சமுதாயத்திற்கும் செய்யும் துரோகம் ஆகும். அதுவும் ஐரோப்பாவில் அப்படி நடப்பதைப் பார்க்க அவளுக்கு இரத்தக் கண்ணீர் வருகிறது. அந்தஸ்திற்காக முக்கி, முக்கிப் படிக்க முடியாமல் படித்து, மற்றைய மனிதர்களைக் கொல்வது அடிப்படை மனிதத்தையே மீறும் செயல். அப்படிச் செய்யும் மனிதர்கள் மனிதத்தைக் கொல்வதற்காய் வெட்கப்பட வேண்டும். சட்டம் அவர்களைத் தண்டிக்க வேண்டும். நான் அப்படிச் செய்ய விரும்பவில்லை எனச் சரிஸ்கா கூறிவிட்டாள். மிகவும் மட்டமான மருத்துவராய் வருவதைவிட மிகவும் திறமையான பல் மருத்துவராய் பணி புரிவது எனது மனச்சாட்சிக்கும், மனிதாபிமானத்திற்கும் நான் மதிப்பு அளிப்பதான நிம்மதியைத் தரும். எனக்கு அதுவே முக்கியம். மற்றவர்கள் என்னைப் பார்த்து மருத்துவர் என்று வாயில் கைவைக்க வேண்டும் என்பது என்னுடைய நோக்கம் இல்லை. தகமை இல்லை என்பது தெரிந்த பின்னும் அதற்குள் மூக்கை நுழைத்துத் தவறு செய்ய விரும்பவில்லை என்று அவள் "TS"சிற்கு விரிவான ஒரு விளக்கம் அளித்தாள். "TS"சிற்கு அவள் விளக்கம் மகிழ்ச்சியைத் தந்தது. எனினும் பல் மருத்துவர் என்றால் பால் பார்க்காமல் உதவி செய்ய வேண்டும். பால் பார்க்காமல் இவளால் உதவி செய்ய முடியுமா என்கின்ற சந்தேகம் அவர் மனதின் அடியில் கிடந்தாலும் அதற்குச் சொற்கள் கொடுத்து வசனமாக்கி அவளிடம் கேட்கும்

துணிவு அற்றவரானார். சரிஸ்கா படித்து முடிக்கும் போது அப்படியான பாகுபாடு பார்க்கும் தன்மை அவளிடம் இருக்காது என்பது அவரது நம்பிக்கை. அவள் நோர்வேக்கு வரும் போது இருந்த மனநிலைக்கும் தற்போது இருக்கும் மனநிலைக்கும் மலைக்கும் மடுவுக்குமான வித்தியாசம் இருப்பதாய் "TS" எண்ணினார். அவள் சிறிது சிறிதாய் மாறிக் கொண்டு வருகிறாள். எனினும் சில விடயங்களை அவளோடு கதைக்க முடியாது. அதில் அவள் பிடிவாதம் இன்னும் தளர்வதாக இல்லை என்பதும் "TS"சிற்குத் தெரியும்.

இப்போது சரிஸ்கா இல்லாது "TS" ஏதாவது நிகழ்வுகளுக்குப் போனாலும் சமாளித்துக் கொள்ள வலுவான காரணம் இருந்தது. பல் மருத்துவர் என்றாலும் நிறையப் படிக்க இருக்கும் என்பதைப் பலராலும் ஏற்றுக் கொள்ள முடிகிறது. சரிஸ்காவும் ஒரேயடியாக ஒளிந்து கொள்வது இல்லை. ஆண்கள் அதிகமாக வரும் வைபவம் என்றால் பின்னுக்கு நிற்கவே செய்கிறாள். ஒஸ்லோ இப்போது நிறையவே மாறி விட்டது. அகதிகளாய் வந்தவர்களைக் கொண்டுசென்று வேறு இடங்களில் உள்ள முகாம்களில் விட்டாலும் அவர்கள் சில காலத்திற்குப் பின்பு வேலைக்காகவும், தங்கள் இனத்து மக்களோடு சேர்ந்து வாழ்வதற்காகவும் இங்கு வந்து சேர்ந்து விடுகிறார்கள். அதற்குத் தமிழரும் விதி விலக்கு அல்ல... தமிழர்கள் அதிகமாக, அதிகமாக அவர்களுக்கு இடையேயான குழுக்களும் அதிகம் ஆகிறது. சொந்தக்காரன் என்ற வகையில் முதற் குழு ஆரம்பம் ஆகிறது. பின்பு ஊர்க்காரன் என்ற வகையில் இரண்டாவது குழு ஆரம்பம் ஆகிறது. ஒரே இயக்கத்தில் இருந்தவர்கள் என்கின்ற அறிமுகத்தில் மூன்றாவது குழு ஆரம்பம் ஆகிறது. தெரிந்தவர்கள் என்கின்ற குழு நான்காவதாக உருவாகிறது. ஐந்தாவதாக புலிகளுக்குச் சார்பானவர்கள், ஆறாவது புலிகளுக்கு எதிரானவர்கள் என்கின்ற குழு இருக்கிறது. மற்றைய குழுக்களால் பெரும்பாலும் நட்பும், உறவும் வளர்கிறது. ஐந்தாவது, ஆறாவது குழுவால் எதிர்மாறான கொந்தளிப்பு உருவாகி இருக்கிறது. ஒருவர் கருத்திற்கு மற்றவர் கருத்து எதிராய் இருக்கும். இலங்கையில் இருந்து புலிகளால் பல இயக்கங்கள் தடை செய்யப்பட்ட நேரத்தில் வெளியேறிய இளைஞர்களில் அதிகமானோர் அவர்களுக்கு எதிரான கருத்துடன் இங்கு இருக்கிறார்கள். அவர்கள் இங்கு வந்ததும் தங்களைப் போராட விடாது நாட்டை விட்டுக் கலைத்த ஒரு

அமைப்புக்கு இங்கு ஆதரவாக மற்றவர்கள் இயங்குவதைச் சகிக்க முடியாது இருந்தார்கள். சகிக்க முடியாவிட்டாலும் அவர்களுக்குப் பெரும்பான்மை கிடையாது. உழைப்புத் தேடி ஐரோப்பாவிற்கு வந்தவர்கள் பெரும்பான்மை ஆனவர்கள். அதைவிட மாணவர்களாக நோர்வேக்கு வந்தவர்கள் ஒரு பகுதியினர். அவர்களைப் பொறுத்தவரை வெற்றி பெறும் பக்கத்திற்குக் கைதட்ட எப்போதும் தயாராக இருப்பார்கள். இங்கேயும் அவர்கள் அந்தப் பக்கமே கை தட்டினார்கள். மொத்தத்தில் ஐந்தாவதும் ஆறாவதும் இரண்டு பெரும் குழுவாகியது. தோற்றவர்களுக்கு எங்கும் பலம் இருப்பது இல்லை. சினம் மட்டுமே அதிகமாக இருக்கும். சிறுபான்மையின் கருத்துக்கள் காற்றில் அடிபட்டுப் போய்விடும். ஒட்டு மொத்தத்தில் ஒஸ்லோத் தமிழர் இரண்டாகப் பிளவுபட்டு இருந்தனர். "TS"சைப் பொறுத்தவரை நடந்த தவறுகள் நடந்ததாகி விட்டது. நாங்கள் அதை நினைத்துக் கொண்டு இருக்காமல் இனி நடக்கப் போவதைப் பார்க்க வேண்டும் என்பதான எண்ணம். அதற்காக எல்லாரும் ஒற்றுமையாக ஒரே அணியில் நிற்க வேண்டும் என்பது அவருடைய விருப்பம். அவரைப் பொறுத்தவரை இனிப் புலிகளின் வெற்றியோ தோல்வியோ அது தமிழர்களின் வெற்றி ஆகவோ அல்லது தோல்வி ஆகவோ பார்க்கப்படும் என்கின்ற நிலைப்பாடு. அதை விளங்கிக் கொள்ளாது, புலிகளுக்கு எதிராகச் செயற்படுவதாய் தமிழர்களுக்கே இவர்கள் எதிராகச் செயற்படுகிறார்களோ என்கின்ற பரிதவிப்பு அவரிடம் உண்டு. அவர் அதை யாரிடம் சொன்னாலும் அவர்களால் அதை எற்றுக் கொள்ள முடிவதில்லை. அவர்கள் பாதிப்பு அப்படியாக இருக்கிறது. தமிழர்களிடம் அடியில் இருந்து நுனி வரை மறப்போம் மன்னிப்போம் என்கின்ற குணம் இல்லாமலே போய் விட்டதான கவலை அவருக்கு. பழிக்குப் பழி என்கின்ற உள்ளும் புறமுமான அரசியல் எமது இனத்தை எங்கே கொண்டு சென்றுவிடும் என்கின்ற ஆதங்கம் அவர் மனதில் எப்போதும் நீரற்ற மீனாகத் துடித்துக் கொண்டே இருக்கும்.

பல எலிகள் சேர்ந்தால் புற்று எடுக்காது என்று ஒரு பழமொழி இருக்கிறது. போராட்டத்திலும் பல இயக்கங்கள் இருந்தால் அப்படியான ஒரு சிக்கல் உருவாகும் என்கின்ற எண்ணமும் அவரிடம் இருந்தது. தெரிந்தோ தெரியாமலோ அவை இப்போது செயல் இழந்து விட்டன. இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி எல்லோரும் ஒற்றுமையாக, ஒரே இயக்கத்திற்கு ஆதரவு வழங்கி, ஊக்குவித்தால்

அது ஒட்டுமொத்தத் தமிழருக்கும் நன்மையாக முடியும். அதைப் பலரும் விளங்கிக் கொள்ளாமல் அராஜகம் என்கிறார்கள். தனிமனித வழிபாடு என்கிறார்கள். இப்படியே குறை சொல்லிக் கொண்டு பிளவுபட்டுக் கிடந்தால் எதிரிக்குத் தானே ஆதாயம்? இதை ஏன் தியாக மனப்பான்மையோடு இளைஞர்கள் புரிந்து கொள்கிறார்கள் இல்லை என்பது அவருக்கு விளங்கவில்லை. ஒவ்வொரு இயக்கத்திற்கு உள்ளும் ஒவ்வொரு அரசியல் புகட்டப்பட்டு இருக்கும். அதைப் பலரும் நம்புகிறார்கள். புலிகளிடமும் ஒரு அரசியல் இருக்கிறது? சரியோ தவறோ இப்போது எங்களுக்கு உள்ள ஒரே பிடி அது மட்டுமே என்று "TS" எண்ணிக் கொள்வார்.

*

பனி அதிகமாகக் கொட்ட இல்லை. கொட்டிய பனியையும் வாகனங்கள் சேறு அடித்துக் கறுப்பாக்கி வைத்து இருந்தன. அதன் புகையா அல்ல அவை தெருவில் இருந்து சுரண்டித் தள்ளும் தார்த் துகள்களா என்பது துல்லியமாகப் புலப்பட வில்லை. இரண்டும் சேர்ந்த ஒரு கலவை என்பது அவரின் எண்ணம்.

இருவரும் மொத்தமான மேலங்கி, தொப்பி, கையுறை அணிந்தே வெளிக்கிட்டு வெளியே வந்தார்கள். அப்படி இருந்தும் முகத்தின் தோல் சொர சொர என விறைப்பதான உணர்வு "TS"சிற்கு. கடை அலுவல்களுக்காகச் சண்முகன் கார் வாங்கி விட்டான். தான் வந்து ஏற்றிச் செல்வதாக "TS"சைக் கேட்டு இருந்தான். "TS" அதற்கு மறுப்புத் தெரிவித்து விட்டார். தங்களுக்காக வரத் தேவை இல்லை என்று அவர் கூறிவிட்டார். இப்படிக் குளிராய் இருக்கும் என்றால் காரிலேயே சொகுசாகப் போய் இறங்கி இருக்கலாம் என்று அவருக்கு இப்போது ஏனோ எண்ணத் தோன்றியது.

திறந்த வெளியில் வாகனத்திற்காகக் காத்து நிற்க "TS" விரும்பவில்லை. அவர் அருகே இருந்த சுரங்கரத நிலையத்திற்குள் சென்றார். திறந்த வெளியில் குளிர்வதைப் போல் இங்கே குளிராது என்பது அவர் அனுபவம். சுரங்கரதம் வருவதற்கு இன்னும் ஐந்து நிமிடங்கள் இருந்தன. யாரோ இரு தமிழர்கள், சில சுதேசிகள், ஒரு ஆப்பிரிக்கன் எனச் சிலர் மறு கரையில் நின்றார்கள். இங்கு யார் யார் எந்த நாட்டவர்கள் என்று சொல்லிவிட முடியாது. அதுவும் வெள்ளையாய்

இருப்பவன் இந்த நாட்டவனாயும் இருக்கலாம். அல்லது பக்கத்து நாட்டவனாயும் இருக்கலாம். அல்லது கிழக்கு ஐரோப்பியனாயும் இருக்கலாம். அதைவிட வேறு இடத்தில் இருந்தும் வந்து இருக்கலாம். கறுப்பாய் இருப்பவன் ஆபிரிக்காவில் இருந்து வந்து இருக்கலாம் அல்லது அமெரிக்காவில் இருந்தும் வந்து இருக்கலாம். வியட்னாம்காரர் போல சிங்கப்பூர்க்காரனும் இருக்கலாம். ஒஸ்லோவில் ஆளைப் பார்த்தவுடன் எந்த நாடு என்று ஒரு போதும் முடிவு பண்ண முடியாது. பெரிய நகரங்களுக்கே உரிய பண்பு ஒஸ்லோ நகரத்திற்கும் உண்டு.

மத்திய சுரங்கரத நிலையத்தில் இறங்கி "TS"சும், புவனலோசினியும் நடந்து வந்தார்கள். அவள் மூன்று தடவை 'குளிருதப்பா' என்று "TS"சிடம் சொல்லி விட்டாள். 'என்ன செய்கிறது? நோர்வே எண்டால் குளிரத்தானே செய்யும்...' என்று "TS"சும் மீண்டும் மீண்டும் பதில் அளித்து விட்டார்.

சண்முகன் கடை எடுத்து இருப்பது மொல்லர்க்காத்தா என்னும் இடத்தில். ஒஸ்லோவில் இது ஒரு முக்கியமான இடம். எல்லாப் பக்கத்தாலும் மனிதர்கள் வருவார்கள். அவனது கடைக்குப் பக்கத்தில் ஒரு திரையரங்கம் இருந்தது. நிறையவே கடைகளும் அலுவலகங்களும் சூழ உள்ள பகுதி அது. அதைவிட முக்கியமாகச் சிறிது தூரத்தில் பிரதம மந்திரியின் அலுவலகம், கட்சிகளின் அலுவலகங்கள் இருக்கின்றன. எப்படிப் பார்த்தாலும் வியாபாரத்திற்குப் பிழை இல்லாத இடம். எப்படியோ காசு புரட்டிக் கடை தொடங்கி இருக்கிறான். நீ எப்படிக் காசு புரட்டினாய் என்று "TS" கேட்க வில்லை. சண்முகனின் உறவினன் ஒருத்தன் இத்தாலியில் இருக்கிறான் என்று சொல்லி இருக்கிறான். அவன் அந்தப் பணத்திற் பெரும் பகுதியைக் கொடுத்தானாம் என்று "TS" கேள்விப்பட்டார்.

அத்தோடு தான் சேர்த்து வைத்திருந்த பணம், வட்டிக்கு வாங்கிய பணம் என்று நிறையவே முதலீடு செய்திருப்பதாக அறிந்தார். அதற்கு அந்தக் கடை இருந்த இடமும் முக்கியமானது. அத்தோடு அதற்குள் சூதாடும் இயந்திரங்கள், நோர்வேயின் தேசிய லொத்தர் என்பன இருந்தன. நோர்வேயின் தேசிய லொத்தருக்குப் பிரதிநிதியாக வருவது இலகுவான காரியம் இல்லை. அது இருக்கும் கடைகளின் மதிப்பே தனி. அப்படி இருந்தும் முதலில் இருந்த கடைக்காரனுக்குக் கடன் அதிகமாம். அவன் அவசரத்தில் விற்று விட்டு வேறு எங்கோ

வெளிநாட்டிற்குச் செல்கிறானாம். கடன் தொல்லைக்காகப் பயந்து ஓடுவதாகச் சண்முகன் சொல்லி இருந்தான். அந்தக் கடன்காரர்கள் தன்னைப் பிடிப்பார்களோ என்கின்ற பயமும் அவனுக்கு உண்டு. சுதேசிகள் காசைப் பார்க்காமல் பொருட்கள் வாங்கிச் செல்வார்கள். இந்தக் கடைக்கு நிறைய வாடகை கட்ட வேண்டும் என்று சண்முகன் "TS"சிடம் கூறி இருந்தான். அதற்கேற்ப உழைப்பும் இருக்கலாம். இந்த மத்திய பகுதியில் கடை எடுப்பது சாதாரண விஷயம் இல்லை. அதைச் சண்முகன் சாதித்தது பெரிய அதிசயமே. அவனுக்கு வரவிருக்கும் உதவியை நம்பித்தான் வியாபாரம் தொடங்குவதாக தொடக்கத்திலேயே கூறினான். அப்போது எல்லாரும் அதை ஒரு புல்டாக் கதை போல எடுத்துக் கொண்டார்கள். தானே ஒப்புக்குத்தான் அந்தக் கதையைக் கேட்டேன் என்று "TS" நினைத்துக் கொண்டார். இன்று உண்மையாகவே அவன் கடை வைத்துவிட்டுான். நிச்சயம் அவன் முன்னுக்கு வருவான். நாட்டை நினைத்துப் பணத்தை அதற்காகக் கொடுக்கக் கூடியவன் சண்முகன். அந்த வகையில் சண்முகன் முன்னுக்கு வருவதால் எங்கள் நாட்டிற்கு நன்மையாகும் என்று "TS" நினைத்தார்.

"என்னப்பா பேசாமல் வாறியள்?" என்றாள் புவனலோசினி.

"நீயும் இவ்வளவு நேரமும் பேசாமல் வந்தாய். குளிருது... குளிருது... எண்டு தானே சொன்னாய். வாயத் திறந்தாச் சூடு வெளியால போக இன்னும் குளிரும் எல்லோ? இந்தா... கடை வந்திட்டுது. வா" என்றார் "TS".

கடைக்கு அருகாகச் சென்ற போது கடைக் கதவு பூட்டி இருப்பதை "TS" கவனித்தார். உள்ளே ஆட்கள் நின்றார்கள். கண்ணாடிச் சுவர் ஊடாக யார் வருகிறார்கள் என்று பார்த்துவிட்டுச் சிவா வந்து கதவைத் திறந்தான்.

இதற்கு முன்பு அந்தக் கடைக்கு "TS" வரவில்லை. இரண்டு நாளைக்கு முதல் பார்ப்பதற்குப் புறப்பட்ட போது தனக்கு வேலை இருப்பதாகச் சண்முகன் கூறியதால் "TS" அங்கே செல்லவில்லை. தனியே சென்று அந்தக் கடையைப் பார்க்க வேண்டும் என்கின்ற விருப்பம் அவருக்கு இருக்கவில்லை. கடையின் பரப்பளவு இருபது சதுர மீற்ரர்களுக்கு மேலே வராது. கண்ணாடிச் சுவரும் கதவும் முன் பக்கம் இருப்பது உள் பகுதியை நிர்வாணம் ஆக்கிக் காட்டியது. அந்த நிர்வாணத்தை மூடிப் பூட்டக் கூடிய இயந்திரம் பூட்டிய இரும்புச் சுருள் கதவு தலைக்கு

மேல் தொங்கியது. உள்ளே நிறையப் பொருட்கள் இருந்தன. பழைய கடைக்காரனின் பொருட்களையும் அரை விலை போட்டு எடுத்ததாகச் சண்முகன் கூறி இருந்தான். கடைக்குள் போனவுடன் முன்னுக்கு இனிப்பு, மற்றும் சிற்றுண்டிகள் இரும்புத் தாங்கிகளில் அடுக்கி வைக்கப்பட்டு இருந்தன. இடப் பக்கமாக இரு மேசையும், லொத்தர் படிவங்களும், ஒரு தொலைக்காட்சியும் இருந்தது. அதற்கு மறுபக்கம் இரண்டு விளையாடும் இயந்திரங்கள் தொகைகளைக் காட்டி இடையிடையே இசைத்து இசைத்துக் கண்ணைச் சிமிட்டின. கதவுக்கு நேர் எதிரே லொத்தர் பதிவு செய்யும் கணினி, அதைப் பிரதி பண்ணும் கருவி, சிற்றுண்டிகள் தயாரிக்கும் இடம் ஆகியவை இருந்தன. அதற்குப் பின் பக்கமாகப் பாதுகாப்பாய் வைத்திருக்க வேண்டிய புகைபிடிக்கும் பொருட்கள், விலை உயர்ந்த பொருட்கள் போன்றவை அலுமாரிக்குள் இருந்தன. அதன் பின்னால் ஒரு கதவு இருந்தது. அந்தக் கதவைத் திறந்து சென்றால் சிறு சமையல் அறையும், கழிப்பறையும் இருந்தன. அதற்குள் வந்தவர்களில் சிலர் இருந்தார்கள்.

இருவரும் உள்ளே செல்ல,

"உங்களுக்காகத்தான் வெயிற்றிங்." என்றான் சண்முகன்.

"ச்ச... அப்பிடியே சங்கதி. நாங்கள் வெள்ளனவே வந்து இருக்கலாம்." என்ற வண்ணம் "TS" உள்ளே சென்றார்.

"அண்ணை வாங்க... இனி நாங்கள் தொடங்கலாம்." என்றான் சண்முகன்.

"TS" எதிர்பார்த்ததைவிட நிறைய ஆட்கள் கடை திறப்பு விழாவிற்கு வந்து இருந்தார்கள். இளைஞர்கள், தாமோதரன் குடும்பம், அதைவிடச் சண்முகனின் பழைய வேலை வழங்கிய முதலாளி குடும்பம், அங்கு வேலை செய்த இரு நண்பர்கள், மேலும் சண்முகனுக்குப் பழக்கமான மூன்று ஒஸ்லோத் தமிழர்கள் என்று கடை நிறைய ஆட்கள் நின்றார்கள். "TS"சிற்குத் தான் கொஞ்சம் பிந்திவிட்டதாகவே தோன்றியது.

சண்முகன் கடவுள் நம்பிக்கை நிறைந்தவன். "TS"சையும் குத்துவிளக்கு ஏற்றுமாறு கேட்டான். அவரோடு தனது பழைய முதலாளி, ஒஸ்லோத் தமிழ் நண்பர் ஒருவர் ஆகியோரையும் குத்துவிளக்கு ஏற்றச் சொன்னான். அந்தத் தாடித் தமிழருக்கு குலசிங்கம் என்பது பெயராம். அவரை

எங்கோ பார்த்ததாக "TS"சிற்கு ஞாபகம். எங்கு என்பது உடனடியாகப் பிடிபடவில்லை.

குத்துவிளக்கை முறைப்படி ஏற்றி, பின்பு தேங்காய் உடைத்துப் பிள்ளையாரைக் கும்பிட்டு, மாலினியிடமும், புவனலோசினியிடமும் பால் காய்ச்சும் பொறுப்பு வழங்கப் பட்டது. பால் காய்ச்சி எல்லோருக்கும் பருகக் கொடுத்ததோடு கற்கண்டும் சம்பிரதாயப்படி கொடுக்கப் பட்டது. அதன் பின்பு சண்முகன் வியாபாரம் தொடங்கினான். சண்முகனின் பழைய முதலாளி சண்முகனிடம் இனிப்புகள் வாங்கினார். அதன் பின்பு சந்தோஷமாக விடை பெற்றுச் சென்றார். அப்படியே ஒஸ்லோ நண்பர்களும் சில பொருட்களை வாங்கிக் கொண்டு விடை பெற்றுச் சென்றார்கள். சொரூபனும், றுபனும் தங்களுக்கு வேலை இருப்பதாகப் புறப்பட்டு விட்டார்கள்.

இத்தினைக்குப் பின்பே நிமலன் அங்கு வந்தான். "TS"சால் அவனை முதலில் மட்டுக்கட்ட முடிய வில்லை. தலைமுடி காட்டிற்குச் சென்ற முனிவனைப் போல பிருட்டம் தாண்டி வளர்ந்து இருந்தது. அதை அவன் கொத்தாக அள்ளிக் கட்டி வைத்து இருந்தான். முகத்தில் எந்த ரோமமும் இல்லாது தாடைகள் கரும் பச்சையும் நீலமும் சேர்ந்ததான ஒரு நிறத்தில் மினுங்கியது. "TS"க்கு மாத்திரம் அல்ல அனைவருக்கும் அவன் மாற்றம் திகைப்பை உண்டு பண்ணியது. "TS" மரியாதை நிமிர்த்தம் அதைப் பற்றி ஒன்றும் கேட்காது நின்றார். பின்பு முறைப்படி சண்முகனிடம் சில இனிப்புகள் வாங்கினார். சரிஸ்காவிற்கு அதைக் கொடுத்தால் சந்தோஷப் படுவாள் என்கின்ற தந்தையின் பாசம் அவரிடம். "TS" நிமலனின் தோற்றம் பற்றிப் பேசாது விட்டாலும் சிவாவுக்கு அதைக் கட்டுப்படுத்திக் கொண்டு இருக்க முடியவில்லை. அதற்கு இடையில் புவனலோசினி,

"நிமலன் இப்பவே வாறா? வீட்டை வா... சாப்பிட்டிட்டுப் போகலாம்." என்றாள்.

அவன் எதுவும் பேசவில்லை. சிரித்தான். அவன் சிரிப்பில் முன்பு இருந்த அருகாமையோ கரிசனையோ இருப்பதாய் புவனலோசினிக்குத் தெரியவில்லை. முன்பு இருந்த வாஞ்சை, நெருக்கம், பாசம் ஏதோ ஒன்று அவனிடம் எதனாலோ இல்லை என்று அவளுக்குத் தோன்றியது. நிமலன் தொடர்ந்தும் பேசாது நின்றது "TS"சிற்கும் ஒரு

மாதிரி இருந்தது. நோர்வேக்கு வந்தது தொடக்கம் அவனை அவர் கவனித்து வந்து இருக்கிறார். இப்போது நிறையவே மாறிவிட்டான் என்று அவருக்கும் தோன்றியது. வீட்டிற்கு வரச் சொல்லப் பேசாமல் நிற்பது அவன் இயல்பு அல்ல... வருவது, சாப்பிடுவது, நேரத்தைப் போக்குவது புதுமை இல்லை. அந்த நடைமுறைகள் புவனலோசினியும், சரிஸ்காவும் வந்த பின்பு கொஞ்சம் மாறி இருந்தன. இப்போது இவன் முற்றுமாய் மாறிவிட்டான் போல "TS"சிற்குத் தோன்றியது. அவன் பேசாது சிரித்ததைப் பார்த்துவிட்டு,

"வா நிமலன்... சாப்பிட்டிட்டுப் போகலாம்." என்றார் "TS".

'அப்ப நிமலனை மட்டுமே சாப்பிடக் கூப்பிடுவியள்?' என்றான் சிவா.

'நீ இல்லாமலா சிவா. நீயும் தான்' என்று "TS" சமாளித்தார்.

'நீங்கள் கூப்பிடாட்டியும் நான் வருவன். நிமலன் என்ன பேசா மடந்தை ஆகீட்டான்?' என்றான் சிவா.

""TS" அண்ணை உங்களிட்டை வந்து சாப்பிடாமலே? எனக்கு இண்டைக்கு ஒரு முக்கியமான அலுவல் இருக்குது. குறை நினைக்காதேங்கோ. இன்னொரு நாளைக்குக் கட்டாயம் வருவன்." என்றான்.

"அப்பிடியா?" என்றார் "TS". அவருக்கு அது அதிசயமாகத்தான் முதலில் இருந்தது. பின்பு அவன் வளர்ந்து விட்டான் என்பது விளங்கியது.

"எனக்குத் தெரியும் உன்ரை அலுவல்கள்." என்றான் சிவா நிமலனை நாறல் பார்வை பார்த்த வண்ணம்.

"அவன் கடை திறப்பு விழாவுக்கு வந்து இருக்கிறான். சிவா அவனைச் சும்மா விடும்." என்றான் அதைப் பார்த்த சண்முகன்.

"சரி நான் அதைப் பற்றிப் பிறகு சொல்லுகிறன் "TS" அண்ணை." என்றான் சிவா.

"என்னைப் பழைய கடைக்காரன் நல்லாச் சுத்தீட்டான்." என்றான் சண்முகன் திடீரென்று.

"என்ன சொல்லுகிறா?" என்றான் சிவா. சண்முகன் நினைத்ததற்குப் பலன் கிடைத்தது.

"நேற்றுப் பக்கத்துக் கடைக்காரனோடை கதைச்சன். அவன்தான் அதைச் சொன்னான்."

"என்ன சொன்னவன்?" என்றார் "TS".

"ஏன் எல்லாம் ஒழுங்கா வியாபாரம் நடக்கேக்க வந்து நிண்டு பாத்துத்தானே வாங்கிநீங்களுங்கோ?" என்று கேட்டார் தாமோதரன்.

"வேறை யாரும் வாங்கிப் போடுவாங்களோ எண்ட அவசரத்தில அதை ஒழுங்காப் பார்க்க இல்லை. இப்பதான் அவசரப்பட்டு மாட்டுப்பட்டிட்டனோ எண்டு பயமா இருக்குது." என்றான் சண்முகன்.

"நீ வியாபாரம் தொடங்கின உடனேயே எங்களுக்குச் சுத்துறியோ, இல்லாட்டி உது உண்மையோ?" என்றான் சிவா முதல் நம்பியதை இப்போது மறுப்பது போல.

"உங்களுக்கு நான் ஏன் பொய் சொல்ல வேணும்? உண்மை ஆகத்தான் சொன்னவன். தனக்கு இந்தக் கடைக்காரனைத் தெரியுமாம். முதல்ல உது லொத்தோ இல்லாமல் இருந்ததாம். இவன் வந்துதான் லொத்தோவைக் கொண்டு வந்தவனாம். இந்தக் கடைக்குப் பக்கத்தில நிறையக் கடையளில லொத்தோ இருந்ததால இதுக்குக் குடுக்காமல் இழுபட்டுக் கொண்டு இருந்ததாம். இவனுக்குத் தெரிஞ்ச யாரோ காமாறில இருந்து இருக்க வேணும். எப்படியோ எடுத்திட்டான். அவனுக்கு நிறைய லொத்தோ விளையாடுகிற பிறண்சாம். ஒவ்வொரு நாளும் பின்னேரங்களில அவை வருவினமாம். இவனும் சேந்து அவையோடை விளையாடுவானாம். அவங்களை விட இவன் நிறையத் தனிய விளையாடுவானாம். லொத்தோ வரும் போகும். இவன் கடையை வித்து இருக்காட்டி லொத்தோவையே கான்சல் பண்ணி இருப்பாங்களாம். அவன் காட்டின கணக்கு மாதிரி லொத்தோ வருமானம் இனி வராதாம். ஆனா... இது பொறுத்த இடம் எண்டதால ஒரு அளவுக்கு வருமானம் வரும் எண்டு சொன்னான். நான் அவன் சொன்னதை முதல்ல நம்பேல்லை. மற்றக் கடைக்காரரோடையும் கதைச்சன். அவங்களும் அது உண்மை எண்டே சொல்லுகிறாங்கள். ஆனா... ஒழுங்காச்

செய்தாச் சமாளிக்கலாம் எண்டு சொல்லுகினம்." என்றான் சண்முகன்.

"விஸ்னெஸ் எண்டாலே சுத்துமாத்துத் தானே?" என்றாள் மாலினி.

"இவன் எங்களுக்குச் சுத்துமாத்து விடாமல் இருந்தால் சரி." என்றான் சிவா.

"எட... நீ இன்னமும் நம்புகிறாய் இல்லையே? நட்டம் போகிற காசை நீங்கள் தருவியள் எண்டே இதை உங்களுக்குச் சொல்லுகிறன்? ஒரு மன நிம்மதிக்குச் சொல்லுகிறன். நீ நம்பாட்டிப் பருவாய் இல்லைச் சிவா." என்றான் சண்முகன்.

"சரி... சரி... நம்புகிறன்... நம்புகிறன்." என்றான் சிவா.

"பயப்பிடாத சண்முகன். நீ கவனமாய் இருந்தால் எல்லாம் சரியா வரும்." என்றார் "TS".

"ஓம் அண்ணை... நான் விளையாடப் போகிறது இல்லை. இதை ஒரு நல்ல வழிக்குக் கொண்டு வர வேணும். இந்தச் சோட் சாப்பாட்டு அயிற்றங்களை கூட்ட வேணும். லஞ் ரைமில வந்து வாங்குவாங்களாம். அதில நல்ல ஆதாயமும் வரும் எண்டு சொல்லுகிறாங்கள். ஒண்டில குறைஞ்சா மற்றதில அதை எடுக்க வேண்டியது தானே?" என்றான் சண்முகன்.

"இனி ஒண்டை மலிவாக் குடுத்து, மற்றதில கண்ணைப் பொத்தி அடிக்கிறது எல்லாம் உனக்குச் சொல்லியே தர வேணும்?" என்றான் சிவா.

"ஓ... பிஸ்னெஸ் எண்டா அப்படித்தான் செய்ய வேணும். இல்லாட்டி ஈ ஓட்ட வேண்டி வரும். நான் வாங்கின கடனையாவது முதலில கட்ட வேணும்." என்றான் சண்முகன்.

இரண்டு விட்னாமியரைப் போன்றவர்கள் இவர்கள் கதைத்துக் கொண்டு நிற்கும் போது உள்ளே வந்தார்கள். சில்லறைக் காசு மாற்றி வாங்கிச் சென்று விளையாடும் இயந்திரத்தில் போட்டு விளையாடினார்கள். அதைப் பார்த்துக் கொண்டு நின்ற சிவா,

"இவங்கள் கவனம் சண்முகா." என்றான்.

"ஏன்ரா சிவா?" என்றான் சண்முகன்.

"இவங்கள் விளையாடிப் போட்டு திடுமென மெசினக் குலுக்கிக் காசு எடுத்துக் கொண்டு ஓடுவாங்களாம். எதுக்கும் நீ கவனமாய் பார்த்துக் கொள்ள வேணும். அவங்கள் ஓடினாப் பிறகு அவங்களுக்குப் பின்னால விட்டுக் கலைச்சுக் கொண்டு ஓடாத. கத்தியக் கிறிசைக் காட்டுவாங்கள்." என்றான் சிவா.

"நிறைய விஷயங்கள் இனித்தான் படிக்க வேணும்." என்றான் சண்முகன்.

"வியாபாரம் எண்டா நெளிவு சுளிவுகள் நல்லா தெரிய வேணும். அப்பதான் முன்னுக்கு வரலாம்." என்றார் "TS".

"என்ன நெளிவு சுளிவு "TS" அண்ணை? கண்ணைக் கட்டி அடிக்கிறதே? அது சண்முகனுக்கு நல்லா வரும். அப்பன் சுவாமியாக அவனே உங்களுக்குப் பாடம் எடுப்பான்." என்றான் சிவா.

"இஞ்ச என்னத்தைக் கண்ணைக் கட்டி அடிக்கிறது? அப்பிடி எண்டா எல்லையைத் தாண்ட வேணும். அது கயித்தில நடக்கிற மாதிரி. எப்ப மாட்டுப்படுவம் எண்டு தெரியாது. சண்முகா ஆசைப்படு... ஆனால் பேராசைப்பட்டிடாத." என்றார் "TS". அதற்குச் சண்முகன் சிரித்த வண்ணம்,

"என்னைக் கொள்ளை அடிக்கிறவன் எண்டு முடிவு செய்திட்டியளே? அப்பிடி எல்லாம் நான் பேராசைப்படமாட்டன்." என்றான்.

"நான் போட்டு வாறன் சண்முகம் அண்ணை... நான் போட்டு வாறன்." என்று பின்பு எல்லோரையும் பார்த்து விடை கேட்பது போலக் கூறினான் நிமலன்.

"அப்ப சாப்பிட வரேல்லையே?" என்று "TS" மீண்டும் தன்னைக் கட்டுப்படுத்த முடியாமற் கேட்டுவிட்டார். நிமலன் நசியல் ஆகச் சிரித்தான். அவனுக்குத் தான் "TS"சைப் புறக்கணிக்கிறேனோ என்கின்ற அவஸ்தை. அதற்காக அவன் வருவேன் என்கின்ற இடத்திற்குப் போகாமலும் இருக்க முடியாது என்பதும் விளங்கியது.

"நான் இரண்டு, மூண்டு நாளில புதுசா எழுதின கவிதை எல்லாம் கொண்டு உங்கடை வீட்டை வாறன் அண்ணை.

இண்டைக்கு எனக்கு ஒரு முக்கி அலுவல் இருக்குது. சொறி அண்ணை." என்றான் நிமலன்.

"பருவாய் இல்லை. நீ போயிட்டு வா." என்றார் "TS".

"அப்ப வாறன் சிவா அண்ணை?" என்றான் நிமலன்.

"நீ ஓட நிக்கிற அவதி எனக்கு எல்லே தெரியும். சரி... சரி... உன்ரை அலுவலைப் பார்." என்றான் சிவா.

"சும்மா கலகம் உண்டாக்காதேங்க சிவா அண்ணை. சரி நான் போயிட்டு வாறன்." என்று கூறிவிட்டு நிமலன் புறப்பட்டுச் சென்றான். அவனைத் தொடர்ந்து தாமோதரனும் மாலினியும் தாங்கள் "Tram" எடுப்பதே சுலபம் என்று கூறிவிட்டுப் போய் விட்டார்கள். இனி நின்று சண்முகனின் வியாபாரத்தைக் குழப்பக் கூடாது என்று எண்ணிய "TS",

"அப்ப வாறம் சண்முகம்... சிவா எங்களோடை வா." என்று கூறிய "TS", புவனலோசினியை நடப்போமா என்று பார்த்தார். தொடர்ந்து மேலங்கியை எடுத்துக் கொழுவினார்.

"நானும் வாறன் சண்முகா..." என்று சிவாவும் அவர்களோடு புறப்பட்டான்.

*

மூவருமாக மத்திய சுரங்கரத நிலையத்தை நோக்கி நடந்தார்கள். வானம் முகிலைப் பறிகொடுத்து நீலமாய் வெளித்துப் போய் அதில் விண்மீன்கள் பரப்பிக் கிடந்தது. வானம் திறந்து கிடந்தால் குளிர் அண்டத்தில் இருந்து மின்னலாய் இறங்குவதாய் பூமிமேல் அது பாயும். மேலங்கிகளைத் துளைத்துத் தோலில் குளிர் ஊசியாய் ஏறுவதான ஒரு உணர்வு புவனலோசினிக்கு உண்டானது. அவளுக்கு இன்னும் இந்த நாட்டுக் குளிர் பழகவில்லை. இங்கு வாழ்பவர்கள் குளிரைத் தாங்குவதற்கு வெண்ணெய், சீஸ், இறைச்சி போன்ற கொழுப்புப் பொருட்கள் நிறைந்த உணவுகளைச் சாப்பிடுவார்கள். புவனலோசினி வெண்ணெய் பூசிய பாண் சாப்பிடுவது அருமை. சமையலில் தாவர எண்ணெய் சேர்ப்பது உண்டு. இறைச்சி சாப்பிடாமலும் இல்லை. என்றாலும் தன்னைக் குளிர் வாட்டி எடுப்பதான அவஸ்தை அவளுக்கு. யார் என்ன சொன்னாலும் பருவாய் இல்லை என்று காதையும் மூடிக்

கட்டும் தொப்பியே போடுவது அவள் வழக்கம். காதின் ஊடாகக் குளிர் ஏறும் என்பது அவள் கண்டு பிடிப்பு. அடைக்க முடியாத அந்த ஓட்டையால் நேரடியாகவே மூளையைத் தாக்கும் குளிரின் கொடூரமான செயற்பாடு என்பது அவள் நினைப்பு. அதைத் தடைசெய்யத் தொப்பி அணிவதைத் தவிர வேறு வழி இருப்பதாய் அவளுக்குத் தெரியவில்லை.

குளிர் சொற்களைப் பிடுங்கியதாக மௌனம் புகுந்து உறவாட, வாகனங்களை பார்த்துத் தெருக்களைக் கடந்து மத்திய சுரங்கரத நிலையத்தை நோக்கி அவர்கள் மௌன ஊர்வலம் சென்றார்கள். மௌனம் சிலருக்குப் பிடிக்கும். வாய்க்கு ஓய்வு கொடுத்து மனதை மட்டும் இயங்கவிடும் தவத்தை அவர்களால் அனுபவிக்க முடியும். மௌனமும், மௌனத்தால் விளையும் சிந்தனையும் மனிதன் தன்னை உணரும் ஆய்வாகும். அதில் சொற்களாக மனிதனால் வெளியே கொட்டப்படுபவை ஒரு சிறிய பகுதியே. அதுவும் எழுத்தில் வருவது அதைவிட ஒரு நுண்ணிய பங்கே. மௌனம் என்பது மனதில் எழும் எண்ணங்களைப் பகிர முடியாத தடைக் கற்களாகச் சிலரால் உணர முடியும். அப்படியானவர்களில் சிவாவும் ஒருவன். அவனுக்கு மௌனம் என்பது இந்த உலகில் வாழாத கணங்கள் போன்றது. அவன் வாழ்தலின் அடையாளமே ஏதாவது கதைத்துக் கொண்டு இருப்பதே. இந்த வாழாக் கணங்கள் அவனை வெறுப்பு ஏற்றின. அவன் பொறுமை இழந்தவனாய் ஒஸ்லோ சிற்றியை நெருங்கும் போது மௌனம் கலைத்தான்.

"இதுக்க கடை வைச்சு இருந்தா வியாபாரம் அள்ளிக் கொட்டும். ஆனா... இதுக்கு வாடகை குடுத்துக் கட்டுபடி ஆகாது. எங்களால இதுக்கு வாடகை ஒழுங்கா குடுக்கேலும் எண்டு நொஸ்க்குகள் நம்பாயினம். இதுவரை காலமும் ஒரு வெளிநாட்டுக்காரரும் இதுக்க கடை வைக்க இல்லை." என்றான் சிவா.

"உண்மைதான். சில இடங்களுக்க சிலரால லேசில பூர இயலாது. அது காலப்போக்கில மாறீடும் சிவா. கொஞ்சம் கொஞ்சமா நம்பிக்கை வரும். இருந்து பாரும்... வெளிநாட்டுச் சனமும் எதிர் காலத்தில நல்லா முன்னேறும்." என்றார் "TS".

"இப்பவே பழைய பாகிஸ்தான் காரர் அப்படி முன்னேறீட்டாங்கள். நாங்களும் அந்த இடத்துக்கு வாறத்துக்கு கொஞ்சக் காலம் எடுக்கும்." என்றான் சிவா.

"இவன் நிமலன் வராமல் ஓடிட்டான்... வந்து சாப்பிட்ட பிறகு போய் இருக்கலாம்." என்றாள் புவனலோசினி கவலையோடு. அவர்கள் மத்திய சுரங்கரத நிலையத்திற்குள் வந்து விட்டார்கள். இப்போது வேலை விட்டு வரும் நேரத்தில் நிற்பது போல் சனம் அங்கு இல்லை. அங்கு ஒன்றும் இங்கு ஒன்றுமாய் ஆட்கள் நின்றார்கள். சுரங்கரதமும் அதிக நேர இடைவெளியில் மட்டும் இப்போது வரும். உள்ளே கொஞ்சம் குளிர் குறைவாய் இருப்பது போல "TS"சிற்குத் தோன்றியது. ஆனால் சுரங்கரதம் கடந்து போகும் போது குளிரைக் குண்டூசியாக எறிந்து செல்கிறது. இரண்டு காவலர்கள் வந்து இரண்டாவது சுரங்கரதத்தில் ஏறினார்கள். இவர்கள் ஐந்திற்காகக் காத்து நின்றார்கள்.

"அதுக்கு ஒரு காரணம் இருக்குது அக்கா. அதுதான் அவன் உங்களிட்டை வராமல் ஓடுகிறான்." என்றான் சிவா. அவன் அதைச் சொல்லும் போது ஒரு விதமாகச் சிரித்தான். அதற்கு அவன் அரை குறை ஆகத்தான் விஷயத்தைச் சொல்கிறான் என்று அர்த்தம் கொள்ளலாம் எனப் புவனலோசினிக்குத் தோன்றியது. புவனலோசினிக்குச் சிவா சொல்ல வருவது சற்று விளங்கினாலும் அதை அவன் வாயால் கேட்டுவிட வேண்டும் என்கின்ற எண்ணம்.

"என்ன விஷயம். என்ன எண்டு சொல்லு சிவா?" என்றாள் புவனலோசினி.

"அவர் இப்ப விவசாயக் கல்லூரிக்குத் தானே போகிறார். அதுக்காக எங்க இருக்கிறார் எண்டதும் உங்களுக்குத் தெரியும். அங்க இருக்கிற கீபிள்ள பழக்கமாம். அவவும் அந்தக் கல்லூரியிலதான் படிக்கிறாவாம். அப்ப அப்பிடியே பழக்கம் இறுகீட்டுதாம். இவன் சொல்லுகிறான் இல்லை. அந்த இடத்தில படிக்கிற இன்னொரு பெடியன் அண்டைக்குக் கடைக்கு வரேக்க சொன்னான். இப்ப இரண்டு பேரும் ஒண்டாகத்தான் இருக்கினமாம். அதுதான் தம்பி அவசரப்பட்டு ஓடுகிறார்." என்றான் சிவா.

"இது என்ன பழக்கங்கள்? இப்படிச் செய்தா இவன்ரை தாய் தகப்பன் கவலைப்படாதுகளே? இவனுக்கு ஏன் இப்படிப் புத்தி போச்சுது?" என்றாள் புவனலோசினி.

"இந்த நாட்டில அது அவனுக்கு இருக்கிற சுதந்திரம். இப்ப எங்களோடை கதைக்கிறது சரி... ஆனா... நீ அவனிட்டை இதைப் பற்றி எல்லாம் கேட்க வேண்டாம். அது அவனுடைய சுதந்திரம் எண்டது நினைவு இருக்க வேணும். அதுக்க தலையிடுகிறது இங்க பண்பு இல்லை. விளங்குதே புவனா?" என்றார் "TS".

"நான் ஏன் கேட்கிறன்? தம்பி மாதிரிப் பழகின பெடியன் எண்டு சொன்னன். ஏதோ நல்லா இருந்தாச் சரி." என்றாள் புவனலோசினி.

"அது கொஞ்சம் நினைக்கிற மாதிரி ஈசியான விஷயம் இல்லை. அதுக்கு நிறைய விட்டுக் கொடுப்பு இருக்க வேணும். நாங்கள் வளர்ந்த வளர்ப்புக்கும் இவங்கள் வளர்கிற வளர்ப்புக்கும் நிறையவே வித்தியாசம் இருக்குது. அது நிறைய முரண்பாடுகளைக் கொண்டு வரும். எவ்வளவு காலம் சேர்ந்து இருக்கினம் எண்டது அவை அவையின்ரை விட்டுக் கொடுப்பைப் பொறுத்தது." என்றான் சிவா.

"அது எல்லாருக்கும் பொருந்தும் சிவா. சேர்ந்து இருக்கிறதும் பிரிஞ்சு போகிறதும் விட்டுக் கொடுப்பில மாத்திரம் இல்லை. ஆணுக்கும் பெண்ணுக்குமான உறவு எண்டுகிறது கற்பனை செய்ய முடியாத சிக்கல்கள் நிறைஞ்சதாய் சிலருக்கு இருக்கும். சிலருக்கு அது லேசானதாய் இருக்கும். அதுக்காக அவன் தப்பு செய்தான், நான் வெட்டி ஓடுகிறன் எண்டு இல்லை. அது அமைகிறதைப் பொறுத்தது. அமைகிறது எண்டா அந்த ஆணுக்கும் பெண்ணுக்கும் உள்ள மூளை எப்படி வேலை செய்யிது, அந்த மூளைகள் எதில திருத்திப் படுகின்றன எண்டதைப் பொறுத்தது. மூளையில பாய்கிற ஒவ்வொரு மின் சமிக்கைக்கும் பொருத்தம் பார்க்க ஏலாது. அதைப் போலத்தான் எந்தச் சோடி சேர்ந்து வாழும் எந்தச் சோடி அறுத்துக் கொள்ளும் எண்டதும் இருக்கும். அதைவிடச் சேர்ந்து வாழ்ந்தாலும் எத்தினை சோடி சந்தோஷமாய் சேர்ந்து இருக்குதுகள் எண்டுகிறது அடுத்த கேள்வி. அதைவிடத் தனிச்சு இருக்கிறவன் எல்லாரும் துக்கப்படுகிறானா எண்டும் ஒரு கேள்வி இருக்குது. மொத்தத்தில திருமண வாழ்க்கை எண்டுகிறது ஒரு சிக்கலான விஷயம். அதுக்கு எண்டு ஒரு இலக்கணம் கிடையாது. நாங்களா சிலதைக் கற்பனை செய்து கொண்டு அதை இலக்கணம் எண்டு நினைக்கிறம்.

அதுதான் இலக்கணம் எண்டு எல்லா மனிதரும் ஏற்றுக் கொள்ளுகினமா? மனிதனுக்கு மனிதன், இனத்திற்கு இனம், மதத்திற்கு மதம் என்று அதன் அர்த்தங்கள் மாறுபட்டுக் கொண்டே போகும். இதில அவன் வாழலாம் வாழாமல் போகலாம். அது அவர்களுக்கே விளங்காமல் இருக்கலாம். அதுதான் பூமியில் மனிதனுக்குக் கொடுக்கப்பட்ட வாழ்வின் சூட்சுமம். உலகத்தில மனிசனுக்கு விளங்கி எல்லா விஷயங்களும் நடக்கிறது இல்லை. பெரும் பகுதி விளங்கியும் விளங்காமலும் நடக்கும். அதில் நிமலனும் ஒருவன்" என்றார் "TS".

"அவன் தன்னைக் கவிஞன் எண்டுகிறான் "TS" அண்ணை."

"அதில என்ன இருக்குது? கவிஞனும், எழுத்தாளனும் சாதாரண மனிசன் தானே? அவன் இப்படி வேற்று அனுபவத்தை எழுதுவதும் தமிழுக்குப் புதுமையாக இருக்கும் எல்லோ? எல்லாம் கடவுளின் சித்தம் சிவா. ஆண்டவனால் அல்லது விதியால் அப்படி நடக்க வேண்டும் என்று எழுதி இருந்தால் யார் அதை மாற்ற முடியும்." என்றார் "TS".

"நீங்கள் மூளை எண்டுகிறியள். பிறகு கடவுள் எண்டுகிறியள். இரண்டையும் போட்டுக் குழப்புகிற மாதிரி இருக்குது. எண்டாலும் நிமலன் அதிஸ்ரக்காரன் தான்." என்றான் சிவா.

"என்னத்தைக் கண்டு பிடிச்சாலும் எங்களை மீறிப் பல செயல்கள் நடக்குது இல்லையோ? அது தான் என்னைப் பொறுத்தவரை கடவுள். நான் நித்தமும் வணங்குகிற துர்க்கை. அதுவே நம்பிக்கை. அதுவே விதி." என்றார் "TS".

ஐந்தாம் எண் சுரங்கரதம் இரைந்து கொண்டு வந்து நின்றது.

# 5 கப்பல் பயணம்

ஐரோப்பிய வாழ்க்கை முறையும், கலாச்சாரமும் எங்கள் வாழ்க்கை முறையிலும், கலாச்சாரத்திலும் இருந்து மிகவும் வித்தியாசம் ஆனவை. பல விடயங்கள் அவர்கள் வாழ்வை விளங்கிச் செய்வதாகச் சரிஸ்காவுக்கு எண்ணத் தோன்றியது. பொதுவாக அவர்கள் யாரையும் எதற்கும் வற்புறுத்துவது இல்லை. அதற்காக வற்புறுத்தாது, கற்பழிப்பு நடக்காது, காவி கட்டிய புத்தர்களாக நூறு வீதம் வாழ்கிறார்கள் என்பதும் இல்லை. வெறியில் பெண்களைச் சில வேளைக் கற்பழிப்பார்கள். வெறியை ஏற்றிச் சில வேளை இங்கே பெண்களைக் கற்பழிப்பார்கள். எப்போதாவது புறநடையாக அது நடக்கும்.

சிறிய சிறிய இடங்களில் உறவு முறை தவறிய உறவுகள் இடம் பெறுவதும் உண்டு. அதுவும் வற்புறுத்தி அவை நடப்பதும் உண்டு. தப்புக்களே நடக்காத மனித சமுதாயத்தை உலகில் பார்க்க முடியாது. ஒப்பிட்டுப் பார்த்தால் யார் மனிதத்தை மதித்து நடக்கிறார்கள் என்றால் இவர்களை அதற்கு உதாரணமாக எடுத்துக் கொள்ளலாம். ஆனால் சிலர் சில வேளை நாங்கள் கற்பனைகூடச் செய்து பார்க்க முடியாத வெறி பிடித்த மிருகங்கள் போலும் நடந்துகொள்வார்கள். அது புறநடை மட்டுமே.

இங்கே படிப்பு, வேலை என்கின்ற சமுதாய உற்பத்திக்குப் போகும் நேரத்தை விட்டால் தங்கள் சுய அனுபவிப்பைப் பாதுகாத்துக் கொள்ளும் ஓய்வுக்கு நிறையவே முக்கியத்துவம் கொடுக்கிறார்கள். ஓய்வோடு மட்டும் நின்று விடாது அந்த ஓய்வோடு கேளிக்கை ஆகப் பொழுது போக்கி மனதைக் குசிப்படுத்தவும் அவர்கள் மறந்து விடுவது இல்லை. எங்கள் நாட்டிலும் அந்த நிகழ்வுகள் கோயில்கள், கச்சேரிகள், நடன நிகழ்ச்சிகள், நாடகங்கள், கூத்துக்கள் என்று நடப்பது உண்டு. அதைச் சரிஸ்கா சிறுபிள்ளையாக இருக்கும் போது பார்த்து இருக்கிறாள்.

எங்கள் சமுதாயத்தால் அங்கு அப்போது பழக்கத்தில் இல்லாதது இங்கு எப்போதும் பழக்கத்தில் இருந்தது. அது மிகவும் ஒரு வித்தியாசமான முறையில் கேளிக்கையாகப் பொழுதைக் கழிப்பது. எங்கள் கலாச்சாரத்தில் அதைத் துர் நடத்தையாக வரையறுத்து விடுவார்கள். இங்கு அது

கேளிக்கையாக அனுபவிக்காதவனுக்கு ஏதோ குறை இருக்க வேண்டும் என்று எண்ணும் மனப்பாங்கு இருக்கிறது. அதற்கு இரவு வாழ்க்கை என்று பெயர். சுருக்கமாக விளங்கப் படுத்துவது என்றால் இரவில் வெளியில் சாப்பிட்டு, மது அருந்தி, நடனம் ஆடி மகிழ்வதே அது. அதன் உள் நோக்கம் அதன் மூலம் நட்புகளை உருவாக்கி, உறவுகளைப் பெற்றுக் கொள்வது. நாங்கள் உறவுகளைப் பெற்றுக் கொள்வதற்கு பிறக்கும் போதே பெட்டிகள் போடப்படுகின்றன. அது மனிதர்களால் மனிதர்களுக்கு எழுதப்படும் தலை எழுத்தாகிறது. சிலருக்குத் தலை நரைக்கும் வரைக்கும் அந்தப் பெட்டிகள் அவர்கள் தேடும் துணையின் பெட்டிகளுடன் பொருந்துவது இல்லை என்பது வேறு கதை. அதனால் வாழ்க்கை கதையாக, இளமை கரைந்து ஆவியான ஏக்கத்தில் ஓடாகும் மனித அவலங்கள் எங்கள் நாட்டில் மலிந்து கிடக்கின்றன. இவர்கள் நாட்டில் அந்த நடைமுறை இல்லாததால் அப்படியான மனித அவலங்கள் மிகவும் குறைவே. அதைவிட வேறுவிதமான அவலங்கள் பல இங்கு உள்ளன. தனிமரங்களாகவே மடிந்து போகும் ஜீவன்கள் பல உண்டு. அது அவர்களின் தெரிவாகும். பொதுவாக இவர்கள் விரும்பியவர்கள் விரும்பியவர்களோடு விரும்பிய நேரத்தில் சேர்ந்து வாழும் சுதந்திரம் கொண்டவர்கள். இந்தச் சுதந்திரம் இருந்தாலும் தனித்து வாழ்வதே பிரச்சனை அற்ற சுதந்திரம் என்று எண்ணுபவர்களும் உண்டு. அதிலும் உடலுறவே இல்லாது தனித்து வாழ்பவர்கள், உடலுறவுக்கு மட்டும் சேர்ந்துவிட்டு மிகுதி நேரங்களில் தனித்து வாழ்பவர்கள் என்று தாங்கள் விரும்பியபடி சுதந்திரமாய் வாழும் உரிமை நோர்வேயில் உண்டு.

அந்தச் சுகந்திரமும், வாழ்க்கை முறையும் அவர்கள் படிக்கும்போதுகூட இடைக்கிடை களியாட்டங்களில் ஈடுபடும் வசதியைக் கொடுத்து இருக்கிறது. இப்படியான களியாட்டங்கள் நட்புடன் சந்தோஷமாய் பொழுதைப் போக்குவதற்கு ஆனதாகும். அதையும் மீறி எல்லை தாண்டுவது அரிது. அப்படி நடந்தாலும் அது அவரவர் சுதந்திரம் என்பதை இங்கு எல்லோரும் மதிப்பார்கள். சரிஸ்காவிற்கு இவர்கள் வாழ்க்கை முறை பற்றி எந்தப் பிரச்சனையும் இல்லை. சில வேளைகளில் தன்னையும் அழைத்து இக்கட்டை யாராவது ஏற்படுத்தும் போதுதான் அவளுக்கு அது அரிகண்டமாக இருக்கும். அவள் அதிகம் கேளிக்கைகளில் கலந்து கொள்வது இல்லை. அப்படிக்

கலந்து கொள்ள அவளுக்குப் பிடிப்பது இல்லை. தன்னுடைய எல்லைக்குள் யாரும் நுழைவதை அவளால் அனுமதிக்க முடிந்ததும் இல்லை. அதற்காக எல்லாவற்றிற்கும் மறுப்புச் சொல்லி மூடி என்கின்ற பெயரைக் கேட்கவும் அவளுக்கு விருப்பம் இல்லை. அதுவும் ஒரு பல்மருத்துவராய் வரப்போகும் தான் மற்றவர்களுடன் பேசி, சிரித்துச் சந்தோஷமாய் இருக்காது ஒதுங்கி இருப்பது தப்பான எண்ணத்தைத் தோற்றுவிக்கும் என அவள் எண்ணினாள். அத்தால் இடைக்கிடை சில கேளிக்கைகளுக்கு மட்டும் சென்று வருவாள். அப்படித்தான் இந்தக் கேளிக்கைக்கும் அவள் வருவதற்கு ஒப்புக் கொண்டு இருந்தாள். அப்பாவிடம் வந்து தான் அந்தப் பயணத்திற்குப் போகப் போகிறேன் என்று கூற அவர் எதுவும் அவளிடம் சொல்லவில்லை. வழமையாகத் தமிழ் நிகழ்ச்சிகளுக்கு வலிந்து வலிந்து அழைப்பவர் இதற்கு ஓம் அல்லது இல்லை என்று சொல்லாது விட்டது அவளுக்கு என்னவோ போல் இருந்தது. போகாமல் விடுவோமோ என்று எண்ணினாள். போகாமல் விட்டால் தனது நட்பு வட்டம் அழிந்து போய்விடும் என்பதான பயம் உண்டாகியது. தன்னிடம் இருந்து அவர்கள் ஒதுங்கத் தொடங்கி விடுவார்களோ என்கின்ற அச்சமாக இருந்தது.

அம்மாவிடம் சென்று தனது பயணத்தைப் பற்றிக் கூறினாள். "உதுக்குப் போகத்தான் வேணுமே?" என்றாள் புவனலோசினி. சரிஸ்கா தான் ஏன் அதற்குச் செல்ல வேண்டும் என்பதற்கான நீண்ட விளக்கம் கொடுத்த பின்பு "கவனமாய் போய்வர வேணும்... என்ன?" என்றாள். சரிஸ்காவுக்கு அம்மாவைப் பார்க்க வேடிக்கையாக இருந்தது. தன்னை இன்னும் சின்னப் பிள்ளையாகவே நினைப்பதை எண்ணக் கேலி செய்ய வேண்டும் போல் இருந்தது. அப்படிக் கேலி செய்தால் அம்மா கவலைப்படுவாள் என்கின்ற எண்ணத்தில் அவள் அப்படிச் செய்யவில்லை. இவ்வாறே அந்தப் பயணத்திற்குச் சரிஸ்கா அரை அனுமதியோடு புறப்பட்டுச் சென்றாள்.

வெள்ளிக்கிழமை அன்று அந்தக் கப்பற் பயணத்திற்குச் சென்றார்கள். "TS" இரு மனதோடு அழைத்துச் சென்று 'விப்பதங் காயா' என்னும் இடத்தில் இருக்கும் துறைமுகத்தில் விட்டார். சரிஸ்காவிற்கு அந்தத் துறைமுகத்திற்கு தனியே செல்லவே விருப்பம். தான் அழைத்துச் செல்கிறேன் என்று புறப்பட்டு நின்ற

அப்பாவின் முகத்தைக் கோண வைக்க விரும்பாதவளாய் அவரோடு துறைமுகத்திற்குச் சென்றாள்.

அங்கே ஒரு குட்டித் தீவு கடலில் ஒளிப் பிழம்பாய் மிதந்தது. அந்த மிதக்கும் தீவு போன்ற கப்பலுக்கு 'ஸ்தேனாலையின்' என்று பெயர். அது டென்மார்க்கில் உள்ள 'பிறெடிக்ஸ்கவுன்' என்னும் இடத்திற்குக் காலை சென்றடையும். இதில் பயணம் செய்வது டென்மார்க்கைப் பார்க்க வேண்டும் அல்லது பொருட்கள் வாங்க வேண்டும் என்கின்ற சுவாரசியத்தால் அல்ல. அதற்கு இருக்கும் முக்கிய காரணம் அங்கு நடைபெறும் இரவு வாழ்க்கை என்பது சரிஸ்காவிற்கும் தெரியும். அவள் மது அருந்துவது இல்லை. ஒஸ்லோவில் வாழும் தமிழ் பெண்கள் சிலர் மது அருந்துவது அவளுக்குத் தெரியும். மது அருந்தாவிட்டால் கூச்சம் இல்லாது நடனமாடிச் சல்லாபமாய் இருக்க முடியாது. சரிஸ்கா அதைப் பெரிதாக விரும்புவதும் இல்லை. ஏதாவது ஒரு சோடாவைக் குடித்துக் கொண்டு நடனம் ஆடுபவர்களைப் பார்த்துக் கொண்டு இருப்பாள். யாராவது நிர்ப்பந்தித்து அழைத்துச் சென்றால் சில நிமிடங்கள் ஒப்பிற்கு ஆடிவிட்டு மீண்டும் தனது இடத்திற்கு வந்து விடுவாள். அந்த அளவு மாற்றம் அவளிடம் இப்போது ஏற்பட்டுள்ளது. அது முழுமை ஆனதா என்பதில் அவளுக்கே சந்தேகம். இம்முறையும் அப்படி ஏதாவது சமாளித்தாற் சரி என்று அவள் எண்ணினாள்.

"அப்ப... கவனமாய் போயிட்டு வரோணும். என்ன?" என்று "TS" சரிஸ்காவிடம் ஒரு வசனம் இறுதியாகக் கூறினார். அந்தக் கவனத்தில் ஒரு அழுத்தம். சரிஸ்காவால் அப்பாவின் கவலை பற்றி விளங்கிக் கொள்ள முடிந்தது. அதே வேளை சரிஸ்காவால் தன்னையும் உணர்ந்து கொள்ள முடிந்தது. இரண்டு கலாச்சாரத்திற்குள் வாழ்வது சுதந்திரத்திற்கும், தடைகளுக்குமான ஒரு போராட்டம் என்பதும் அவளுக்கு விளங்கியது. அந்தத் தடைகளிலேயே எங்கள் அடையாளம் பாதுகாக்கப்படுவதும் அவளுக்குத் தெரியும். அதைவிடத் தனக்கு இருக்கும் வெறுப்பும் அவளுக்கு புலனாகியது.

"நீங்கள் கவலைப்படாதீங்க அப்பா. நாளைக்குப் பின்னேரம் திரும்ப வந்திடுவன் தானே?" என்று ஒரு சமாதானம் சொல்லி வந்தாள்.

*

கப்பல் மாளிகை போல் அல்ல அரண்மனை போல் இருந்தது. ஆட்களை மயக்கிப் பணத்தைப் பணையமாகப் பிடுங்குவதற்காய் உருவாக்கப்பட்ட வியாபாரப் பொறி அப்படியே இருக்க வேண்டும் என்று சரிஸ்காவிற்குத் தோன்றியது. சரிஸ்காவின் அறையில் தங்கப் போகும் பெண்ணிற்குப் பெயர் ஏலின். அவள் செல்லும் பாதையில் இவளைக் கண்டுவிட்டு இவளுக்காகக் காத்து நின்றாள். ஏலின் எப்போதும் அன்று மலர்ந்த தாமரையான புன்னகை பூத்த முகத்தை உடையவள். அவள் உயரத்தில் ஐந்து அடியைத் தாண்டமாட்டாள். அளவான தேகம். பொன் போலக் கண்ணைப் பறிப்பதாய் மினுங்கும் நீளக் கூந்தல். ஆழக் கடலின் நீலத்தை ஒத்த அழகிய விழிகள். மெல்லிய துடிக்கும் ரோஜா இதழ்கள். முத்தை அடுக்கியதான நெருங்கிய பற்கள். அவளைப் பார்ப்பவர்களுக்கு மீண்டும் ஒரு முறை பார்க்கத் தோன்றும் அவள் உருவம். அவள் அப்படி ஒரு கவர்ச்சியின் உறைவிடம். அவளுக்குத் தன் அழகு தெரிவதில்லை. எல்லோருடனும் சமமாகப் பழகும் அதியுயர் பண்பு கொண்டவள். யாருக்கும் அவள் வணக்கம் சொல்லத் தவறாத கருணை கொண்டவள். தலைக் கனத்திற்கும் அவளுக்கும் ஏழேழு ஜென்மப் பகை. அவள் யாரையும் சினேகிதியாக ஏற்றுக் கொள்வாள். எதற்கும் அதிர்ந்தோ அல்லது பகைத்துக் கொண்டோ கதைப்பது கிடையாது. சரிஸ்கா அருகே சென்றதும்,

"சரிஸ்கா. இப்பதான் எனக்குச் சந்தோஷம். உன்னைப் பார்த்த பிறகே நிம்மதியா இருக்குது. அதுக்கு முதல்ல நீ வரமாட்டியோ என்கின்ற பயம் எனக்கு வந்திட்டுது"

"அப்பிடியா? உனக்கும் பயமா?"

"ஓ... நீ நினைப்பது நன்கு விளங்குகிறது. நானும் அப்பிடித்தான் இருந்து இருப்பேன். ஆனா... என்னுடைய அப்பா, அம்மா மிகவும் கண்டிப்பான கிறிஸ்தவர்கள். நான் திருமணம் ஆகும் வரையும் கட்டுப்பாடாக இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறார்கள். இந்த நாட்டில் அனேகருக்குக் கிடைக்கும் அந்தச் சுதந்திரம் எனக்குக் கிடையாது. நான் அவர்கள் விருப்பத்தைத் தப்பாக எண்ணவில்லை. அதை என்னால் இயலுமான அளவிற்குக் காப்பாற்ற வேண்டும் என்றே எண்ணி இருக்கிறேன்." என்றாள் அவள்.

"அப்படியா? போன கிறிஸ்மஸ் பார்ட்டியில நீ வயின் குடித்ததாக ஞாபகமே?" என்றாள் சரிஸ்கா நளினமாக.

"யேசுபிரான் அப்பத்தைத் தனது உடலாகவும், வயினைத் தனது இரத்தமாகவும் உட்கொள்ளுமாறு சொல்லி இருக்கிறார். ஆகவே வயின் குடிப்பதற்கு எனக்கு அனுமதி இருக்கிறது."

"அப்பம் உடலாகவும், வயின் இரத்தமாகவும் இருப்பது என்றால் யேசுபிரான் நரமாமிசம் சாப்பிடச் சொல்லுகிறாரா? அல்லது தனது உடலே ஞானப் பிண்டம் என்கிறாரா?" கேட்ட பின்பே தான் கேட்ட கேள்வி முட்டாள் தனம் ஆனதோ என்று அவளுக்கு எண்ணத் தோன்றியது.

"அதற்கு நீ இப்படி அர்த்தம் கற்பிக்கக் கூடாது. எங்களுக்குள் உந்த மதப் பிரச்சனை வேண்டவே வேண்டாம் சரிஸ்கா. அதற்கு என்று உலகத்தில் நிறைய ஆட்கள் இருக்கிறார்கள். அவர்கள் கட்டிப் புரளட்டும்"

"நீ சொல்வது உத்தமமே. சரி அது வேண்டாம் என்பதை ஏற்றுக் கொள்கிறேன். உண்மையா அல்லது மனிதக் கற்பனையா என்பது இன்றும் முழுமையாகத் தெரியாத ஒன்றிற்காக மனிதர்களாகிய நாங்கள் ஏன் அடிபட்டுக் கொள்ள வேண்டும்?"

"ஓ... நீ ஒரு நாஸ்திகனா சரிஸ்கா?" என்றாள் ஏலின்.

"ஆதி மனிதன் நாஸ்திகனாய் உலாவி இருப்பான். இடையில் இயற்கையை விளங்கிக் கொள்ளாத பயத்தால் புகுத்தப்பட்டதாய் இருக்க வேண்டும் ஆஸ்திகம். அது அவனவன் சிந்தனைக்கு ஏற்ப இன்று வேறுபட்டுக் கிடக்கிறது." என்றாள் சரிஸ்கா.

இருவரும் கதைத்துக் கதைத்து தங்கள் பகுதிக்கு வந்தார்கள். தங்களது அறைக்கு எப்படிப் போவது என்று அங்கு நின்ற பணியாளர்களிடம் கேட்டு அதன்படி தங்களது அறைக்குச் சென்றார்கள். அறை நட்சத்திர விடுதியின் அறைகள் போலத் தூய்மையோடும் ஆனால் அளவில் மட்டும் சிறிதாகவும் இருப்பதாய் சரிஸ்கா எண்ணினாள்.

ஏலின் பொருட்களை வைத்துவிட்டுத் தொப்பென்று படுக்கையில் விழுந்து காலைக் கையை நீட்டிப் பிறநீச்சல் அடித்துப் பார்த்தாள். பின்பு ஞாபகம் வந்தவள் போல்,

"நாங்கள் வெளிக்கிட வேண்டும். மற்றவர்களைச் சந்திக்க, அவர்களோடு சேந்து ஏதாவது அருந்த, அதன் பின்பு சாப்பிட, சாப்பிட்ட பின்பு நடனமாட, கேளிக்கைகளில் பங்கு கொள்ள, என்று எங்களுக்கு இன்று நிறைய நிகழ்ச்சிகள் இருக்கின்றன. நான் குளித்துவிட்டுத் தயார் ஆகிறேன். நீயும் தயாராக வேண்டும். முதலில் டியூட்டிபிறிக்குச் சென்று வயின் வாங்கி வர வேண்டும். அதில் இரண்டு கிளாஸ் என்றாலும் குடித்துவிட்டு அவர்களைச் சந்திக்கச் செல்ல வேண்டும். வேண்டும் என்றால் நீயும் இன்று வயின் குடித்துப் பார்க்கலாம். அப்போது மிகவும் சந்தோஷமாய் இருக்கலாம்." என்றாள் ஏலின்.

"சந்தோஷமாய் இருப்பதற்கு வயின் எனக்குத் தேவை இல்லை. உனக்கு வேண்டும் என்றால் வாங்கி வந்து தாராளமாய் குடிக்கலாம். என்னை இந்த விஷயத்தில் வற்புறுத்தக் கூடாது"

"சரி நான் கேட்கவில்லை. இப்போது நான் குளிக்கப் போகிறேன்" என்று கூறிய அவள் குளியல் அறைக்குள் புகுந்து கொண்டாள். கப்பல் பயணிக்கத் தொடங்கி அரை மணித்தியாலம் இருக்கும். ஏலின் குளித்து ஒப்பனைச் செய்து விட்டாள். சரிஸ்காவும் குளித்து ஒப்பனைச் செய்தாள். ஏலினுக்கு வரிச் சலுகைக் கடைக்குச் செல்லும் அவசரம். ஏதோ காரணத்திற்காக அவர்கள் வயின் குடிக்கலாம் என்று அனுமதித்ததை இவள் சந்தர்ப்பம் கிடைக்கும் போது தவறாகப் பயன்படுத்துகிறாள் என்பது சரிஸ்காவிற்கு விளங்கியது. தெரிந்தும் அது அவள் சுதந்திரம் என்று எண்ணி அதைப் பற்றி அவளோடு கதைப்பது இல்லை என்று முடிவு செய்து இருந்தாள்.

வரிச்சலுகைக் கடையில் பல விதமான பொருட்களும் விற்பனைக்கு அடுக்கி வைக்கப்பட்டு இருந்தன. சந்தை போலச் சனம் அலை மோதியது. இப்போதே அவற்றை வாங்கிக் கொண்டு அலைய வேண்டிய அவசியம் இல்லை என்பது சரிஸ்காவின் எண்ணம். தனக்குத் தேவையான பொருட்களைப் போகும் போது வாங்கிக் கொள்ளலாம் என்பது அவள் முடிவு. தற்போது குடிப்பதற்கு நீரும், சாப்பிட உருளைக் கிழங்குப் பொரியலும் அவள் வாங்கிக் கொண்டாள். ஏலின் முதலில் வயின் பார்த்தாள். தனக்குச் சிவப்பு வயினே பிடிக்கும் என்று சரிஸ்காவிற்கு விளக்கம்

கொடுத்தாள். பின்பு இரண்டு ‘செல்பிறியெஸ்’ வயின் போத்தல்களைத் துக்கிக் கூடைக்குள் போட்டுக் கொண்டு நடக்க முற்பட்டவள் மனம் இல்லாது நின்றாள். பின்பு சரிஸ்காவைப் பார்த்து,

"வயினுக்கும் விஸ்கிக்கும் என்ன வித்தியாசம்? கிடைப்பதைக் குடித்து, உண்ணக் கூடியதை உண்ணுதல் மனிதர் வாழ்வதற்கான தர்மம் அல்லவா? இறைவன் அதற்காகத் தானே அவற்றைப் படைத்தார். வயின் மட்டுமே குடிக்க வேண்டும் என்று வைபிளில் எங்காவது எழுதி இருக்கிறதா? எதுவும் குடிக்கலாம். எல்லாம் அவரவர் மனநிலையைப் பொறுத்தது. மற்றவருக்குத் தீங்கு விளைவிக்காது, எனக்கும் பெரும் தீங்கு விளைவிக்காது, விரும்பிய குடிபானத்தைச் சுவைக்கும் உரிமை எனக்குக் கடவுள் தந்து இருக்கிறார். அதற்கு மதம் தடை சொல்லவில்லை. இல்லையா சரிஸ்கா?" என்று அவளைத் துணைக்கு இழுத்தாள்.

"மனிதன் தான் விரும்புவது போல இந்த உலகம் இருக்க வேண்டும் என்று எண்ணுபவன். ஏலின் நீ ஏதோ நினைத்துக் கொண்டு இந்தக் கப்பல் பயணத்திற்கு வந்திருக்கிறாய். என்னை ஒப்புக்கு இழுத்து உன் கருத்திற்குச் சம்மதம் வாங்குவதாய் ஒரு பிரமையை ஏற்படுத்தாதே. உனக்கு எது தேவைப் படுகிறதோ அதைச் செய். எனக்குக் கிறிஸ்தவ மதத்தைப் பற்றிப் பெரிதாகத் தெரியாது. நீ மது அருந்துவது பற்றி எந்த ஆட்சேபனையும் என்னிடம் இல்லை. அறைக்குள் யாரையும் கூட்டிக் கொண்டு வரக்கூடாது. அது மட்டும்தான் என்னுடைய வேண்டுகோள்." என்றாள் சரிஸ்கா.

"ஓ கடவுளே நான் அப்படிச் செய்வேனா? எவ்வளவு குடித்தாலும் நான் நிதானம் இழக்கமாட்டேன். எனது உடலை ஒரு ஆண் அனுபவிக்க விடமாட்டேன். அது கர்த்தருக்கும் எனது அப்பா, அம்மாவிற்கும் செய்யும் துரோகமாய் இருக்கும். அதை நான் எக்காரணம் கொண்டும் செய்ய மாட்டேன். நீ அதைப்பற்றிக் கவலை கொள்ளத் தேவை இல்லை." என்றாள் ஏலின்.

"நீ வித்தியாசமானவள் ஏலின்." என்றாள் சரிஸ்கா.

"உண்மையே. என்னைப் போன்றவர்கள் நிறையவே ஆண்களோடு சேர்ந்து பார்ப்பார்கள். அதுவே வழமையான நடைமுறையாக இங்கே பலரால் கடைப்பிடிக்கப் படுகிறது.

நான் புறநடையாகவே இருந்து வந்திருக்கிறேன். அது எமது மதப் பிரிவைச் சார்ந்தது. இன்னும் எந்த ஆணோடும் அத்துமீறி நான் நடந்தது இல்லை. அதற்காக நான் காதலே செய்யவில்லை என்றும் எண்ணாதே. அது கலியாணத்தில் முடியும் என்கின்ற நம்பிக்கை எனக்கு உண்டு. அவனுக்கும் கடவுள் பக்தி அதிகம். அது எங்கள் வாழ்க்கை சுமுகமாகப் போவதற்கு ஏதுவாக இருக்கும். அத்தோடு அவன் மிகவும் இனிமையானவன். உனக்கு நான் சந்தர்ப்பம் கிடைக்கும் போது அவனை அறிமுகம் செய்து வைக்கிறேன்." என்றாள் ஏலின்.

"கர்த்தர் உன்னை மன்னிப்பாராக." என்றாள் சரிஸ்கா.

"ஏன் அப்படிச் சொல்கிறாய்?" என்றாள் ஏலின்.

"உனது பக்தி மதுவிடம் மண்டியிடுகிறது." என்றாள் சரிஸ்கா.

"கர்த்தர் என்னை மன்னிப்பார். மதுவைத் தனது இரத்தமாய் அருந்த அவர் கட்டளை இட்டிருக்கிறார். இந்த விஸ்கிகூட அவரது உடலில் இருந்து புறப்படும் ஏதோ திரவமாக இருக்க வேண்டும் என்பது எனது எண்ணம். கர்த்தர் என்னை எப்போதும் மன்னிப்பார். எனக்கு அதில் நிறையவே நம்பிக்கை இருக்கிறது." என்று கூறிய வண்ணம் அரை லீற்ரர் "Blacklabel" ஒன்றையும் எடுத்துத் தனது கூடைக்குள் போட்டுக் கொண்டாள். அதைத் தொடர்ந்து சரிஸ்காவைப் பார்த்துக் கண்ணடித்தாள்.

"நிச்சயம் கர்த்தர் மன்னிப்பார்." என்று கூறிய வண்ணம் சரிஸ்கா நடந்தாள்.

*

அறைக்கு வந்ததும் அவசரமாக வயின் போத்தலைத் திறந்து நீர் குடிப்பதற்கு வைத்திருந்த கடதாசிக் குவளையில் ஊற்றி ஏலின் பருகுவதைப் பார்க்க இன்று இவளைக் கட்டுப்படுத்துவது பெரும் பாடாகப் போகிறதோ என்கின்ற பயம் சரிஸ்காவுக்கு உண்டாகியது. அவளுக்கு மதுவின் மணம் ஒத்துக் கொள்வது இல்லை. அதை அவள் நாற்றம் ஆகவே நினைத்தாள். அந்த நாற்றத்தை அருந்துவது அவளுக்கு வியப்பாக இருந்தாலும் அது புதுமை இல்லை. அப்பாவும் இடைக்கிடை அருந்துவதை அவள் பார்ப்பது உண்டு. இன்று அந்த நாற்றத்தை அருந்துபவளை மிகவும் அருகில் இருந்து சமாளிக்க

வேண்டும் என்கின்ற எழுதாத பொறுப்பு ஒன்று அவள் தோழில் குந்தியதான உணர்வு வந்தது. பின்பும் ஒரு தோழிக்காக இதைக்கூடச் செய்யாது விட்டால் நான் என்ன பெண் என்கின்ற எண்ணம் ஏற்பட்டது. பழக்கம் இல்லாவிட்டால் எல்லாம் அருவருப்பாகத் தான் இருக்கும். மற்றவர்கள் புகைபிடித்தால் மூச்சு இழுக்க முடியாத அவஸ்தை உண்டாகும். அதற்காக அவர்களைத் தடுப்பதற்கு எனக்கு என்ன அதிகாரம் இருக்கிறது? அவர்களின் பணம். அவர்கள் கொள்முதல் செய்யும் அனுபவம் எனக்கு மூச்சுத் திணறலாய் இருக்கிறது என்று கூறினால் அவர்கள் அதை எப்படி எடுத்துக் கொள்வார்கள்? மனிதர்கள் பல விதம். அவர்களின் பழக்கங்களும் பல விதம். அந்தப் பலவிதங்கள் தோழியாகக் கிடைத்து விட்டால் நிச்சயம் சமாளித்துப் போகத்தான் வேண்டும். ஏலின் மது அருந்துவதைத் தவிர வேறு எந்தக் கெட்ட பழக்கமும் இல்லாதவள். தோல் பாகுபாடு இல்லாது அன்பாகப் பழகுபவள். அவளை இன்று நான் பாதுகாக்க வேண்டும் என்று சரிஸ்கா எண்ணிக் கொண்டாள்.

கடதாசிக் குவளையில் ஊற்றி ஒரு முறை பருகிவிட்டு மறு முறை ஊற்றிப் பருக நினைத்தவள்,

"ரேஸ்ற் பண்ணிப் பார்க்கிறியா?" என்றாள் சரிஸ்காவைப் பார்த்து.

"நான் ரேஸ்ற் பண்ண இல்லை. நீ என்னை ரேஸ்ற் பண்ணச் சொல்லிக் கேட்காத. விளங்கிச்சா?" என்றாள் சரிஸ்கா.

"சொறி. சொறி நண்பியே, நான் உன்னை இனி ரேஸ்ற் பண்ணு என்று கேட்கவே மாட்டேன்." என்றாள் தொடர்ந்தும் வயினைப் பருகிய வண்ணம். அதைத் தொடர்ந்து வாங்கி வந்த கயூவை எடுத்துச் சரிஸ்காவிற்கும் கொடுத்துத் தானும் கொறிக்கத் தொடங்கினாள்.

சிறிது நேரத்தில் ஏலினுக்குக் கண்கள் சிவந்து இருந்தன. தனக்குப் பசியில் உயிர் போவதாகச் சரிஸ்காவிடம் கூறினாள். பசிக்கும் போது மது நெருப்பில் ஊற்றும் நெய்யாக அதைப் பிரமாண்டம் ஆக்கிவிடும். அமிலத்தை வயிற்றில் வார்த்ததான அவஸ்தை எழும். சாப்பிடத் தொடங்கினால் கணக்கு இல்லாமல் போய்விடும். அப்படியான ஒரு பசி வயிற்றில் எழுந்து நிற்க மீண்டும்

ஒரு முறை வயினை ஊற்றி உறிஞ்சிவிட்டு, "புறப்படுவோமா?" என்று ஏலின் சரிஸ்காவைப் பார்த்துக் கேட்டாள்.

அதற்குப் பதில் சொல்லி மினக்கெடாது சரிஸ்கா புறப்பட்டாள். மேலே சாப்பாட்டுக் கடைக்குச் சென்ற போது மற்றவர்களும் அங்கே வந்து விட்டார்கள். ஏற்கனவே அனைவரும் இருந்து சாப்பிடுவதற்கு மேசை பதிந்து வைக்கப்பட்டு இருந்தது. அந்த மேசை எண்ணைக் கூறியதும் சிற்பந்திகள் அவர்கள் இருக்க வேண்டிய இடத்தைக் காட்டினார்கள். அங்கே மீண்டும் குடிப்பவர்களுக்கு வயினும், பியரும் மது அருந்தாதவர்களுக்குக் குளிர்பானமும் பரிமாறப் பட்டது. அதன் பின்பு முதல் சாப்பாடு எனப்படும் சிற்றுண்டி வழங்கினார்கள். அதில் பலவிதமான பழங்களும், கரட், இனிப்பு அவரைக்காய் போன்றவையும் இருந்தன. அதைத் தொட்டுச் சாப்பிடுவதற்கு இரண்டு வெள்ளை நிறமான தயிர் போன்ற கறி வைக்கப்பட்டு இருந்தன. அத்துடன் புதிதாக வெதுப்பிய பாணும் வழங்கப்பட்டது. எல்லோரும் பாண் துண்டுகளை எடுத்து எடுத்துச் சாப்பிட்டார்கள். அதன் பின்பு பிரதான சாப்பாடு வழங்கப்பட்டது. பிரதான சாப்பாட்டிற்கு சல்மன் மீனைச் சரிஸ்கா தெரிவு செய்தாள். ஏலின் மாட்டிறைச்சி தெரிவு செய்து இருந்தாள். அனேகரின் தெரிவும் அதுவாகவே இருந்தது. வயினையும் அருந்தி, அருந்தி கதைகள் பேசிப் பேசி அதைச் சாப்பிட்டு முடித்தார்கள். ஏலின் மீண்டும் வயின் கேட்டு வாங்கிக் குடித்தாள். எல்லோருடனும் பகிடி பண்ணிக் கதைத்தாள். அவளுக்கு இப்பொழுதே நல்ல வெறியாக இருக்க வேண்டும் என்று சரிஸ்கா எண்ணிக் கொண்டாள்.

பின்பு "Dessert" ஆகப் பல சாப்பாடுகள் இருந்தும் சரிஸ்கா வனில்லா "Ice cream" தனக்கு எடுத்தாள். ஏலின் தனக்கும் அதையே தருமாறு கேட்டாள். அத்தோடு அதற்கு இனிப்பான வயின் தருமாறு ஏலின் கேட்பதற்கு மறக்கவில்லை. இன்று ஒரு கரை காணுவதில் அவள் குறியாக இருக்கிறாள் என்பது மட்டும் சரிஸ்காவிற்கு விளங்கியது. "Dessert" சாப்பிட்டு முடிந்த பின்பும் சிறிது நேரம் மேசையில் இருந்து கதைத்துக் கொண்டு இருந்தார்கள். சாப்பாடு ஏற்கனவே பதிவு செய்திருந்ததால் அதற்கான பணமும் ஏற்கனவே செலுத்தி விட்டார்கள். மேலதிகமாகக் கேட்டு வாங்கிக் குடித்த வயினுக்கு ஏலின் பணம் கட்டினாள். அப்படி வேறு சிலரும் தீர்த்துக்

கொண்ட தாகத்திற்கான பெறுமானத்தைச் செலுத்திக் கணக்கை முடித்த பின்பு எழுந்து நடனமாடும் தளத்திற்குச் சென்றார்கள். நடனமாடும் தளத்தில் நடனம் ஆடுவதற்கான வெளி, இளைப்பாற இருப்பதற்கான இருக்கைகள், இசைக் குழுவிற்கான இடம் எனப் பல பகுதிகளாகப் பிரிந்து இருந்தது. முக்கியமாகக் குட்டி மதுக்கடை நடுநாயகமாக அங்கே இருந்தது. இப்படியான கழியாட்ட நிலையங்கள் அமைக்கப் படுவதே மதுவை விற்பதற்கோ என்று சரிஸ்காவுக்கு எண்ணத் தோன்றியது. வியாபாரமே உண்மை என்பதும் விளங்கியது.

வியாபாரமயம் ஆக்கப்பட்ட இந்த உலகத்தில் நுகர்வுப் பொருட்களும் அதன் விற்பனையும் அதனால் புரளும் பணமும் பெரிதாக மதிக்கப் படுகிறது. ஆயிரம் ஆயிரம் பணக்காரர்கள் வாழ்ந்து மரித்துப் போய் இருப்பார்கள். அவர்கள் வாழ்ந்த அடையாளம் எங்கும் இருப்பது இல்லை. புழுக்களாக நெளியும் மனிதக் கூட்டத்தில் நானும் ஒருத்தியா? கோடியில் ஒன்றாக ஒரு குறிப்பிட்ட வருடங்களை இந்தப் பூமியில் வாழ்ந்து பின்பு, சுவடற்று அழிந்து போகும் மனித ஜென்மம் தானா? ஏலினைப் போல் இருந்தால் என்ன? நான் நானாக இருந்தால் என்ன? கோடி கோடியான புழுக்களில் நான் என்பது உண்டா? உலகத்தின் காட்சியாகச் சில காலம் நெளிந்து மடியும் புழுக்கள் அல்லவா நாம்? இந்தக் காட்சியில் நிலைப்பதாக தமது வாழ்வை அர்த்தப்படுத்திச் செல்ல முடிந்தது புத்தர், காந்தி போன்ற ஒரு சில மனிதர்களால் மட்டும் தானா? அதுவும் இந்த உலகம் அல்லது சூரிய மண்டலம் நிலைக்கும் வரை என்பதாகவே இன்று. காந்தியாக எல்லா மனிதர்களாலும் வாழ்ந்துவிட முடியாது என்பது நிலைத்த நிதர்சனமே. சரிஸ்கா இவ்வாறு நின்ற வண்ணமே சிந்தித்தாள். அப்படிச் சரிஸ்கா நின்ற வண்ணமே சிந்திப்பதைப் பார்த்த ஒஸ்கார்,

"நீ வந்து சோபாவில் இருந்தே நன்றாக யோசிக்கலாம். நின்று கால் கடுக்கும் வேதனையும் அப்போது இருக்காது. அழகிய மலர்கள் உண்டு. சுவர்க்கத்தில் இருந்து வருகின்ற மலர்கள் இல்லை. உன்னைப் பார்த்தால் நீ சுவர்க்கத்தில் இருந்து வந்த அழகிய மலராய் மயக்கம் தருகிறாய்." என்று அவன் காதல் வசனம் பேசினான்.

ஒஸ்கார் பல் வைத்தியம் படிக்கிறான். வந்த உடனேயே ஒரு வியர் வாங்கி வந்து விட்டான். சிலர் இப்படிப் பயணம் புறப்பட்டால் குடிப்பதிலேயே குறியாக

இருப்பார்கள். அதில் இவனும் ஒருவனாக இருக்க வேண்டும் என்று சரிஸ்காவிற்குத் தோன்றியது. அடக்கி வைத்ததை எல்லாம் சேர்த்து இப்படியான சந்தர்ப்பங்களில் அனுபவித்து விடும் அவதி அவனுக்கு என்று சரிஸ்கா எண்ணினாள்.

கலாசாலையில் அவன் பொதுவாகக் கதைப்பது இல்லை. அமைதியாக இருப்பான். எதற்கு உள்ளும் தலையை நீட்ட மாட்டான். ஏலின் போன்றவர்கள் தனகினாலும் எதுவும் கதைக்க மாட்டான். இவன் ஐந்தடி ஐந்தங்குல உயரம் இருப்பான். பரந்த மார்பும், மொத்தமான கை, கால்களையும் கொண்டவன். உடற் பயிற்சி செய்து தசைகளைக் கல்லாக்கி வைத்து இருந்தான். ஏலினுக்கு அப்படியான உடம்பில் எப்போதும் ஒரு கண்ணிருக்கிறது. திருமணத்திற்கு முன்பு எந்த உறவுக்கும் இடம் கொடுக்கக் கூடாது என்கின்ற காரணத்தால் அவள் அதை சரிஸ்காவிடம் மட்டுமே பிரஸ்தாபிப்பாள். அதுவும் கல்லூரியில் மாத்திரமே அந்தக் கதை வருவது உண்டு. அப்படி அமைதியாக இருப்பவன் இன்று தன்னைப் பார்த்து கடைசியாகச் சொன்ன வசனங்கள் சரிஸ்காவிற்குப் பிடிக்கவில்லை. மதுவின் உசாரில் சொல்கிறான் என்பது விளங்கியது. இல்லா விட்டால் அவன் வாயில் இருந்து ஒரு வசனம்கூட வந்திருக்க மாட்டாது என்பதும் அவளுக்குத் தெரியும். சரிஸ்கா எதுவும் பேசாது சற்றுத் தள்ளிப் போய் இருப்போம் என்று யோசித்தாள். அவளது சிந்தனையை உணர்ந்தவளாய்,

"சரிஸ்கா இங்கவா. எங்களோடு வந்து இரு." என்றாள் ஏலின். அவள் அப்படிச் சொன்ன பிறகு வேற்று இடத்திற்குப் போவது அவளுக்கு ஒரு தெரிவாக இருக்கவில்லை. ஒஸ்காரின் வார்த்தை ஜாலத்திற்கு ஏதாவது பதில் சொல்ல வேண்டும் என்கின்ற கோபமும் வந்தது. இது நியாயமற்ற கோபமா என்று சரிஸ்கா ஒரு கணம் எண்ணிப் பார்த்தாள். அப்படி இல்லை என்று அவளுக்குத் தோன்றியது. பலர் தாங்கள் நினைப்பதைப் பேசுவதற்கும், நினைப்பதைச் செய்வதற்கும் என்றே திட்டம் போட்டுக் குடிக்கிறார்கள். அப்படியே ஒஸ்காரும் இருக்க வேண்டும் என்று அவளுக்குத் தோன்றியது.

"குடிக்கிறதை அளவாய் குடி ஒஸ்கார். இவ்வளவு நாளும் முள்ளாய் தெரிந்த நாங்கள் இண்டைக்கு உனக்குச் சுவர்க்கத்து மலராய் தெரிகிறோமா? குடிக்கிறதை நிறுத்திவிட்டு வெளியே ஒருமுறை போயிட்டு வா. நாங்கள்

சுவர்க்கத்தில் இல்லை பூமியிலேயே இருக்கிறோம் என்பது தெரியும். மதுவுக்கு முன், மதுவுக்குப் பின் என்று உனக்கு இரண்டு முகங்கள் இருக்கின்றனவா?" என்று சரிஸ்கா கேட்டாள்.

அவனை இப்போது இப்படிச் சொல்லும் தானும் ஒதுக்கம் காட்டியே வந்து இருக்கிறாள் என்பது அவளுக்குத் தெரியும். சரிஸ்கா ஆண்களோடு அதிகம் பழகுவது இல்லை. ஆனால் பெண்களோடு சகஜமாகப் பழகுவாள். அவளிற்கு அதில் எந்தப் பிரச்சனையும் இல்லை. சரிஸ்கா எப்படிக் கல்லூரியில் நடந்து கொண்டாள் என்பது ஒஸ்காருக்குத் தெரியும். அவன் உள்ளே ஏற்றிய மதுவுக்குப் பதிலாக வெளியே சொற்கள் வந்து குதித்தன. தனது ஒதுக்கத்தைப் பற்றி எண்ணாமல் என்னைக் கிண்டல் பண்ணுகிறாயா என்கின்ற ஆதங்கம் அவனிடம்.

"குடிக்கிறது பற்றிக் கதைக்காதே சரிஸ்கா. மதுவைச் சுவைக்காத உனக்கு அதைப் பற்றி என்ன தெரியும்? மலர்களில் மது இருப்பது வண்டுகள் சுவைப்பதற்கு. அப்பிடியே பெண்களில் அழகு இருப்பதும் சந்ததி பெருக்குவதற்கே. அதற்காக நான் பெண்களைச் சந்ததி பெருக்கும் இயந்திரமாக மட்டும் நினைக்கவில்லை. சந்ததி பெருக்குவதை செய்யாவிட்டால் சமுதாயத்திற்கு ஒரு பெண் செய்ய வேண்டிய கடமையில் இருந்து தவறுவதாய் எடுத்துக் கொள்ளலாம். சந்ததி பெருக்குவது என்றால் மலரில் உள்ள தேனை வண்டு உண்ண வேண்டும். வண்டு உண்ணாத மலர்களில் கனிகள் எப்படி வரும்? துணிவும் ஆசையும் ஒரு ஆணுக்கு வரும் போது மனதிற்குப் பிடித்த பெண் தேவதையாகத் தெரிவாள். எனக்கு நீ அப்படித் தெரிந்தாய். அதையே நான் சொன்னேன். குடிக்காத போது பொய் பேசினாலும் குடிக்கின்ற போது நான் பொய் பேசுவது இல்லை." என்றான். அவனுக்கு நல்ல வெறி என்பது சரிஸ்காவின் தீர்மானம். குடிகாரன் பேச்சு விடிந்தாற் போச்சு என்று ஊரில் சொல்வது அவளுக்கு ஞாபகம் வந்தது. இந்த இரவு கடந்து விட்டால் பெட்டிப் பாம்பாகத் திரியப் போகும் ஒஸ்கார் என்று அவள் எண்ணினாள்.

ஏலின் அவனின் இந்த விளக்கத்தை எதிர் பார்க்கவில்லை. அவள் தலையை ஆட்டினாள். அதில் இவன் இப்படிக் கதைக்கிறானே என்கின்ற அலுப்புத் தெரிந்தது. அவள் இப்போது பிள்ளைகள் பெறுவதற்கு மட்டும் பெண்கள் படைக்கப் பட்டவர்கள் இல்லை என்று வாதாடும்

மனநிலையில் இல்லை. தனக்குத் தேவை ஆனதை மதுவின் போதையில் கேட்பது போலக் கேட்கிறான். அவனுக்கு அது அவசியம் என்றாலும் அது அவளுக்கு அவசியம் இல்லை. தான் ஒரு போதும் எல்லையை மீறக் கூடாது என்கின்ற வைராக்கியம் சரிஸ்காவிடம் உண்டு. இவனின் இந்த அலட்டல்கள் சரிஸ்காவை நோக்கியது தான். அவள் மனநிலை எப்படிப்பட்டது என்பது ஒஸ்காருக்குத் துளியும் தெரியாது. அதனாலேயே அலட்டுகிறான். ஒஸ்கார் அவளைப் பூகம்பமாக வெடிக்க வைக்க மாட்டான் என்று அவளுக்கு நம்பிக்கை இருந்தது. இன்று இங்கு வந்ததிற்கு நன்கு மது அருந்த வேண்டும். பின்பு நடனமாட வேண்டும். அதன் பின்பு நன்றாக நித்திரை கொள்ள வேண்டும் என்று ஏலின் எண்ணினாள். அவளுக்கு மேலும் ஏதாவது குடிக்க வேண்டும் போல் இருந்தது. அவள் எழுந்து அதற்கு ஏதுவாக வியர் வாங்கச் சென்றாள். அவளிடம் தனக்கும் ஒரு கோலா வாங்கி வருமாறு சரிஸ்கா கூறிவிட்டாள்.

"நீ அழகானவள். உன்னை எனக்கு நிறையவே பிடிக்கும். இதை நான் உன்னிடம் சொல்ல வேண்டும் என்று பல காலம் நினைத்து இருந்தேன். சொல்லுவதற்கு எனக்குத் துணிவு இருக்கவில்லை. இன்று எப்படி ஆவது சொல்லிவிட வேண்டும் என்று எண்ணி வந்தேன்." என்றான் ஒஸ்கார் அந்த அந்தகாரத்தில்.

சரிஸ்கா இதை எதிர்பார்க்கவில்லை. இவன் இவ்வளவு துணிவாக அதைச் சொல்லுவான் என்கின்ற எண்ணம் அவளிடம் இருந்தது இல்லை. அதற்கு என்ன பதில் சொல்வது என்றும் அவளுக்கு முதலில் விளங்க வில்லை. பின்பு தன்னைச் சமாளித்துக் கொண்டு,

"ஒஸ்கார்... எனக்குச் சேர்ந்து வாழ்கிறது பற்றி எண்ணவே இப்பொழுது பிடிக்கிறது இல்லை. எனக்கு அப்படியான எந்த எண்ணமும் இல்லை. இருந்தால்கூட அது ஒரு தமிழராகவே இருக்கும். எங்கள் கலாச்சாரம் அப்படி. அது விளங்கினால் நீ தேவை இல்லாது என்னைத் தொந்தரவு செய்யக் கூடாது." என்றாள் சரிஸ்கா.

"ம்... அப்படியா? நீ லெஸ்பியனா?" என்றான் ஒஸ்கார். அவளைப் பார்த்து நக்கலாகச் சிரித்தான். சரிஸ்காவிற்குக் கோபம் வந்தது. அந்த இடத்தை விட்டு எழுந்து போகத் தோன்றியது. அவள் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டாள். அமைதியாகச் சில கணங்கள் இருந்தாள்.

"ஒஸ்கார்... நீ என்னுடைய சொந்த விஷயங்களில் தலையிடக் கூடாது. நான் லெஸ்பியனாய் இருந்தால் என்ன? கேத்தோவாய் இருந்தால் என்ன? அதைப் பற்றி நீ கவலைப்படத் தேவையில்லை. மதுவில்... வெறியில் நீ எப்படியும் கதைக்கலாம் என்றும் இல்லை." என்றாள்.

"ஓகே. ஓகே." என்று கூறியவன் மீண்டும் மது வாங்கச் சென்றான். அதற்கு இடையில் ஏலின் தனக்கு மதுவும் சரிஸ்காவிற்குக் கோலாவும் வாங்கிக் கொண்டு திரும்பி வந்தாள்.

"அவன் கொஞ்சம் ஓவறாய் கதைக்கிறான். நாங்கள் அறைக்குப் போவமா? அப்பதான் நிம்மதியாய் இருக்கும்." என்றாள் சரிஸ்கா.

"அவன் இல்லாவிட்டால் என்ன? இங்கு எவ்வளவு பேர் இருக்கிறார்கள். அவர்களோடு கதைப்போம். கப்பல் பயணம் வருவதே இந்தக் கேளிக்கைகள், நடனங்கள், இசை என்பனவற்றை இரசிப்பதற்குத் தானே? அறைக்குள் இருப்பதற்கு எதற்குப் பணம் கொடுத்து இங்கு வரவேண்டும்? தயவு செய்து இங்கு இருப்போம்." என்று ஏலின் கெஞ்சுவது போலக் கேட்டாள். ஏலின் அப்படிக் கேட்காமல் சரி நீ போ என்று சொல்லி இருக்கலாம். அவள் நட்பை மதிக்கும் விதம் அதற்கு இடம் கொடுக்க வில்லை. அதற்கு மேல் சரிஸ்காவால் முரண்டு பிடிக்க முடியவில்லை. இசை தொடங்க நடனமாடத் தொடங்கினார்கள். சோடி சோடியாகச் சென்று அதில் கலந்தார்கள். அந்தச் சோடிகளைப் பார்ப்பது போல ஒஸ்காரைப் பார்ப்பதைச் சரிஸ்கா தவிர்த்தாள். ஏலினும் நடனம் ஆடுபவர்களைப் பார்த்து இரசித்தாள். அப்போது யோர்கன் என்பவன் வந்து ஏலினை நடனமாட வருகிறாயா என்று கேட்க அவள் அவனோடு நடனமாடச் சென்று விட்டாள். சரிஸ்காவிற்கு தான் தனித்துவிட்டதான அந்தரம். ஏலினுக்காக இருக்க வேண்டிய கட்டாயம். அவள் நடனத்தைப் பார்த்து இரசிப்பது போலப் பாசாங்கு காட்டினாலும் சிங்கத்தின் குகைக்குள் மாட்டிக் கொண்ட மான் போல மனது அமைதி இன்றித் தவித்தது. ஏன் என்பது அவளுக்குத் தெரியும். அப்படி நடக்கக் கூடாது என்பது அவள் விருப்பம். ஒஸ்கார் தனது வியரைக் குடித்து முடித்துவிட்டு எழுந்தான். அவன் கண்கள் சிவந்து இருந்தன. நடையில் தளும்பல். இருந்தும் இசைக்குத் தளும்பலோடு கூடிய ஒருவித நடனம். சரிஸ்காவைப்

கூர்ந்து பார்த்தான். திடீரென அவளது மேசைக்கு அருகே முட்டுக் கால் இட்டு இருந்தான். இருந்தவன் சரிஸ்காவைப் பார்த்து,

"நான் அசிங்கமான பேய் போல இருக்கிறேனா? என்னைப் பார்க்க உனக்கு அருவருப்பாக இருக்கிறதா?" என்று சரிஸ்காவின் கண்களைப் பார்த்துக் கேட்டான். சரிஸ்காவிற்கு அவனில் இருந்து வந்த மது நாற்றம் வயிற்றைப் புரட்டியது. மது மதுவாகப் போத்தலிற்குள் இருக்கும் போது அதற்கு இவ்வளவு நாற்றம் கிடையாது. அதை மனிதன் குடித்தவுடன் அவர்களது மதுவால் சாகாத வயிற்றுப் பக்ரீரியாக்களும் சேர்ந்து நாறுகின்றன என்று அவளுக்குத் தோன்றியது. அதற்கு மேல் இனி இங்கு எப்படி இருப்பது என்று அவளுக்கு விளங்கவில்லை. அவன் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்ல விடாது அவனில் இருந்து வந்த நாற்றம் அவளைக் குழப்பியது. அவள் மீண்டும் என்ன செய்வது என்கின்ற யோசனையில் அவனுக்குப் பதில் கூறத் தாமதித்தாள். அவனால் அதைப் பொறுக்க முடியவில்லை.

"சொல்லு நான் அசிங்கமாகவா இருக்கிறேன்?" என்று மீண்டும் கேட்டான்.

"இல்லை... நீ அசிங்கம் என்று நான் ஒரு போதும் நினைக்கவும் இல்லைச் சொல்லவும் இல்லை. நீ அசிங்கம் என்று யாரும் சொல்ல மாட்டார்கள். ஆனால் எனக்கு யாரும் தேவை இல்லை." என்றாள் சரிஸ்கா.

"நீயும் அசிங்கம் இல்லை. பின்பு ஏன் உனக்கு என்னைப் பிடிக்க வில்லை? நான் கல்லூரியில் ஏதாவது தப்பு செய்கிறேனா? அசடு போல நடந்து கொள்கிறேனா?"

"அது எல்லாம் இல்லை. அழகாய் இருக்கும் ஆண்களை எல்லாப் பெண்களும் விரும்ப வேண்டும் என்றும் இல்லை. தயவு செய்து என்னைத் தொந்தரவு செய்யாதே. எனக்குப் பிடிக்கவில்லை என்றால் விளங்கிக் கொள்ள வேண்டும். மீண்டும் மீண்டும் வெறியில் தொந்தரவு செய்யக் கூடாது." என்றாள் சரிஸ்கா.

"உனக்கு ஆண்களைப் பிடிக்க வில்லையா? பெண்களை மட்டும்தான் பிடிக்குமா?" என்றான்.

"வாயை மூடு ஒஸ்கார்."

ஒஸ்கார் வெறியில் சரிஸ்காவின் கையைத் திடீரெனப் பிடித்து நடனமாட அழைத்தான். சரிஸ்காவிற்கு அவள் மேல் கை வைத்ததும் தான் என்ன செய்கிறேன் ஏது செய்கிறேன் என்று விளங்கவில்லை. எட்டி அவன் கன்னத்தில் தன் பலம் கொண்ட மட்டும் ஓங்கி அறைந்தாள். அந்த அறையோடு அவன் கையை விட்டான். கன்னத்தைத் தடவினான். நடனம் ஆடியவர்கள் ஒரு கணம் அப்படியே நின்றார்கள். இவர்களை விளங்காது பார்த்தார்கள். பின்பு மீண்டும் ஆடத் தொடங்கினார்கள். சரிஸ்கா அதற்கு மேல் அங்கு நிற்க வில்லை. அவள் தனது அறையை நோக்கி ஓடினாள். அவள் பின்னே ஏலின் ஓடி வந்தாள்.

*

சரிஸ்கா கப்பலால் இறங்கும் போது பேய் அறைந்தவள் போல வந்தாள். "TS"சோடு ஒரு சொற்கூடக் கதைக்கவில்லை. கப்பல் பயணம் எப்படி இருந்தது என்று ஒரு முறை "TS" கேட்டுப் பார்த்தார். அவள் வாய் திறக்க வில்லை. அவரைப் பார்க்காது எங்கோ பார்த்த வண்ணம் நடந்து வந்தாள். முகத்தின் சிரிப்புத் தொலைந்து சோகம் இருளாய் வழிந்தது. அவள் மனதும், உடலும் சோர்ந்து போய் இருப்பது "TS"சிற்கு விளங்கியது. அதன் பின்பு "TS" வாய் திறக்கவில்லை. அவருக்கு அதற்கு மேல் நோண்டும் துணிவும் இருக்கவில்லை. அவளை எரிமலை ஆக்குவதில் அவருக்கு எந்த ஆர்வமும் இருப்பது இல்லை. வீட்டிற்கு வந்ததும் அவள் தனது அறைக்குச் சென்றாள். கதவைப் பூட்டிக் கொண்டு படுத்தாள். சமையல் அறையால் வெளியே வந்த புவனலோசினி "TS"சின் முகத்தைப் பார்த்தாள். அடுத்த கணம் அவள் முகம் இருண்டு போயிற்று. அவளுக்குச் சரிஸ்காவிடம் செல்ல வேண்டும் போல் ஒரு உந்தல். செல்ல முடியாது கதவு இடையில். சென்றாலும் கோபம் வந்த பாம்பாய் அவள் சீறுவாள் என்பதும் தெரியும். புவனலோசினியிடம் இருந்து பெருமூச்சு ஒன்று வந்தது. அவள் இருவருக்கும் தேநீர் தயாரிக்கச் சமையல் அறைக்குச் சென்றாள்.

ஒரு மணி போல் சரிஸ்கா வெளியே வந்தாள். "TS" சோபாவில் அமர்ந்து ஒரு புத்தகம் வாசித்துக் கொண்டு இருந்தார். புவனலோசினி சோபாவின் மறுபக்கத்தில் குடங்கிக் கொண்டு படுத்து இருந்தாள். மகள் வருவது தெரிந்ததும் துடித்துப் பதைத்து எழுந்தாள். அவளுக்கு ஏதாவது சாப்பாடு கொடுக்க வேண்டும் என்கின்ற

தாய்க்கான அவதி அவளிடம். சரிஸ்காவின் சோர்வும், கோபமும் மாறியதாய் அவளுக்குத் தெரியவில்லை. அதற்காக அவள் சாப்பிடாமல் இருக்க முடியாது என்பது புவனலோசினியின் எண்ணம். அவள் சரிஸ்காவைப் பார்த்து,

"சரிஸ்கா சாப்பிட வா." என்றாள்.

"எனக்குச் சாப்பாடு வேண்டாம். ரீ மாத்திரம் வைச்சுத் தாங்க..." என்றாள் சரிஸ்கா.

"சரி பிறகு சாப்பிடலாம். இப்ப முதல்ல ரீயக் குடி." என்று தானே அதற்குச் சமாதானம் கூறிவிட்டுச் சமையல் அறையை நோக்கி நடந்தாள்.

சரிஸ்கா வந்து சோபாவில் இருந்து தொலைக்காட்சியின் "Remote control"லை எடுத்தாள். அவள் மன நிலை ஒரு வழிப் படவில்லை. ஒவ்வொரு அலைவரிசையாகத் தொலைக்காட்சி நிகழ்ச்சியை மாற்றிக் கொண்டு இருந்தாள். மனது கப்பலில் ஒஸ்கார் கதைத்ததை, தொட்டதை எண்ணிக் கொதித்துக் கொண்டு இருந்தது. அதைச் சொல்ல வேண்டும் போல் இப்போது தோன்றினாலும் எப்படிச் சொல்வது என்று அவளுக்கு விளங்கவில்லை.

"TS"சால் அதற்கு மேல் புத்தகத்திற் கவனம் செலுத்த முடியவில்லை. புத்தகத்தை மூடிவிட்டு சரிஸ்காவைப் பார்க்கத் தொடங்கினார். அப்பா பார்ப்பது தெரிந்ததும் அலைவரிசை மாற்றுவதை சரிஸ்கா நிறுத்தினாள். பின்பு "TS"சைப் பார்த்து,

"என்னப்பா?" என்றாள்.

"நீதான் சொல்ல வேணும். சின்னச் சின்ன விஷயத்துக்கு எல்லாம் கொதிச்சுக் கொண்டு இருந்தா அமைதி கிடையாது. ஆனா... மனிச மனம் அப்பிடித்தான். பற்றையும் அதனால் கவலையையும் பற்றுவது அது. சில விஷயங்களைக் கண்டும் காணாமலும் நான் என்பதை இழந்ததாய் அது என்னைச் சாராதது என்று எண்ணப் பழக வேணும். கப்பல் பயணம் எண்டா அது முஸ்பாத்தியா இருக்கப் போகிற இடம் தானே? முஸ்பாத்தி பண்ண வேணும் எண்டு தானே அங்க சனம் வரும். உனக்கு ஒத்துக் கொள்ளாது எண்டு நினைச்சா போகாமல் விட்டு இருக்கலாம். போன இடத்தில பலதும்

நடக்கும். அதை அங்கேயே சம்பந்தம் இல்லாத நிகழ்ச்சி போல மறந்திடனும். அதுக்காக மனதைப் போட்டுக் குழப்பிக் கொள்ளுகிறதில பிரயோசனம் இல்லை. நடந்தது நடந்ததுதான். அதையே திரும்பிப் பார்க்கிறது உனக்கு உதவி செய்யாது. நடந்ததை நீ நல்லா ஞாபகம் வைச்சிருப்பாய். அதுவே உன்னுடைய பிரச்சனை. நடந்ததை எப்ப மறக்கப் பழகிறியோ அப்பவே உனக்கு அமைதி வரும். நான் சொல்லுகிறது சரி எண்டா எடுத்துக்கொள். இல்லாட்டி விட்டிடு." என்றார் "TS".

அவள் "TS"சைப் பார்க்கவில்லை. தொலைக்காட்சியில் கண்கள் பதித்து இருந்தாள். கவனம் எங்கோ அந்தரத்தில்... அண்டத்தில்... திடீரென,

"மிருகம் அப்பா. நான் மிருகத்திட்ட இருந்து தப்பி ஓடி வந்திட்டன். எங்கை ஆவது அமைதியான இடத்திற்குப் போக வேணும் அப்பா." என்றாள் சரிஸ்கா. "TS" சிறிது நேரம் என்ன கேட்டேன், என்ன சொல்வது என்பது தெரியாது உறைந்து போய் இருந்தார். மனதிற்குள் நடுக்கமாய் இருந்தது. மாறிவிட்டாள் என்று நினைக்கும் போது தலை கீழாய் மாறி வந்து நிற்கிறாள் என்று தோன்றியது. சில வந்து விட்டுப் போய்விடும். சில வந்தால் ஒட்டிக் கொண்டே இருந்து விடும். நோயா? பிணியா? இது ஒட்டிக் கொண்டே இருந்து விடுமோ என்பது அவரைக் கதி கலங்க வைத்தது. வருத்தம் தெரியாது மருந்து கொடுக்க முடியாது. அவர் என்ன நடந்தது என்பதை அறிய முயன்றார்.

"யார் மேல உனக்கு இந்தக் கோபம்? என்ன நடந்தது கப்பல் பயணத்தில?" என்றார் "TS".

சரிஸ்கா நடந்ததைச் சுருக்கமாகக் கூறினாள். "TS"சிற்கு அது விளங்கியது. விளங்கி என்ன? சரிஸ்காவைச் சமாதானம் செய்வது ஒன்றும் இலகுவான காரியம் இல்லை. ஏதாவது சொன்னாலும் என் வலி உங்களுக்கு விளங்காது அப்பா என்பாள். "TS"சிற்கும் அது தெரியும். அவரவர் வலியின் கொடுமை அவர் அவருக்கே தெரியும். அதை மற்றவர்கள் முழுமையாக உணர்ந்து கொள்ள முடியாது. அவளின் வலி உண்மை. அதை அவள் மறப்பதற்கு முயன்றாலும் அவளால் முடியவில்லை.

"சரி... நடந்ததைப் பற்றி யோசிக்கிறதை விட்டிட்டு இனி என்ன செய்யலாம் எண்டு யோசி சரிஸ்கா." என்றார் "TS".

"ம்" என்றாள் அவள். மேற்கொண்டு அவள் பதில் பேசவில்லை. இன்னும் சில நாட்களில் அவள் வழமைக்குத் திரும்பி விடுவாள். அப்போது அவளை மீண்டும் மருத்துவரிடம் கூட்டிச் செல்ல வேண்டும் என்று "TS" எண்ணினார்.

# 6 அழியாத் தடங்கள்

அன்று சனிக் கிழமை. சண்முகன் வீட்டிற்கு "TS" சென்றபோது எல்லோரும் சொல்லி வைத்தது போல வந்து இருந்தார்கள். அவர் அதை எதிர் பார்க்கவில்லை. வரவேண்டும் என்று நினைத்தாலும் வர முடியாத மாதிரி வேலைகளும், அலுவல்களும் வந்து விடுகின்றன. அதைவிடச் சண்முகன் எப்போதும் ஓய்வு அற்ற அலுவலாக இருப்பான். அதற்கு எல்லாம் இன்று ஓய்வு கொடுத்து அவன் எல்லோரையும் அழைத்து இருக்கிறான். அதிலும் சில வேளை கணக்குப் பார்த்து இருக்கலாம். ஒவ்வொருவராய் ஒவ்வொரு நாளும் அழைப்பதைவிட ஒரே நாளில் எல்லோரையும் அழைப்பது அவனுக்கு இலாபமாய் இருந்திருக்கும்.

சண்முகனின் மனைவி நோர்வேக்கு வந்ததிற்கு "TS" அங்கே போகவில்லை. இப்போது கடையில் வேலை செய்வதற்கு யாரோ ஒரு தமிழ் பொடியனைப் பிடித்து விட்டானாம். அதனால் பின்னேரங்களில் அவனால் வீட்டிற்கு வர முடியுமாம். இன்று பின்னேரம் தங்கள் வீட்டிற்கு வருமாறு அவனே கேட்டிருந்தான். "TS"சும், புவனலோசினியும் புறப்பட்டார்கள். சண்முகனுக்குக் கொடுப்பதற்கு அழகிய கண்ணாடிப் பொம்மை ஒன்றை நேற்று "TS" வாங்கி வந்தார். அது நோர்வேயில் ஒரு புகழ் பெற்ற சிலை. சிறு பையன் ஒருவன் சிறுநீர் கழிப்பதைப் போன்றது. அது ஒஸ்லோவில் உள்ள ஒரு பூங்காவில் இருக்கிறது. அதைப் போல இதை நீலம் கலந்து கண்ணாடியில் வடித்து இருந்தார்கள். "TS"சிற்குப் பார்த்த உடனேயே அதன் மேல் ஆசை வந்து விட்டது. வாங்கி வந்து அதற்கான முறையில் பொதி செய்து வைத்து இருந்தார். சண்முகனின் வீடு 'லூாத்வன்' என்கின்ற இடத்தில் இருந்தது. சரிஸ்காவை வருமாறு அவர்கள் கேட்கவில்லை. அவளுக்கு நிறையவே வாசிக்க வேண்டி இருக்கிறது என்பது இருவருக்கும் தெரியும்.

சண்முகன் தனி வீடு வாங்கி இருந்தான். வீட்டின் முன்பு அவன் வாங்கி வைத்து இருக்கும் "Van" நின்றது. பொருட்கள் ஏற்றி இறக்குவதற்கு வசதியாக அவன் "Van" வாங்கி இருந்தான். மற்றவர்கள் ஒருவரும் தனி வீட்டை வாங்காத காலம் அது. கட்டுக் காசு கட்ட முடியாமல் போய்விடுமோ என்கின்ற பயம் பலருக்கும். சண்முகனுக்குக் கடை வருமானத்தில் திருப்தி இருந்தது.

வங்கியிலும் யாரோ ஒரு சுதேசி பழக்கமாய் இருக்க வேண்டும். சண்முகனின் வரவு செலவு அவனுக்குத் தெரிந்து இருந்தது. கடன் கிடைப்பது அத்தால் பாரிய பிரச்சனையாக இருக்கவில்லை. தனி வீடு என்றால் சுதந்திரம் உண்டு. பனிக் காலத்தில் மட்டும் அழுது அழுது பனி வெட்ட வேண்டும். அது இல்லாவிட்டால் யாருக்கும் பயப்படாமல் எதையும் சமைக்கலாம். எப்படியான இசையையும் எவ்வளவு சத்தமாயும் எந்த நேரத்திலும் கேட்கலாம். எத்தினை விருந்தினர் வந்தாலும் எப்படியும் கூத்து அடிக்கலாம் என்கின்ற வசதிகள் அதற்கு உண்டு.

இன்று அதிகம் குளிர் இல்லை. பனி சில இடங்களில் கரையத் தொடங்கி விட்டது. பனி கரைந்தால் வழுக்கல் மனிதரை அல்லாட வைக்கும். அதைத் தடுப்பதற்காக சிறு குறுணிக் கற்கள் அல்லது உப்பு பாதைக்குத் தூவுவார்கள். சண்முகனும் பாதைக்கு உப்புத் தூவி இருக்கிறான்.

அந்த வீட்டிற்கு நீல நிறம் அடிக்கப்பட்டு இருந்தது. முன்னுக்குப் பிறை போன்ற வளவு. அதில் பச்சைக் குடைகள் போன்ற ஆப்பிள், பார போன்ற பழ மரங்கள் சீலையை இழந்த குடைக் கம்பிகளாய் நின்றன. வீட்டிற்கு அருகாக பூக்கன்றுகள் இலையையும், பூக்களையும் தியாகம் செய்து ஆதவனுக்காக ஆடை இன்றிக் கைகளைத் தூக்கித் தவம் செய்தன. வீட்டின் படிக்கட்டிற்குப் பச்சைப் புல் போன்ற பிளாஸ்ரிக் கம்பளம் போடப்பட்டு இருந்தது.

"TS" புவனலோசினியைப் பார்த்தார். அவள் கீழ் படிக்கட்டில் நின்றாள். திருப்தியோடு அவர் அழைப்பு மணியை அழுத்தினார். சண்முகன் எதிர் பார்த்து இருந்திருக்க வேண்டும். பட்டெனக் கதவு திறந்து கொண்டது.

"ஓ... "TS" அண்ணையே... வாங்கோ... வாங்கோ..." என்று சத்தமாக அழைத்தான். அவன் இப்போது சந்தோசமாய் இருப்பதாய் "TS" நினைத்தார். அதில் உண்மை இருப்பது அவருக்கு விளங்கியது. தனக்குத் தெரிந்தவர்களில் விரைவாகப் பொருளாதாரத்தில் முன்னுக்கு வருபவர்களில் சண்முகனும் ஒருத்தன். சிலருக்கு அது கடும் பிரயத்தனத்தை முதலாக்கி வாய்த்து விடுகிறது. உழைப்பின் மூலதனத்தால் தொட்டதும் பொன்னாய்

துலங்குகிறது. சிலர் வியாபாரம் என்று இறங்கி உள்ளதையும் விட்ட கதையும் உண்டு. அது முறையான திட்டம் இல்லாத செயற்பாடாய் இருக்க வேண்டும். ஊரைப் போல வெள்ளாளரின் சொத்தாக மட்டும் வியாபாரம் இங்கு சிறைப்பட்டுக் கொள்ள வில்லை. யாருக்குத் திறமை இருக்கிறதோ அவன் வியாபாரத்தில் முன்னுக்கு வருகிறான். அந்தச் சுதந்திரத்தை இந்த நாடு கொடுத்து இருந்தது. சொந்தமாகத் தொழில் தொடங்குபவன் வெற்றி அடைந்தால் பணக்காரன் ஆகிறான். அதன் தொடக்கமாக வியாபாரத்தில் தமிழர்கள் இறங்குகிறார்கள். சிலர் துப்பரவுப் பணி நிறுவனங்கள் தொடங்கி இருக்கிறார்கள்.

"அப்ப நான் வரத் தேவை இல்லையே?" என்றாள் புவனலோசினி சண்முகனைப் பார்த்து. அந்தக் கேள்வியோடு "TS"சின் சிந்தனைப் பறப்பின் சிறகு, ஒடிந்து விழுந்தது.

"நீங்கள் அப்பிடியான குடும்பமா என்ன? உங்களில ஒருத்தரை அழைச்சாலே அர்த்தநாதீஸ்வரரை அழைச்ச மாதிரி எல்லோ. அதைவிட எனக்கு உதாரணம் சொல்லத் தெரியேல்லை. நீங்கள் இப்பிடி என்னைக் கேட்டதுக்கு "TS" அண்ணை கோவிக்கப் போகிறார்." என்று அவன் திசையைத் திருப்பினான்.

"நான் கோவிக்க மாட்டன். அதுவும் புவனா சொல்லுகிறத்துக்குக் கோவிப்பன் எண்டு சண்முகா நீ ஆருடம் சொல்லக் கூடாது. புவனா பகிடி விடவும் சந்தர்ப்பம் கிடைக்கத்தானே வேணும். அது சரி இது என்ன இண்டைக்குப் பெரிய பார்ட்டி போல இருக்குது? ஊரே உன்ரை வீட்டில இருக்கிற மாதிரி இருக்குது?" "TS"சிற்கு உண்மையில் வியப்பாக இருந்தது. தங்களை மட்டும் அழைக்கவில்லை ஊரையே அழைத்தது விளங்கியது. அருள் குடும்பம், தாமோதரன் குடும்பம், சிவா, சொரூபன் என மேலும் பலர் அங்கே இருந்தார்கள்.

"அப்பிடி ஒண்டும் பெரிசா இல்லை… நீங்கள் முதல்ல உள்ள வாங்க... பனி கரைஞ்சாலும் ஊசிக் குளிர் இன்னும் விடுகுது இல்லை." என்றான் சண்முகன். அவனுக்குக் கதவை மூடும் அவசரம். தனி வீடு வைத்து இருப்பது என்றால் மின்சாரத்தைப் பற்றிய கவலை எப்போதும் இருக்கும். அவனுக்கும் அந்தக் கவலை

இருந்தது. எவ்வளவு வருமானம் வந்தாலும் ஆற்றில் அள்ளிக் கொட்ட யாருக்கு விருப்பம் வரும்? வெப்பம் அனாவசியமாக வெளியே சென்றால் மீண்டும் அதே அளவு வெப்ப நிலையை அடைவதற்குக் குறிப்பிட்ட அளவு மின்சாரம் வெப்பமாக மாற வேண்டும். மின்சாரம் பணத்தைப் பாவனை செய்பவனிடம் தின்று, உற்பத்தி செய்பவனிடம் அள்ளிக் கொட்டும் மனிதக் கண்டுபிடிப்புகளில் ஒன்று. எண்ணெய்யும், மின்சாரமும் இந்த நாட்டில் விளைந்தாலும் பாவனை செய்பவர்களைப் பால் மாடாக நினைப்பதற்கு இங்குள்ள அரசின் வியாபார மயமாக்கப்பட்ட நிறுவனங்கள் மறப்பதில்லை. அதற்கு அமைய அவற்றை அரசு பங்குதாரராக இருக்கும் தனியார் நிறுவனங்கள் போலச் செயற்பட வைத்து இருக்கிறது. அது எப்படிச் செயற்பட்டாலும் பாவனை செய்பவர்களைக் கறவை மாடு போலப் பார்ப்பதில் அவர்களுக்கு எந்த மாற்றுக் கருத்தும் இருப்பது இல்லை.

வீடு மிகவும் நவீனமாக இருந்தது. சில வருடங்களுக்கு முன்பு உள் வேலை மீண்டும் செய்து இருக்கிறார்கள். மர நிறத்தில் தங்கமாக மினு மினுக்கும் உள் கதவுகள். அதே மினுக்கத்தில் கீழ் அரைச் சுவர் மரத்தில். கூரைக்கு வெள்ளை நிறமும், மேல் அரைச் சுவருக்கு மெல்லிய நீல நிறமும் அடித்து இருந்தார்கள். வீட்டிற்குக் கீழ் தளம், மேல் தளம், இடைத் தளம் என்று மூன்று தளங்கள் இருந்தன. மேலே பொதுவாகப் படுக்கை அறைகள் இருப்பது வழமை. நில மட்டத்தில் உள்ள இடைத் தளத்தில் பெரிய கோல், சமையல் அறை, ஒரு குளியல் அறை, பொருட்கள் வைப்பதற்கான சிறிய அறை ஒன்று ஆகியவை இருந்தன. மெல்லிய நீலத் தோலில் செய்யப்பட்ட வளைந்த சோபா. அதற்கு முன் கண்ணாடி மேசை. மரத்தில் கண்ணாடியை அணிந்து தன்னை நிர்வாணம் ஆக்கிக் கொண்ட அலுமாரி. அதற்குள் வயிரங்களாய் ஜொலித்த கண்ணாடிக் காட்சிப் பொருட்கள். "Bang-olufsen" என்கின்ற தரமான தொலைக்காட்சிப் பெட்டி, "Pioneer Sets", குளிரில் வாழ முடியாத இயற்கையை உள்ளே வாழ வைப்பது போன்ற சில பூக்கன்றுகள்.

வடக்கில் இருந்து வந்த சண்முகன் இப்போது ஒரு முதலாளி. அதன் வளம் அவன் வீட்டில் நன்கு ஜொலித்தது. "TS"சிற்கு மூலம் பார்க்கக் கூடாது அவன் முன்னேற்றத்தை மட்டுமே பார்க்க வேண்டும் என்று

தோன்றியது. நாடு என்று வரும்போது அழுது அழுது என்றாலும் அவன் மற்றவர்களைக் காட்டிலும் அதிகமாகவே கொடுப்பான். அதனால் அவன் மேல் "TS"சிற்கு ஒரு மரியாதை உண்டு. இருந்தும் கொடுத்து விட்டு இவ்வளவு கொடுத்து விட்டேன் என்று பத்து நடை புலம்புவதும் அவன் இயல்பு. மீண்டும் "TS"சின் நினைவுப் புலம்பேரல் சண்முகனால் நிறுத்தப்பட்டது.

"சக்தி இன்னும் இரண்டு ரீ சூடாக் கொண்டு வாரும்." என்று சண்முகன் சமையல் அறையை நோக்கிக் கத்தினான். "ஓமப்பா... கொண்டு வாறன்." என்று உள்ளே இருந்து குரல் வந்தது. அவளை இன்னும் "TS" காணவில்லை. அதற்கான சந்தர்ப்பம் வாய்க்க வில்லை. பின்பு சண்முகன் ஊரில் இருந்து கொண்டு வந்த மிக்சர், முறுக்கு இருந்த தட்டை எடுத்து இருவருக்கும் அருகாக வைத்தான்.

"இண்டைக்கு உச்சி மாநாடு நடத்தி முடிச்ச பிறகு ஆறுதலாக சண்முகன் வீட்டை விட்டு வெளியால போகிறது. இரவுச் சாப்பாட்டையும் றெடி பண்ணச் சொல்லு சண்முகா." என்றான் சிவா.

"அது பிரச்சனை இல்லை சிவா. நீ சொன்னாலும் சொல்லாட்டியும் இரவுச் சாப்பாடு முடிச்ச பிறகு ஆறுதலாகத்தான் நீங்கள் வெளிக்கிடலாம். அது நான் ஏற்கனவே ஒரு ஆளிட்டை இடியப்பத்திற்கு ஓடர் குடுத்திட்டன். சக்தி மேலதிகமான கறியளை மாத்திரம் வைப்பா. சம்பலும் சொதியும் இடியப்பத்தோடை வரும்." என்றான் சண்முகன்.

"அது சரி சாப்பாடு அரைவாசி விருந்தல்லோ? என்ன சொல்லுகிறியள் தாமோதரன் அண்ணை?" என்றான் சிவா.

"சண்முகனுக்கு உதெல்லாம் தெரியாதே? அவனுக்கே அது இல்லாமல் இருக்க ஏலாது…" என்றார் தாமோதரன்.

"சூ..." என்றான் சண்முகன். சக்திக்குத் தான் குடிப்பதை ஒளிக்கிறானாம்.

"என்னது?" என்கின்ற கேள்வியோடும் கையில் தேநீரோடும் சிவசக்தி கோலுக்குள் வந்தாள். சிவசக்தி சண்முகனுக்கு ஏற்ற தோதான கறுத்தத் தங்கம். அதைவிட மயிலிறகாய் மின்னிய கருமையான சுருண்ட கேசம். துடி துடிப்பான

மீன் போன்ற கண்கள். அளவான, இறுக்கமான உடம்பு. கறுப்பு என்றாலும் மீண்டும், மீண்டும் பார்க்க வைக்கும் ஒரு கவர்ச்சி. நாதம் பேசும் மென்மையான குரல். சிரித்த முகம். சண்முகனுக்கு இதைவிட என்ன வேண்டும் என்று "TS"சிற்குத் தோன்றியது.

"ஒண்டும் இல்லை... நீ ரீயக் குடு." என்றான் சண்முகன்.

"எனக்கு ஒண்டுமே தெரியாது எண்டு நினைக்க வேண்டாம் அப்பா. பருவாய் இல்லை. இத்தினை அண்ணாமார் இருக்கிறதால இண்டைக்கு மாத்திரம் அதுக்கு அனுமதி இருக்குது." என்றாள் சிவசக்தி.

"இது புத்திசாலித்தனம் தங்கச்சி. இல்லாட்டிப் பழைய சாப்பாட்டை நீங்கள் நாளைக்கு வைச்சுச் சாப்பிட வேண்டி வந்து இருக்கும்." என்றான் அருள்.

"ஓ அப்பிடியும் ஒரு சங்கதி இருக்கே அண்ணை?" என்றாள் சிவசக்தி.

"சிவா அது என்ன உச்சி மாநாடு எண்டு குழப்பி வைச்சு இருக்கிறாய்? என்ன விஷயம் அது?" என்றான் அருள்.

"அருள் நீ கேள்விப்படாமலே இருப்பாய்? ஏன் அதைப் பற்றி எல்லாம் நீயாக் கதைக்க வேணும் எண்டு யோசிக்கிறாய் போல?" என்றான் சிவா.

"என்ன விஷயம் எண்டே தெரியாது. அப்ப எப்பிடிக் கதைக்கிறதோ அல்லது விடுகிறதோ எண்டு முடிவு எடுக்கிறது? சிவாவுக்கு உந்த சஸ்பென்ஸ் வைச்சு விளையாடுகிறதே வேலையாப் போச்சுது. சரி நான் பொறுமையா இருக்கிறன். நீ எப்பிடியோ அதை அவிட்டு விடுவாய். அப்ப அறிஞ்சு கொள்ளுகிறன்." என்று அருள் அலுத்துக் கொண்டான்.

"எல்லாரும் ஆர்வமாகத்தான் இருக்கிறீங்கள். ஆனா... இது நெருப்புப் போன்ற விஷயம். இதைக் கதைக்கலாமா இல்லையா எண்டுகிறது எனக்கு முழுமையா விளங்கேல்லை. எண்டாலும் நாங்கள் எதையும் கதைக்கக்கூடிய நண்பர்கள் எண்டு நினைக்கிறன். அதால இதைப் பற்றிக் கதைக்கிறதை யாரும் தங்கடை உணர்வைத் தாக்குகிற மாதிரி எடுத்துக் கொள்ள மாட்டியள் எண்டு நினைக்கிறன். இதை நாங்கள் ஒரு

நல்ல விவாதமாய் மட்டும் எடுத்துக் கொள்ள வேணும்?" என்றான் சிவா.

"சிவா... உன்னுடைய உந்தச் சுத்தி வளைப்பைப் பார்த்தா அணு குண்டை மடியில கட்டி வந்து தலையில போடப் போகிற மாதிரியே பயமா இருக்குது. இது ஏதோ எல்லாரையும் திக்குமுக்காட வைக்கிற விஷயம் போல தெரியுது. அப்படி ஒரு விஷயம் இங்கை ஒஸ்லோவில இப்ப உலாவுது போல. எப்பிடியோ எங்கடை தமிழ் சமுதாயமும் கொஞ்சம் கொஞ்சமா முன்னேறத்தானே வேணும்? நெடுகக் குண்டு சட்டிக்குள்ள குதிரை ஓட்டிக் கொண்டு இருக்க ஏலுமோ? ஐரோப்பா வந்திட்டம், இனியும் நாங்கள் கிணத்துத் தவளைகளா இருக்க ஏலாது தானே? நாட்டுக்கு ஏற்ப நாங்களும் கொஞ்சம் மாறினால் நல்லாவே இருக்கும்." என்றான் சண்முகன்.

"நாட்டுக்கு ஏற்ப நாங்கள் மாற இயலாது. எங்கடை கலாச்சாரம் எண்டுகிறமே அதை விட்டுக் குடுப்பமா? சொல்லுங்க... நோஸ்குகள் இருக்கிற மாதிரி பிறியா எங்களால இருக்க ஏலுமா? சொல்லுங்க சண்முகன் அண்ணை... உங்களால இருக்க ஏலுமா? நாட்டுக்கு ஏத்த மாதிரி நாங்களும் மாற வேணும் எண்டு சொல்லுகிறது சரிவராது." என்றான் சொரூபன்.

"சரியடா சொரூபன். அது எல்லாத்துக்கும் சரி வராதுதான். ஒரு சிலதுகளுக்குச் சரி வரும் தானே? அதிலை ஆவது திருந்த வேணும்." என்றான் சண்முகன்.

"அப்பிடிச் சொல்லுங்க... அதோடை அது எதில திருந்தலாம் எண்டும் கொஞ்சம் சொல்லுங்க?" என்று தொடர்ந்தான் சொரூபன்.

"நீ என்னை விடமாட்டாய் போல இருக்குது. அதைத் தான் சிவாவும் கதைக்கிறதுக்கு றை பண்ணுகிறான் எண்டு நினைக்கிறன். சில விஷயங்களைக் கதைக்கிறது எண்டால் கத்தியில நடக்கிற மாதிரி." என்றான் சண்முகன்.

"சோக்காகத்தான் கொண்டு வந்து நீ என்னில சாட்டி விட்டிட்டாய். சண்முகன் பிழைக்கத் தெரிஞ்ச வியாபாரி நீ." என்றான் சிவா.

"உந்த ஆலவட்டம் எதுக்குங்கோ? விஷயத்தைச் சொல்ல வேண்டியது தானே? இந்த நாட்டில இருந்து கொண்டு

யாரும் கருத்தைச் சொல்லப் பயப்படுவினமே?" என்று தாமோதரன் உள்ளது புரியாது உசார் கொடுத்தார்.

"எங்க இருந்தாலும் எங்கடை தொண்டையை நோக்கிப் பாசக் கயிறு மாதிரித் தடைகள், கட்டுப்பாடுகள், பயமுறுத்தல்கள் வீசப்பட்டுக் கொண்டுதான் இருக்குது. இந்தப் பாசக் கயிறு தேவை உள்ள வரையும் உயிரோடை வைச்சிருக்கும். தங்களுக்கு எதிர் எண்டா உயிரையும் எடுக்கும். நாய்க்கு நடுக் கடலிலையும் நக்குத் தண்ணி தான். நாங்கள் எங்க போனாலும் வாய் பூட்டுதான்." என்றான் சொரூபன்.

"சொரூபன் நீங்கள் அநியாயத்துக்குப் பதில் சொல்லுகிற மாதிரி இருக்குது. நடந்ததை எல்லாம் மறந்திட்டு நாங்கள் ஒற்றுமையா இருக்க வேணும்." என்றார் தாமோதரன்.

"ஒற்றுமையா இருக்கிறது பற்றிக் கதைச்சா இண்டைக்கு நாங்கள் கதைக்க நினைச்சதைப் பற்றிக் கதைக்க ஏலாது. அதை இன்னொரு நாளைக்கு ஆறுதலாக் கதைப்பம். அது இப்போதைக்கு முடியிற சங்கதியும் இல்லைத் தானே?" என்றான் சிவா.

"கதைப்பம்... கதைப்பம்... எண்டு சிவா சொல்லிக் கொண்டு இருக்கிறாய். விஷயத்தை முதல் சொல்லும். அப்பதான் நாங்கள் கதைக்கலாம்." என்றார் "TS". சிவா பதுங்குவதை முழுமையாக அறியாதவராய்.

"சரி சொல்லுகிறன் "TS" அண்ணை. இதில பலருக்கு இந்த விஷயம் தெரிஞ்சு இருக்கும். ஒஸ்லோவிலதான் அது நடந்தது. அந்தப் பெட்டை படிக்க வேணும் எண்டு நோர்வேக்கு வந்ததாம். நல்ல நிறமான, வடிவான பெட்டை. சில நேரம் குருன்லாண்டிற்க நான் அவளைப் பார்த்து இருக்கிறன். சில வேளை தமையனோடை படம் பார்க்கவும் வாறவள். அவவுக்கும் தனபாலன் எண்டுகிற கோவியப் பெடியனுக்கும் எப்பிடியோ காதல் வந்திருக்குது." என்றான் சிவா.

"எனக்குத் தனபாலனைத் தெரியும். எங்கடை தூரத்திச் சொந்தம்தான். ஆனா... பெரிசாக் கதைக்கிறது இல்லை. அவன்ரை தமைக்கை ஒரு நளப் பெடியனோடை ஓடின பிறகு அவையின்ரை வீட்டை நாங்கள் போகக் கூடாது எண்டு வீட்டில சட்டம். அப்பிடியே அவையின்ரை தொடர்புகள் இல்லாமல் போச்சுது. அவையும் பிறகு

அளவெட்டிப் பக்கமாய் போயிட்டினம். ஒருக்கா இங்க தெருவில கண்டு சிரிச்சவன். அதோடை சரி." என்றான் சண்முகன். தான் தேவை இல்லாது அலட்டுவதாக அவனுக்குப் பின்பு தோன்றியது.

"பிறகு சொல்லு சிவா?" என்றார் "TS".

"அவளைத் தமயன்தான் இங்க கூப்பிட்டதாம். அவையள் பத்துச் சகோதரங்களாம். செல்வாக்கான உங்கடை ஆட்கள் எண்டு கேள்வி. அவங்கள் உதுக்கு ஓம் எண்டு சம்மதிப்பாங்களே? அவங்கள் ஆள் செற் பண்ணி தனபாலனுக்கு நல்ல அடி போட்டுத் தண்டவாளத்தில கொண்டு போய் போட்டு இருக்கிறாங்கள். நல்ல காலம் யாரோ நொஸ்குகள் கண்டு தகவல் குடுத்ததால ஆள் தப்பிச்சிட்டான். இப்ப அது பெரும் பொலிஸ் கேசாகீட்டுது. கொலை முயற்சி எண்டு வழக்குப் பதிவு செய்து இருக்கிறாங்கள். அதுக்கு இடையில அவளின்ரை மற்றைய தமயன் கனடாவில இருந்து வந்து ஏதோ அவளோடை கதைச்சு அவளை அங்க கூட்டிக்கொண்டு போயிட்டான். அவை நல்ல வசதியான ஆட்கள். ஏற்கனவே எல்லாரும் வெளிநாடுகளில இருக்கிறாங்கள். கோவியனுக்குக் கட்டிக் குடுக்கிறதே எண்டு சரியான கேந்தி அவங்களுக்கு." என்றான் சிவா.

"உண்மை சிவா... இந்தச் சாதிக் கொடுமை எப்பவும் தீராது. எங்க போனாலும் தொடருது. அதுவும் அவனின்ரை தமைக்க நளவனோடை ஓடினவள் எண்டதை அறிஞ்சிருந்தா கொலை தான் செய்திருப்பாங்கள் போல இருக்குது. அவர் வேற பெடியளிட்டை நான் வெள்ளாளன் வீட்டில பெண் எடுத்து இருக்கிறன் எண்டு பெருமையாச் சொல்லித் திரிஞ்சவராம். அவங்கள் தங்கடை கௌரவத்தை காப்பாத்த தன்னைக் கொலையும் செய்வாங்கள் எண்ட புத்தி உந்த நாசம் அறுவானுக்கு இல்லாமல் போச்சுது. இங்க வந்தும் உதுகளை விட்டுக் குடுக்கக் கூடாது எண்டுகிற மனிசரை என்ன செய்ய முடியும். இதுதான் எங்கடை முதல் சாபம்." என்றான் சண்முகன்.

""TS" அண்ணை, அருள், சொரூபன் எல்லாம் வெள்ளாளர் எண்டு எனக்குத் தெரியுமுங்கோ. அப்பிடி இருந்தும் நீங்கள் வித்தியாசம் காட்டாமல் சகோதரங்கள் போல எங்களோடை பழகுகிறியள். ஆனால் கலியாணம் எண்டு

வரேக்கையும் அப்பிடித்தான் இருப்பியளோ எண்டு எனக்குத் தெரியாதுங்கோ. எப்பிடி எண்டாலும் இது அநியாயம் இல்லையே? காதலிக்கிறது பாவமே? ஏன் இப்பிடி அதுகளை, அதுவும் இங்க பிரிக்க வேணுமுங்கோ? எனக்கு அது விளங்க இல்லை. நாங்கள் கரையார் தான். அதுக்காக இறங்கிப் போய் மற்றச் சாதிகளுக்கை எல்லாம் கலியாணம் செய்கிறதும் இல்லை. பள்ளன் ஒருத்தன் எங்கடை பெம்பிளையைத் தொட்டதுக்காக அவனை வெட்டிக் கொண்டவங்கள். ஏன் எங்களுக்கு உள்ளையே வணிகக் கரையார், செம்படைக் கரையார் எண்டு பிரிவுகள் இருக்குது. ஊரில சிவா வீட்டுக்காரர் எங்களோடை எல்லாம் சம்பந்தம் வைக்க விரும்ப மாட்டினம். வெள்ளாளற்றை குடிமை முறைக்க வாறவை தானே கோவியர்? அவர் ஒருத்தர் அவளைத் தொட அவங்கள் விடமாட்டாங்கள் தானே? என்னதான் போராட்டம் நடக்கலாம். தலைவராக்கூட இருக்கலாம்... கலியாணம் எண்டு வந்தா அடி தொடக்கம் நுனிவரை விசாரணை நடக்கும் தானேங்கோ. அது ஒரு வகையில தவிர்க்க முடியாத தனிப்பட்ட விசயம் மாதிரி. காதலிச்சு ஓடினா குடும்பத்தை விட்டுத் தள்ளி வைக்கிறது எல்லா இடத்திலையும் நடக்கிறது தான்." என்றார் தாமோதரன். இவர் எந்தப் பக்கம் கதைக்கிறார் என்பது சண்முகனுக்கு விளங்கவில்லை.

"ஒரு காலத்தில நாங்கள் அப்பிடிக் குடிமைச் சாதியாய் இருந்து இருக்கலாம். இப்ப எங்களுக்கு உள்ளேயும் நிறைய அரசாங்க உத்தியோகஸ்தர்கள், வியாபாரிகள் எண்டு இருக்கினம். சில கொந்தோரில எங்கடை சாதிக்காரரிட்டை வெள்ளாளரும் வந்து கை கட்டி நிக்க வேண்டி இருக்குது. அதைவிட இந்த யுகத்திலும் மாறாமல் பழைய ஊத்தையளைத் தூக்கிப் பிடிக்கிறது அவமானமா... வெட்கக்கேடா... இல்லையா?" என்றான் சண்முகன்.

"சண்முகா நீ திசையைத் திருப்புகிறாய்." என்றான் சிவா.

"எப்பிடி?" என்று சண்முகன் விளங்காது கேட்டான்.

"நான் பெரிசு, நீ பெரிசு எண்டு கதைக்க வெளிக்கிட்டா சாதிப் பிரச்சனை தீராது. அப்பிடிக் கதைச்சா சாதிப் பிரச்சனை இன்னும் கூடிக் கொண்டு போகும். பஞ்சமர்கள், குடிமைச் சாதிகள் இன்றும் ஒரு வகையில் வெள்ளாளரால் அடக்கப்படுவது உண்மை. அது எப்போதும் பேசப்படும்

பொருள். நாங்கள் பேசாப் பொருள் எது எண்டா குடிமைச் சாதியினரும், பஞ்சமரும் தாங்களைத் தாங்களே அடக்க நினைக்கிறது தான். இரண்டு விதமான அடக்கு முறையும் இல்லாமல் சாதி எண்டுகிறது சமுதாயத்தில இருந்து அழிஞ்சிட்டா நல்லாகத்தான் இருக்கும். ஆனால்... அது லேசில நடக்காது. இந்தப் பிளவுகளைப் பாதுகாத்து வைச்சு இருக்கிறதில மனிதற்றை சுயநலம் தூக்கலா ஒளிஞ்சு இருக்குது. அதைவிடப் பலர் அது தங்களுக்கான கௌரவமான அடையாளம் எண்டு நினைக்கினம். மனிதனால் முற்றுமாய் சுயநலத்தை விட்டுப் பொதுவாக சிந்திக்க முடியாது. ஆயுதத்தாலையும் இதை அழிக்கவும் முடியாது. இப்ப அடக்கி வைச்சு இருக்கிறது யுத்தம் முடிஞ்சதும் புத்துக்கிளால கிளம்பி வரும் ஈசலைப் போல வெளிய வரும். எப்பவும் நாங்கள் சாதி ஒளிப்பு எண்டா எங்களைவிட உயர் சாதியில கலியாணம் செய்கிறதைப் பற்றி மட்டுமே கனவு காணுகிறம். அது இந்தப் பிரச்சனைக்கு ஒரு மட்டமான தீர்வு. அது தான் அதுக்கு முடிவு எண்டு நினைக்கிறம். அது லேசா நடக்கிற காரியம் இல்லை. நடந்தாலும் குடும்பத்தில இருந்து தள்ளிவைச்சு அவமானம் செய்கிறது மட்டும் தான் நடக்கும். அவை பிறகு உயர் சாதி ஆகேலாது. அவையும் தாழ் சாதி ஆகவே வாழ வேண்டிய அவலம். அந்தக் குறுக்கு வழி அடிப்படைப் பிரச்சனையை ஒருக்காலும் மாற்றாது. எங்களைவிடக் கீழான சாதியில் கலியாணம் செய்து தானும் அந்தக் கீழ் நிலையில் உள்ள சாதிக்குப் போகிறதுக்கு எத்தினைபேர் தயாராக இருக்கினம்? அதுவும் நடக்காத காரியம். குடிமைகள் எண்டுகிற நாங்களே அதுக்குள்ள சாதி பார்க்கிறம். அப்ப பெரும்பான்மையா அரசியல் பலத்தோடை இருக்கிறவன் இறங்கி வருவான் எண்டு எதிர்பார்க்க முடியமோ? அதுக்கு அவனுக்கு அவசியம் இருக்குதோ? ஒடுக்கப்படுகிற சாதியினர் தங்களுக்கு உள்ள முதல்ல போராட வேணும். தங்களுக்கு உள்ள அந்தப் பிரச்சனை முடிஞ்ச பிறகு வெள்ளாம் சாதியப் பார்த்து நீதி கேட்க வேணும். அப்பிடி ஒரு நிலை எப்பவும் வராது. பிறகு அவன் அவன் அரசியல் நடத்துகிறதுக்கு இல்லாட்டி விளம்பரம் தேடுகிறத்துக்கு மட்டுமே சாதி ஒழிப்பு எண்டுகிறதை எடுத்துக் கொள்ளுகினமெண்டு நான் நினைக்கிறன். அதைத் தவிர உண்மையான உள்ள சுத்தியோடை இல்லை எண்டு சொல்லலாம். இங்கை பழகுகிறம் சரி. கலியாணம் எண்டேக்கே நளப் பெடியன் என்ரை பெட்டையைக் கூட்டிக் கொண்டு போகட்டும் எண்டு நான்

விடப் போகிறது இல்லை. ஏன் நானே மீன் பிடிக்கிற கரையார வீட்டில பெண் எடுப்பனே? அது என்னுடைய முதல் தெரிவும் இல்லை. ஊரில கலியாணம் பேசச் சொன்னால் அவை அங்க போய் கலியாணம் பேசப் போகிறதும் இல்லை. அதுக்காக நான் சாதி இப்பிடியே இருக்க வேணும் எண்டு சொல்லுகிறதா நீங்கள் அர்த்தப் படுத்தக் கூடாது. முதல் உந்தக் குடிமைச் சாதியள் தங்களுக்கு உள்ள கலக்க வேணும். அது நடந்தா மற்றக் கட்டத்தைப் பற்றிப் பேசலாம். அதை விட்டிட்டு வாய் கிழியத் தலித் போராட்டம் எண்டுகிறது சந்திரனைப் பார்த்து நாய் குலைக்கிறது மாதிரி. அதுவும் வெளிநாட்டில இருந்து குரைக்கிற நாயால உள்நாட்டில என்ன இலாபம் சொல்லுங்கோ?" என்றான் சிவா.

"இங்க நாங்கள் சாதி பார்க்கிறமா? எங்கடை இயக்கங்கள் இருந்து இருந்தால் சாதி எண்ட ஒரு சாமானே இருந்து இருக்காது. ஒரு மேல் சாதிக்காரன் சாதி வேண்டாம் எண்டு அதே சாதிக்காரனிட்டைச் சொல்லுகிறதுக்கும் ஒரு கீழ் சாதிக்காரன் அதைப் போய் மேல் சாதிக்காரனிட்டைச் சொல்லுகிறதுக்கும் நிறைய வித்தியாசம் இருக்குது. முன்னவன் சொல்லுகிறதுக்கு கோவம் வரும். நீயே காட்டிக் குடுக்கிறியா எண்ட மாதிரி இருக்கும். பின்னவன் சொல்லுகிறதுக்குச் சிரிப்பு வரும். இவர் இதைச் சொல்ல வந்திட்டாரோ எண்ட எக்காளம் பிறக்கும். கோபம் மாற்றத்தைக் கொண்டு வரும். சிரிப்பு என்னத்தைக் கொண்டு வரும் எண்டு எனக்குத் தெரிய இல்லை. நல்ல சந்தர்ப்பங்கள் எல்லாம் எங்களை விட்டுப் போயிட்டுது. இனி அது தானா மனிதப் புரிந்துணர்வால் கொஞ்சம் கொஞ்சமாய் அழிஞ்சாத்தான் உண்டு." என்று சொரூபன் ஒரு புது விளக்கம் கொடுத்தான்.

"சனங்களை ஒரு வகையில பிரதிபலிச்சது தானே இயக்கங்கள்? சனங்களுக்க எப்பிடி அந்தப் பிரச்சனை இருந்துதோ அப்பிடித்தான் இயக்கத்துக்கு உள்ளேயும் இருந்தது. என்ன சில கொள்கைகளுக்காக அதை வெளிக் காட்ட இல்லை. சாதி எண்டுகிறது மரபணுவோடை பிணைஞ்ச மாதிரிப் பெரிய சிக்கலான விஷயம் ஒண்டு. பலருக்குச் சாதிய விட்டு மற்ற சாதிக்கு உள்ள காதல் வந்தால் கலக்க விருப்பம் தான். கலந்தால்... தான் தன்ரை குடும்பத்தை விட்டு, தங்கடை சொந்தச் சாதியிலேயே இருந்து, தள்ளி வைப்பினமோ எண்டுகிற பயத்தில, அதை யாரும் நினைச்சுப் பார்க்கிறதே இல்லை.

அதாவது... சாதிய வலுவா வைச்சு இருக்கிறதுக்குக் காரணம் சமுதாயப் பயம். நான் நினைச்சாக்கூட என்னால அந்த எல்லையைத் தாண்ட முடியாது எண்டுகிற கழுத்தை இறுக்கின பயம் பாசக்கயிறு மாதிரி. தாண்டினால் சொந்தச் சமுதாயத்தாலேயே தண்டனை கடுமையாகத் தரப்படும். அது என்னுடைய குடும்பத்தை மட்டும் அல்ல வருங்காலச் சந்ததியையும் பாதிக்கும் என்கின்ற பயம். அது தெரிஞ்ச பிறகு யாரால அதைத் துணிவா மீற முடியும்? அதுக்கு ஒரு விஷமமான தயிரியம் இருக்க வேணும். தொடரான துன்பங்களைச் சமாளிக்கத் தயாரா இருக்க வேணும். நாங்கள் முழுமையான அறிவு இல்லாமல் அரைகுறை ஞானத்தோடை இருந்தா நாங்கள் நம்புகிற மதமும் நிச்சயம் சாதியை வளர்க்க உதவி செய்யும். வறுமைக்காக மதம் மாறினவனே பிறகு சாதி வேறுபாட்டை அந்த மதத்தில கடைப்பிடிக்கிறதைப் பார்க்க முடியும். இதைவிடப் பொருளாதாரம் முன்னேறினால் சாதி வித்தியாசம் குறைஞ்சிடும் எண்டு சொல்லிச்சினம். அப்பிடி எண்டா ஏன் சிங்கப்பூர்த் தமிழர் இன்னும் சாதி பார்க்கினம்? சிங்கப்பூர்த் தமிழருக்கும் இலங்கைத் தமிழருக்கும் சாதி பார்க்கிறதிலை ஏதாவது வித்தியாசம் இருக்குதா? இல்லை... அப்ப... பொருளாதாரமும் இதை அழிக்காது. கண்டம் விட்டுக் கண்டம் ஏவுகணை போலப் பாய்ஞ்சாலும் இது அழியாது. அப்பிடி எண்டாக் கொமினிசம், சோசலிசம்? ஒண்டும் உதவாது. இரசியாவில இப்ப புதைஞ்சு கிடந்துது எல்லாம் எழும்பி நிக்குது. ஆயுதத்தால கொஞ்சக் காலத்திற்குப் புதைக்கலாம். அடக்கலாம். ஆனா... நிரந்தரமா அழிக்கேலாது. அதையேதான் நாங்கள் எல்லா இடத்திலும் திரும்பத் திரும்ப பார்க்கிறம். இப்ப லண்டனைப் போல நிறையத் தமிழ் ஆட்கள் வாழ்கிற இடங்களில முன் வீட்டில யார் இருக்கினம் எண்டதை அறிஞ்சு, பிறகு அவை என்ன சாதி எண்டது அறிஞ்சு, அதுக்குப் பிறகே அந்த வீட்டை போகிறதா இல்லையா எண்டுகிறதே முடிவாகும். அவைக்கு அவையின்ரை சாதிக்காரரே நிறைய எங்கும் இருக்கும் இன்றைய நாள். அதை விட்டு ஒரு தாழ்ந்த சாதிக்காரனிட்டை போய், அதால... தங்களையும் மற்றவர்கள் ஒரு மாதிரிப் பார்க்கிறதை யாராலும் தாங்கிக் கொள்ள இயலாது. அந்த சமுதாயப் பயம் ஐரோப்பா வரையும் வந்திருக்குது. அப்பிடியே கொஞ்சம்கூட மாறாமல் வந்திருக்குது. கனடாவிலும், பிரான்சிலும் இதுதான் கதை. இலக்கியக் கூட்டத்திற்கும், இயக்கக் கூட்டத்திற்கும் சாதி பார்க்காமல் வரலாம்.

அதுவும் அந்தக் கூட்டம் நடக்கும் வரைக்கும் உண்டு உறவாடி அது ஒரு மாயை மாதிரி. அதுக்குப் பிறகு உந்த நளப்பிள்ளை எனக்கு என்ன சொல்லுகிறது எண்டு நினைச்சுக் கொண்டு போகலாம். அனேகமாக அப்பிடித்தான் நடக்கும் எண்டது எல்லாற்றை மனச் சாட்சிக்கும் தெரியும். இயக்கம் இருக்கும் வரைக்கும் இந்த ஒற்றுமை ஆவது கொஞ்சம் இருக்கும். இயக்கம் ஏதாவது செய்து இந்தப் பிரச்சனையை மாற்ற முயல வேணும். அது அடக்கு முறையைப் பாவிக்காமல் நடக்க வேணும். அந்த அளவு மனமாற்றத்தை உண்டு பண்ண வேணும். இயக்கத்தால மனிசற்ற மனங்களுக்கு உள்ள புகுந்து பார்க்க ஏலாது. ஆயுதத்தாலும் இதை அழிக்க ஏலாது. நான் விரும்பினாலும் எங்கடை சனத்தால என்ரை பிள்ளை, என்ரை பேரப்பிள்ளை புறக்கணிக்கப்படுவினம் எண்டுகிற பயம் என்னை விடாது. சாதியை மீற வேணும் எண்டு நினைக்கிற ஒவ்வொருத்தரையும் இந்தப் பயம் மீற விடாது காலைப் பிடிக்கும்." என்றார் "TS". அவருக்கு நிறையக் கதைக்க வேண்டும் போல் இருந்தது. கதைக்க நினைத்தவை ஒழுங்காக, தொடராக வராதது போல அந்தரமாய் இருந்தது. சாதி என்பது அவரைப் பொறுத்தவரை தேவை இல்லாத, இந்தக் காலத்திற்குப் பொருந்தாத, ஆழமாக ஒவ்வொரு மனிதனிடமும் ஊறிப்போன சமுதாயப் பிளவு என்பதே அவர் எண்ணம். அவன் சார்ந்த சமுதாயத்தை எதிர்க்க நினைத்தாலே ஒதுக்கி வைத்து விடுவார்கள். இப்போது ஏதோ ஒரு கடும் தேசியத்தில் வழியின்றி ஒரு இயக்கத்திற்கு ஆதரவு அழிக்கிறார்கள். போராட்டம் வென்றாலோ அல்லது அது தோற்றாலோ அவர்கள் பழைய பல்லவி பாடத் தொடங்கி விடுவார்கள். இப்போதும் ஒவ்வொரு திருமணத்திலும் அதை அழகாகக் கடைப் பிடிக்கிறார்கள் என்று "TS" எண்ணினார்.

"றிங்ஸ் எடுத்துக் கொண்டு தொடர்ந்து கதைக்கலாம் தானே?" என்றான் சிவா.

"என்ன கதையிது? றிங்ஸ் எடுத்தா எங்களுக்கு நிதானம் இல்லாமல் போயிடுமே? எதையும் நாங்கள் எப்பவும் நிதானமாகக் கதைப்பம். நீர் றிங்சை எடுத்தாரும்." என்றான் அருள்.

"உதுக்குத் தானே உந்த அவசரமா இங்க வந்தனியள்?" என்று சமையல் அறையில் இருந்து எட்டிக் கேட்டாள்

சொரூபா. சாதிக் கதை கதைக்கத் தொடங்கியதுமே பெண்கள் மெதுவாகச் சமையல் அறைக்குள் சென்று விட்டார்கள். அவர்களுக்கும் அதற்கும் சம்பந்தம் இல்லை என்பது போலவும் ஆண்கள் முடிவில் தங்கள் வாழ்க்கை ஓடும் என்பது போலவும் சிவாவிற்கு அது இருந்தது. இருந்தும் அவன் அவர்கள் தயவு இன்றி எந்த ஆணும் அமைதி காண முடியாது என்பதால் அமைதி காத்தான்.

"என்ன அக்காமார் எல்லாம் அடுக்களைக்கு உள்ள போயிட்டினம்?" என்றான் சொரூபன்.

"அவைக்குச் சாதியைவிடச் சாறியைப் பற்றிக் கதைக்க நிறைய இருந்து இருக்கும். அது தான் பிறைவேற் மாநாடு நடத்துகினம். முடிவு செய்திட்டு இந்தியாவுக்கோ இல்லாட்டிச் சிங்கப்பூருக்கோ போகிறது எண்டு சொல்லுவினம். ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் புதுசு புதுசாக் காஞ்சிபுரம் கட்ட வேணுமாம். கட்டினதைத் திரும்பத் தொட ஏலாதாம். என்ன செய்யலாம்." என்றான் சிவா.

"சிவாவுக்கு இண்டைக்கு உப்புக் கொட்டித்தான் சாப்பாடு வரும்." என்றாள் மாலினி.

"அக்கா நான் உங்களைச் சொல்ல இல்லை. உங்களை அப்பிடி நான் சொல்லுவனா? நீங்கள் தெய்வம் மாதிரி. உதைப் பற்றி வாயைத் திறக்கக் கூடாது எண்டு தான் இருந்தன். ஆனா... வாய் கேட்குது இல்லை." என்றான் சிவா.

"உப்பு நல்லாப் போட்டா வாய் சொன்னபடி கேட்கும்." என்றாள் மாலினி தொடர்ந்தும்.

"இந்தப் பாவியைப் பழி வாங்கீடாதேங்கோ அக்கா." என்றான் சிவா.

"ஈழத்தில இருக்கிற சாதி அமைப்புத் தமிழ் நாட்டைப் போல இல்லை. அங்க இருக்கிற அளவுக்கு இலங்கையில யாருக்கும் இப்ப வெளிப்படையான கொடுமையும் இல்லை எண்டுதான் சொல்ல வேணும். கடந்த காலங்களில கொடுமைகள் நிறைய நடந்து இருக்கு எண்டது மறுக்க முடியாத உண்மை. அது இப்ப கொஞ்சம் கொஞ்சமாய் குறைஞ்சு போயிருக்குது. கடந்த காலத்தில அதுக்கான போராட்டங்களும் நிறைய நடந்திருக்குது. சிரட்டையில இல்லாட்டிப் பிளாவில எல்லாம் தண்ணி குடுக்க யாருக்கும் இப்ப துணிவு வராது. சாதிப் பெயரைச்

சொல்லிக் கூப்பிடவும் ஒருத்தருக்கும் துணிவு இருக்காது. எண்டாலும் மனதுக்க சாதியும், அது தரும் வெறியும் மாறாமலே இருக்குது. அது கட்டாயம் மாறத்தான் வேணும். என்னதான் மாறின மாதிரி தெரிஞ்சாலும் கலியாணம் எண்டு வந்தா அதை மாத்த ஏலாது எண்டு தான் நான் நினைக்கிறன். அதில வெள்ளாளராய் இருந்தாலும் சரி, நளவராய் இருந்தாலும் சரி ஒரே மாதிரித்தான் நினைப்பினம். ஊருக்க கலியாணம் செய்ய வேணும் எண்டு நிக்கிறத்துக்குச் சிலர் சொத்துதான் காரணம் எண்டு நினைக்கினம். சொத்தைவிட அவையின்ரை அடி நுனி அறிஞ்சு கொண்டு கலியாணம் செய்கிறது தான் அதுகின்ரை தாற்பரியம் எண்டு எத்தினை பேருக்குத் தெரியும்? ஊருக்க எண்டா இன்னார் எண்டு சொன்ன உடன அவையின்ரை அடி நுனி தெரிய வந்திடும். புறத்தி ஊரில அது கஸ்ரம். ஏமாந்து போயிடலாம். அது தான் ஊருக்க கலியாணம் எண்டுகிறதிலை உடும்புப் பிடியா நிக்கிறவை எண்டது விளங்குதே? அதைவிட வித்துவான்களிட்டை இந்தப் பிரச்சனைக்கு எந்தத் தீர்வும் கிடையாது. ஆயுதத்தைக் காட்டி இது அடக்கக்கூடிய விஷயம் இல்லை." என்றான் அருள்.

"உண்மை அருள். இந்தச் சாதி எண்டுகிறதை வைச்சுச் சிலர் மற்றை மனிசரை அடக்கினது, அடக்க றை பண்ணுகிறது உண்மை. சில மனிசர் அதை தங்கடை விசேட அடையாளமாய் நினைக்கினம். இப்ப கரையார் எண்டுகிறது சிலருக்குப் பெருமை மாதிரி. நாங்கள் தான் தமிழினத்தின்ரை பிதாக்கள் என்கின்ற பெருமிதம் சிலருக்கு. சாதியால பலரும் தங்களை அடையாளம் காணுகிறதால அதை அழிக்கிறது இன்னும் கஸ்ரமாய் இருக்குது. எல்லாருக்கும் தங்கடை சாதி அவைக்குப் பெருமை தாற அடையாளமாய் இருக்குது. இந்த நிலை தமிழ் நாட்டில மோசம். பெயரிலேயே சாதி இருக்கும். எங்கடை நாட்டில பெயரைப் பார்த்து இப்ப சாதி சொல்ல ஏலாது. வேலுப்பிள்ளை எண்டுகிறது வெள்ளாளருக்கும் இருக்குது. கரையாருக்கும் இருக்குது. பெயரால சாதிய அடையாளப் படுத்தக்கூடிய நிலை இப்ப யாழ்ப்பாணத்தில இல்லை எண்டுதான் சொல்ல வேணும். சாதி இல்லை சாதி இல்லை எண்டுகிறவையும் ஒரு நாளும் தங்கடை வாழ்க்கையில கீழ் நிலைக்குப் போக விரும்புகிறது இல்லை. அரசியலுக்கும், பிரச்சாரத்திற்கும் மட்டும் கோசமா பாவிக்கிறதால அது அழியா வரம் பெற்று

இருக்குது. இல்லாட்டிச் சமபந்தி எண்டு ஒண்டா இருந்திட்டு இரகசியமாச் சாப்பிட்டதைச் சக்தி எடுக்கலாமோ எண்டு யோசிக்கிற அரசியல் விளையாட்டு. உதெல்லாம் நாளைக்கே மாற வேணும் எண்டு ஆசை தான். ஆனா... உது தண்ணி விழுந்து கல்லுத் தேய்கிற கணக்கா நிறையக் காலம் செல்லும். சாதிப் போராட்டம் எண்டு சொல்லி மற்றவையைச் சீண்டுகிற மாதிரிக் கூர்மை ஆக்கிற வேலையோ, இல்லாட்டித் தங்களுக்கு ஒரு பதவி கிடைச்சோண்ணை பழி வாங்குகிற வேலையோ செய்தா அது இன்னும் விரோதத்தையும், பிளவையும் மட்டுமே உண்டு பண்ணும். தலித்துக்களுக்காகப் போராடுகிறம் எண்டு சொல்லுகிற சிலர் அப்பிடி செய்யினமோ எண்டுகிற சந்தேகங்களும் இருக்குது. இந்தப் போராட்டம் நிறையக் காலம் நடந்திட்டுது. எண்டாலும் அது இன்னும் வலுவாகத்தான் சமுதாயத்தில ஒட்டிக் கொண்டு இருக்குது. கொஞ்சம் கொஞ்சமா அதுவும் வெள்ளாளருடைய ஆதரவோடையே உதை இல்லாமல் செய்ய வேணும்." என்றான் சிவா.

சண்முகன் ஒரு "Blacklabel"ஐப் பௌத்திரமாகக் கொண்டு வந்து மேசையில் வைத்தான். கறுத்தத் தங்கம் போன்ற பெட்டி அது. பின்பு மறுபடியும் சென்று "Ice"சும், "CocaCola"வும் எடுத்து வந்தான். அதற்கு இடையில் சக்தி கண்ணாடிக் குவளைகளைக் கொண்டு வந்து வைத்துவிட்டுச் சென்றாள். அதே வீச்சில் தட்டு நிறைய மிக்சர் கொண்டு வந்து வைத்தாள். எல்லாம் சரியாய் இருக்கிறதா என்று பார்த்த சண்முகன் திருப்திப் பட்டவனாக,

"ஓபிண் பண்ணுங்க." என்றான் "TS"சைப் பார்த்து. "TS" எடுத்துப் பெட்டியைத் திறந்து, தங்கமாக மின்னிய போத்தலின் மூடியைத் திருகிக் கண்ணாடிக் குவளைகளில் அரைப் பகுதி நிறையும் அளவில் ஊற்றினார். பெண்களைத் தவிர மற்றவர்கள் எல்லோரும் குடிப்பதற்கு இன்று தயாராக இருந்தார்கள். சிவா "CocaCola"ப் போத்தலைத் திறந்து அருளிடம் கொடுத்தான். தனக்கு "Ice" மட்டும் போதும் என்றார் "TS". சிவாவும் தனக்கு "Ice" மட்டும் போதும் என்றான். பின்பு சண்முகனைப் பார்த்து வேறு ஒரு கண்ணாடிக் குவளையும் குடிப்பதற்கு நீரும் எடுத்து வருமாறு கூறினான். சண்முகன் மீண்டும் சமையல் அறையை நோக்கிச் சென்றான். திரும்பி வரும் போது

இன்னும் ஒரு போத்தலும் கண்ணாடிக் குவளையும் கொண்டு வந்தான். சக்தி கண்ணாடிக் குவளைகளில் நீர் கொண்டு வந்தாள்.

"பிறி எண்டோண்ணை விட்டுக் கட்டுகிறது இல்லை." என்றாள் மாலினி சமையல் அறையில் இருந்த வண்ணமே.

"ஓம்... ஓம்... அது எனக்குத் தெரியுமுங்கோ." என்றார் தாமோதரன்.

"ஊரில இருந்திருந்தா கொஞ்சம் பார்ட்டியள், குடியள் குறைவாகத்தான் இருந்து இருக்கும். அதுக்கு இப்படிக் காசு குடுத்துப் போத்தில் வாங்கிறதும் ஒரு பிரச்சனையாய் இருக்கும். இங்கத்தே உழைப்புக்குப் போத்தில் ஒரு பெரிய பிரச்சனை இல்லை. நாங்களும் பார்த்துப் பாராமல் கொஞ்சம் கூடக் குறையத்தான் விட்டுக் கட்டுகிறம்." என்றார் "TS".

"ஒவ்வொரு நாளும் விட்டுக்கட்டுகிறதும் கூடாது. எப்பவாவது ஒருக்கா இப்பிடிச் சந்தோஷமாய் இருக்காட்டி வாழ்க்கையை அனுபவிக்காமல் போகிற மாதிரிப் போயிடும்." என்றான் அருள்.

"மனிசிமார் வந்த பிறகும் உங்களுக்கு அனுமதி இருக்கிறது பெரிய விஷயம் தான். உங்க பெரும் குடிகாரராய் திரிஞ்சவை சிலர் இப்ப பெட்டிப் பாம்பாட்டம் அடங்கிக் கிடக்கினம். மனிசிமார் இரு எண்டா இருப்பினம். எழும்பு எண்டா எழும்புவினம்." என்றான் சிவா.

"சிவாவுக்கும் வந்தாப் பிறகு தெரியும் தானே அந்தப் பிரம்ம ஞானம்?" என்றான் அருள்.

"நான் எப்பவும் விடுதலை விரும்பி. சின்னனிலையே அதை நினைச்சுத்தான் இயக்கத்துக்குப் போனனான். அங்க நான் பார்த்தது போராட்டம் இல்லை. ஆனா... என்ரை இரத்தத்தில போராட்டம் செங்கலமாய் ஓடுது. மனச்சாட்சியை அடைவு வைச்சிட்டு அதைப் போராட்டம் எண்டு காலம் தள்ள என்னால முடியாது. போராட்டத்தை மாயை ஆக்கினவங்களிட்டை எங்கடை போராட்டம் குத்தகைக்குப் போச்சுது. நாங்கள் அதால நாட்டின்ரை, எங்கடை நன்மை கருதி உயிரைக் கையில பிடிச்சுக் கொண்டு தப்பி ஒடி வந்தம். அப்பிடி வந்த நாங்கள் இங்கையாவது நிம்மதியாய், சுதந்திரமாய் இருக்க

வேணும். அந்தச் சுதந்திரத்தை எந்தப் பெண்ணும் என்னிட்டை இருந்து பறிக்க முடியாது." என்றான் சிவா.

ஒரு மிடற்றில் கண்ணை மூடி அரைக் கண்ணாடிக் குவளை அளவிற்குக் குடித்துத் தலையை இரண்டு தரம் இரண்டு பக்கமும் ஆட்டி அதன் கச்சலைச் சமப்படுத்திய பின்பு ஒரு முறை குதிரை போலக் கனைத்து விட்டுச் சண்முகன் கதைக்கத் தொடங்கினான்.

"தண்ணி அடிக்கேக்க சாதிப் பிரச்சனை, அரசியல் பிரச்சனை கதைக்கக் கூடாது எண்டு நினைக்கிறியளோ?" என்றான் சண்முகன்.

"சாதிப் பிரச்சனை இல்லைச் சண்முகா... சாதி பற்றிக் கதைக்கிறது... எங்களுக்கு உள்ள எந்தப் பிரச்சனையும் இல்லை. ஊரில, லண்டனில, கனடாவில எப்பிடி இருக்கிறாங்கள் எண்டது பற்றியும் எங்களுக்குக் கவலையில்லை. இங்க நாங்கள் அப்பிடி இல்லை. அது இனியும் மாற மாட்டுது. எங்கடை சமதர்மக் கொள்கையும் அப்படித் தான்." என்றான் அருள். அருளின் அந்த ஞான வாக்குப் புதுமை இல்லை. அவர்களின் அரசியல் அப்படி. ஆனால் அதுவும் அப்பழுக்கு அற்ற தங்கம் அல்ல... அரை குறையாக அவர்கள் எல்லாம் நாட்டை விட்டு வெளியேற வேண்டி வந்தது சில வேளை ஈழப் போராட்டத்திற்கு தொலை நோக்கில் துர்ரதிஸ்ட்டமாக இருக்கலாம். அல்லது ஆரவாரிகளுக்கு அதிஸ்ட்டமாக இருக்கலாம். அதை இனி மாற்ற முடியாது. அருள் கதைக்கும் போது தலையை ஆட்டி ஆட்டிக் கதைத்தது சற்று வித்தியாசமாய் இருந்தது.

"நீ பிழையா விளங்கீட்டாய் அருள். நான் எங்களுக்கு உள்ள பிரச்சனை எண்டு சொல்ல இல்லை. எங்கடை சமுதாயத்தில அது ஒரு பிரச்சனை எண்டுதான் சொல்லுகிறன். இங்க இருக்கிற அனேகர் யாழ்ப்பாணத்தார் தானே? அங்க தானே இது மோசம்? எனக்கு நாவலரிலை எல்லாம் கெட்ட கோவம் இருக்குது. பெடியளின்ரை போராட்டத்தை நம்புகிறன். அவங்களால இதுக்கு ஒரு விடிவு வரும் எண்டு நம்புகிறன். சுளிபுரத்து நாட்டாமையில எனக்கு நம்பிக்கை இல்லை. அதே நேரம் கடவுளை நான் நம்புகிறன். நான் நாத்திகம் பேசுகிறேல்லை. எங்களுக்கு மேல ஏதோ ஒரு சக்தி இருக்குது எண்டு நினைக்கிறன்." என்றான் சண்முகன்.

"உன்ரை நிலை இரண்டுங் கெட்டான் நிலை. யாழ்ப்பாணத்தில இன்ன சாதிக்கு இன்ன கடவுள் எண்டே இருக்குது? இன்ன சாதிக்காரருக்கு இன்ன கோயில் எண்டும் இருக்குது. வர்ணம், சாதி எங்க இருந்து வந்தது. ஐயர்மாரை வெள்ளாளர் ஆட்டிப்படைச்சாலும் சாதியில ஐயர்மார் தான் உசத்தி எண்டது ஒப்புக் கொள்ளப்பட்ட நடைமுறை தானே? ஆகக் கடவுளையோ அல்லது நம்பிக்கையையோ சாட்டி சாதி வளருது. பிறகு உனக்குச் சாதியும் வேண்டாம், கடவுளும் வேணும் எண்டா எப்பிடி? எங்கடை கடவுளும் இந்துக் கலாச்சாரமும் இருக்கிற வரைக்கும் சாதிக்கும் கொண்டாட்டம் தான். அதுவே ஆரம்பப் புள்ளி இல்லை எண்டாலும் அதுவே நடைமுறை. சுளிபுரத்து மேலாண்மைக்காக எதுவும் தொடங்க இல்லை. நல்லதொரு மக்கள் போராட்டத்தை நடத்த வேணும் எண்டு ஆரம்ப காலத்தில நினைச்சினம். அதை யாராலும் விளங்கிக் கொள்ள முடிய இல்லை. சினிமா மாயையில சிந்தனை இழந்த மந்தைக் கூட்டமான மக்கள். துவக்கோடை வித்தை காட்டுகிறவங்கள் ஈழம் எடுத்துத் தருவாங்கள் எண்டு நம்பிச்சுதுகள். பிறகு எல்லாம் திசை மாறீட்டுது. இனிக் காலம் தான் பதில் சொல்லும்." என்றான் அருள்.

"அப்பா அருளா... நான் தப்பாச் சொன்னா மன்னிச்சுக் கொள். சமயத்தில கடவுள் கண்ணப்பரையோ, திருநாளைப் போவாரையோ கழிச்சு வைக்க இல்லை. அப்பூதியடிகள் அப்பரின் காலில் விழுந்தார். அப்பர் சம்பந்தர் காலில் விழுந்தார். உண்மையான பக்தி இருந்தால் பேதம் ஏது அருளா?" என்றான் சண்முகன்.

"அறுபத்து மூன்று நாயன்மார் எண்டுகிறது எல்லாம் சைவத்தைக் காப்பாற்ற உண்டான உருவகக் கதைகள். உண்மை இல்லைச் சண்முகா. இப்ப வந்து திருமறைக்காட்டுக் கதவைத் தேவாரம் பாடித் திறந்து பூட்டச் சொல்லு பார்ப்பம்."

""TS" அண்ணை! சாதிப் போராட்டங்கள் சங்கானையில நடந்து முடிஞ்சு போச்சுது. ஒரு தலைப் பட்சமாய் கடத்தப்பட்ட விடுதலைப் போராட்டம் இப்ப நடக்குது. பஞ்சமருக்காகப் போராடின இயக்கத்தை, அப்பிடியான இயக்கங்களே ஆயுத முனையில ஓரங்கட்டிச்சுது. இப்பவும் சாதிப் பெயரில கோயில்கள் இயங்குது. வெளிநாட்டுக்கு வந்த பிறகு தலித்தியம் கதைக்கச் சுதந்திரம் இருக்குது.

இங்க யாரும் முகத்துக்கு நேர இவர் இப்பிடிக் கதைக்கிறார் எண்டு சொல்ல மாட்டினம் எண்டுகிற துணிவும் உண்டு. அங்க வெள்ளாளர் கோயிலைத் திறந்து விட்டாலே கூச்சத்தில மற்றச் சாதிக்காரன் உள்ள போகமாட்டான். மொத்தத்தில இங்க இருந்து கடும் தலித்தியத் தூசனைகளை வெள்ளாளரை நோக்கி வீசுகிறதைத் தங்களது தலித்தியப் போராட்டம் எண்டுகினம். எல்லாத்துக்கும் உந்தத் தலித்தியப் போராளிகள் யாழ்ப்பாணத்து வெள்ளாள ஆதிக்கம்தான் காரணம் எண்டு கொண்டு வந்து முடிக்காமல் விடமாட்டினம். யாழ்ப்பாணத்தில சாதியில கூடின தொகை ஆனவர்கள் வெள்ளாளர்கள் தானே? அவையச் சீண்டிச் சீண்டி இந்தப் பிரச்சனையை ஊதிப் பெரிசு ஆக்கிறதால உந்தப் போராட்டத்திற்கு உருப்படியா ஏதாவது நன்மை உண்டு ஆகும் எண்டு நினைக்கிறியளா?" என்றான் அருள்.

"போராட்டம் இல்லாமல் மாற்றங்கள் வராது எண்டு தான் நானும் நினைக்கிறன். இது கடுமையான சிக்கல் பிடிச்ச விஷயம். இந்தியாவில பிராமணர் சிறுபான்மை. இங்க வெளாளர் பெரும்பான்மை. நீ சொல்லுகிற மாதிரி பகைச்சுத் தீர்க்கிற விஷயம் இல்லை இது. உறவாடித் தான் தீர்க்க வேணும். அதுவும் எந்த அளவிற்கு மாற்றம் வரும் எண்டது தெரியாது. முதல் திருமணத்தை தவிர்த்த மற்ற விஷயங்களில வேறுபாடு இல்லாமல் இருந்தாலே பெரிய விஷயம். இப்வும் கிணத்துக்கு உள்ள மண்ணெண்ணெய் ஊத்துகிறதும், ஊருக்கு உள்ள வேறை சாதிக்காரனை வீடு வாங்க விடாமல் தடுக்கிறதும் தொடருது. இந்தப் பிரச்சனை யானை மாதிரி. இதைச் சாப்பிட வேணும் எண்டாக் கொஞ்சம் கொஞ்சமாகத் தான் சாப்பிடலாம். பெடியளுக்கும் இது விளங்கும். அதுதான் வங்கர் வெட்டுகிறதோடை அவைக்கான தண்டனையைக் கட்டுப்படுத்தி ஆச்சுது. சிவா சொன்ன மாதிரி பெடியள் சாதிப் பிரச்சனையைக் கண்டும் காணாமலும் இருக்க இல்லை. சாதிப் பிரச்சனை எண்டுகிறது முள்ளில விழுந்த பழஞ் சீலை மாதிரி. அதைக் கவனமாகத் தான் கையாள வேணும்." என்றார் "TS".

"ஓம் அண்ணை தீவுப் பகுதியில புளட்க்காரர் செய்தது மாதிரிச் செய்தா இன்னும் அசிங்கம் தான்." என்றான் சண்முகன்.

"தலைவர் எல்லாத்தையும் நுட்பமாய் செய்கிறார். அவர் உயிர் போனாலும் தமிழீழம் தான் எங்கடை கொள்கை எண்டதில மாறாமல் இருக்கிறார். அவரை விளங்கிக் கொள்ளாமல் பலரும் பல கதை கதைக்கினம். மற்ற இயக்கங்கள் கதைச்சாலும் பருவாய் இல்லை. புலியில இருந்திட்டு தப்பி ஓடி வந்தவங்கள் அவங்களை பிழையாக் கதைக்கிறதைத் மட்டும் பொறுக்க ஏலாது. அவங்களோடை இருக்கேக்க அவங்கள் செய்கிறது எல்லாம் சரி எண்டு தானே அங்க இருந்தவை. பிறகு கள்ளர் மாதிரி ஓடி வந்திட்டு இங்க நிண்டு கொக்கரிக்கக் கூடாது. தலைவர் சாதிக்கான போராட்டத்தைத் தன்னில இருந்து தொடங்கி இருக்கிறார். கொஞ்சம் கொஞ்சமா அதை தமிமீழம் முழுவதும் செய்து முடிப்பார். அங்க அந்தப் பிரச்சனை தீர்ந்தால் பிறகு இஞ்சை யார் அதைத் தூக்கிக் கொண்டு திரியப் போகினம்?" என்றார் தாமோதரன்.

"நோர்வேயா இருந்தால் என்ன, இல்லை ஏன் இலங்கையிலும் சட்டப்படி கடத்திக் கொண்டு போய் தாலி கட்டுகிறது தண்டனைக்குரிய குற்றம். கடத்தல் எண்டா இங்க பொலிஸ் தரையிலும், வானிலும் பறக்கும். அப்படியான ஒரு செயல் இந்தப் பிரச்சனையைத் தீர்த்து வைக்க ஏலும் எண்டு தாமோதரன் அண்ணை கதைக்கிறதுக்கு நான் என்ன சொல்ல முடியும்?" என்றான் சிவா.

"சிவா! எல்லாத்தையும் இவங்கள் மாதிரி யோசிச்சா சிங்கள அரசாங்கம் எங்கடை சுவடே தெரியாமல் அழிச்சுப் போடும். அதுக்குப் பதிலாகத்தான் பெடியள் இடைக்கிடை விளையாட்டுக் காட்டுகிறவங்கள். அப்பிடி அவங்கள் செய்யாட்டி அநியாயக் கொலைகள் தொடர்ந்து கொண்டே இருக்கும். அது மாதிரித்தான் எங்கடை சனத்துக்கும் விளங்குகிற பாசையில தான் சில விஷயங்களைச் சொல்ல வேணும். அதை விட்டிட்டு மயிலே மயிலே இறகு போடு எண்டுகிற வேலை சரி வராது." என்றார் தாமோதரன்.

"உங்கடை புரிதலுக்கு என்னால வர முடியாது. சரி உங்கடை புரிதல்படியே வைச்சுக் கொண்டாலும் படிச்ச, அழகான பெம்பிளையள் வெள்ளாளருக்க மட்டுமே இருக்கினம்? எல்லாச் சாதியிலும் தானே இருக்கினம். பெரிய இடத்தில இருக்கிறவை செய்கிறது மற்றவைக்கும்

உதாரணமாய், முற்போக்காய் இருந்திருக்க வேணும்." என்றான் சிவா.

"உந்தக் கதையைவிட வேறு கதை ஒண்டும் உங்களுக்குக் கிடைக்க இல்லையே?" என்றாள் மாலினி சமையல் அறையில் இருந்து.

"அப்ப நாங்கள் சினிமாக்காரியளைப் பற்றிக் கதைக்கட்டுமோ?" என்றார் தாமோதரன் உரக்க... அடுத்த போத்தலை சண்முகனே திறந்து காலியான குவளைகளைப் பார்த்து ஊற்றினான்.

"ரென்சன் வராத விஷயம் எது கதைச்சாலும் எனக்குப் பிரச்சனை இல்லை." என்றாள் மாலினி.

தாமோதரன் பதில் சொல்லவில்லை. ஊற்றிய மதுவைப் பொறுப்பாக எடுத்து ஒரே இழுவையாகக் கண்ணை மூடிக் கசப்பையும், எரிவையும் சகித்துக் குடிப்பதில் கவனமாக இருந்தார்.

"நாங்கள் கதைக்கிறது ரென்சனான கருத்துக்களா? எங்களையும் ரென்சன் பாதிக்குமா?" என்றான் சிவா.

"நிச்சயமா ஒவ்வொருத்தருக்கு ஒவ்வொரு கருத்து இருக்கும். அதோடை சரி பிழை எண்டுகிறது நிரந்தரம் அற்றதாக ஆளுக்கு ஆள் வித்தியாசப்படும் ஒரு மனநிலை. இந்த யதார்த்தம் விளங்காமல் தான் நினைக்கிறது மட்டும் சரி எண்டுகிற பிடிவாதம் எங்களிட்டை நிறைய இருக்கும். விட்டுக் கொடுப்பு இல்லாமல் கருத்துக்களைத் திணிக்கேக்க மனஸ்தாபம் ஏற்பட்டு விடுமோ எண்டுகிற பயம் இருக்கலாம்." என்றார் "TS" அதற்கு மிகவும் மதிப்புக் கொடுத்து.

"நீங்கள் சொல்லுகிறது உண்மை "TS" அண்ணை. சிலருக்குச் சரியாத் தெரிகிறது சிலருக்குப் பிழையாகத் தெரியலாம். ஆனால் பொதுவான விதி எண்டு, மனிதாபிமானம் எண்டு ஒரு சிலது இருக்குது இல்லையா? ஆயுதம் இல்லாமல் நிராயுதபாணியா நிக்கிற ஒருவனை ஆயுதத்தோடை போய் கொலை செய்கிறது குரூரமான கோழைத்தனம் எண்டு நினைக்கிறன். அது இராமனாய் இருந்தாலும், இராவணனாய் இருந்தாலும் இரத்தம் குடிக்க வந்த பேயாக மட்டுமே காட்டும். நீங்கள் என்ன நினைக்கிறியள்?" என்றான் சிவா.

"உன்ரை கருத்துக்கு மாற்றுக் கருத்து என்னிட்டை இல்லை. அதே வேளை நீ சொல்லுகிற நியாயம் இப்ப இந்த உலகத்தில இல்லையே? சில வேளை அது இதிகாசங்களைத் தவிர வேற எப்பவும் இருந்திருக்குமோ எண்டும் தெரிய இல்லை? இதிகாசங்களுக்குப் பிறகு எண்டால் மனுநீதிகண்ட சோழன், முல்லைக்குத் தேர் கொடுத்த பாரி என்று சில கதைகள் இருக்குது. இந்த நவீன உலகத்தில அந்தக் கதைகள் செல்லுபடி ஆகாது சிவா. தங்களுக்கு என்ன ஆதாயம் கிடைக்கும் எண்டு கணக்குப் போட்ட பிறகே அமரிக்கா தொடக்கம் இந்த மேற்கு நாடுகள் வரை அந்தப் பிரச்சனையைப் பற்றிக் கதைக்கிறதா இல்லையா எண்டு முடிவெடுக்கும். யுத்தம் நடக்குதே, இரத்தம் ஓடுதே, பாலகரும், பெண்களுமாய் மாழுகினமே எண்டு கவலைப்பட்டுக் காரியம் நடப்பதாக நான் நம்ப இல்லை. அப்படி யாராவது இரக்கப்படுவதாய் காட்டிக் கொண்டாலும் அதற்குள்ள அவர்களது சுயநல அரசியல் புதைஞ்சு இருக்கும்." என்றார் "TS".

"இந்தச் சூட்சுமம் விளங்கித்தான் எங்கடை போராட்டத்திலையும் காய்கள் நகர்த்தப்படுகுது எண்டு நீங்கள் நினைக்கிறியளே?" என்றான் சிவா.

"சிவா விடும்... நாங்கள் இனிச் சினிமா பற்றிக் கதைப்பம்." என்றான் அருள்.

"இல்லைச் சிங்கப்பூர்க் கொப்பி ஒண்டு இருக்குது. மீனம்மா மீனம்மா எண்டு பாடுகினம்.... அதைப் பார்ப்பமே?" என்றான் சண்முகன்.

"அட அதை இன்னும் பார்க்கிறியளே?"

"நேரம் போகாட்டி என்ன செய்கிறது? இவையவே பார்த்துக் கொண்டு இருக்க முடியுமே?"

"ம்... அதுவும் அப்பிடியே?"

"சிவா இங்க கலகம் உண்டாக்காதையும்."

"சரி அப்ப நீ கொப்பியைப் போடு." என்ற போது இடியப்பக்காரன் வந்து வாசல் மணியை அடித்தான்.

# 7 நிமலனும் குடும்பமாக

இந்த மாய உலகில் பல மாயக் காட்சிகள். அவை அந்தக் கணத்தோடு மீண்டும் வராதவையாக... அடுத்து நடக்கப் போவதை அறிந்து கொள்ள முடியாதவர்களாக... இருந்தும் காட்சிகள் மாறும். அது குழந்தை என்றும், குமரன் என்றும், காதல் என்றும், குடும்பம் என்றும், முற்றுப் புள்ளியாக மரணம் என்றும் கூறப்படுகிறது. இதற்கு முன்பு எந்த மாய உலகத்தில் இருந்தோம்? இதற்குப் பின்பு எந்த மாய உலகத்திற்குப் போகப் போகிறோம்? நாம் இந்த மாய உலகில் மாய்ந்தது எதற்காக? எந்த நானும், எந்த எனதும் இல்லை என்பது அந்த மாயத்தின் மறுமொழியாக... இருந்தும் இதை எல்லாம் கிரகிக்க முடியாது அவசரமாக ஓடும் நாம்.

கப்பற் பயணத்தின் பின்பாகச் சரிஸ்காவின் நினைவுகள் வேதனை தரும் ஊற்றுக் கண்ணாக "TS"சின் மனதில் கவலையைக் கட்டற்றுச் சுரந்து கொண்டே இருந்தது. அவள் நிறையவே மாறிவிட்டாள் என்று நினைத்தது அந்தப் பயணத்தோடு கனவாகியதால் அவர் கதி கலங்கிப் போய்விட்டார். மற்றவர்களைப் பொறுத்தமட்டில் அங்கு நடந்தது ஒரு விஷயமே இல்லை. "TS"சிற்கும் அப்படியே தோன்றியது. அவர் அதை அவளிடம் சொல்ல முடியாது. அவளின் புரிதல் வேறு விதமாக இருந்தது. அவள் அதைத் தனக்கு முன்பு ஏற்பட்ட பாதிப்போடு ஒப்பிட்டே எப்போதும் சிந்திப்பாள். உடைத்துக் கூறினால் தன்னை யாரும் விளங்கிக் கொள்ளவில்லை என்கின்ற வேதனை மட்டுமே அவளுக்கு உண்டாகும். சில உலக யதார்த்தங்களை அவளோடு அதனால் தர்க்கம் செய்ய முடியாது போய் விடுவது உண்டு.

அந்தக் கப்பற் பயணத்தின் பின்பு சரிஸ்கா எங்கும் வெளியே செல்வது இல்லை. தனது படிப்பு, வீடு என்பதோடு தன் வட்டத்தைச் சுருக்கிக் கொண்டாள். ஏலின் எப்போதாவது வருவது உண்டு. அவள் வீட்டிற்குச் சரிஸ்கா சில முறை போய் வந்தது உண்டு. அதைவிடக் கூடப் படிக்கும் யார் வீட்டிற்கும் அவள் செல்வது இல்லை. அருள் வந்தால் சந்தோஷமாய் இருப்பாள். அவளுக்குச் சொரூபாவோடு எலினை மாதிரி மிகவும் ஒத்துப் போகும். சொரூபா சமைப்பதிற் கெட்டிக்காரி. நளபாகம் என்று "TS" கேள்விப்பட்டு இருக்கிறார். சொரூபா வந்து எதை அள்ளிப்

போட்டு எப்படிச் சமைத்தாலும் அது நளபாகமாகவே வருகிறது. அவள் புதிது புதிதான கற்பனை செய்ய முடியாத சாப்பாடுகளை எல்லாம் அரங்கேற்றுவாள். அப்போது மூன்று பேரும் சமையல் அறைக்குள் ஐக்கிய மாநாடு நடத்துவார்கள். அருளையும் சரிஸ்காவிற்குப் பிடிக்கும். அருளும் அவளைத் தேவை இல்லாது சீண்டுவது இல்லை. அதுவும் கலியான விஷயம் பற்றி அவன் ஒரு போதும் மறந்தும் அவளிடம் கேட்பது இல்லை. அவனுக்கு இப்போது சரிஸ்காவைப் பற்றி விளங்கி இருந்தது. படிப்பு விஷயம் பற்றியே அவளிடம் அதிகம் கேட்பான். படித்து முடிந்ததும் தனது பல்லை நீதான் பார்க்க வேண்டும் என்று ஒரு நாள் கேட்டான். தான் பெண்களுக்கு மட்டும் பல் வைத்தியம் பார்க்கப் போவதாக அவள் கூறினாள். அது இங்கே சாத்தியம் ஆகுமா என்று அருள் திருப்பிக் கேட்டான். முஸ்லீம் பெண்கள் அதிகம் ஒஸ்லோவில் இருப்பதால் அது ஒன்றும் பிரச்சனை இல்லை என்று அவள் திடமாக அதற்குப் பதில் கூறினாள். பின்பு சிறிது யோசித்துவிட்டு அருள் அண்ணாவுக்கு மாத்திரம் வேண்டும் என்றால் பல் வைத்தியம் பார்ப்பேன் என்றாள். இங்க ஆண் பெண் வித்தியாசம் பார்க்க கூடாது. நீ எல்லோருக்கும் வைத்தியம் பார்க்க வேண்டிய கட்டாயம் வரும் என்று கூறி அருள் அந்தக் கதையை முடித்து வைத்தான்.

*

சரிஸ்கா நடந்து கொள்ளும் விதத்தில் பெரிய மாற்றங்கள் ஏற்படும் என்கின்ற நம்பிக்கை தற்போது "TS"சிற்கு அறவே இல்லை. பெரிய மாற்றங்கள் ஏற்படா விட்டாலும் பருவாய் இல்லை அவள் இப்படியே இருந்தால் போதும் என்கின்ற எண்ணம் இப்போது அவரிடம் அடிக்கடி வரும். அவளை அவள் பாட்டிலேயே விடவேண்டும் என்று அவர் முடிவு செய்துவிட்டார். இங்கு இது ஒன்றும் பெரிய விஷயம் இல்லை என்பது அவருக்குத் தெரியும். அதேநேரம் அவள் அப்படி அல்ல என்பதும் அவர் அனுபவம். அந்த நிகழ்வே அவள் மூளையில் ஆண்களை அண்ட விடாத எச்சரிக்கையான உணர்வைத் தொடர்ந்தும் உற்பத்தி செய்த வண்ணம் இருக்கிறது என்பது அவருக்கு விளங்கியது. மருத்துவர்கள் மருந்தைக் கொடுத்தார்களே தவிர மனதை முற்றுமாய் மாற்றவில்லை. மனது தானாகத்தான் மாற வேண்டும் என்றார்கள். அவள் அதைக் காலப் போக்கில் மறந்து விடுவாள் என்று சமாதானம்

சொன்னார்கள். அது சமாதானத்திற்குச் சொன்ன வார்த்தைகளாகவே இருக்கிறது. காலம் அவள் காயத்திற்கு மருந்திடுவதாய்த் தெரியவில்லை. புற்று நோயாகப் பொங்கி எழாத வகையில் "TS"சிற்குத் திருப்திதான்.

நிமலனுக்கும் சரிஸ்காவிற்கும் ஏதோ ஒரு வகையில் ஒத்துக் கொள்ளவில்லை. அருளோடு இருக்கும் சமாதானம்கூட அவனோடு இல்லை. அவர்களுக்கு இடையில் எதாவது நடந்திருக்குமா என்பது "TS"சிற்குத் தெரியாது. அதற்கான சந்தர்ப்பங்கள் எதுவும் ஏற்படவில்லை என்பதே அவரது புரிதல். இருந்தும் ஏன் இந்த இடைவெளி என்பது மட்டும் அவருக்கு விளங்கவில்லை. நிமலன் நொஸ்க் பிள்ளை ஒன்றுடன் சேர்ந்து திரிகிறான் என்பதைக் கேள்விப்பட்ட புவனலோசினி அவனைப் பற்றி முன்பு போல் இப்போது அதிகம் விசாரிப்பது இல்லை. அவன் யாரோ ஒரு பெண்ணோடு நட்பு வைத்து இருப்பதற்கு இவளுக்கு ஏன் கோபம் வருகிறது என்பது அவருக்கு விளங்கவில்லை. "Printer"ல் இருந்து "Print" பண்ண முடியாமல் இருக்கிறது. அப்போது "TS"சிற்கு நிமலன்தான் நினைவுக்கு வந்தான். அவனுக்குத் தொலைபேசியில் தொடர்பு கொண்டு வீட்டுக்கு வருமாறு கேட்டார். அவன் இன்று வருவதாகக் கூறி இருந்தான். அவன் வரவுக்காக "TS" ஆவலோடு காத்திருந்தார்.

*

ஐந்து மணி போல் வாசற் கதவு அழைப்பு மணி ஒலித்தது. "TS" அவசரமாக எழுந்து சென்று கதவைத் திறந்தார். அவர் அதை எதிர்பார்க்க இல்லை. அவள் அழகாகவே இருந்தாள். இந்த அழகிற்கு நிமலன் மயங்காது இருந்தாலே அவனில் ஏதாவது பிழையாக இருந்து இருக்கும் என்பது அவருக்கு விளங்கியது. பெண்ணின் அழகு ஆணை மயக்க இயற்கை உருவாக்கிய தந்திரமான பொறி. அது பல மாயம் செய்யும். பைத்தியம் ஆக்கும். மூளை இருந்தும் சிந்திக்கத் தெரியாத மிருகமாக அவனை அலைய விடும். காதல் என்பதாக அது பலரைக் கட்டிப் போடும். நிமலனை அவளின் அழகு மயக்கினாலும் கட்டிப் போட்டதா இல்லையா என்பது தெளிவாகத் தெரியவில்லை. அவள் நிமலனைக் கேட்டுத் தன்னை

தமிழ்ச் சமுதாயத்திற்கு ஏற்ப மாற்றிக் கொள்ள முயல்வதான தோற்றம். முயற்சி வெற்றி பெற வேண்டும். வெற்றி பெற்றால் அதுவும் தமிழுக்கு அழகே.

அழகிய அசையும் தங்கமாக அலை அலையாக மிதந்த கூந்தல் அந்தப் பெண்ணிற்கு. அவளது அலைகளுக்குள் சில சுருள்களுமாய் அந்தத் தங்கக் கேசம் கழுத்தோடு கத்தரிக்கப்பட்டு இருந்தது. வெண் பவளத்தில் நீல வைரம் பதித்ததாகத் துடிக்கும் கண்கள். நெற்றியில் அவளுக்கு அன்னியமான ஆணிற்கு வரம்பிடும் குங்குமம். பலாச் சுளை போன்ற பெரிய மூக்கு. மெல்லிய இரத்தம் சொட்டும் இதழ்கள். முத்தில் வரிசை கட்டியதான பற்கள். எண்ணெய் புரட்டியதான பெண்மை மேலிடும் வளவளப்பான தேகம். புன்னகை மாறாத அவள் இதழ்கள். கேள்விகளோடு நெளியும் அவள் இமைகள். அவள் "TS"சையும் நிமலனையும் மாறி மாறிப் பார்த்தாள். "TS"சும் அவளையும் நிமலனையும் மாறி மாறிப் பார்த்தார். நிமலன் அந்தச் சங்கடத்தைத் தவிர்ப்பதாக,

"இவதான் நீனா. நீங்கள் கேள்விப்பட்டு இருப்பியள். படிச்ச இடத்தில பழக்கம். இப்ப பழக்கத்திற்குக் கொஞ்சம் மேல். எங்கடை கலாச்சாரம் தனக்குப் புடிச்சு இருக்காம். அதன்படி நடக்க வேணுமாம். புவனா அக்காவும், சரிஸ்காவும்தான் அதுக்கு உதவி செய்ய வேணும்." என்றான் நிமலன்.

"அதுக்கு என்ன செய்தாப் போச்சுது. இப்ப உள்ள வாங்க." என்றார் "TS". அவள் அதைத் தொடர்ந்து "TS"சிற்கு கையைக் கொடுத்து நீனா என்றாள். பெண்ணின் குரல் கேட்டு அது யாராய் இருக்கும் என்கின்ற புதினம் அறியும் ஆர்வத்தில் புவனலோசினியும், சரிஸ்காவும் அறைகளில் இருந்து வெளியே வந்தார்கள். நிமலன் அவளைக் கூட்டிக் கொண்டு வருவான் என்று அவர்களும் எதிர்பார்க்கவில்லை. அவர்களுக்கும் அது அதிர்ச்சியாய் இருந்தது. அதே வேளை அவளை அறிமுகம் செய்து கொள்ளப் போவதில் சந்தோஷமாயும் இருந்தது. நிமலனின் தொல்லை இனி இருக்காது என்பதில் சரிஸ்காவிற்குப் பரம திருப்தி ஆகிற்று.

நிமலனும், நீனாவும் சோபாவில் போய் அமர்ந்தார்கள். அவர்களுக்குத் தேநீர் தயாரிப்பதற்குப் புவனலோசினி அடுக்களையை நோக்கிச் சென்றாள். சரிஸ்கா, நீனாவுக்குப் பக்கத்தில் வந்து இருந்தாள்.

"எனக்கு உங்கள் சமையல் பழக வேண்டும்." என்றாள் நீனா சரிஸ்காவைப் பார்த்து.

"அப்படியா? வாங்க. அம்மா எங்கள் முறைப்படி தேநீர் தயார் செய்கிறார். பார்த்துக் கொண்டு வருவோம்." என்று அவள் கையைப் பிடித்து இழுத்தாள் சரிஸ்கா. நீனா எழுந்து அவளோடு சமையல் அறைப் பக்கம் சென்றாள். அப்படிப் போகும் போது,

"நீங்கள் உறைப்புச் சாப்பாடு சாப்பிடுவீர்களா?" என்று கேட்டாள் சரிஸ்கா.

"சாப்பிடுவேன். ஆனால் குடிப்பதற்குப் பால் வேண்டும். உறைப்புச் சேர்த்தால் சுவையாக இருக்கிறது. நாக்கு தான் எரிகிறது. அது பழகிப் போய்விடும் என்று நிமலன் சொல்கிறான். நீ அழகாக இருக்கிறாய். உனக்கு யாராவது ஆண் நண்பர் இருக்கிறாரா?" என்று சாதாரணமாய் அவள் கேட்டு விட்டாள். ஒரு கணம் சரிஸ்காவிற்குக் கோபம் பற்றிக் கொண்டு வந்தது. உடனே பேசாது தனது அறைக்குப் போக எண்ணினாள். பின்பு இது சாதாரணமாய் இங்கு எல்லோரும் கேட்கும் கேள்வி என்பதை விளங்கிக் கொண்டு தனது கோபத்தைக் கட்டுப்படுத்தினாள். சரிஸ்காவிடம் இருந்து பதில் வராததைப் பார்த்துவிட்டு,

"நான் கேட்டதில் ஏதாவது தவறா?" என்றாள்.

"இல்லை... இல்லை... எனக்கு அப்படி யாரும் இல்லை. படிப்பதற்கே எனக்கு நேரம் போதாது இருக்கிறது." என்றாள் சரிஸ்கா.

"படித்தால் மட்டும் இங்கே போதாது. சமுதாய வாழ்வும் வேண்டும். அதற்கும் கொஞ்சம் நேரம் ஒதுக்க வேண்டும் தானே? நான் சொல்வது சரியா?" என்றாள் நீனா.

"ம்… நீ சொல்வது சரி தான். என்றாலும் எனக்கு அதற்கு இப்போது நேரம் ஒதுக்க முடியாது."

"உனக்கு நிறையக் காலமாய் நிமலனைத் தெரியுமா?" என்று கேட்டாள் நீனா.

"இல்லை... இங்கு வந்த பின்பு தான் தெரியும்." என்றாள் சரிஸ்கா.

"உன்னைப் பற்றி மிகவும் உயர்வாக என்னுடன் நிமலன் கதைப்பான்." என்றாள் நீனா.

"ஓ அப்படியா?" என்றாள் சரிஸ்கா. பின்பு தாயைக் காட்டி,

"இவர் என்னுடைய அம்மா. பெயர் புவனலோசினி. நீ புவனா என்றே அழைக்கலாம்."

அவள் புவனலோசினிக்குக் கையைக் கொடுத்து தன்னை அறிமுகம் செய்து கொண்டாள்.

"அம்மா நீங்கள் ரீ போடுகிறதைப் பார்க்கப் போகிறாவாம்." என்றாள் சரிஸ்கா.

"ஓ நல்லாப் பார்க்கட்டும். ஆனா... இதில என்ன பார்க்க இருக்குது? வேணும் எண்டா ரொட்டி சுட்டுச் சம்பலும் அரைக்கிறது எப்பிடி எண்டு பார்த்திட்டுப் போய் அவனுக்குச் செய்து குடுக்கட்டும்." என்றாள் புவனலோசினி.

சரிஸ்கா அதை நீனாவிடம் கூறினாள். அவளுக்கு அது பெரும் சந்தோஷம் ஆகியது. பால்த்தேநீர் தயாரிப்பது பற்றி நிமலன் ஏற்கனவே காட்டிக் கொடுத்து இருந்ததால் அவளிற்கு அதில் கற்பதற்கு ஏதும் இருக்கவில்லை. புவனலோசினி கொடுத்த பால்த்தேநீரை வாங்கியவள் சரிஸ்காவைப் பார்த்து,

"எனக்குச் சேலை கட்டிப் பழக வேண்டும் என்று ஆசை. நீ எனக்கு உதவி செய்ய முடியுமா?" என்று கேட்டாள். சரிஸ்காவுக்கு ஏனோ சிரிப்பு வந்தது. அவள் சிரிக்கவில்லை. அப்படிச் சிரிப்பது அவளை அவமானப் படுத்துவதாய் ஆகிவிடும் என்று அவள் எண்ணினாள்.

"எனக்கும் சேலை கட்ட அவ்வளவாக வராது. அம்மாவைக் கேட்கிறேன்." என்று கூறிவிட்டுப் புவனலோசினியிடம் கேட்டாள். புவனலோசினி சாப்பிட்ட பின்பு ஆறுதலாகக் கட்டிப் பழகலாம் என்று கூறினாள்.

அன்று ரொட்டி சுட்டுச் சாப்பிட்ட பின்பு சேலை கட்டிப் பழகிவிட்டே நீனா புறப்பட்டுச் சென்றாள். இருவரையும் வழியனுப்பிய போது சரிஸ்காவிற்கு இதுவரை காலமும் நிமலன் மேல் இருந்த கோபம் அன்றோடு எங்கோ தொலைந்து போன மாதிரியான உணர்வு தோன்றியது. அது அவளுக்கு ஒரு வகைச் சந்தோசத்தைத் தந்தது. அவள் நிம்மதியாகத் தனது படுக்கை அறையை நோக்கிச் சென்றாள்.

# 8 சொரூபனுக்கு வந்த சோதனை

அருள் ஒஸ்லோவின் விபத்து மற்றும் அவசர மருத்துவப் பிரிவில் நின்று அலைபேசி மூலம் "TS"சோடு தொடர்பு கொண்டான். இப்படி வன்முறை ஆகும் என்று யாரும் எதிர்பார்க்கவில்லை. அதற்குள் சொரூபன் மாட்டுப்படுவான் என்கின்ற எண்ணமும் யாரிடமும் இருந்து இருக்கவில்லை. சொரூபன் விளையாட்டாகவே அந்த ஊர்வலத்திற்குச் சென்றான். அதற்கு முன்பும் இயக்கத்திற்குச் சார்பாக நிறைய ஊர்வலங்கள் ஒஸ்லோவில் நடந்து இருக்கின்றன. யாரும் அதற்குள் போய் குழப்பங்கள் விளைவிக்கவில்லை. விளைவிக்கவும் முடியாது. அந்த அளவிற்கு அவர்களுக்கு ஒஸ்லோவில் ஆதரவு இருந்தது. அறிவுஜீவிகளாய் இருந்த ஈழத்தமிழர்கள் இன்று அதை இழந்து உணர்ச்சியில் கண்மூடித்தனமாக அள்ளுப்படுவதை அதில் பார்க்க முடிந்தது. இருந்தும் ஒரு குறிப்பிட்ட பகுதியினர் போராட்டம் போகும் பாதை தவறு என்பதில் மிகவும் உறுதியாக இருந்தார்கள். இயக்கம் அப்பாவிகளைக் கொலை செய்வதை அவர்களால் ஒத்துக் கொள்ள முடியவில்லை. அது சிங்களவராய் இருந்தால் என்ன? தமிழராய் இருந்தால் என்ன? முஸ்லீம்களாய் இருந்தால் என்ன? ஆயுதம் ஏந்தாத அப்பாவிப் பொதுமக்களைக் கொல்வதற்கு யாருக்கும் அனுமதி இல்லை என்பதை அவர்கள் நம்பினார்கள். நம்புவதை மனதிற்குள் மட்டும் வைத்து இருந்தால் பிரச்சனை இல்லை. அதை மீறிச் சுலோகங்களோடு ஒஸ்லோவில் ஊர்வலம் போகவும் துணிந்தார்கள். நோர்வே அமைதியான நாடு என்பதால் நோர்வேயில் குடியேறி வாழும் வன்முறை தேசத்தவர்களும் அமைதியாக இருப்பார்கள் என்று தப்பாக எண்ணினார்கள்.

சொரூபன் அந்த ஊர்வலத்திற்குப் போவது என்று எண்ணி இருக்கவில்லை. குரன்லாண்டிற்குச் சென்றவனை விக்னேஸ் என்பவன் அதில் கட்டாயம் பங்கு கொள்ள வேண்டும் என்று வற்புறுத்தி அழைத்துச் சென்றுவிட்டான். அவன் அழைத்தாலும் இவன் சிந்தித்து இருக்க வேண்டும். மூளையை இழந்ததால் நாட்டை இழந்தார்களா அல்லது நாட்டை இழந்ததால் மூளையை இழந்தார்களா என்பது விளங்காது கண்மூடித் தனமான வன்முறை வெறியோடு திரிபவர்கள் என்ன செய்யலாம் என்று யோசித்து இருக்க வேண்டும். விக்னேஸ் இயக்கத்தில் இருக்கும் போது ஒரு

முகாமிற்கே பொறுப்பாக இருந்தவன். அவன் சொல்லைச் சொரூபனால் தட்ட முடியவில்லை. ஊர்வலத்திற்கு உதிரிகளாக முப்பது பேர் மட்டில் வந்து இருந்தார்கள். இயக்கத்தில் அதிர்ப்தியானவர்கள் நிறையவே ஒஸ்லோவில் இருக்கிறார்கள். தாங்கள் அதிர்ப்தியாளர்கள் என்பதை பகிரங்கமாகக் காட்டுவதற்கு அனேகருக்குத் துணிவு வருவது இல்லை. எதற்கு வீண் தொந்தரவு என்கின்ற தந்திரமான ஒதுக்கம். எதற்கும் துணிந்த அதிர்ப்தியாளர்கள் அந்த ஊர்வலத்திற்கு துணிந்து வந்து இருந்தார்கள். சொரூபனுக்கும் அவர்கள் கருத்தில் நியாயம் இருப்பதாகவே பட்டது. அப்பாவி மக்களைக் கொல்வதால் அரச பயங்கரவாதத்திற்கும் எங்கள் போராட்டத்திற்கும் வித்தியாசம் இல்லாமல் போய்விடும் என்கின்ற ஆதங்கம் விளங்கியது. ஆனால் பெரும்பான்மை தமிழருக்குப் பயங்கரவாதத்திற்கும் போராட்டத்திற்கும் வித்தியாசம் தெரியாத காலம் இது. அவர்களின் மொழியில் பயங்கரவாதமும் ஒரு வகைப் போராட்டம். அரச பயங்கர வாதத்திற்குப் பதிலுக்குப் பதில் அது ஒன்றே. அதை எவர் மீதும் பாவிப்பதும் நியாயமே. இப்படி அப்பாவி மக்களைக் கொன்று உலகமே இயக்கத்தைப் பயங்கரவாதிகள் என்றால் ஒரு காலத்தில் எங்கள் போராட்டமே பயங்கரவாதமாய் அடிபட்டுப் போகலாம் என்கின்ற கவலையும் பலரை அரித்தது. இருந்தும் மந்தைக் கூட்டமாக மக்கள் மாறியபோது மகான்கள் முன்னே நின்று என்ன செய்ய முடியும்? அல்லது அந்தச் செயற்பாட்டிற்கான அர்த்தத்தை அந்தக் கூட்டம் விளங்கிக் கொள்ளுமா? ஆனால் இது விளங்க வேண்டியவர்களுக்கு விளங்கி இருக்க வேண்டும். அவர்கள் விளங்காது விழலுக்கு விளக்கம் கொடுத்தது மேலும் வேதனை ஆனது. எதற்கும் கொலையே விடை என்பதாக நினைத்தவர்களால் போராட்டம் வழி நடத்தப்பட்டு கண்ணை மூடிக் கொண்டு சுவரோடு போய் தலையை முட்டுகிறது. அதுவே தமிழரின் தலை விதி ஆகிவிட்டது. அதுவே தந்திரமாகத் தியாகமாக அவர்களால் அழகாக வர்ணிக்கப் படுகிறது.

இங்கு வந்து சேர்ந்துவிட்டோம். இனி நாம் என்ன செய்ய முடியும்? ஏதாவது நடக்கட்டும். நாம் எங்கள் பாட்டைப் பார்த்துக் கொள்வோம். இயக்கத்திற்குப் போகாமல், ஊரில் ஒரு துரும்புகூடப் போராட்டத்திற்காய் எடுத்துப் போடாமல், வெளிநாட்டிற்குத் தப்பி ஓடி வந்துவிட்டு, தமது சுற்றங்களை எல்லாம் எடுத்து இங்கே வைத்துக் கொண்டு,

தமது இருப்பை காப்பாற்றிக் கொள்ள, கபடமாக கோஷம் போடும் வேலையைத் தன்னாற் செய்ய முடியாது என்பது அவன் நிலை.

வேற்று இயக்கமே இருக்கக் கூடாது என்று கூறியவர்களாவது போராடி வெற்றி பெறட்டும் என்று பேசாமல் ஒதுங்கி இருந்தவன் சொரூபன். அவன் தன்னை இப்படி ஒரு சந்தர்ப்பம் சிறை பிடிக்கும் என்று எண்ணி இருக்கவில்லை. போகும் போது மனது இல்லாவிட்டாலும் மனச்சாட்சிக்குச் சரியான விஷயம் என்றே அவனுக்குப் பட்டது. தானும் சில வேளை நாட்டிற்குப் போக வேண்டி வரும். இயக்கத்திற்கு எதிராகக் கொடி தூக்கிவிட்டு வன்னியைத் தாண்டிப் போக முடியாது என்கின்ற சுயநலமும் காலை நகரவிடாது பிடித்தது. குழந்தைப் பருவத்தில் இருந்த பொது நலங்கள் பின்பு வயது வரவர சுயநலங்களாய் திரிந்து கொண்டு போவதை அவனால் உணர முடிந்தது. இதனாலேயே குழந்தைகளைப் தெரிவு செய்து பிடிக்கிறார்களா என்கின்ற எண்ணம் அவனுக்குத் தோன்றியது. நாட்டிற்கு இனிப் போவது என்றால் யார் செய்வது பிடிக்காவிட்டாலும் பேசாமல் ஒதுங்கி இருப்பது என்பது அதற்கு வசதியான கொள்கை என்று அவனுக்குப் பிடிபட்டது. அந்தக் கொள்கையைக் கடைப்பிடித்தே சொரூபன் அதிகம் அலட்டிக் கொள்ளாது தானும் தன்னுடைய வேலையும் என்று இருந்தான். விதி அவனை விடவில்லை. விக்னம் தீர்க்கும் பெயர் உடையான் விக்னம் தருவதற்காய் அவன் கையைக் குரன்லாண்டில் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான். இப்படி நடக்கும் என்று தெரிந்து இருந்தால் அவன் அதைத் தட்டி விட்டு இருப்பான். விக்னேசின் நட்புப் பற்றிக் கவலைப்பட்டு இருக்க மாட்டான். வேண்டாம் என்று உதறிவிட்டு வந்த போது இந்த நட்புகளும் இனி வேண்டியது இல்லை என்கின்ற மனநிலை வந்து இருந்தது. பழகிய தோஷம் அதை நடைமுறைப்படுத்த விடுவதில்லை. கிடாரத்தின் மூடியில் ஐந்து நபருக்கான சோற்றையும், உருளைக்கிழங்கு போட்டு வைத்த இறைச்சிக் கறியையும், பருப்பையும் உப்பு நீர் விட்டுக் குழைத்து, சுற்றி இருந்து சாப்பிட்ட அந்த நினைவுகளும், தொடர்புகளும் இங்கு வந்தும் அறுந்து போக மறுத்தது இன்று அவனை வில்லங்கத்தில் மாட்டிவிட்டது.

உயிர் பிழைக்க மானத்தை விற்று, மற்றவர்களை இடையில் விட்டு, கள்ளர்கள் போல் ஓடி வந்து, விடுதலை வீரர்களாக, தியாகிகளாக, வேஷம் போடும் வியாபாரக்

கோமாளிகள் பற்றிச் சொரூபன் கவலைப்பட்டது கிடையாது. அவர்கள் செய்யும் ஊர்வலங்கள், கோஷங்கள் பற்றி அவனுக்கு எந்த அக்கறையும் இல்லை. மனிதாபிமானம் பார்க்காது, விடுதலை இயக்கம் என்கின்ற தூய்மை இல்லாது, அரச பயங்கர வாதத்தைப் பயங்கர வாதத்தால் மட்டும் அடக்க முற்படுவது, ஒரு நாள் எங்கள் போராட்டத்தைப் பாழும் கிணற்றில் தள்ளும் என்பது அவனது அடி நாதமான, ஆணித்தனமான கருத்து. அப்படி அது இருக்க, இந்த வியாபாரக் கோமாளிகள் கொடியோடு என்ன கோசம் போடுகிறார்கள் என்பது பற்றி அவன் அக்கறை கொண்டவன் அல்ல. இந்தக் கோமாளிகளுக்கு எதிராகக் கொடி பிடிக்க வேண்டிய அவசியம் இல்லை என்பதும் அவன் எண்ணம். என்றோ ஒரு நாள் இந்த வியாபாரக் கோமாளிகள் சருகுப் புலிகளாக உதிர்ந்து விடுவார்கள். ஏதோ ஒரு அரசியல் தீர்வோடு பறிபோன ஜனநாயகத்தில் சில துளிகளாவது திரும்பி வரும் என்கின்ற நம்பிக்கை அவனுக்கு இருந்தது. அவை எல்லாம் தற்போது தன்னால் பாதிப்பு ஏற்படுத்த முடியாத விஷயங்கள் என்பதை விளங்கிக் கொண்டு, தனது வாழ்க்கையை எப்படிச் செப்பனிடுவது என்பதில் மட்டும் அவன் கவனம் இருந்தது.

இன்று அந்தக் கவனம் விக்னேசால் குலைந்து போயிற்று. அதன் பலாபலன் விக்கினம் ஒன்று திடீரென வந்து விட்டது. அதுவும் இவ்வளவு பெரிய விக்கினம் தன் வாழ்வைப் பாதிக்கும் என்று அவன் கனவு கண்டதே இல்லை. இரண்டு மருத்துவர்கள் வந்து பார்த்துவிட்டுச் சென்று விட்டார்கள். இரத்தம் ஓடாது துணியை வைத்து இருக்கிறார்கள். அவர்களுக்கு என்ன செய்வது என்று தெரியாத குழப்பம் போல் இருந்தது. அருளனால் பதட்டத்தைத் தாங்க முடியவில்லை. "TS"சை முதலிற் கூப்பிடுவது சரியோ என்கின்ற எண்ணம் ஒரு கணம் வந்தது. "TS"சும் கண்ணை மூடிக்கொண்டு அவர்கள் செய்வதை ஆதரிக்கிறார். இவ்வளவு கதைக்கும் இந்த மனிதனுக்குக்கூட இந்தப் போராட்டம் எந்தத் திசையில் போகிறது என்பது விளங்கவில்லையா என்கின்ற கோபம் அவனிடம் வந்தது. பின்பும் அவருக்கு என்று ஒரு கருத்து இருக்கிறது. அதில் அவருக்குப் பூரண நம்பிக்கை இருக்கிறது. அவர் தனது கருத்தை ஒரு போதும் மற்றவர்கள் மேல் திணிப்பது இல்லை. யாருக்காகவும் விட்டுக் கொடுப்பதும் இல்லை. மற்றவர்களின் நிலை பற்றிச் சற்று என்றாலும் விளங்கிக் கொள்ளும் தன்மை

அவரிடம் இருக்கிறது. எங்களுக்குத் தெரிந்த ஒரு அனுபவம் முதிர்ந்தவர் அவர் மட்டும்தான். அரை அழைப்பதே சரி என்பதாய் அவனுக்குத் தோன்றியது.

"TS" வரும்போது மருத்துவர் மீண்டும் கட்டை அவிழ்த்துக் கண்ணைப் பரிசோதித்தார். "TS" அதைப் பார்த்துவிட்டு நிற்க முடியாது அறைக்கு வெளியே இருந்த கதிரையில் வந்து அமர்ந்தார். "தாயே துர்க்கை என்ன சோதனையடி?" என்று தனக்குள் பிதற்றினார். அருள் சிறிது நேரம் நின்று விட்டு வெளியே வந்து "TS"சிற்குப் பக்கத்தில் இருந்தான்.

"என்ன நடந்தது? ஏன் இப்படிக் காயம் வந்தது?" என்றார் "TS".

"அவன்ரை காலத்தைப் பாருங்க...? வேலைக்குப் போனவன், அதை முடிச்சுக் கொண்டு வீட்டை வந்து இருக்கலாம் தானே? அவன் விக்கினேஸ் கேட்டவனாம். இவனும் போனவனாம். எல்லாம் முடிஞ்சுது எண்டுதானே இங்க வந்து இருக்கிறம். பிறகு ஏன் உந்தத் தறுதலையளுக்குப் பின்னால அலைவான்? இவை கத்தியோ, அவை கத்தியோ ஏதும் நடக்கவோ, மாறவோ போகிறது இல்லை. யார் யாற்ற அரசியலுக்கு ஏற்ப அது நடக்கும் எண்டாவது யாருக்கும் தெரியுமா? விட்டிட்டு வந்திட்டம். அமைதியாகத் தானே நான் எல்லாம் இருக்கிறன். அவன் விக்கினேஸ் கேட்டா இவனுக்கு எங்க அறிவு போச்சுது? இப்பிடிக் கண்ணுக்க குத்தி இருக்கிறாங்கள். இப்படிக் கிடக்கிறதையும் ஒப்பிறேசன் பண்ணிச் சரி செய்ய முடியுமே? பார்க்க எனக்கே பயமாக் கிடக்குது. உண்மையைச் சொன்னா காயத்தை இரத்த வெடுக்கோடை பார்க்க வயித்தைப் பிரட்டுது." என்றான் அருள்.

அவன் மிகவும் உணர்ச்சிவசப்பட்டு இருந்தான். என்றும் இல்லாதவாறு சோகமாக, குழப்பமாக, கோபமாக அதன் பிடியில் தத்தளித்தான். அவன் இப்படி ஒரு அதிர்ச்சி வரும் என்று கற்பனை செய்து இருக்கமாட்டான். வந்த போது அவனால் தாங்க முடியவில்லை. ஊர் என்கின்ற பிணைப்பு, ஒரே குட்டைக்குள் ஊறிய மட்டைகள் என்கின்ற வெளிக்காட்ட முடியாத பாசம் அவனைப் பந்தாடியது. சொரூபன் வாழ வேண்டிய வயதில் உள்ளவன். கண் மனிதனுக்கு இவ்வுலக வாழ்வை உரித்துக் காட்டுவது. அது இல்லாத போது இருட்டே உலகம் ஆகிறது. காட்சிகளை மனதில் கற்பனையாக

வடிக்க வேண்டும். அதற்கும் அதைக் கண்ட அனுபவம் இருக்க வேண்டும். கண் இல்லாத மனிதன் சத்தம் எழாத இசை போல. பார்வை இல்லாத வாழ்வு பாதி வாழ்வு ஆகலாம். பரிதாப வாழ்வு ஆகலாம். சுந்தரர் கேட்ட அலையோசை போலவும் இருக்கலாம். அவனுக்கு இன்னும் பார்வை இருக்கிறது. அவனுக்கு மற்றைய கண்ணில் எந்தப் பாதிப்பும் இல்லை. ஒரு கண்தான் சிதைந்து போய்விட்டது. இந்த நிலையில் சிதைந்து கிடக்கும் கண்ணைச் சரி செய்வது நடக்குமா என்பது தெரியவில்லை. நடக்காவிட்டால் ஒற்றைக் கண்ணோடு வாழும் அவஸ்தையை அவன் அனுபவிக்க வேண்டும். ஒற்றைக் கண் என்றால் அவன் வாழ்வில் பல சிக்கல்கள் ஏற்படலாம். திருமணம் தள்ளிப் போகலாம். அன்றாட வாழ்வு, வேலை என்பதில் பாதிப்பு ஏற்படலாம். எல்லாம் சில கணங்களில் நடந்து முடிந்து விட்டது. இனி சொரூபன் அந்தத் தண்டனையை வாழ்நாள் பூராகவும் அனுபவிக்க வேண்டும் என்பது விதியாகி விடுமோ என்று அருளுக்குப் பயமாக இருந்தது. பக்கத்தில் "TS" இருந்தும் ஏனோ அவரோடு கதைக்காமல் இருக்க வேண்டும் என்கின்ற உணர்வு முதன் முதல் அவனுக்கு ஏற்பட்டது. அவன் அப்படி நினைப்பது மாகா தவறு என்று எண்ணினான். ஒவ்வொரு மனிதனுக்கும் ஒவ்வொரு கருத்து இருக்கும். அவரோடு ஒத்த கருத்துள்ள மூடர்கள், வன்முறையாளர்களாகச் செய்த தவற்றிற்கு அவருக்குத் தண்டனை கொடுக்க முடியாது. அவர் மேல் கோபித்துக் கொள்ள முடியாது. அவர் மேல் கோபித்துக் கொள்வதால் எந்தவித மாற்றமும் வந்துவிடப் போவதும் இல்லை. அவரது ஆதரவு எந்தப் பக்கம் இருந்தாலும் எல்லை கடந்தும் சிந்திக்கக் கூடியவர் அவர் என்று அவன் எண்ணினான்.

"TS" அருளின் தோள்மூட்டில் கை வைத்தார். அவர் மிகவும் கவலையில் மூழ்கி இருந்தார். சொரூபனுக்கு இது நடக்கும் என்று அவர் கொஞ்சம்கூட எதிர்பார்க்க வில்லை. எத்தினையோ குண்டுகள் விழுந்து வெடிக்கும் போது பாதுகாப்பாய் இருந்த கண் இன்று இந்தப் பாதுகாப்பான நாட்டில் அநியாயத்திற்குப் பறி போய் விட்டது. "TS"சிற்கு என்ன நடந்தது என்று விளங்க வில்லை. அருளிடம் அதைப் பற்றிக் கேட்கலாம் என்று தெரியும்.

"அருள் இனிக் கவலைப்பட்டு ஒண்டும் மாறப் போகிறது இல்லை. எதுவும் நடக்காது எண்டுகிற மெத்தனத்தில

இருக்க, இப்பிடியும் நடக்குமா எண்டுகிற மாதிரி நடக்கிறதையே விதி எண்டு சொல்ல வேணும். தான் மாட்டுப்படுவன் எண்டு தெரிஞ்சு இருந்தா சொரூபன் அங்க போய் இருக்க மாட்டான். மாட்டுப்படுவன் எண்டது தெரியாமல் மாட்ட வைக்கிறதே விதியாக இருக்க வேணும். நான் சொல்லுகிறது சரியோ தெரிய இல்லை. எனக்கு என்ன நடந்தது எண்டும் சரியாய் தெரியாது. இப்பிடி அவன்ரை கண்ணைப் பார்ப்பன் எண்டும் நான் கனவிலும் நினைக்க இல்லை." என்றார் "TS".

"இவன் வேலையால வரேக்க விக்கினேஸ் இவனை இடையில மறிச்சு எங்கடை ஆட்களின்ரை ஊர்வலம் போகுது எண்டு கூட்டிக் கொண்டு போனவனாம். இவனுக்குக் கொஞ்சமாவது மூளை இருந்திருக்க வேணும். எல்லாம் முடிஞ்சுது எண்டுதானே விட்டிட்டு இங்க வந்த நாங்கள். பிறகு மாற்றுக்கருத்து, மண்ணாங்கட்டிக் கருத்து, எங்கடை ஆட்கள் எண்டு போகிறதே? மற்றவன் சொல்லுகிறதிலும் அர்த்தம் இருக்கும் எண்டு அறிவு பூர்வமா சிந்திக்கிற மனிசர் எண்டா மாற்றுக்கருத்தைச் சொல்லிப் போராடலாம். இது இனவெறியில கொடி பிடிக்கிறவனுக்கு பாடம் படிப்பிக்க முடியுமே? சுயநலத்தோடை ஓடி வந்தவங்கள் தங்கடை இலாப நட்டத்திற்காய் என்னவும் செய்வாங்கள் எண்ட அறிவு இருந்திருக்க வேணும். அவங்கள் ஊர்வலம் செய்யேக்க நாங்கள் போய் இடையில குழப்பிறமா சொல்லுங்க "TS" அண்ணை? அந்தப் பண்பாவது அவங்களுக்கு இருக்க வேணும் எண்டு நினைக்கிறது எங்கடை முட்டாள்தனம். தேசியம் பேசலாம். விடுதலை பற்றிக் கதைக்கலாம். ஆனால் தேசியப் பித்துப் பிடிச்சு வெறியோடை அலையக் கூடாது. எல்லாம் ஒட்டுமொத்தமாய் ஒரு நாளைக்குத் தலையைப் பிச்சுக் கொண்டு அலையப் போகுதுகள். போராட்டமும் அழியப் போகுது." என்றான் அருள்.

"அருள் யாரோ ஒருவன் செய்ததுக்கு எல்லாரையும் அந்தத் தராசில போட்டு நிறுக்கக் கூடாது. போராட்டத்தையும் கொச்சைப் படுத்தக் கூடாது. அதே வேளை என்ன எண்டாலும் நடக்கட்டும் எண்டு நாங்கள் விட்டிட்டு இருக்கவும் ஏலாது. எங்களுக்கு உள்ள ஆயிரம் பிரச்சனைகள் இருந்தாலும் எங்கடை எதிரி யார் எண்டுகிறதிலை குழப்பம் இருக்கக் கூடாது." என்றார் "TS".

"அதுதானே பெரிய குழப்பம். யார் நண்பர் யார் எதிரி எண்டுகிறது போராடுகிறவங்களுக்கும் தெரிய இல்லை. பொது சனத்திற்கும் தெரிய இல்லை. எல்லாத்துக்கும் வன்முறையே வழி எண்டுகிறதை தேசிய விதி ஆக்கினதையும் பொறுக்க முடிய இல்லை. எப்ப தான் இவங்களுக்குப் புத்தி வருமோ?" என்றான் அருள்.

"ஆராவது ஒண்டு இரண்டுகள் இப்பிடிச் செய்யுங்கள். அதை வைச்சு அவங்கள் சொல்லுகிறது, செய்கிறது எல்லாம் பிழை எண்டு நினைக்கக் கூடாது. எங்களுக்கு ஒரு நாடு வேணும். அதுக்குப் போராடுகிறவங்களுக்கு உதவி செய்ய வேணும். அதுதான் என்னுடைய நிலை. அது சரி சொரூபனுக்கு என்ன நடந்தது? யார் இப்பிடிச் செய்தது?" என்றார் "TS".

"நாங்கள் எப்பவாவது அவங்கடை ஊர்வலத்தைக் குழப்பப் போய் இருக்கிறமே?' என்று அருள் மீண்டும் கூறிவிட்டுத் தொடர்ந்தான்.

'நாங்களும் எங்கடை பாடும் எண்டு இருக்கிறம். எங்கடை பக்கம் ஊர்வலம் செய்தாலே நாங்கள் போகிறது இல்லை. இப்படி ஏதாவது இசகு பிசகாக மாட்டினால் மட்டும் உண்டு. குழப்பிறத்துக்கு எண்டே காரில பொல்லுகள் தடியளோடை வந்து இருக்கினம். சின்ன ஊர்வலம் எண்டு பொலிஸ் வரவில்லையாம். அது அவங்களுக்கு வசதியாப் போச்சுது.

ஊர்வலம் தொடங்கிக் கொஞ்சத் தூரம் போனவுடன எந்தப் பக்கத்தால வந்தவங்களோ தெரியாதாம். திடீரென வந்து கொட்டன்களால அதில ஊர்வலம் போனவைக்கு கண்மண் தெரியாமல் அடிச்சு இருக்கிறாங்கள். பால், வயது பார்க்காமல் அதைச் செய்து இருக்கிறாங்கள். இப்பிடி வாங்கிறதும் எங்களுக்குப் பழகிப்போன ஒண்டுதானே? கொடி பிடிச்சவங்களிட்டை கொடியப் பிடுங்கி எறிஞ்சு இருக்கிறாங்கள். இவனும் அதைக் குடுத்திட்டு வந்திருக்கலாம். இவனுக்கும் அப்ப எண்டு பார்த்து பழைய ஓர்மம் வந்திருக்குது. பிடுங்குப்பாட்டில அவங்கடை பக்கம் நாலுபேராம். இவன் தனிய நிண்டு மல்லுக் கட்டி இருக்கிறான். பின்னால நிண்டு யாரோ நாரியில உதைஞ்சு இருக்கிறான். இவனிட்ட இருந்து பிடுங்கின தடிய நேர தூக்கிக் கண்ணுக்கு எதிரா முன்னுக்கு நிண்டவன் பிடிச்சு இருக்கிறான். எல்லாம் சட்டெண்டு நடந்திட்டுது. தடி கண்ணுக்க திடீரெண்டு பாய்ஞ்சிட்டுது. அதே நேரம் யாரோ

நொஸ்குகள் பொலிசுக்கு அறிவிக்க அவங்கள் வந்திட்டாங்கள். அடிக்கிறதும் ஓடுகிறதும் எல்லே அவங்கடை வீரம். யாருக்குப் பாதிப்பு வந்தாலும் அவங்களுக்குப் பிரச்சனை இல்லைத் தானே? அவங்கள் தப்பி ஓடிட்டாங்கள். பொலிஸ் அவங்களைத் தேடுது. பொலிஸ் பிறகு இவனை இங்க கொண்டு வந்து சேர்த்து இருக்குது. இவன் என்ரை நம்பரைக் குடுக்க அவங்கள் எனக்குப் போன் பண்ணினவங்கள். பொலிசோடை விக்கினேசும் வந்தவன். அவன் நான் வரும் வரைக்கும் நிண்டவன். பிறகு தனக்கு அலுவல் இருக்கு எண்டு ஓடுகிறான். அவன் தான் என்ன நடந்தது எண்டு சொல்லிப் போட்டுப் போகிறான். இனி யாரைக் கொண்டு போய் மாட்டி விடுகிறானோ தெரியாது." என்றான் அருள்.

"எங்கடை பல் ஊத்தையை நாங்களே குத்திக் காட்டிக் கொண்டு இருக்கிற மாதிரி... மாறி மாறி அடிபடுகிறது எங்கடை இனத்திற்கு நல்லது இல்லை. என்ன செய்கிறது, ஐஞ்சு விரலும் ஒரே மாதிரி இருக்கிறது இல்லையே? அவனவன் தனக்குச் சரியானதைத் தனக்கு ஆதாயம் உள்ளதைச் செய்கிறான். ஒவ்வொருத்தனும் உங்க தலைமை தாங்க நினைக்கிறதுக்குப் பின்னணியில நிறையக் காரணம் இருக்கும் அருள். பிழையளைச் சுட்டிக் காட்டுகிறது நல்ல விசயம். அதுக்கு நேரம், இடம், காலம் சரியா இருக்க வேணும். அது இல்லாமல் யாற்றை நன்மை பற்றியும் கவலைப்படாமல், ஒருத்தன் தன்ரை பல் ஊத்தையைக் குத்திக் காட்டுவான் எண்டா அதிலை பொது நலம் இருக்கும் எண்டு நான் நம்பமாட்டன். போகப் போக உந்த மாற்றுக் கருத்தாளற்றை மர்மமும் தெரியும். இந்தக் காலத்தில யாரையும் நம்ப முடியாது." என்றார் "TS".

"யாராவது என்ன வேணும் எண்டாலும் செய்து கொண்டு போகட்டும். அங்க கதியாலுக்கே அடிபட்டவன் எல்லாம் இங்க வந்தவுடன கர்ணனின் அவதாரமாய், காருண்ணிய புருசர்களாக மாறுவினம் எண்டு நானும் முழுமையா நம்ப இல்லை. என்ரை அடிமடியில கையை வைக்காமல், என்னோடை தனகாமல், அவன் என்ன செய்தாலும் எனக்கு அது பற்றி ஆட்சேபனை செய்கிறதுக்கு நேரமும் இல்லை, விருப்பமும் இல்லை. அந்தப் பொது நலம் எல்லாம் வெறுத்துப் போச்சுது. எனக்கு வேண்டியது அமைதி. ஆர்ப்பாட்டம் இல்லாத அமைதி." என்றான் அருள்.

"எங்களுக்கும் அதுதான் வேணும் அருள். தமிழருக்கு ஒரு நல்ல விடிவு வர வேணும் எண்டு ஒருவித தவிப்பு. இப்பிடி எல்லாம் நடக்கிறதைப் பார்க்க அருவெருப்பாய் இருக்குது. நான் எதையும் எதிர்பார்க்காமல் யார் போராடினாலும் விடுதலை கிடைச்சால் சரி எண்டு நினைக்கிறன். நீ சொல்லுகிற மாதிரி எல்லாரும் அப்பிடி நினைப்பாங்கள் எண்டு இல்லை. எண்டாலும் பயத்தில பெரிசாப் பிழை செய்ய மாட்டாங்கள் எண்டு நினைக்கிறன்." என்றார் "TS".

"என்ன நடந்து இனி என்ன அண்ணை மாறப் போகுது? இவன்ரை போன கண் இனித் திரும்பி வருமே?" என்றான் அருள்.

"வேதனையா இருக்குது அருள். அதைவிட நாங்கள் என்ன தான் செய்ய முடியும்? அவங்களோடையும் எல்லாத்தையும் கதைக்க முடியாது அருள். பலர் விளங்கிக்கொள்ள மாட்டாங்கள். ஆயிரம் அயிரமாய் போராட்டத்தில செத்திட்டாங்கள். ஆயிரம் ஆயிரமாய் இன்னும் நாட்டுக்காகப் போராடுகிறாங்கள். அதுக்கு ஒரு பிரியோசனம் இருக்க வேணும். அந்த அளப்பரிய தியாகங்களை ஒரு நாளைக்குக் கொண்டாடுகிற சந்தர்ப்பம் வரவேணும்." என்றார் "TS".

"ம்..." என்றான் அருள். அவனுக்குக் கவலையாக இருந்தது. கதைக்கவே சக்தி இல்லாதது போலச் சோகம் அவனின் உயிர்மூச்சை வக்கிரமாக வாங்கியது. யார் மீதும் காட்ட முடியாத கோபத்திலும், சோகத்திலும் அவன் தவித்தான். சிறிது நேரத்தில் அம்புலன்ஸ் வந்தது. அவனை உலவோல் வைத்திய சாலைக்குக் கொண்டு சென்றார்கள். "TS"சுடன் அருள் வீட்டிற்குச் சென்றான். வீட்டிற்கு அறிவித்து விட்டு மீண்டும் இருவரும் அந்த வைத்திய சாலைக்குச் செல்வதாக முடிவு செய்தார்கள்.

# 9 றூபனின் புது வாழ்வு

"TS" எட்டி எட்டி பார்த்துக் கொண்டு நின்றார். புவனலோசினி வருவதாகத் தெரியவில்லை. அவருக்கு அலுப்பாகவும் அந்தரமாகவும் இருந்தது. அவர் கோலை நோக்கிச் சென்றார். பெண்கள் வித்தியாசமான மனித ஜந்துக்கள் என்பது அவருக்கு விளங்கியது. அந்த ஜந்துக்களை ஆண்களோ அல்லது ஆண் ஜந்துக்களைப் பெண்களோ முழுமையாக ஆழம்காண முடியாது. ஒவ்வொரு செயலும் எதிர் பாலால் முழுமையாக விளங்கிக் கொள்ள முடியாத வில்லங்கம் ஆகவே இருக்கும். இயற்கை இந்த இரண்டு ஜந்துக்களையும் தனக்காக இணைக்கிறது என்பதும் அவருக்கு விளங்கியது. அந்த இயற்கையின் இணைப்பை அறுத்துக் கொள்ள முடியாத மனித வாழ்க்கை. அதனால் உண்டாகும் மனித இன்பங்களும் துன்பங்களும்.

நகரத்தின் மத்திய பகுதியில் வானம் தரையை முத்தமிடுவதாகத் தேங்கி நிற்கும் கனமான மாசுக் காற்றின் அசைவற்ற உறைவு. பூமியில் உறைந்த அந்தக் கரியமிலப் படைக்குள் வாகனங்களின் சக்கரங்களில் உள்ள ஆணிகளால் கிளப்பப்பட்ட தாரின் நுண்ணிய துகள்கள். அந்தக் காற்றையே மனிதர்கள் சுவாசிக்க வேண்டிய அசௌகரியம் குளிர் காலத்தை மனிதன் தொழில்மயத்தால் வெல்ல முயற்சிப்பதன் பயனாக இங்கே பெரிய நகரங்கள் எங்கும். நகரத்தில் வாழ்வதற்கான மனித தியாகங்கள் பல. அந்தத் தியாகங்கள் பல வசதிகளையும் கொடுக்கிறது என்பதும் உண்மையே. அதற்கான தண்டனையாக வாகனங்களின் இரைச்சல் மனிதக் காதின் மாசாக. மனித மனதை அது அமைதி இன்றிக் குடைந்து எறியும் காதால் நுழையும் புழுவாக. இருந்தும் அந்த வாகனங்களின் போக்குவரத்தால் பனி விரைவாகக் கரைந்து போகும் மாயம் ஒரு வகைச் சுகமாக. அத்தால் வழுக்காமல் தெருவில் நடப்பதற்கும் அது வசதியாக அமையும். சித்திரை பிறந்தால் பனியை மத்திய நகரப் பகுதிகளில் காணமுடியாது. அப்படிக் கொட்டினாலும் அது விரைவாகக் கரைந்துவிடும். பனி கரைந்து போகச் சூரியனும் தனது கதிர்களில் வெப்பத்தை ஏற்றிப் பரிவோடு மகவு பூமியின் மேல் அன்புக் கதிர்களாக அரவணைக்க, மனிதர்களும் அதனால் உற்சாகமாக, சந்தோஷமாக, சுறுசுறுப்பாக இயங்குவது

உண்டு. வெயிலைக் கண்டவுடன் மனிதன் சந்தோஷமாகிச் சுறுசுறுப்பு ஆகினாலும் வேலைத் தளத்தில் இருக்கும் நிலைமை சில வேளை அனைத்தையும் தலைகீழாய் மாற்றிவிடுவதும் உண்டு. மனித வாழ்வில் மூன்றில் ஒரு பகுதியை வேலைக்காகச் செலவு செய்கிறோம். அதில் குழப்பங்கள், சங்கடங்கள் வந்தால் அது அந்த மனிதனை மிகவும் பாதிக்கிறது.

*

சரிஸ்கா இன்று வேலையால் வந்ததும் அறைக்குள் சென்று படுத்தவள் வெளியே வரவில்லை. சரிஸ்காவை "TS" விளங்கிக் கொள்ள முயன்று தோற்றதான சோர்வு. எப்போது அவள் எப்படி மாறுவாள் என்பது யாருக்கும் புரியாத புதிர். வேலையால் வரும்போதே சிடுசிடுப்புடன் வந்தாள். அவள் அப்படி வரும் போது புவனலோசினியோ அல்லது "TS"சோ எதுவும் கதைப்பது இல்லை. அப்பா அம்மாவிற்குப் பயந்த காலம் போகப் பிள்ளைகளுக்குப் பயப்படும் காலம் வருகிறது என்பதை "TS" பல இடங்களில் கண்டு இருக்கிறார். சரிஸ்கா அப்படி இல்லை என்றாலும் அவள் மனக் கொதிப்பு அப்படிச் செய்ய வைக்கிறது. அப்படி வந்த சரிஸ்கா சாப்பிடாது படுத்துக் கொண்டாள். ஏதாவது மனக் கொதிப்பு ஏற்பட்டால் சாப்பிடாது படுத்துக் கொள்வது அவள் வழமை. அவள் உடம்பு மெலிந்து போவதாகப் புவனலோசினிக்குக் கவலை. மனம் என்பது மிகவும் சிக்கலானது. மருத்துவர்களும் புகுந்துவிட முடியாத மர்மமும், ஆழமும் அதனிடம் உண்டு.

"TS"சிற்குத் தனது நிலையை எண்ணச் சில வேளைப் பரிதாபமாய் இருக்கும். சரிஸ்காவிற்குப் பிரச்சனை என்றால் அவள் முதலில் புவனலோசினி மீதே அதைக் காட்டுவாள். நிலைமை புரியாது கட்டளை இட்டு மாட்டிக் கொள்வது புவனலோசினியின் வழக்கம். அவளுக்குச் சரிஸ்காவைப் போலப் பாதிப்பு முதலில் இருந்தாலும் அது காலப் போக்கிற் கரைந்து இப்போது வழமைக்குத் திரும்பி விட்டாள். இருந்தும் சில வேளைகளில் மட்டும் மப்பாகிப் போகும் அவள் முகத்தைப் பார்க்க "TS"சிற்குப் பரிதாபம் உண்டாகும். சரிஸ்காவிடம் தனக்குப் பிழைக்கும் போது அவள் அதை "TS"மேல் காட்டுவது அவருக்குத் தெரியும். அதை எண்ணும் போது அவருக்குக் கவலையாகவும், பரிதாபமாகவும் இருக்கும். இருந்தும் இரண்டு பேரும் ஒரே

மாதிரியாக அவஸ்த்தைப்படாது புவனலோசினி தேறி இருப்பது "TS"சிற்கு நிம்மதி தந்தது.

இன்று சரிஸ்காவின் அவஸ்தையால் புவனலோசினியும் குழம்பிப் போய்விட்டாள். சரிஸ்காவை வழமையாகவே றூபன் வீட்டிற்கு அல்லது மற்றவர்களின் வீட்டிற்கு வாவென்று கட்டாயப்படுத்த முடியாது. இன்று அவளிடம் அதைப் பற்றிக் கேட்கவே முடியாது. இன்று என்ன நடந்தது? ஏன் கோபமாய் இருக்கிறாள் என்பது பற்றி "TS"சிற்கு அறிய விருப்பம் இருந்தாலும் அதைக் கேட்கும் துணிவு அவரிடம் இருக்கவில்லை. அந்தச் சிக்கலுக்குள் தலையை நீட்டாது றூபன் வீட்டிற்குச் சென்று வருவோம் என்றால் புவனலோசினி இன்னும் தயாரானதாய் தெரியவில்லை. கழற்றிக் கழற்றி அணிவதில் காலத்தை மறந்து போகும் அற்புதப் பிறவிகள். "TS" அலுத்துப் போய் தொலைக்காட்சியைப் பார்க்கத் தொடங்கினார்.

அவர் அதை எதிர் பார்க்கவில்லை. திடுமேனச் சரிஸ்கா எழுந்து வந்து சோபாவில் இருந்தாள். அவளின் சினமான பார்வை ஒன்று "TS"சில் விழுந்தது. அதை விளங்கிக் கொண்டு "TS",

"என்னை ஏன் அப்பிடிப் பார்க்கிறாய்? நாங்கள் றூபன் வீட்டை போட்டு வரப்போகிறம். உனக்கு இப்ப தலையிடி எப்பிடி இருக்குது? நீயும் எங்களோடை வாறியா?" என்றார்.

"உப்பிடி ஏதோ கேட்கப் போறியள் எண்டு எனக்கு அப்பவே தெரியும். உங்களுக்கு வடிவாத் தெரிஞ்சாலும் றை பண்ணுகிறதை விடமாட்டியள். நான் வரமாட்டன் எண்டது நல்லாத் தெரியும் தானே? எண்டாலும் உங்களுக்கு ஒருக்கா என்னை சும்மா இழுக்க வேணும்." என்றாள் சரிஸ்கா.

"ஏதாவது மனமாற்றம் உண்டாகி நீ வருவாயோ எண்டுகிற நப்பாசை எனக்கு." என்றார் "TS" அவள் சினம் கொள்வதைப் பற்றிக் கவலைப்படாது.

"நான் வர இல்லை... அதை விடுங்க அப்பா." என்றாள் சரிஸ்கா.

"சரி."

அதற்கு இடையில் சரிஸ்காவைக் கேட்காமலே சாப்பாட்டைத் தட்டில் போட்டு எடுத்துக் கொண்டு வந்து

புவனலோசினி அவளிடம் நீட்டினாள். அதைப் பார்த்த சரிஸ்காவின் அக்கினிப் பார்வை மேலும் உக்கிரம் ஆகியது.

"நான் உங்களை இப்ப சாப்பாடு கேட்டனா?" எனப் புறுபுறுத்த வண்ணம் சாப்பாட்டை வாங்கி அழையத் தொடங்கினாள். புவனலோசினி அவள் குடிப்பதற்கு நீரும் கொண்டு வந்து வைத்துவிட்டு மீண்டும் தனது அலங்காரத்தைச் சரி பார்த்துக் கொள்ள தங்களது படுக்கை அறைக்குச் சென்றாள்.

சோற்றை அழைந்து ஒரு வாய் வைத்த சரிஸ்கா அதை நிறுத்திவிட்டு "TS"சைப் பார்த்தாள்.

"என்ன சாப்பிடாமல் யோசிக்கிறாய்? முதல்ல சாப்பிடு." என்றார் "TS".

"ஒஸ்லோவுக்கு இப்ப நிறையத் தமிழ் சனங்கள் வந்திட்டுதுகள். ஆளைத் தெரியாத துணிவில விழுங்குகிற மாதிரிப் பார்க்குதுகள் அப்பா. அதுவும் எங்கடை கிளினிக் இருக்கிற இடத்திற்கு முன்னுக்கு இருக்கிற வஸ் ஸ்ராண்டில நிண்டு தூங்குதுகள். அவையும், அவையின்ரை பார்வையும். அவங்களுக்கு வேலையே இல்லை ஆக்கும். ஓசிக் காசை எடுத்துக் கொண்டு ஊரளந்து திரியுதுகள். எனக்கு இப்ப வேலைக்குப் போகவே விசராக் கிடக்குது. மனிசருக்கு எவ்வளவு வேலை இருக்குது. அதுகள் வந்து அதில நந்தி மாதிரி நிக்குதுகள் அப்பா." என்றாள் சரிஸ்கா.

"யாரும் தெருவில நிக்கிறதுக்கு நாங்கள் இந்த நாட்டில ஒண்டும் செய்ய முடியாது. எதுக்கும் நாளைக்கு நான் உன்ன வேலைக்குக் கொண்டு வந்து விடுகிறன். அதுக்குப் பிறகும் நிக்கிறாங்களோ எண்டு பார்ப்பம். உதுக்கு எல்லாம் பெரிசாக் கவலைப்படாத. சரியா?" என்றார் "TS".

"எனக்கு ஏதோ அப்பிடியானதுகளைப் பார்த்தாக் கெட்ட கோவம் வருகுது. நானும் என்னைக் கட்டுப்படுத்த வேணும் எண்டு பார்க்கிறன். முடியல்ல அப்பா. நான் என்ன செய்யட்டும்?" என்றாள் சரிஸ்கா.

"நீ ஒண்டும் செய்ய வேண்டாம்... பேசாமல் றிலக்சா இருக்கப் பார். எந்தப் பதிலும் இல்லாமல் இருந்தா எல்லாரும் கொஞ்ச நாள்ல அலுத்துப் போய் தங்கடை

பாட்டில போவினம். சும்மா நாங்களும் ஏதாவது சொல்லப் போனால் அது தொடர் கதையாகும்." என்றார் "TS".

"சரி... நாளைக்கு நீங்களும் வாங்க. பிறகு பார்ப்பம்." என்றாள் சரிஸ்கா.

புவனலோசினி கட்டி அவிழ்த்துக் களைத்துப் புறப்பட்டு வந்தாள்.

"ம்... அம்மா நல்லா வெளிக்கிட்டு இருக்கிறியள்." என்று கூறிப் புருவத்தை உயர்த்திக் காட்டினாள் சரிஸ்கா.

"அம்மாவுக்கு எண்டே ஒரு வியூட்டிப்பாலர் வைச்சுக் குடுக்க வேணும்." என்றார் "TS".

"சும்மா இருங்க... ஆகவும் டள்ளாப் போன எங்களைப் பட்டிக்காடு எண்டு நினைப்பினம். உங்களுக்கு என்ன தெரியும்? ஊரில மாத்து உடுப்புக்கு வழி இல்லாமல் திரிஞ்சதுகள் எல்லாம் இங்க மகாராணி மாதிரி வெளிக்கிட்டு வருங்கள். நாங்கள் அப்ப பட்டிக்காடுகளாட்டம் போகிறதே?" என்றாள் புவனலோசினி. அவள் குளியல் அறைக்குள் சென்று நெற்றியில் குங்குமம் வைத்துக் கொண்டு திரும்பி வந்தாள். நம்பிக்கை தான் வாழ்க்கை என்பது "TS"சிற்கு விளங்கியது. தண்ணியைத் தலையில் ஊற்றினால் என்ன நெருப்பில் குதிக்க விட்டால் என்ன? நம்பிக்கை இல்லாவிட்டால் வாழ முடியாது என்பதும் பூரணமாக விளங்கியது.

புவனலோசினி வெளியே நிலவும் குளிராலும், கொய்யகம் பிடிக்கும் அலுப்பாலும் இப்போது புடவை கட்டுவது குறைவு. அது ஏதாவது பெரிய பொது விசேஷங்களுக்கு எல்லோரும் புடவை காட்டும் திருவிழாவில், தானும் வேறு வழி இன்றிக் காட்ட வேண்டும் என்பதாக மட்டும் இப்போது சுருங்கிக் கொண்டது. சேலை கட்டிக் கொண்டு இந்தக் குளிருக்குள்ள நடக்க முடியாது. புடவை கட்டிக் கொண்டு சென்றால் அதை இங்கு வினோதமாகப் பார்ப்பார்கள் என்கின்ற துணைக் காரணங்களும் அவளிடம் உண்டு. அந்த வினோதப் பார்வையில் வெறுப்பல்ல ஒருவித ஆர்வமே பொங்குவதும் உண்மை. பொதுவாகச் சேலை கட்டாவிட்டாலும் தமிழ் வைபவங்களுக்குப் புடவை கட்டியே அனேகர் வருவார்கள். கட்ட வேண்டும் என்பதிலும் காட்ட வேண்டும் என்கின்ற அடக்க முடியாத அவஸ்தையை அதில் பார்க்க முடியும். அங்கே தங்கள் செல்வச் செழிப்பிற்கு இலவச விளம்பரம் கிடைக்கும்

என்கின்ற அவா பலருக்கு. அரை இறாத்தல் பாணிற்கு அடுத்த வேளை என்ன செய்யலாம் என்பவர்களிடம் அரைக் கிலோ தங்கம் கிடைத்தால் என்ன செய்வது என்பது பெரும் பிரச்சனையாக இருப்பது போல இதுவும் ஒன்று. அந்தப் பிரச்சனைக்குத் தமிழரின் தனி நபர் வைபவங்களான கலியான வீடுகளும், பிறந்த நாள் கொண்டாட்டங்களும் உதவி செய்கின்றன. எது எப்படி இருந்தாலும் இது அவர்களுடைய சொந்த உழைப்பால் விழைந்தவை. அதை என்ன செய்ய வேண்டும் என்கின்ற பூரண சுதந்திரம் அவர்களுக்கே உரியது என்பதையும் யாரும் மறுக்க முடியாது.

புவனலோசினி இப்போது சேலை கட்டுவதை இடம், வசதி கருதிக் குறைத்ததோடு தங்கம் வேண்டும் என்றும் அடம்பிடிப்பதும் கிடையாது. இங்கே உள்ளவர்களும் தங்கத்தை அள்ளி அணிந்து செல்வது கிடையாது. அது தெற்காசியர்களுக்கே உரிய உலோகம் என்பது போல இவர்கள் தொட்டும் தொடாமலும் பாவிப்பார்கள். எம்மவருக்கு எதை எடுத்தாலும் தங்கம் என்கின்ற பைத்தியம். இந்தப் பைத்தியங்கள் குடியேறும் நாடுகளையும் காலப் போக்கில் கெடுத்து விடுவார்கள் என்பது "TS"சின் எண்ணம்.

"என்ன போறேல்லையே? யோசிச்சுக் கொண்டு நிக்கிறியள்?" என்று வார்த்தைகளால் நிலமையைத் தலை கீழாய் புரட்டிப் போட்டாள் புவனலோசினி.

"நான் ஒண்டும் யோசிக்க இல்லை. வா... போவம்." என்றார் "TS". அவர் மேற்கொண்டு கதையை வளர்க்க விரும்பாது உடனடியாகப் புறப்பட்டார்.

"சரிஸ்கா... கம்வேர்கர் எடுத்து வெளியாலை வைச்சு இருக்கிறன். செய்து சாப்பிடு. நாங்கள் வர எப்பிடியும் நடுச் சாமம் ஆகிடும். சரியே? யாருக்காகவும் நீ கதவு திறக்கத் தேவை இல்லை. நாங்கள் திறப்பு கொண்டு போகிறம். விளங்குதே?"

"சரி எல்லாம் விளங்குது."

*

றூபன் மோத்தன்ஸ்றூட்டில் வீடு வாங்கி இருந்தான். மோத்தன்ஸ்றூட் ஒஸ்லோ நகரப் பகுதியில் இருந்து தூரத்தில் உள்ள ஒரு பகுதி. அதுவும் கிழக்கு மேற்கு

என்று பிரிந்த ஒஸ்லோவில் அது கிழக்குப் பகுதியில் இருக்கிறது. தூரத்தில் இருந்தாலும் சுரங்கரதமும் பேருந்துகளும் போக்குவரத்தைச் சுலபம் ஆக்கின.

அது கிழக்குப் பக்கத்தில் ஒதுங்கி இருப்பதாலும், வெளிநாட்டுக்காரர் அதிகமாகக் குடியிருப்பதாலும் அங்கு வீடுகள் மலிவாக விற்கும். அதனால் அவன் தெரிவு அதுவாகியது. தற்போதைக்கு ஒருவர் மட்டுமே வேலை செய்து செலவைக் கவனித்துக் கொள்ள வேண்டும் என்பதைக் கருத்தில் எடுத்துக் கொண்டு அதை வாங்கினான். அந்தப் பகுதியில் அதிகமான பாக்கிஸ்தான்காரரும், சோமாலியாக்காரரும் குடியிருந்தார்கள். அங்கு யார் குடியிருக்கிறார்கள் என்பதைப் பற்றி எல்லாம் றூபனுக்கு அக்கறை இல்லை. இருப்பதற்கு ஒரு நல்ல வீடு கிடைத்தால் போதும் என்பதே அவனுடைய தற்போதைய எண்ணம். அவனால் இரண்டு படுக்கை அறைகள் கொண்ட ஒரு வீட்டை இங்கே வாங்க முடிந்தது. அவன் தூர இடத்தில் வீடு வாங்கிவிட்டதால் "TS" நேரம் செலவு செய்து அவனின் வீட்டிற்குச் சென்றது இல்லை. இப்போது அவனது காதலியாய் இருந்து, மனைவியாய் மாறிய சொந்தக்காரப் பெண் சிங்கப்பூரில் இருந்து வந்திருக்கிறாள். புதிதாக வீடு வாங்கினால் அல்லது கலியாணம் செய்து வந்தால் அவர்கள் வீட்டிற்குப் போய் வருவது இங்கு வழமையான நடைமுறை ஆகிவிட்டது. பின்பு அவர்களும் வந்தவர்கள் வீட்டிற்குப் போவார்கள். வழமை போல இவனுக்கும் பரிசுப் பொருளாக "TS" பாத்திரங்கள் வாங்கி வைத்து இருந்தார். குடும்பம் தொடங்குவதற்கு அவை முக்கியம் என்பது அவர் எண்ணம். "TS" புவனலோசினியோடு அவர்கள் வீட்டைக் கண்டு பிடித்து உள்ளே சென்ற போது அங்கே ஏற்கனவே அருளும், சொரூபனும் வந்து இருந்தார்கள்.

வீடு கச்சிதமாய் இருந்தது. எந்த வேலையும் செய்ய வேண்டி இருக்கவில்லை என்று றூபன் ஏற்கனவே கூறி இருந்தான். முதலில் குடியிருந்தவர்கள் இரண்டு வருடத்திற்கு முன்பு உள் வேலை செய்து இருக்கிறார்கள். ஐந்து நட்சத்திர விடுதியின் பளபளப்பில் உள்ளே மினுங்கியது. சுவருக்கு மெல்லிய ரோஜா நிறம் பூசி இருந்தார்கள். அது சற்று வித்தியாசமாக இருந்தது. றூபன் பெரிதாகத் தளபாடங்கள் வாங்கிப் போடவில்லை. கோலில் ஒரு சோபாவும் அதன் மேசையும், தொலைக்காட்சிப் பெட்டியும் மட்டுமே இருந்தன.

அதைவிடப் படுப்பதற்குக் கட்டில், கழுவும் இயந்திரம், அடுப்பு என்று மிகவும் சிக்கனமாகக் குடும்பம் நடத்தத் தொடங்கி இருந்தான். றூபன் விளையாடிக் கொண்டு திரிந்தவன் என்பது "TS"சின் கருத்து. இப்போது அவனுக்குப் பொறுப்பு வந்திருக்கும் என்று அவர் நினைத்துக் கொண்டார். கோலில் றூபன் "Tube light" ஒன்றைப் போட்டு இருந்தான். அது மிகவும் பிரகாசமாய் ஒளிர்ந்தது. சுதேசிகள் மிகவும் பிரகாசமாய் ஒளிரும் மின் குமிழ்களைக் கோலில் போடுவது இல்லை. ஊரில் நாங்கள் "Tube light" பாவித்த பாதிப்பு இங்கும் தொடர்வதாய் "TS"சிற்குத் தோன்றியது.

"TS" சென்று சோபாவில் இருந்தார். அவருக்குப் பக்கத்தில் புவனலோசினி அமர்ந்தாள்.

"வாங்க "TS" அண்ணை. இண்டைக்குத்தான் உங்களுக்கு எங்கடை வீடு தெரிஞ்சு இருக்குது." என்றான் றூபன்.

"வரக்கூடாது எண்டே றூபன்? நேரம்... தூரம்... சொறி... சொறி... இப்ப முக்கியமான விஷயத்துக்கு வந்து இருக்கிறம் தானே? ம்... சும்மா எல்லாத்துக்கும் கொம்பிளையின் பண்ணக் கூடாது." என்றார் "TS".

"அவரு அப்படித் தாங்க... கொம்பிளையின் பண்ணுகிறதிலை றெம்பக் கெட்டிக்காரர்." என்ற வண்ணம் வந்து அமர்ந்தாள் மலர்.

மலர் ஐந்து அடி உயரம் இருப்பாள். மெல்லிய கொடி போன்ற உடம்பு. அச்சில் வார்த்த முத்து போன்ற அழகான பற்கள். முகத்திற்கும் உதட்டிற்கும் யாழ்ப்பாணத்து வழமைக்கு எதிராகத் தாராளமாய் அரிதாரம் பூசி இருந்தாள். கண்ணுக்கு மேலும் மை தீட்டி அதைத் துள்ளிப் பாயும் மீனாக்கித் துடிக்க வைத்த வித்தை. நகங்களில் வைரம் போன்று சிவப்பாகச் சாயம் ஒளிர்ந்தது. தலை முடியை அரைக் குடை போலச் சிலுப்பி விட்டிருந்தாள். மெல்லிய சிவப்பு நிறத்தில் சுடிதார் உடலை அளவாகக் காட்டும் பொருத்தத்தில் அணிந்த கச்சிதம். அவளது தமிழில் யாழ்ப்பாண வாசம் அற்ற அன்னியம் தெரிந்தது.

அவள் இலங்கையில் இருந்து சிங்கப்பூரிற்குச் சென்று அங்கே வாழ்ந்தவர்களின் வழித் தோன்றல். தமிழ் எப்படியோ அங்கு இருக்கும் பெரும்பான்மைத் தமிழர்

பேசுவது போலத் திரிபடைந்து விடுகிறது. இந்தியத் தமிழர்கள் தாங்கள் பேசுவதை இலகுவில் விட்டு விடுவதில்லை என்று "TS"சிற்குத் தெரியும். இலங்கையின் மலை நாட்டில் வாழ்பவர்கள் அதை நூற்றாண்டுகள் கடந்தும் தொடர்கிறார்கள். நாங்கள் எப்படி எங்கள் தமிழைக் காப்பாற்றுவோம் என்பதை இனிவரும் காலமே சொல்ல வேண்டும் என்று "TS" நினைத்தார்.

"பேசிச் செய்ததே? இவ கதைக்கிறது ஒரு மாதிரி இருக்குது?" என்றாள் புவனலோசினி பாமரத்தனமாக.

"இல்லையக்கா. உங்களுக்கு ஆளைத் தெரிஞ்சிருக்க வாய்ப்பில்லை. இவ ராசதுரையின்ரை பேத்தி. அப்பவே தகப்பன் சிங்கப்பூர் போனவர்... பிறகு திரும்பி வர இல்லை. இவ அங்க தான் பிறந்தவா. நான் இங்க வரமுதல் ஒருக்காச் சிங்கப்பூர் போனனான். அவர் எங்களுக்கு மாமா முறை தானே? அதால போய் பார்த்துக் கொண்டு வரலாம் எண்டு போனன். மாமா வீட்டில அழகான மகள் இருந்தது எனக்கு அப்பதான் தெரியும். பிறகு என்ன அண்ணலும் நோக்க அவளும் நோக்க மாமா சகிக்க முடியாமல் தலையில அடிச்சுக் கொண்டு திரிய, மாமி எதுக்கும் நீ முதல்ல ஒரு வெளி நாட்டுக்குப் போன பிறகு எங்களோடை தொடர்புகொள் எண்டு சமாதனம் சொல்லி அனுப்பி வைச்சவா. அவவின்ரை சமாதானத்தை நாங்கள் நம்ப இல்லை. அண்ணலும் நோக்கி அவளும் நோக்கினது இறுகி, இறுகி இதயம் போகுதே எண்டுகிற அளவுக்குக் காதல். கடைசியில அது கலியாணத்தில முடிஞ்சுது. ஊரில இருந்து எல்லாரும் சிங்கப்பூர் வந்து விமர்சையாக கலியாண வீடு நடந்தது. விட்டுப் போன உறவுகள் திரும்பச் சேர்ந்த சந்தோஷம் எல்லாருக்கும். எனக்குச் சிங்கப்பூர் சிங்காரி கிடைச்ச புளுகமக்கா." என்றான் ரூபன்.

"நம்மட அம்மா இராமநாதபுரப் பக்கம். அதால கலியாணத்துக்குப் பிறகு யாழ்ப்பாணக் கொண்டாட்டம் எல்லாம் குறைஞ்சு போச்சுதாம். இந்தக் கலியாணமும் நடக்குமோ எண்டு முதல்ல சந்தேகமாக இருந்திச்சுது. அப்பாவுக்குச் சுத்தமா நம்பிக்கை இல்லை. காதல் எண்டு சொல்லிக் கொண்டு அலையாத எண்டாங்க. அது ரூபன் ஸ்ரோங்கா நிண்டவர். அதோடை இப்ப அவையும் மாறீட்டினம்." என்றாள் மலர்.

"அப்ப நீங்கள் ஒண்டுக்க ஒண்டு..." என்றாள் புவனலோசினி.

"நீங்கள் வேறை அக்கா. இதுக்கே எவ்வளவோ பிரச்சனை. இதைவிட ஏதாவது பிசகினால் அவையோடை மல்லுக்கட்டி இருக்க முடியாது. அவையப் பகைச்சுக் கொண்டு குடும்பம் நடத்தோணும் எண்டு நான் நினைக்கேல்லை. எப்பிடியோ நல்லபடியா முடிஞ்சிட்டுது." என்றான் றூபன்.

"அந்தச் சீக்கயெம் வேலைக்கு றை பண்ணி நீங்கள். அந்த வேலை என்னவாப் போச்சுது அண்ணை?" என்றான் அருள் "TS"சைப் பார்த்து.

"அது கிடைச்சிது. ஆனா... அந்த லீடர் மாறிப் போயிட்டாள். அதுக்குப் பதிலா இன்னொருத்தி வந்திருக்கிறாள். கடவுள் தான் இனி எங்களை அவளிட்டை இருந்து காப்பாத்த வேணும். ஏகப்பட்ட சட்டதிட்டங்கள். கழுவ வேண்டிய இடத்தை இருபது வீதம் கூட்டித் தந்து இருக்கிறாள். தொழிற்சங்கத்தில முறையிட்டு இருக்கிறம். பேச்சு வார்த்தை நடக்குது. எங்களைப் போட்டு வதைச்சு மிச்சம் பிடிக்கப் போகிறாவாம். அப்பிடி மிச்சம் பிடிச்சா அவவுக்குக் கெட்டிக்கார லீடர் எண்டு பெருமை தானே? எங்கையும் அடிமட்டத் தொழிலாளிகளா வேலை செய்யக் கூடாது. படிச்சிட்டு நல்ல உத்தியோகத்தில இருக்க வேணும். இல்லாட்டிச் சொந்தமா தொழில் செய்ய வேணும். அடிமட்டத் தொழிலாழிகளிலேயே அத்தினை சுரண்டலும் முதல்ல பாயும். இங்க இந்த யூனியன் இருக்கிறதிலை ஒரு பாதுகாப்பு. ஏதும் பெரிய பிரச்சனை எண்டால் எங்களுக்காகவும் கதைப்பாங்கள். காசு வெட்டினாலும் பருவாய் இல்லை. எங்களுக்காகவும் கதைக்கிறதுக்கு ஆட்கள் இருக்கிறது பெரிய துணை தான். பேச்சு வார்த்தை என்னவா முடியும் எண்டு தெரியாது. இப்ப அவவால எதுவும் செய்ய முடியாட்டியும் அவள் பிறகு நிச்சயம் றை பண்ணுவாள். அதைவிட இப்ப உள்ள போற ரைம் பதிய வேணும். அதே போல வெளிய வாற ரைமும் பதிய வேணும்.

நேரம் குறைஞ்சா அதுக்குப் பதில் சொல்ல வேணும். முன்ன மாதிரித் தந்த ஏரியாவை மட்டும் செய்து போட்டு ஓட ஏலாது. அப்பிடியும் சிலர் வேறை யாரிட்டையும் குடுத்துக் காட்டை அடிப்பாங்கள். எனக்கு அப்பிடிச்

செய்ய மனம் வருகுது இல்லை. பிழை செய்து பிடிபட்டால் பெரிய அவமானம் எண்டு பலருக்கும் பயம். எனக்குப் பிழை செய்யக் கூடாது எண்டு விருப்பம். பிழை செய்தா நாங்கள் பிறகு துணிவாக் கதைக்க ஏலுமா? ஆனா... இவளை மாதிரி ஆட்களுக்கு அப்படித் தான் செய்யவும் வேணும் எண்ட எண்ணம் வரும். யாரும் கொன்தோரில இருந்து கொன்சிலன்ற் வேலை செய்து மில்லியன் கணக்கில எடுக்கிறவனிலை கை வைக்கத் துணிவு வருமே? எங்களை உறிஞ்சுகிறதிலை எவ்வளவு குறியா இருக்கினம்? அதுவும் தான் பெயர் எடுக்கோணும் எண்டதுக்குகே இந்த வேலை. இவள் காட்டிக் குடுத்தா இனி வாறவங்களும் விடுவாங்களே? அவங்களும் போட்டு எங்களைத் தானே முறிப்பாங்கள். அதைவிடக் காலமை போனவுடன நாங்கள் அவைக்குக் கோப்பி வேற வைச்சு குடுக்க வேணும். சில வேளை அடிமையளா வேலை செய்யிற பீலிங்காகவும் இருக்கும். ஆனா... முதல்ல செய்த வேலையளை நினைக்கேக்க இது எத்தனையோ மடங்கு வெற்றர். எண்டாலும் உரிமையளை விட்டுக் குடுக்கக் கூடாது. பாப்பம் என்ன நடக்குது எண்டு." என்றார் "TS".

"தமிழர் வேலை செய்யேக்க தங்களை வேலைகாரர் எண்டு காட்டிக் கொள்ளுகிறதுக்கு விழுந்து அடிச்சு முறிஞ்சு வேலை செய்வினம். நொஸ்குகள் மாதிரி அளவா வேலை செய்கிறது இல்லை. ஊரில காசைக் காணாமல் கிடந்ததுக்கு எல்லாம் சேர்த்து உடம்பைக் கேளாது சம்பாதிக்க வேணும் எண்ட ஓர்மமும் அவதியும். நாங்கள் உழைக்கிறது வாழ்க்கை நடத்த வேணும் எண்ட தேவைக்காக. சிலர் வாழ்க்கை நடத்துகிறதே உழைக்கோணும் எண்ட வெறிக்காக மட்டும். அதுவே வெறி ஆகினால் அதுவும் ஒரு வகை மன வியாதியே. பிரச்சனை எண்டு வரேக்க நாங்கள் நொஸ்க்குகளோடை சேர்ந்து நிக்க வேணும். ஒரு நாளும் எங்கடை உரிமையளை விட்டுக் கொடுக்கக் கூடாது. ஆனா... இதுக்கு எதிராகப் பல தமிழர் நடந்து கொள்ளுகினம்." என்றான் அருள்.

"இவை இனித் தங்கடை அரசியல் கதைக்கப் போகினம். மலர் பஜ்ஜி செய்யப் போகிறாவாம். அது எப்பிடி எண்டு பார்ப்பமே புவனா அக்கா?" என்றாள் சொரூபா. அவள் இன்று கறுத்த "Jeans"சும் வெள்ளைச் சட்டையும் அணிந்து இருந்தாள். தலை முடியைச் சற்று உயரத்

தூக்கிப் பின் கழுத்துத் தெரியும்படி முடிந்து இருந்தாள். முடியை அப்படி அள்ளித் தூக்கி முடிந்தால் அருள் தன்னை ஆசையோடு பார்ப்பதாக அவளிடம் ஒரு எண்ணம் உண்டு. உனக்கு அது அழகாய் இருக்கிறது என்று அவன் அவளிடம் அடிக்கடி கூறுவதும் உண்டாம். அந்தக் கிரக்கத்தில் இன்றும் அவள் அதை அப்படி அள்ளிக் கட்டி இருந்தாள். அந்த அள்ளிக் கட்டலும் அவளுக்கு விமானப் பணிப் பெண் போல அழகைத் தந்தது. உதட்டிற்கு மென்மையான சாயக் கீற்றைக் காட்டி, சிவப்பான கொவ்வைக் கனிகளாய் அதை மிளிர வைத்து இருந்தாள்.

"ஓ நாங்கள் போய் அதைச் செய்வம்." என்று புவனலோசினியும் எழுந்து கொள்ள மற்றவர்களும் எழுந்து சமையல் அறையை நோக்கிச் சென்றார்கள்.

"மாதர் மாநாடு இடம் மாறுது போல?" என்றான் அருள்.

"அவைக்கு இப்பிடியான சின்னச் சின்னச் சுதந்திரம் இருக்கிறது ஆரோக்கியமானது தானே? பஜ்ஜி சுடுகிறதை விடத் தங்களுக்குப் பிடிச்ச கருத்தை சுதந்திரமாகக் கதைக்கிறதுதான் அதில இருக்கிற சந்தோஷம். பல விஷயங்களைப் பால் வித்தியாசம் இல்லாமல் கதைச்சாலும் சில விஷயங்களை என்றைக்கும் பால் வித்தியாசம் பார்த்துத்தான் கதைக்க வேண்டி இருக்கும். அப்பிடியான விஷயம் அவையிக்கு நிறைய இருக்கும். அதுக்கும் சுதந்திரம் வேணும் தானே? அதுதான் இப்பிடி ஒரு அருமையான சந்தர்ப்பத்தை அவை பயன்படுத்திக் கொள்ளுகினம்." என்றார் "TS".

"றூபன் சொந்தத்திற்கச் சுழியோடித் தேவை இல்லாப் பிரச்சனைகளுக்க மாட்டுப்படாமல் தப்பிச்சிட்டான்." என்றான் அருள்.

"அப்ப நீங்கள் ஏதோ புரட்சியே செய்த நீங்கள்? ஊரில, அடி முடி தேடித் தானே அவை கண்டு பிடிச்சு அனுப்பி வைச்சிருப்பினம். பிறகு நான் மட்டும் மாட்டுப்பட்டா அருளுக்குச் சந்தோஷம் போல இருக்குது?" என்றான் றூபன்.

"உன்னோடை தனகிறதில அருளுக்கு எப்பவும் ஒரு சந்தோஷம் தான்." என்றார் "TS".

"TS" என்று போல் இன்றும் துப்பரவாகச் சவரம் செய்து, "Cream" பூசியதில் தாடை மயில் தோகை போல மினுமினுத்தது. அதை அடிக்கடி அவர் தடவிப் பார்த்து இரசிப்பது அவர் இயல்பு. என்னதான் சவரம் செய்தாலும் ஒரு சில அடிக்கட்டை விரலைச் சீண்டுவதில் அவருக்கு ஒருவித இன்பம். அப்படி தடவிப் பார்த்து இரசிக்கும் போது கண்டு பிடித்த அடிக் கட்டைகளை அடுத்த முறை அகற்ற அதிக நேரம் செலவு செய்வதும் உண்டு. செய்தாலும் அடிக்கட்டை சாகா வரம் பெற்றதாக பின்பும் தட்டுப்பட தனது இந்தச் செயலை எண்ணி அவர் நகைப்பதும் உண்டு. மாற்றங்கள் வரும் என்பதில் மாத்திரம் மட்டும் மாற்றங்கள் வந்து விடுவது இல்லை என்பதற்கு மனித முகமே சாட்சியாக இருக்க வேண்டும். அது ஒவ்வொரு கணமும் மாறிக்கொண்டே இருக்கிறது. வெள்ளை மயிர் தூக்கலாகத் தெரியக் கூடாது என்பதற்காய் "TS" தனது முடியைக் கட்டையாக வெட்டிக் கொள்வது வழக்கம். தலை முடிக்கு மை பூசுவது அவர் வழக்கம் இல்லை. மை பூசினால் மிகவும் அழகாக இருக்கும் என்று அவர் அடிக்கடி நினைப்பது உண்டு. இருந்தும் இப்போதும் அவர் இளமையில் பெரும் பழுது விழாது இருந்தது. அந்த மாயையில் மனம் லயிக்காது விலகியது. யாருக்காக எதற்காகத் தான் வேஷம் போட வேண்டும் என்கின்ற கேள்வி அவரிடம் எழுந்தது.

"எனக்குத் துணிவு இல்லை எண்டு நினைக்காதை. நான் மலரைப் பார்த்த நாள் தொடக்கம் அவளில பைத்தியமாக இருந்தன். நான் வீறு கொள்ளுகிறதுக்குச் சந்தர்ப்பமே வர இல்லை. வேரை வெட்டாமல் மரத்திற்குச் சோடனை செய்கிறதால விருட்சம் அழிஞ்சிடாது. முதல்ல மற்றப் பிரச்சனைகளை எல்லாம் தீர்க்க வேணும். இந்தியாவைவிட எங்கடை நாட்டில இருக்கிற சாதிப் பிரச்சனை வித்தியாசமானது. இப்ப அதிகம் கொடுமை நடக்கிறேல்லை எண்டாலும் ஒவ்வொருத்தற்ற மனசிலும் ஆழமா அவை அவையின்ரை சாதியில நிறையப் பிடிப்பு இருக்குது. பள்ளிக்கூடங்கள், கோயில்கள் எண்டு திறந்து விட்டாலும் கோயிலுக்க போறதுக்கு விருப்பம் இல்லாமல் பயத்தில நசியிறவைக்குக் கொஞ்சம் கொஞ்சமாய் அறிவும், துணிவும் ஊட்டி மாற்ற வேணும். எனக்குக்கூட ஊரில இருக்கேக்க பெரியதம்பிரான் கோயிலுக்க மட்டும்தான் போக மனம் வரும். வேறை கோயிலுக்க போகத் துணிவு இருக்க இல்லை." என்றான் றூபன்.

"நீ சொல்லுகிறது உண்மை. அதோடை உதைப் பற்றிப் பல முறை நாங்கள் கதைச்சும் இருக்கிறம் தானே? ஆனா... நடைமுறையில பெரிசா இல்லாட்டியும் மனசில இருக்கிற பிரிவும், வெறுப்பும் ஆபத்தானது. அது முழுமையா மாறேல்லை. வருங்காலத்தில வெளிநாட்டில இருக்கிற சமுதாயம் ஓரளவு அதை மறக்கிறதுக்கும் சந்தர்ப்பம் இருக்குது. ஞாபகம் வைச்சு இருக்கிறதுக்கும் சந்தர்ப்பம் இருக்குது. இலங்கையில பெரிய மாற்றம் ஏதும் ஏற்படும் எண்டு இல்லை. பழைய மாதிரி கோயிலுக்க வராத, குளத்துக்க இறங்காத எண்டு சொல்லுகிற துணிவு இனி யாருக்கும் இருக்காது. அதை யாரும் விரும்ப மாட்டினம். ஆனால் தங்கடை சொந்த விஷயங்களான கொண்டாட்டங்கள், கலியாணங்கள்ள அதைப் பார்க்கிறதை மாற்ற முடியாது. இப்பவும் தொடர்ந்து அதே சாதி அமைப்புதானே இருக்குது? நட்டுவர், தச்சர், கொல்லர், பிராமணர், பள்ளர், முக்கியர், கரையார், நளவர், கோவியர், திமிலர், அம்பட்டர், வெள்ளாளர், வண்ணார், பண்டாரம், சாண்டார், குயவர், பறையர், துரும்பர், தவசிகள், கைக்கோளர், கன்னார், தட்டார், ஓடாவி, செம்படவர், காடையர், சிவியார், செட்டியார் எண்டு அந்தப் பட்டியல் நீண்டு கொண்டு போகும். இந்தியத் தமிழரையும் சேர்த்தால் ஒரு புத்தகமே போடலாம். தொடர்ந்தும் அதே முறையில தான் மதமும், கலாச்சாரமும் சாதி வேறுபாட்டைப் பாதுகாக்க உதவுது. கொஞ்சம் கொஞ்சமாய் இது கட்டாயம் மாற வேணும். ஆயுதத்தைக் காட்டி இதை உடனடியாக மாற்ற முடியாது. அது ஒரு விதமான ஒடுக்கமா மட்டும் இருக்குமே தவிர அழிப்பு இல்லை. ஆயுதம் மௌனித்தால் அது பேசத் தொடங்கீடும்." என்றார் "TS".

"இங்க நாங்கள் உதைத் தூக்கிப் பிடிக்காட்டியே பெரிய நிம்மதி." என்றான் றூபன்.

"இங்க யாரும் தூக்கிப் பிடிக்க மாட்டினம். அது அவைக்கே மரியாதை இல்லை எண்டு தெரியும். ஆனா... மனதுக்க இருக்கிறதை மாற்ற முடியாட்டியும் அது பெரிய மாற்றம்தான். அதே வேளை இங்கையும் சிலர் தூக்கிப் பிடிக்கிறாங்கள் எண்டும் என்னால சொல்ல முடியும். வெள்ளையள் எங்களை எந்த யோசனையும் இல்லாமல் கலியாணம் செய்யுங்களா? கலியாணம் எண்டு வரேக்கே முதல் தெரிவு தங்கடை இனமாகத்தான் இருக்கும். நாங்கள் அதை இன்னும் டீப்பாக்கி வைச்சுக் கொண்டு

அலைகிறம். அது ஒரு முக்கியமான வித்தியாசம். அதே வேளை வித்தியாசம் பார்க்காத உலகத்தை நாங்கள் ஒரு இடமும் கண்டுபிடிக்க முடியாது. அது கற்பனை உலகு மட்டுமே. வித்தியாசத்தைக் குறைக்க நாங்கள் முயற்சி செய்ய வேணும்." என்றான் அருள்.

அழைப்பு மணி அடித்தது. ரூபன் சென்று கதவைத் திறந்தான். சொரூபன் சிரித்துக் கொண்டு உள்ளே வந்தான். அவன் கோடைக் காலத்திற்குத் தயாராகுவது போலக் கட்டையாக அரித்துத் தலை முடியை வெட்டி இருந்தான். தோலால் செய்யப்பட்ட மேலங்கியும், வெள்ளை படர்ந்த நீலக் காற்சட்டையும் அணிந்து இருந்தான். அவனுடைய உயிரான ஒரு கண்ணும், உயிரற்ற மற்றைய கண்ணும் சில வேளை வேறு வேறு திசையில் பயணிக்கும். உயிரற்ற கண்ணைக் கண்டு கொள்வது கடினமாக இருக்கவில்லை. அது நிலையாக நிற்பதால் உயிரான கண் போகும் திசையோடு ஒத்துப் போவதில்லை. கண் போன சில காலம் சொரூபன் பைத்தியம் பிடித்தவன் போல இருந்தான். அது முற்றாமல் இருப்பதற்கு அவனுக்கு மருந்து கொடுத்து மயக்கத்தில் வாழ வைத்தார்கள். சிறிது சிறிதாக பின்பு அவனுக்கு நிஜ வாழ்வை மீண்டும் அறிமுகப் படுத்தினார்கள். அவன் தேறிவிட்டான். வாழ்க்கையில் இழக்கக் கூடாததை இழந்தும் அவன் இன்று ஒருவாறு தேறிவிட்டான். காலம் அவனுக்கு மருந்திட்டுச் சென்று இருக்கிறது. சரிஸ்காவை நினைக்க "TS"சிற்குக் கவலையாக இருந்தது. காலத்தால் அவள் காயத்திற்கு மருந்திட முடியவில்லையே என்கின்ற ஏக்கம் உண்டானது. காலத்தாலும் சில வேளை எல்லாக் காயங்களையும் ஆற்றிவிட முடியாது. சில காயங்கள் வெளியே காய்ந்து இருப்பதாய் காட்டி உள்ளே மனைந்து கொண்டே இருக்கும். அதன் சீழ்பிடிப்பையும் நாற்றத்தையும் மொத்தமான அயர் மறைக்கும். சில வேளை மனித உணர்வுகளை முகங்கள் முழுமையாகக் காட்டுவதில்லை. மனதை மறைக்கும் வலிமை கொண்ட அயர்களான சில மனித முகங்களும் உண்டு.

சொரூபனுக்கு ஒரு கண் மாத்திரம் பொய்க்கண் என்றாலும் அவனுக்கு இன்னும் மற்றைய கண்ணில் பார்வை இருந்தது. சில நுட்பமான வேலை செய்யும் போது மட்டும் அவனுக்குச் சிக்கலாக இருக்கிறது. இரண்டு கண்களின் பார்வையும் ஒன்றை ஒன்று வெட்டும் போது உண்டாகும் சரியான புள்ளியை ஒரு கண்ணால் உண்டாக்க முடியாது.

அதனால் ஒரு இலக்கைத் துல்லியமாக அடையாளம் காண முடியாது. அப்படியான நுட்பமான செயல்களில் அவனுக்குக் கடினமாக இருப்பது உண்டு. இலக்கு வைத்துச் செய்யும் வேலைகளைச் செய்ய முடியாது இருப்பதாய் அவன் எப்போதும் மற்றவர்களோடு கவலைப்படுவான். அவனுக்கும் ஊரில் கலியாணம் பேசுகிறார்கள். அது கண்ணைப் பற்றி அறிந்ததும் லேசாகத் தட்டிப் போய்விடுகிறது. அவன் "TS"சிடம் தான் கண் காயப்பட்டதிற்கு முதலான புகைப்படமா அல்லது பிந்திய புகைப்படமா ஊருக்குப் பெண்பார்க்க அனுப்புவது என்று கேட்டான். "TS"சிற்கு அதில் சிறிதும் சந்தேகம் இருக்கவில்லை. கலியாண விஷயத்தில் பொய் சொல்லலாம் என்கின்ற கருத்து உண்டு. பொய் சொல்லுவதும் சிலருக்குப் பிரச்சனையாக இருப்பதில்லை. பொய்கள் ஒரு காலமும் நின்று நிலைத்து விடுவதில்லை. அந்தப் பொய்கள் தெரிய வரும்போது பலத்த ஏமாற்றம் ஏற்படும். அது கோபத்தை உண்டு பண்ணும். கோபம் பின்பு வெறுப்பாக மாறும். அந்த வெறுப்பே நிம்மதியைத் தின்று ஏப்பம் விடும். அதுவும் கணவன் மனைவிக்குள் ஏமாற்றியதான எண்ணம் வந்துவிட்டால் பின்பு வாழ்க்கை எலியும் பூனையுமாகும். பொய்க்கு எப்போதும் நிரந்தர ஆயுள் கிடையாது. அது எப்போதும் வெளிச்சத்திற்கு வரலாம். அந்தப் பயத்தில் வாழ்வதே ஒருவித தண்டனை ஆகும். பல காலம் சேர்ந்து வாழப் போகும் வாழ்க்கையில் பொய் சொல்லு என்று சொரூபனை ஊக்குவிக்கும் மனநிலை "TS"சிடம் இருக்கவில்லை. அவர் நீ உண்மையைச் சொல்வது போல புதிய படத்தையே அனுப்பு என்று கூறி இருந்தார்.

பொய் சொன்ன வாய்க்குப் பொரியும் கிடையாது என்பது போய் என்பது போல இன்று உண்மை சொல்லும் வாய்க்கும் அதுவாகவே அமைந்து விட்டது. அத்தால் அவனது கலியாணப் பேச்சுவார்த்தை இழுபடுகிறது. எங்கே குறைகள் இருக்கின்றன என்பதை மட்டும் மனிதர்கள் அதிகம் ஊன்றிப் பார்க்கிறார்கள். சொரூபனின் கண்ணைப் பற்றிய கதை எப்படியும் அந்தப் புகைப்படத்தை உற்றுப் பார்த்ததும் தெரிந்துவிடும். உண்மையைச் சொல்லி விட்டால் "ஓ அவருக்கு ஒரு கண் குருடோ?" என்று கருணை துளியும் இல்லாது முகத்திற்கு நேரே கேட்பார்கள். தாய் தகப்பனுக்கு பதில் சொல்ல முடிவதில்லை. கவலையில் தொண்டை அடைத்துக் கொள்ளும். கண்ணீர் மௌனத்தின் மொழியாக இடை

விடாது அடை மழையாக உதிர்ந்து கொண்டே இருக்கும். பிள்ளைக்கு ஒரு கண் குருடு என்பதை உங்களாலேயே தாங்க முடியவில்லை... குருடு என்று தெரிந்தும் நாங்கள் எப்படிப் பெண்ணைத் தருவது என்கின்ற கேள்வி வரும். எதற்கும் யோசித்து விட்டுப் பதில் சொல்கிறோம் என்பார்கள். பின்பு எந்தத் தகவலும் வராது. பதில் வராது என்பது திரும்பி வரும் போதே நன்கு தெரிந்துவிடும். அதற்காக அவர்கள் ஓய்ந்து விடுவதில்லை. தேடல் ஓயாத அலைகளாகத் தொடர்ந்தது.

"மாப்பிள்ளை வந்திருக்கிறார்." என்றான் அருள் சொரூபனைப் பார்த்து. "TS"சிற்கு அது இன்னும் தெரியாது. "TS" விளங்காது அருளை முதலில் பார்த்தார். பின்பு சொரூபனைப் கேள்வியோடு பார்த்தார். பொறுக்க முடியாது,

"அது எப்பேலை இருந்து?" என்று சொரூபனைப் பார்த்து "TS" கேட்டார்.

"நேற்றுத்தான் அண்ணை தெரியும். அம்மா கொழும்புக்கு வந்தவா. அவதான் சொன்னா... நீர்வேலிப் பிள்ளையாம். எனக்கு ஆளைத் தெரியாது. கொஞ்சம் கஸ்ரப்பட்ட குடும்பமாம். மூண்டு பெண் சகோதரங்கள் இருக்குதாம். கண் விஷயமும் சொல்லி படமும் காட்டிக் கதைச்சவையாம். அவை பிரச்சனை இல்லை எண்டு சொல்லிப் போட்டினம். அம்மா எனக்குப் படம் அனுப்பி இருக்கிறா. இந்தியாவுக்கு தாங்கள் கூட்டி வருவினமாம். அவையின்ரை செலவுகளையும் நாங்கள் பொறுத்துக் கொள்ள முடியுமோ எண்டு கேட்டா. நான் ஓம் எண்டு சொல்லி இருக்கிறன். ஆனா... மனசுக்க ஒரு விதமான நெருடலா இருக்குது. கஸ்ரப் படுகிறதால வந்திட்டு பிறகு ஏதாவது இசகு பிசகா ஆடுவினமோ எண்டு பயமா இருக்குது." என்றான் சொரூபன்.

"நீ பயப்பிடுகிறதிலையும் நியாயம் இருக்குது. கொழும்புக்கு வந்த பிறகு ரெலிபோனில நேரடியாக் கேள். தெளிவோடை வந்தா வாழ்க்கையில நீ பயப்பிட வேண்டிய அவசியம் இல்லை. உன்னோடு பழகினா, உன்னை விளங்கிக் கொள்ளுவினம். உன்னாலை எல்லா அலுவலும் எந்தப் பிரச்சனையும் இல்லாமல் செய்ய முடியும் எண்டது தெரிஞ்சா பெரிசாக் குறைப்பட மாட்டினம். நீ தேவை இல்லாமல் பயப்பிடாத." என்றார் "TS".

"எல்லாம் விட்டுக்கொடுப்புத் தானே? அதை நல்லா விளங்கினா வண்டில் சுகமா ஓடும். சொரூபன் அதெல்லாம் வெட்டி ஓடுவான். வழமையாகவே அவன் வெட்டி ஓடுகிறவன். நான்தானே நெடுகவும் அவனோடை இருந்து அதைப் பார்த்தவன். ஆனா... அண்டைக்குக் கெடுகாலம் போல மாட்டீட்டான். இனி நல்ல காலமாய் இருக்கும்... பயப்பிடாத." என்றான் றூபன்.

"செலவுகளைக் கவர் பண்ண இன்னும் ஒரு கீ யொப் எடுத்துச் செய்ய றை பண்ணுகிறன். வீடும் பார்க்க வேணும்." என்றான் சொரூபன்.

"வீடு இப்ப மலிவாப் போகுது. ஆனா... வாங்குகள்தான் லோன் தரப் பஞ்சிப் படுகினம். யாரும் பொறுப்புக்குக் கை எழுத்து வைச்சுக் குடுத்தா தருவாங்கள். உனக்கு வாங் பிரச்சனை தந்தாச் சொல்லு. நாங்கள் ஏற்கனவே வீடு வைச்சு இருக்கிறதால உனக்குப் பொறுப்பாய் நிற்கலாம்." என்றான் அருள்.

"ம்... தேவைப்பட்டா நான் உங்களிட்டைக் கேட்காமல் வேறை யாரிட்டைக் கேட்கப் போகிறன். நிச்சயம் யாராவது ஒருத்தரிட்டைக் கேட்பன்." என்றான் சொரூபன்.

"என்ன பெர்ஸ்த்தமாய் (தொழிலாளர்தின) ஊர்வலம் விமர்சையாக நடக்கப் போகுது போல இருக்குது. நீங்களும் போறியளே "TS" அண்ணை?" என்று அருள் சிரித்துக் கொண்டு கேட்டான்.

"அருள் உனக்கு இது பிடிக்குமா அல்லது பிடிக்காதா எண்டுகிறது வேறை விஷயம். ஆனா... நான் உட்பட நிறைப்பேர் எங்கடை போராட்டத்தை, தமிழீழம் எண்டுகிற ஒரு நாட்டை, அதுக்காக உயிரைக் கொடுத்துப் போராடுகிற தலைவரை நம்புகிறம். எங்களுக்கான ஒரு நாடு கிடைக்கும் எண்டுகிற நம்பிக்கையில பொருளாதார, சரீர உதவி செய்கிறம். அதை நாங்கள் எங்கடை தாய் நாட்டுக்குச் செய்கிற கடமையா நினைக்கிறம். சில காரணங்களால உங்களுக்கு அப்பிடிச் செய்கிறது விருப்பம் இல்லாமல் போய் இருக்கலாம். போராட்டத்தின் பாதைகள் தடம் மாறி இருக்கலாம். அதுக்காக இப்பிடியான போராட்டங்களை செய்கிறதே பிழை எண்டு நினைக்கிறியா? ஒண்டுமே பேசாமல் இருந்தால் எங்களுக்கு உரிமையைத் தட்டில வைச்சு அவங்கள் தருவாங்கள் எண்டு நினைக்கிறியா? அவர்கள் புத்தன் இல்லைக்

கையில் இருக்கும் பிச்சை ஓட்டையும் எங்களுக்குத் தருவதற்கு. அவர்கள் பௌதர்கள் மட்டுமே. என்னைப் பொறுத்தவரை இப்ப புளொட் பெரிய இயக்கமாய் இருந்து இருந்தாலும் நான் சப்போட் பண்ணி இருப்பன். ஏதோ காரணங்களால மற்ற இயக்கங்கள் எல்லாம் முடங்கிப் போச்சுது. அப்ப நாங்கள் இருக்கிறவங்களோடை சேர்ந்து தானே போராட வேணும்? எனக்கு பண உதவியோ சரீர உதவியோ செய்கிறது பிழையாகத் தெரிய இல்லை." என்றார் "TS".

"முதலாவது இயக்கத்தின்ரை சாயத்தைப் பூசாமல் இருக்க வேணும். இரண்டாவது எல்லா இயக்கமும் சேர்ந்து ஒற்றுமையா ஊர்வலம் போக வேணும். அப்பிடி எண்டா எனக்கும் தொழிலாளர் தினத்தில நடக்கிற தமிழற்ற ஊர்வலத்திற்கு வர விருப்பமே. அவங்களை மாதிரிக் குழப்பி, யாற்றையும் வாழ்க்கையை அலங்கோலப்படுத்த எனக்கு விருப்பம் இல்லை. அதே நேரம் என்ரை மனச்சாட்சிக்கு ஒத்துப் போகாத இப்பிடியான கண்மூடித்தனமான கூக்குரல் கூட்டத்தில நானும் சேர்ந்து கூக்குரல் போட விரும்ப இல்லை" என்றான் அருள்.

"அது உன் கருத்து. அது உன் விருப்பம் அருள். ஆனால்... யார் வந்தாலும் அவங்கள் ஒண்டும் சொல்லப் போகிறது இல்லை எண்டு நான் நினைக்கிறன்" என்றார் "TS".

"உண்மை. அது சுத்தமான வியாபாரம். நான் வந்தா இன்னும் ஒரு ஆள் கூடிட்டுது எண்டு அவங்களுக்குச் சந்தோஷமாய் இருக்கும். தங்கடை லிஸ்ற்றில என்னையும் சேர்த்துக் கொள்ளுவினம். அவைக்கும் பலரைப் போல வருமானம் கூடும். ஆனா... நான் அதுக்கு வர முடியாது. வந்தா நானே என்ரை மனச்சாட்சிக்கும், இனத்திற்கும் துரோகம் செய்கிற மாதிரி எனக்கு இருக்கும். நான் நினைக்கிற மாதிரி எல்லாரும் நினைக்க வேணும் எண்டு இல்லை. என்னுடைய கருத்தையும், நான் எதைச் சரி எண்டு நினைக்கிறன் எண்டுகிறதை யாருக்காகவும் விட்டுக் கொடுக்க நான் தயாராக இல்லை" என்றான் அருள்.

"என்னது...? நீர் ஊர்வலத்திற்கு வந்தால் துரோகம் செய்கிற மாதிரியே அருள்? அது எப்பிடி அருள்? உன்னான எனக்கு சுத்தமா விளங்கேல்லை. எனக்கு விளங்கின மட்டும் இயக்கத்துக்கு உதவுகிறது தியாகம்

எண்டு சொல்லமாட்டன். அது எங்கடை கடமை. துரோகம், தியாகம் எண்டுகிற மாதிரி நான் கதைக்க விரும்ப இல்லை. அப்பிடிக் கதைக்கிறது எனக்குப் பிடிக்கேல்லை. ஆனா... எல்லாருக்கும் ஒரு கடமை இருக்குது. வருங்காலச் சந்ததிக்குப் பதில் சொல்ல வேண்டிய பொறுப்பு இருக்குது. அதுக்குப் பழுது இல்லாமல் என்னால் ஆனதைச் செய்ய வேணும் எண்டு நினைக்கிறன்." என்றார் "TS".

"உண்மை தான்... துரோகம், தியாகம் எண்டு கதைக்கிறதே அறிவீனம். அதை யார் தாரக மந்திரம் போலக் கதைக்கிறவை எண்டு உங்களுக்கு நல்லாத் தெரியும். எந்தப் பிரச்சாரத்திலும் அந்தச் சொல் இல்லாமல் அவர்களுடைய விளக்கம் முடியாது. ஒற்றுமை எண்டதே எங்களுக்கு உள்ள கிடையாது. அதுக்குப் பதிலா துரோகி, தியாகி, காட்டிக் குடுக்கிறவன், உளவாளி என்கிற சொல்லால ஒரு இனத்தை, அதுகின்ரை விடுதலையை விஷ ஊசி போட்டுக் கொலை செய்தாச்சுது. அது இன்னும் எங்களுக்குக் கொஞ்சம்கூட விளங்க இல்லை. ஒவ்வொருத்தருக்கும் போராட்டம் எப்பிடிப் போயிருக்க வேணும் எண்டுகிற ஒரு அவிப்பிராயம் இருந்து இருக்கும். அந்த அவிப்பிராயங்களை எல்லாம் மீறிப் போராட்டம் ஏதோ ஒரு திசையில போயிட்டுது. இனி அதுகின்ரை பாதையை எங்களால திருப்பவே முடியாது எண்டது எங்களுக்கு நல்லாய் தெரியும். நாங்கள் வரலாறுகளைத் திரும்பிப் பார்க்கலாம். சமதர்மம் கேட்டுச் சர்வாதிகாரிகளுக்குக் கீழை இருந்த நாடுகள் பல. அங்க நடந்த கொலைகளுக்கு அளவு இல்லை. நாங்களும் சுதந்திரம், சமதர்மம் கேட்க வெளிக்கிட்டம். எங்களுக்கு என்ன வந்திருக்குது? இனி என்ன வரப் போகுது எண்டு தெரியுமா? ஒரு நாட்டில போராடுகிறது எண்டாப் போராடுகிற அந்த இனமோ, மனிதர்களோ அந்த நாட்டில இருக்க வேணும். அந்த இருப்பை இல்லாமல் செய்கிற மாதிரியான போராட்டத்தை எந்த மனச்சாட்சி உள்ளவனாலும் ஒத்துக் கொள்ள முடியாது. பிறகு இருப்பே இல்லாமல் போகுது எண்ட உடன இரும்புத் திரை போடுகிறதையும் ஏற்றுக் கொள்ள முடியாது. உலக அரசியல் விளங்கி இருக்க வேணும். மற்றவர்கள் எந்தக் காலத்திலும் பிழை சொல்ல முடியாத புத்திக் கூர்மையான தலைமை இருந்திருக்க வேணும். ஒண்டுமே இல்லாமல் கொலை செய்கிறதால சாம்பிராச்சியம் நிறுவலாம்

எண்டுகிறது நுனி மரத்தில ஏறி இருந்து கொண்டு அடிமரத்தை வெட்டுகிற மாதிரியான போராட்டம். அது வெல்லுமே?" என்றான் அருள்.

"ம்... எல்லாம் வடிவாக் கதைக்கலாம் அருள். நடைமுறை வித்தியாசமாகவே இருக்கும். களத்தில நிண்டு இரத்தத்தையும், உயிரையும் பலி கொடுக்கிறவனுக்கு மட்டுமே அதுகின்ரை வலியும், இழப்பும், வேதனையும் தெரியும். எல்லா இயக்கங்களும் இருந்த காலத்திலும் மற்ற இயக்கங்களும் இதைத்தான் செய்தாங்கள். இவங்கள் பலமாய் இருக்கிறதால இவங்களை மட்டும் குறை சொல்லக் கூடாது. இவங்கடை இடத்தில யார் இருந்திருந்தாலும் இதையே செய்து இருப்பாங்கள். அது சரி ஊர்வலத்தில போகிறதால நான் ஏன் எங்கடை இனத்திற்கு நன்மை செய்யேல்லை எண்டு சொல்லுகிறாய்?" என்றார் "TS".

"ஒண்டுமே இல்லாமல் கொலைகளால சாம்பிராச்சியம் நிறுவலாம் எண்டு நினைக்கிறதும், அதுக்கு உதவி செய்கிறதும், எங்கடை இனத்தை நாங்களே அழிக்கிறதான செயல். திடீரென ஊதிப் பெருத்த போராட்டத்தால தமிழர் நாட்டை விட்டு உயிர் காப்பதாய் பொருள் தேடி ஓடினதே மிச்சம். நீரில்லாத குளத்தை நம்பி இருக்கிற மீன் மாதிரி எங்கடை போராட்டம் இப்ப இருக்குது. அந்த நிலைமைக்கு எங்கடை போராட்டத்தை, இனத்தைக் கொண்டு வந்தது தியாகச் செம்மல்களின் சாதனையே. "TS" அண்ணை எனக்கும் இந்த இயக்கத்திற்கும் எந்தவித தனிப்பட்ட பிரச்சனையும் இல்லை. நான் அவங்களைச் சந்திச்சதே இல்லை. ஆனாலும் எனக்கு எண்டு ஒரு கருத்து இருக்குது. அதிலை எங்கடை போராட்டம் பிழையாகப் போய்க்கொண்டு இருக்குது எண்டுகிறதை நான் வலுவா நம்புகிறன். அதை எங்களால தடுக்க முடியாது எண்டதும் எனக்குத் தெரியும். அந்தக் இக்கட்டான நிலை பற்றி எனக்கு ஏகப்பட்ட கோபம். அது யார் மேல எண்டுதான் எனக்கு விளங்க இல்லை. ஆனா... நாங்களே எங்கடை அழிவுக்குச் சாட்சியாகிறதை நினைச்சு மனம் எப்பவும் குமுறிக் கொண்டே கிடக்குது. நீங்கள் உண்மையான தியாக மனப்பான்மையோடை உதவலாம். பலர் வியாபாரத்திற்காய் உதவலாம். ஆனா... நீங்கள் உதவி எண்டு நினைக்கிறது எங்கடை இனத்திற்கான சுருக்கு கயிறாய் மாறிக் கொண்டு இருக்குது எண்டது உங்களுக்கு விளங்குதா?" என்றான் அருள்.

"சாமானிய மனிசன் உலக அரசியலைப் போட்டுக் குழப்பிக் கொண்டு இருக்க ஏலாது. அது அவனுக்கு முழுமையா விளங்கப் போகிறதும் இல்லை. இயக்கத்துக்கு அது விளங்கும். அவங்கள் நல்ல முறையில போராடுவாங்கள் எண்டுகிற நம்பிக்கை எனக்கு இருக்குது. அதில எனக்கு எந்தத் தடுமாற்றமும் இல்லை. அவங்கள் தொடர்ந்தும் போராடுகிறதிற்கான உதவியை நான் செய்வன். மற்றவை செய்தாலும் சந்தோஷப்படுவன். விருப்பம் இல்லாதவையை அவங்கள் கட்டாயப்படுத்த மாட்டாங்கள் எண்டு நான் நம்புகிறன்." என்றார் "TS".

""TS" அண்ணை... நீங்கள் என்ன சொன்னாலும் கோவிக்கமாட்டியள். நிதானமா யோசிச்சுக் கதைப்பியள். அருள் சொன்ன மாதிரி எங்களுக்கு யாரோடும் சொந்தப் பகை கிடையாது. ஆனா... எப்பவும் எங்கடை போராட்டம் நல்ல முறையில நடந்து, அதால எங்களுக்கு உரிமை கிடைக்க வேணும் எண்ட ஒரு கவலையும் ஏக்கமும் எல்லாருக்கும் இருக்குது. அதுக்கு நீங்கள் இவங்கள் சரியான ஆட்கள் எண்டுறியள். நாங்கள் இவங்கள் சரிப்பட்டு வரமாட்டாங்கள் எண்டுகிறம். எவ்வளவு நேரம் நாங்கள் கதைச்சாலும் உந்த அடிப்படை எண்ணம் மாறப் போகிறது இல்லை. நாங்கள் ஏதாவது ஒண்டிலை நம்பிக்கை வைச்சிட்டா அதையேதான் நியாயப்படுத்துவம். எங்கடை போராட்டத்திலும் பல அநியாயத்தைத் தேசிய மூர்க்கத்தோடை, அரசாங்கம் செய்கிற அநியாயத்தோடை ஒப்பிட்டு நியாயப்படுத்துகிறம்... அப்படித்தானே? அப்பிடி எண்டா எங்கடை மனிதாபிமானம் எங்க போகுது எண்டும் அது என்னத்துக்கு வழி வகுக்கும் எண்டும் யோசிக்க வேணும்? எங்களுக்கு ஒரு பிரச்சனை வரேக்க மற்றவன் எங்களுக்கு மனிதாபிமானம் எப்பிடிக் காட்டுவான் எண்டதையும் யோசிக்க வேணும். இனவெறி அரசு செய்கிறது மாதிரி நாங்களும் செய்ய முடியுமா? இலங்கை அரசு தொடக்கத்தில எல்லாரையும் பயங்கரவாதிகள் எண்டிச்சு. அதையே உலகமும் சொல்லத் தொடங்கினா எங்களுக்கு எந்தக் கருணையும் கிடைக்காமல் போயிடும். மற்றவன் வாயே திறக்கக் கூடாது எண்டுகிற சர்வாதிகாரப் போராட்டத்தை எப்பிடி நாங்கள் விடுதலைப் போராட்டமாய் ஏற்றுக் கொள்ளுகிறது? அந்த வன்முறையின் தொடர், அதை எற்றுக் கொள்ளும் மனோபாவமே என் கண் குருடாகிற வரைக்கும் வந்திருக்குது. எங்கடை இனத்தின் விதி எப்படிப் போகப் போகுது எண்டுகிறதுக்கு நாங்களும்

ஒரு காரணம். அதன் முடிவைக் காலம் சொல்லிக் காட்டும். அதற்கு நாங்கள் ஒரு வகையில பொறுப்பாளியாக வேணும்." என்றான் சொரூபன்.

"யாரோ தெருவில நிண்ட நாலு வால்கள் செய்ததை வைச்சுக் கொண்டு நாங்கள் ஒட்டுமொத்தப் போராட்டத்தையும் கணிப்பிடக் கூடாது. ஒரு கன்னத்தில் அறைஞ்சா மறு கன்னத்தைக் கொடு எண்டுகிறது இப்ப சரிவராது. காந்தி தேசத்தின் புத்திரர்கள்தான் எங்கடை பூமியில கற்பு அழிப்பையும், உயிரோடை மனிதரை வெடிக்க வைக்கிறதையும், அப்பாவி பொது சனத்திற்குத் தண்டனையாகக் கொடுத்ததைப் பார்த்தம். எப்பிடி எண்டாலும் எங்கடை போராட்டம் வெல்ல வேணும். நாங்கள் சுதந்திரத் தமிழ் ஈழத்தில வாழ வேணும். எனக்கு அந்த நம்பிக்கை இருக்குது. அது வரைக்கும் அவங்கள் ஓயமாட்டாங்கள்." என்றார் "TS" அசையாத நம்பிக்கையோடு.

""TS" அண்ணைக்குத் தெரிஞ்சு இருக்கும் எண்டு நினைக்கிறன். வேறை ஸ்கூல்களும் துவங்கப் போகினமாம். அரசியல் இல்லாமல் ஸ்கூல் எண்டுகிறதுக்கு உடன்பாடு இல்லையாம்." என்றான் அருள்.

"அப்பிடியே? தெரிய இல்லை அருள். ஒஸ்லோவில நிறையச் சனம் வந்திட்டினம் தானே? அப்ப நிறைய ஸ்கூலும் தேவையா வரும்." என்றார் "TS".

"அப்பிடியும் எடுக்கலாம். வேற விதமாகவும் எடுத்துக் கொள்ளலாம்." என்றான் சொரூபன். அவன் தனது கண்ணின் இழப்பிற்குப் பின்பு இன்னும் உக்கிரமாக எதிர்ப்பதாக "TS"சிற்குத் தோன்றியது. அதற்கான காரணமும் அவனிடம் இருப்பதை அவரால் கிரகிக்க முடிந்தது. போராட்டம் என்னும் போது நண்பர்களைவிட எதிரிகளை அதிகம் சம்பாதித்துக் கொள்ளக் கூடாது. அந்த விஷயத்தில் பெடியள் பிழை விடுகிறார்களோ என்று சில வேளைகளில் "TS" நினைப்பது உண்டு.

"என்னத்தைச் சொல்ல வாறா சொரூபன்?" என்றார் "TS".

"அவை எல்லாத்தையும் தங்கடை கொன்றோலுக்க கொண்டு வாறத்துக்கான முதல் அடிதான் உது. நீங்கள் இருந்து பாருங்கோ... உந்தத் தமிழ்ச்சங்கம், ஸ்கூல்கள்,

கோயில்கள், விளையாட்டுக் கழகங்கள், எண்டு எல்லாத்தையும் தங்கடை கொன்றோலுக்க முதல்ல கொண்டு வருவினம். அதுக்குப் பிறகு அதிலை கிடைக்கிற வருமானம் எல்லாம் ஆயுதம் வேண்டச் சேர்த்து அனுப்புவினம். உந்த ஆயுதத்தால சிங்களவனுக்கு வாற அழிவைவிடத் தமிழனுக்குத்தான் அழிவு நிறைய வரப் போகுது. குருடு, முடம், விதவை, அனாதை எண்டு எண்டைக்கும் இல்லாத செந்தளிப்பாய் ஓடின சனத்தைவிட மிஞ்சி இருக்கிற சனத்தோடை தமிழீழம் சிரிக்கப் போகுது." என்றான் சொரூபன்.

"நீர் கோபத்தில கதைக்கிறீர் சொரூபன். எந்த இழப்பும் இல்லாமல் போராட்டம் நடத்த முடியுமே? மற்ற இயக்கங்கள் இருந்திருந்தா இழப்பே ஏற்பட்டிருக்காதே? போராட்டம் எண்டா நிச்சயம் இழப்பு இருக்கும். அது மக்களுக்கும் தெரியும். சொந்தத்தில இழப்பு வந்தா, அநியாயம் நடந்தால் வேதனையாகவே இருக்கும். என்ன செய்ய முடியும்? எங்கடை காலத்தில இப்பிடி ஒரு போராட்டம் வந்திட்டுதே? அதை நாங்கள் பொறுப்போடை வருங்காலச் சந்ததிக்காய் நடத்தத்தான் வேணும். இழப்புக்களை, வேதனைகளை நாங்கள் மட்டும் மிச்ச சொச்சம் வைக்காமல் அனுபவிக்க வேண்டியதுதான்." என்றார் "TS".

"நாங்கள் போராட்டம் எண்டு சொல்லிப் பெரிய விலை கொடுத்துக் கொண்டு இருக்கிறம். இந்தப் போராட்டம் பிழைச்சா தமிழ் இனத்தையே வருங்காலத்தில இலங்கையில இல்லாமல் செய்து போடுவாங்கள். பொறுப்பு எடுத்தவையின்ரை சாணக்கியத்தைப் பொறுத்து இருந்து தான் பார்க்க வேணும்." என்றான்.

"தமிழர் அநியாயமாய் எதையும் கேட்க இல்லை. வரலாற்றோடை ஒப்பிடேக்க ஆகக் குறைஞ்ச இடத்தையும், உரிமையையும் மட்டுமே இப்ப எங்கடை கோரிக்கையா வைக்கிறம். அதைச் சிங்கள அரசும், ஒரு பகுதி சிங்கள மக்களும் விளங்கிக் கொள்ளுகினம் இல்லை. நியாயம் ஒரு நாளும் தோற்காது. பயப்பிடாதேங்க. எங்களுக்கு எண்டு ஒரு நாடு எப்ப எண்டாலும் கிடைக்கும். எல்லாரும் அந்தச் சுதந்திரத்தை, சந்தோஷத்தை அனுபவிக்கிற நாள் கெதியா வரும்." என்றார் "TS".

"உங்கடை மனசு போலவே அமையட்டும் "TS" அண்ணை. அப்பிடி அமைஞ்சா எல்லாருக்கும் சந்தோஷம்தான்." என்றான் அருள்.

"எண்டாலும் அநியாயம். அப்பிடி ஒண்டு கிடைச்சா நாங்கள் காசு குடுத்து ரிக்கெற் வாங்கின மாதிரியும், இவை ஓசியில படம் பார்க்கிற மாதிரியும் இருக்கும். இதுவும் ஒருவித அநியாயம் தானே?" என்றான் றூபன்.

"அப்பிடி சொல்லக் கூடாது றூபன். அவங்கள் தங்கடை உயிரையும் மதிக்காமல் ஒரு காலத்தில நாட்டுக்காகப் போராடப் போனவங்கள் எண்டதை மதிக்கோணும். உயிர் போகலாம் எண்டு தெரிஞ்சும் அதுக்குத் துணிஞ்சு போகிறத்துக்கு மனதும், வீரமும் இருக்கோணும். அதுக்குப் பிறகு தலைமைகள் ஒழுங்கு இல்லாமல் இருந்ததால வந்த பிரச்சனை வேறை. அதுக்காக அவங்கள் செய்யப் போன தியாகத்தைக் குறைச்சு மதிப்பிடேலாது. என்னைப் பொறுத்தவரை நான் எப்பவும் அதுக்குச் சலூட் அடிக்கத் தயார். அதுக்காக வருங்காலத்தைப் பற்றி யோசிக்காமல் ஒதுங்கிக் கொள்ளோணும் எண்டுகிறதையோ, அவங்கள் செய்கிற எல்லாத்தையும் எதிர்க்க வேணும் எண்டுகிறதையோ என்னால ஏற்றுக் கொள்ள முடியாது. அதோடை நாங்கள் கதைக்கிற அரசியல் வேறை... எங்கடை நட்பு வேறை... எண்டதிலையும் எனக்கு நிறையத் தெளிவு இருக்குது. எந்த அரசியல் வாதமும் எங்கடை நட்பிற்கு தடைச் சுவராய் எழும்பாது எண்டதிலை எனக்கு நம்பிக்கை இருக்குது." என்றார் "TS.

"இவையள் அப்ப செய்யப் போன தியாகத்தையே மதிக்கோணும் எண்டா, இப்ப உயிரோடை இனத்திற்காக வெடிச்சுச் சிதறுகிறவங்கடை தியாகத்தை எப்பிடி மதிக்க வேணும்? நீங்கள் சொல்லுகிற மாதிரி இவை அதுக்கு மதிப்புக் குடுக்கினமா? இல்லாட்டி எப்பவும் குறை சொல்லுகிறதை மட்டும் தொழிலா வைச்சு இருக்கினமா?" என்றான் றூபன்.

"றூபன் உண்மையாத் தியாகம் செய்கிறவை பற்றின பெருமையும் பரிவும் எல்லாற்றை மனதிலையும் இருக்குது. இருக்கும். போலிகளா இங்க கொக்கரிக்கிறவையையும் அந்த உயிர்த் தியாகங்களைப் பிழையான முறையில பயன்படுத்துகிற போலிகளையும் தான் என்னைப் போன்றவை விமர்சிக்கினம். எனக்கு

எங்கடை விமர்சனத்தில தார்மீகம் இருக்கு எண்ட நம்பிக்கை முழுமையா உண்டு. நாங்கள் இண்டைக்குப் பிழை எண்டுகிறது காலவோட்டத்தில சரி எண்டு மாறுமோ தெரியாது. ஆனா... மனிதம் எண்ட ஒண்டு இருந்தா நாங்கள் பிழை எண்டு இண்டைக்குச் சொல்லுகிறது எப்பவும் மாறாது. அதோடை இப்ப நடக்கிற போராட்டம் சிறுபிள்ளை வேளாண்மை மாதிரியே நடக்கிறதான பயம், ஆதங்கம் எனக்கு இருக்குது. விமர்சிக்கிறதே எங்களுக்குத் தொழில் எண்டு நீங்கள் நினைக்கலாம். வருங்காலத்தில யாராவது போராட்டத்தைப் பற்றி ஆராய்கிறவனுக்கு நாங்கள் போராட்டத்தைச் சரியான வழிக்கு இழுத்து வர முயன்று இருக்கிறம் எண்டது விளங்கும். அந்தப் புரிதல் வராட்டி நாங்கள் ஈழப் போராட்டத்திற்கு எதிரானவர்கள் எண்டதாய் இருந்திட்டுப் போகட்டும். அதுக்காக எங்களுக்கு இப்ப சரி எண்டுகிறதைச் சொல்லாமல் வாய மூடிக் கொண்டு மௌன ஊர்வலம் போகச் சரி வராது. அதுக்கு நாங்கள் உடன்பாடும் இல்லை. சொரூபன்ரை கண்ணைக் குத்துகிற மாதிரியான செயல்களால எங்களை எப்பவும் பயமுறுத்த ஏலாது." என்றான் அருள்.

"மேய்டேய் ஊர்வலத்தில எல்லாம் எனக்கும் பங்கு கொள்ள விருப்பம் இருக்குது. இலங்கையில என்னவா இருந்தாலும் பிரச்சனை இல்லை. ராஜீவ் காந்தியில அதுவும் தமிழ்நாட்டில கைவைச்சு, இப்ப உலகப் பயங்கரவாதிகள் எண்டு பெருமை எடுத்தாச்சுது. தொடக்கத்தில பலருக்கும் அது பெரிய சாகசமாய் தெரிஞ்சுது. இப்ப விவகாரம் ஆகி இருக்கிறது பற்றி விளங்கும். இயக்கத்திற்கு எதிரான வெறுப்புப் பட்டியல்ல ஒவ்வொரு நாடகக் கூடிக் கொண்டே போகுது. அந்தக் கொடியைப் பயங்கரவாதிகளோடு சம்பந்தப் படுத்திப் பார்க்கிற எண்ணம் ஐரோப்பாவிலும் வந்தாச்சுது. முதல்ல சொந்தச் சகோதரங்கள், பிறகு இந்தியா, அதுக்கு அடுத்தது ஐரோப்பாவில நடந்த கொலைகள் எண்டு விடுதலைப் போராளிகளின் கொடிக்கு நீங்களாகவே பயங்கரவாதிகள் எண்ட சாயத்தை உரமாய்ப் பூசிப் போட்டியள். இப்ப அந்தக் கொடியை தூக்கிக் கொண்டு ஊர்வலம் போக அதுக்குப் பின்னால நாங்களும் வருவம் எண்டு எதிர் பார்க்கிறது எவ்வளவு மடமையானது. அப்பிடி நாங்கள் செய்தா அது மனச்சாட்சியை வித்துப் போட்டு ஏதாவது சுயநலத்திற்காக மட்டுமே வரமுடியும். எனக்கு எல்லாம் அப்படி எந்த ஐடியாவும் இல்லை. எனக்கு

இருக்கிற வேதனை எங்கடை போராட்டம் பிழையான வழியில போகுது எண்டதே. அதைச் சரியான வழிக்கு இழுத்து வராமல், அதுக்குக் கேட்டுக் கேள்வி இல்லாமல் கண்ணை மூடிக் கொண்டு நாங்கள் ஆதரவு வழங்கிக் கொண்டே இருக்கிறம் எண்ட நெருடல்." என்றான் சொரூபன்.

பஜ்ஜியின் மணம் வியிற்றில் பசியை அமிலமாக அருளுக்குத் தாராளமாக ஊற்றிற்று. சமையல் அறைக்குள் போய் பார்த்து வரவேண்டும் என்கின்ற ஆர்வம் இருந்தாலும் அதை அடக்கிக் கொண்டு இருந்தான். திடீரென அரசியல் உரையாடலில் ஒரு இடைவெளி விழுந்திட, அவன் எழுந்து சமையல் அறைப் பக்கம் சென்றான். சிறிது நேரத்தில் மாதர் அணியோடு அருள் திரும்பி வந்தான். எல்லோரது கைகளிலும் பாத்திரங்கள் இருந்தன. பஜ்ஜி என்பது ஈழத்தமிழருக்கு அந்நியமான உணவு. இலங்கையில் கடலை விளைவிப்பது இல்லை. கடலை மாவை அங்கு அதிகம் பயன்படுத்துவதும் இல்லை. கலியாண வீடு அல்லது வருடப்பிறப்பிற்குப் பலகாரம் சுடும் போது மட்டும் அதன் பெயர் அடிபடுவது உண்டு. அதன் விலை அப்படியான தின்பண்டங்களை அதிகம் செய்வதற்கு வாய்ப்பளிப்பது இல்லை. மலர் சிங்கப்பூரில் வாழ்ந்ததால் தமிழ்நாட்டு உணவு வகையில் முக்கியமான இந்த உணவையும் அவள் மிகவும் இரசித்து ருசித்து இருப்பாள். அத்தோடு அதைச் செய்தும் பழகி இருந்ததால் இன்று வந்தவர்களுக்கு வித்தியாசமான அந்த உணவைப் பரிமாற எண்ணினாள். புவனலோசினிக்கும், சொரூபாவிற்கும் அதைச் செய்வதைப் பார்ப்பதற்கு அது வாய்ப்பாகிற்று.

மலரின் கைகளில் பஜ்ஜிப் பாத்திரம் இருந்தது. புவனலோசினி தேநீர் பாத்திரத்தைக் கையில் வைத்திருந்தாள். சொரூபாவும், அருளும் சாப்பிடும் தட்டுகள், தேநீர்க் குவளைகளைக் கொண்டு வந்தார்கள்.

மலர் பஜ்ஜியும், சட்னியும், பால் தேநீரும் பரிமாறினாள். எல்லோரும் அதைச் சுவைக்கத் தொடங்கினார்கள். மலர் பார்த்துக் கொண்டு இருப்பதைக் கவனித்த "TS",

"நல்லாய் இருக்குது மலர்." என்றார்.

"உண்மையா நல்லாய் இருக்குதா? நல்லாய் இருக்கும். அதைவிட வித்தியாசமாய் இருக்கட்டும் எண்டு நான் இதைச் செய்தனான். நான் சிங்கப்பூரில அப்பாவுக்குச்

செய்து குடுத்தா அவர் சாப்பிடுவார். சாப்பிட்டு முடிஞ்சதுக்கு அப்புறம் "இது நல்லாய் இருக்குது. எண்டாலும் யாழ்ப்பாணத்து பிளேன் ரீக்கும் உழுந்து வடைக்கும் இருக்கிற சுவையே தனி." எண்டு அதை மெச்சுவார். அப்பிடியே நீங்களும் நினைப்பியள்? இல்லையா?" என்றாள் மலர்.

"உங்கடை அப்பா சொல்லுகிறது ஒரு வகையில சரி. பஜ்ஜி வித்தியாசமாய் வேறு விதமான சுவையாய் இருக்குது. அதுவும் சட்னியோடை சாப்பிட நல்லாய் இருக்குது. ஆனாச் சட்னியே இல்லாமல் உப்புச் சுவை தெரிய உழுந்து வடையும் பிளேன் ரியின்ரை இனிப்புச் சுவையையும் ருசிக்கிறது இன்னும் அற்புதமாய் இருக்கும். இல்லாட்டி எங்களுக்கு உறைப்பு நல்லாச் சுள்ளிட வேணும். மலருக்கும் நாங்கள் அதைக் கெதியாப் பழக்கி விடுவம். பஜ்ஜியும் ஒரு தனி விதமான சுவையே." என்றார் "TS".

"மலருக்குப் பழக்கிறதா? உழுந்து வடையும் பிளேன் ரீயும் ஏற்கனவே நல்லாய் போகும். அது ரெண்டும் கிடைச்சாச் சாப்பாட்டிற்கு அளவு பார்க்கிறதை எல்லாம் சீமாட்டி விட்டிடுவா." என்றான் றூபன்.

"சும்மா இருங்க அப்பா." என்றாள் மலர் நாணத்தோடு யாழ்ப்பாணத்து முறையில்.

"இது எங்க உந்த அப்பா பழகினது?" என்றான் அருள் மலரைப் பார்த்து.

"யாழ்ப்பாணத்தில இருந்து வாறவை கதைக்கிறது இப்பிடியே. நானும் எப்பிடி எல்லாம் கதைக்க வேணும் எண்டு கத்து வைச்சிருக்கிறன். அது சரி... என்னத்துக்காக அப்பா எண்டு சொல்லுகிறவை?" என்றாள் அருளைப் பார்த்து.

"ஐயோ தாயே எனக்கு உந்தச் சிக்கலான கேள்விக்கு எல்லாம் பதில் தெரியாது." என்றான் அருள். எல்லோர் வதனங்களிலும் புன்னகை அரும்பியது.

# 10 சொரூபனின் சுந்தரி

சொரூபன் திவைத்தாவில் வீடு வாங்கி இருந்தான். திவைத்தாவில் பாகிஸ்தானியர்களின் வன்முறைக் குழு ஒன்று இருக்கிறது. அது ஒஸ்லோவில் பெயர் பெற்ற வன்முறைக் குழுவில் ஒன்று. அவர்களின் பிரதான இடம் அது என்பது அதற்கு வேண்டப்படாத விளம்பரம். அதை விட்டால் திவைத்தாவில் குடி இருப்பது போக்கு வரத்திற்கு மிகவும் வசதியாக இருக்கும். சுரங்கரதம், பேருந்து ஆகிய இரண்டு வழிகளில் பயணிக்கும் வசதி அங்கு உண்டு. நவீன அங்காடியும் அதற்கு அருகில் இருக்கும் பாடசாலையும் அதன் முக்கியத்துவத்தை அதிகப்படுத்தி விட்டது. அத்தோடு அது பல முக்கிய இடங்களுக்குப் போகும் சந்திப்பில் அமைந்து இருக்கிறது. அதற்கு எல்லாம் கிரீடம் வைப்பது போல அந்த நவீன அங்காடிக்குள் "வீனமூலப்பூல்" எனப்படும் சாராயக் கடையும் இருக்கிறது. சாராயக் கடை எல்லா இடங்களிலும் இருப்பது இல்லை. வழமையான கடைகளில் வியரைத் தவிர மற்றைய மது வகைகள் விற்பதற்கு அனுமதி இல்லை. அதனால் குடிப் பிரியர்களுக்கு அங்கே குடியிருப்பது குசியாகியது. அதைவிட காலாற நடந்து போய்வர, குளிர் காலத்தில் பனியில் சறுக்கி ஓடுவதற்கு என்பதாக காட்டுப் பகுதியும் அருகில் உள்ளது. இப்படியாக எல்லா வசதிகளும் இருப்பதால் பலருக்கும் அவ்விடத்தில் ஒரு காதல் உண்டு.

வானை முட்டும் அடுக்கு மாடிக் கட்டடங்களில் பலர் இங்கு வாழ்ந்து வருகிறார்கள். திவைத்தாவைச் சுற்றி உள்ள பகுதிகளில் தனி வீடுகள் நிறையவே இருக்கின்றன. தனி வீடு வாங்கி அதைப் பராமரிப்பதற்கு அகதிகளாய் வந்த தமிழருக்குக் கட்டுபடி ஆகுவதில்லை. அடுக்குமாடி வீடுகள் தனி வீட்டைவிட விலை குறைவு என்பதால் கட்டுக் காசு, வாடகைக் காசு என்பனவற்றை இரண்டு வேலைகள் செய்து வரும் பணத்தில் கட்டிச் சமாளித்துக் குடும்பம் நடத்தலாம். அது இப்போது பலருக்கும் அனுபவம் ஆகிவிட்டது. இரண்டுபேர் உழைத்துக் குடும்பம் நடத்துவதற்கு ஏற்பவே இங்கு உள்ள சமுதாயம் கட்டி அமைக்கப் பட்டுள்ளது. இலங்கையில் இருந்து திருமணம் செய்து வருகின்ற

யுவதிகளுக்கு உடனேயே இங்கு வேலை கிடைப்பது இல்லை. அவர்கள் மற்றவர்களைப் போல் முதலில் மொழி படிக்க வேண்டும். பின்னரே ஏதாவது வேலைக்குள் நுழைவது அல்லது தொடர்ந்து படிப்பது என்று தொடங்க வேண்டும். அது வரைக்கும் மனைவியை எடுத்தவர் இரண்டு வேலை என்று அலைய வேண்டியது கட்டாயம் ஆகிறது. இரண்டு வேலை என்று அலைந்தாலும் வீட்டிற்கு வரும் போது மேசையில் சாப்பாடும், இரவில் சல்லாபமும் கிடைப்பதில் அந்தப் பழு பலருக்கும் தெரிவது இல்லை. இரண்டு வேலை செய்ய வேண்டும் என்பதற்கு இங்குள்ள செலவுகள் மட்டும் காரணம் இல்லை. இலங்கையில் வாழும் குடும்பங்களின் தேவையும், ஏக்கமும், வர்க்க மூலமாகி பின்பு கனமூலமாகி, பின்பு கணக்கில்லாத அடுக்குகளாய் பெருகி, விண்ணைத் தாண்டும் எதிர்பார்ப்புகள் உண்டாக்கும் அழுத்தம் மற்றும் ஒரு முக்கிய காரணம்.

வரும் போது "TS" குடும்பமும், அருள் குடும்பமும் ஒரே நேரத்தில் வந்து வாகனங்களால் இறங்கி நடந்து வந்தார்கள். "TS" அந்த வீட்டிற்கு முதலில் வந்து இருந்ததால் அவர்கள் வீட்டைத் தேடிப் பிடித்து வரும் தெண்டாட்டம் இருக்கவில்லை.

சொரூபனின் வீடு அடுக்குமாடிக் கட்டடத்தில் இருந்தாலும் வழமையான வீடுகளைப் போல இரண்டு படுக்கை அறைகளோடு வசதியாகவே இருந்தது. இடம் இல்லாதவர்கள் இருப்பதற்காய் சாப்பாட்டு மேசையின் கதிரைகளையும் நிரையாகச் சுவர் ஓரமாக முன் எச்சரிக்கையோடு அவன் அடுக்கி வைத்து இருந்தான்.

சொரூபனின் வீடு முகடு, சுவர், கதவு என்று எங்கும் பளிச்சிடும் வெள்ளையாக இருந்தது. சமையல் அறைக்கு மட்டும் சுவருக்கு நீல நிறம் வண்ணமாகியது. சொரூபன் இந்த வீட்டை ஒரு இளம் சுதேசக் குடும்பத்திடம் இருந்து வாங்கி இருந்தான். அவர்கள் இதை விற்றுவிட்டு வடக்கே இருக்கும் தங்களது விவசாய நிலத்தை கவனிக்கச் சென்று விட்டார்கள். படிப்பதற்கு வந்த இடத்தில் காதலாகி திருமணம் செய்தவர்களாம். ஒஸ்லோவில் வாழ நினைத்தவர்களுக்கு இங்கே பெருகி வரும் குற்றச் செயல்கள் வெறுப்பைத் தரத் தமது சொந்த இடத்திற்குப் போவதற்கு முடிவு செய்து விட்டார்கள். அத்தோடு அவர்களுக்கு அங்கு நிறையச் சொத்துக்கள் இருந்தன. அந்தப் பெண்ணின் தகப்பன் தாய்க்கு வயது

வந்துவிட்டதால் அவர்களைக் கவனிக்கும் பொறுப்பும் இவர்கள் மேல் விழுந்து விட்டதாம். அவர்கள் தங்கள் ஊர் நோக்கிப் புறப்படுவதற்காக இந்த வீட்டை விற்க வேண்டிய கட்டாயம். அவர்கள் இங்கு இருக்கும் திட்டத்தில் வீட்டிற்கு உள்ளே நன்கு அழகுபடுத்தி இருந்தார்கள். வெள்ளை நிறத்தில் அவர்களுக்குக் கொள்ளை ஆசையாக இருக்க வேண்டும். தளபாடம் தொடக்கம் எல்லாப் பொருட்களும் வெள்ளை நிறத்தில் வைத்து இருந்ததை "TS" சொரூபனோடு வீடு பார்க்க வந்த போது அவதானித்தார்.

அழைப்பு மணியை அழுத்தி, சொரூபனின் மனைவியோடு கதைத்து, கட்டடத்திற்கு உள்ளே வந்து, பாரம் தூக்கியில் ஏறி, ஐந்தாவது மாடியில் இருந்த சொரூபனின் வீட்டிற்கு முன்னே வந்து நிற்கவும், கதவு திறக்கவும் சரியாக இருந்தது. "TS" இன்றே அவளை நேரில் பார்க்கிறார். சொரூபன் ஏற்கனவே படம் ஒன்று காட்டி இருந்தான். அதற்கும் இப்போதைய உருவத்திற்கும் வித்தியாசம் இருப்பதாய் "TS"சிற்குத் தோன்றியது. அந்தப் படத்தில் இருந்ததைவிட இப்போது உருவத்தில் அதீதமாக வாழிப்புக் கொலுவேறி இருப்பதாகத் தோன்றியது. அவள் வெள்ளைச் சட்டையும் கறுப்பு அரைப் பாவாடையும் அணிந்து இருந்தாள். பொது நிறமான அவளுக்கு எண்ணைக் கரு நிறமாக நீண்டு மினுமினுக்கும் வைர இழைகளான அழகிய கூந்தல். வெள்ளைக்குள் குந்தியிருந்த கரு வயிரமாக ஒளி சிந்தும் அழகிய கயல் விளிகள். அவளின் அழகை மேலும் கூட்டிக் கண் பட்டு விடாமல் காப்பாற்றும் நோக்கினாய் பிரமனின் கை வேலை அவள் பற்களில். வரிசையான அந்தப் பற்கள் சிறிது மிதப்பாக ஒரு வித கவர்ச்சித் தோற்றம் காட்டியது. மீன் குஞ்சு போன்று துடிக்கின்ற இதழ்கள். படைப்பில் பிரமன் பிழை விட்டாலும் இப்போது மானிடர்கள் அதைத் திருத்திக் கொள்கிறார்கள். அதற்கு பல்லுக்குப் பல் வைத்தியரும், மற்றைய உறுப்புகளுக்கு அற்புத அறுவை சிகிச்சைகளும் இருக்கின்றன. இவளும் அதைத் திருத்திக் கொள்வாள் என்பது "TS"சிற்கு விளங்கியது.

"ஜெக்கெற்றைத் தத்திட்டுப் போய் இருங்க. அவர் வாத்துறுமுக்க நிக்கிறார்... இப்ப வந்திடுவார்." என்று கூறிவிட்டு மேலங்கிகளை வாங்கி வாசலில் இருந்த கொளுவிகளில் கொளுவினாள்.

"எப்பிடி இருக்குது நாடு?" என்று அருள் கேட்டான்.

"அங்க நடக்கிறதைக் கதைச்சாத் தேவை இல்லாத மன உளைச்சல்தான் மிஞ்சும் அண்ணா. என்னவோ அங்க நடக்குது. எப்ப அந்தப் பிரச்சனை தீரும் எண்டதும் யாருக்கும் தெரியாது. தீர விடுவினமோ எண்டதும் தெரியாது. எப்பவும், எங்கையும், யாருக்கும் சாவு வரும் எண்டது மாத்திரம் அங்க மாறாத உண்மை. அதிலை இருந்து தப்பியோட யாராலும் முடியாது. அது நடந்த அடுத்த கணமே எதுவும் நடவாதது போலச் சனங்கள் வேகமாக இயங்கும். ஒரு சா இரண்டு சா எண்டால் அது பெரிய விஷயமா இருக்கும். இது நித்தமும் ஓயாத சாத்தானே? எல்லாருக்கும் பழகிப் போச்சுது. ம்... ஏதோ ஒரு காலத்தில விடிவு வந்தா எல்லாருக்கும் நல்லதே." என்றாள் சுந்தரி. கதையோடு அருள் குடும்பமும் "TS" குடும்பமும் வந்து சோபாவில் இருந்தார்கள்.

"உங்களுக்கு முழுப் பெயர் என்ன? சுந்தரி எண்டுகிறது உங்கடை வீட்டுப் பெயரா?" என்றான் அருள்.

"இல்லை அண்ணை... எனக்குச் சுந்தரி தான் முழுப்பெயரும். அப்பா இப்பிடி ஒரு பெயர் வைச்சிருக்கிறார். அவர் மனசில எந்தச் சுந்தரி இருந்தாளோ தெரிய இல்லை. என்னச் சுந்தரி எண்டு கூப்பிடுகிறதில அவருக்கு ஒரு சந்தோஷம்." என்றாள் சுந்தரி.

"ஏன் நீங்கள் சுந்தரி மாதிரியேதான் இருக்கிறியள்." என்றாள் சொரூபா.

"அக்கா... நீங்கள் என்னோடை பகிடி விடுகிறியள். பருவாய் இல்லை. நான் அவருக்குச் சுந்தரியா இருந்தா அது மட்டுமே போதும் தானே?" என்றாள் சுந்தரி.

"நான் பகிடிக்குச் சொல்ல இல்லை. உண்மையாகவே சொல்லுகிறன். நீர் வடிவாகத்தானே இருக்கிறீர்?" என்றாள் சொரூபா.

"இந்தப் பல்லோடை நான் வடிவு எண்டு பொய் தானே சொல்லுகிறியள்?" என்றாள் சுந்தரி.

"பல்லு ஒரு விஷயமா? ஆறு மாதத்தில உங்கடை தோற்றத்தையே மாற்றிப் போடுவாங்கள். அப்ப சொரூபா

சொல்லுகிற மாதிரி நீங்கள் சொற்பன சுந்தரியா மாறீடுவியள்." என்றான் அருள்.

"ஐயோ அண்ணா... எனக்கு இப்பிடி ஐஸ் வைக்காதேங்க. தும்மப் போகுது." என்றாள் சுந்தரி.

"சரி பார்ப்பம் சொரூபன் தன்ர சுந்தரிய எப்பிடி மாற்றுறார் எண்டு." என்றான் அருள்.

"நீங்கள் கலியாண வீட்டுப் படங்கள் ஒண்டும் இன்னும் காட்ட இல்லை. சொரூபனும் அதைப் பற்றிப் பெரிசாக் கதைக்க இல்லை. போட்டோ இருந்தா எடுத்தாரும் பார்ப்பம்." என்றாள் புவனலோசினி.

"அவர் உங்களுக்குச் சொல்ல இல்லையா? நாட்டில இருக்கிற நிலைமைக்குக் கலியாணம் எல்லாம் வேண்டாம் றிகிஸ்ரேசன் மட்டும் காணும் எண்டு சொல்லிப் போட்டார். நாங்கள் சிம்பிளா றிகிஸ்ரேசன்தான் செய்தம். அந்தப் போட்டோ இருக்குது... எடுத்தாறன்." என்றாள் சுந்தரி.

"அப்ப இங்க ஒரு கலியாணத்தைச் செய்ய வேண்டியது தான்." என்றான் அருள்.

"ஐயோ... ஒண்டா இருந்த பிறகா? இவர் வேறை கலியாணம் எண்டாச் சனியனைக் கட்டுகிறது எண்டுகிறார்." என்றாள் சுந்தரி.

"நீங்கள் வேறை... வயித்தில பிள்ளையை வைச்சுக் கொண்டே கலியாண வீடு செய்கிறதே இப்பத்தே நாகரீகம். நீங்கள் ஒண்டாய் இருந்தது, ரெண்டாய் இருந்தது எண்டு கொண்டு..." என்றான் அருள்.

"ஐயோ அண்ணை... யாராவது அதைச் செய்யட்டும். எங்களுக்கு அந்தப் பாவம் வேண்டாமே. அவர் தாலிக்கொடி வாங்கி வந்தவர். ஒரு நல்ல நாளாய் பார்த்து கட்டினால் சரி. மனசு தானே முக்கியம். மற்றது எல்லாம் சும்மா பெருமைக்குச் செய்கிற விளையாட்டுகள் தானே? ஒரு நாடகம் மாதிரி. அவருக்கு நல்ல மனசு இருக்குது. எனக்கு அவரிலை அளவு கடந்த நம்பிக்கை இருக்குது. பிறகு எதுக்கு இந்தப் போலிச் சம்பிரதாயங்கள்?" என்றாள் சுந்தரி.

"அதுதான் பிள்ளை முக்கியம். ரெண்டு பேரும் நல்ல சோடியள். சந்தோஷமாய் இருக்கோணும்." என்றார் "TS".

அவர் உணர்ச்சிவசப் பட்டிருப்பதை புவனலோசினி கவனித்தாள். பாசங்கள் பழகுவதால் வளரும், இறுகும் என்பது அவளுக்குத் தெரியும். சரிஸ்காவின் நினைவு அவளுக்கு வந்தது. தாங்கள் புத்திமதி சொல்வதை அவள் விளங்கிக் கொண்டாலும் அவளால் மாற முடியாது என்கின்ற உண்மை நெஞ்சை உருக்கியது. அதைப் பற்றியே சிந்தித்துக் கொண்டு இருந்தால் புவனலோசினிக்கு அழுகை வந்துவிடுமோ என்கின்ற பயம் வந்து விட்டது. அவள் அதில் இருந்து தன்னை விடுவிக்க எத்தனித்தாள்.

அருளுக்கும் சரிஸ்காவைப் பற்றி விசாரிக்க வேண்டும் போல் இருப்பது உண்டு. இருந்தும் அவன் அதைப் பற்றி "TS"சிடம் விசாரிப்பது இல்லை. விசாரித்தால் சந்தோஷத்தை விடச் சங்கடமே அவர்களுக்கு அதிகமாக இருப்பதை அவன் அவர்களது முகபாவத்தில் இருந்து அறிந்து வைத்து இருந்தான். ஏதோ சில பிசகுகள். அதை யாரிடமும் சொல்லாமல் மறைப்பது அதைவிடப் பெரும் மர்மம். ஏன் என்பது அருளுக்கு விளங்கவில்லை. "TS" எதையும் மறைப்பது என்றால் அதற்கு வலுவான காரணம் இருக்க வேண்டும் என்று அருள் நம்பினான்.

சுந்தரி புகைப் படங்களை எடுத்து வந்து கொடுத்துவிட்டுத் தேநீர் தயாரிக்கச் சமையல் அறைக்குச் சென்றாள்.

குளித்து முடித்து, புது மாப்பிள்ளையின் சந்தோஷம் கோடைக் காலத்துச் சூரியனாக முகத்தில் பிரகாசிக்க திருவாளர் சொரூபன் கோலிற்குள் பிரவேசித்து "TS"சிற்குப் பக்கத்தில் வந்து அமர்ந்தார். அதைப் பார்த்த அருள்,

"எப்ப எங்களுக்கு எல்லாம் கலியாணச் சோறு போடப் போகிறாய்?" என்று அவனைக் கிண்டினான்.

"அருள் அண்ணை தெரியாத மாதிரிக் கேட்கிறது தான் அதிசயமா இருக்குது. அது எல்லாம் கொழும்பிலை முடிஞ்சிட்டுது. எங்கடை கலியாண வீட்டுச் சாப்பாட்டை இரவைக்குத் தந்து தான் உங்களை வீட்டை அனுப்பி வைப்பம்." என்றான் சொரூபன்.

"நாங்கள் எதிர்பார்க்கிறது முறையான கலியாண வீட்டுச் சாப்பாட்டை. இந்த விருந்து நீ எப்ப வந்தாலும் தருவாய்தானே? அதிலை என்ன விஷேடம் இருக்கும்?"

"அது எல்லாம் சிம்பிளா முடிஞ்சு நாங்கள் குடும்பமும் நடத்தத் தொடங்கியாச்சுது. இனியும் கலியாணம் எண்டு தொடங்கினா அது முறையா இருக்காது. காசு இருக்குது எண்டதுக்கு ஆகத் தலை கீழாய் நிக்கிறது எனக்குப் பிடிக்காது. நான் இரண்டு தாலிக்கொடி வாங்கிக் கொண்டு அலையப் போகிறதும் இல்லை. நாங்கள் றிகிஸ்ரேசன் செய்து குடும்பமாய் வாழ்ந்திட்டம். இனி வீடியோவுக்காகக் கலியாணம் செய்கிற பிளான் எல்லாம் எங்களுக்குக் கிடையாது. இந்தக் கலியாணத்தை முடிக்கப் பட்ட பாட்டை எப்பவும் மறக்க முடியாது. கண்ணைக் கெடுத்தும் பத்தாமல் யாரோ என்னுடைய வாழ்க்கையையும் கெடுக்க வேணும் எண்டு கங்கணம் கட்டி இருக்கிறாங்கள். எனக்குக் கண் தெரியாது எண்டு என்னைப் பற்றி அவவின்ரை வீட்டை மொட்டைக் கடிதம் போனதாம். கண் தெரியாது எண்டு சொல்லித் தானே கலியாணம் பேசினது. அதால, அவை அதைத் தூக்கி எறிஞ்சு போட்டினம். ஆயிரம் பொய் சொல்லியும் ஒரு கலியாணம் செய்யலாம் எண்டுவினம். ஆனா... நான் சொன்ன ஒரு உண்மையில தான் என்ரை கலியாணமே தப்பிச்சுது. அதைச் சொல்லாமல் மறைச்சு, அந்த மொட்டைக் கடிதத்தைப் பார்த்து அறிஞ்சு இருந்தா, இப்பிடி எத்தின உண்மையை மறைச்சு இருப்பன் எண்டு தானே உடன நினைச்சு இருப்பினம். ஆனா... உண்மைச் சொல்லிக் கலியாணம் செய்கிறதும் லேசு இல்லை. குழப்புகிற மாதிரியே கதைக்கிறதில எல்லாரும் விண்ணர்கள். கண் ஒண்டு இல்லாட்டி ஏதோ உலக வாழ்வையே இழந்த மாதிரி அவையின்ரை பாவனையும் கதையும். கலியாணம் கட்டின பிறகும் சிலருக்கு எங்களைப் பார்த்து ஒரு அமத்தலான பச்சாதாபம். நல்ல கேள்வி கேட்க வேணும் எண்டு நாக்குத் துடிக்கும். அது ஒருத்தருக்கும் மரியாதையாக இருக்காது எண்டிட்டுப் பேசாமல் வந்து சேர்ந்திட்டன். சுந்தரி கவலைப் படேல்லை. ஆனால்... சுந்தரிக்காகக் கவலைப்படுகிற அனுதாபிகளின்ரை தொந்தரவைத் தாங்க முடிய இல்லை. நல்ல காலம் கொழும்பு எண்டதால சனம் குறைவு. இதுவே யாழ்ப்பாணத்தில நடந்து இருந்தால் அவ்வளவு தான்..." என்றான் சொரூபன்.

"அப்ப நீ பிறகு கொழும்புக்கே போனனீ? நாலு சனம் நாலு கதை கதைக்கும். அது தான் உலகம். நீங்கள் எதையும் காதில போட்டுக் கொள்ளாமல் உங்கடை பாட்டைப் பாருங்கோ." என்றார் "TS".

"ஓம் அண்ணை... உதைப் பற்றி எனக்குச் சொல்லவே வேணும். நான் இப்ப நல்ல ஞானம் பெற்றிட்டன். இசகு பிசகா அண்டைக்கு மாட்டுப்பட்டது மட்டுமே இண்டைக்கும் கவலையா இருக்குது. தொடக்கத்தில மன்மதக் குஞ்சு எண்ட பவுசு போனதால வந்த கொலை வெறியில அவங்களைத் தேடிப் பிடிச்சுக் கொலை செய்ய வேணும் போலக் கோபம் இருந்திச்சுது. இப்ப அந்தக் கோபம் அடங்கிப் போச்சுது." என்றான் சொரூபன்.

"அது ஏன் எண்டு எனக்குத் தெரியும்." என்றாள் சொரூபா.

"என்னத்தைக் கண்டு பிடிச்சியள் சொல்லுங்க?" என்றான் சொரூபன்.

"அது சுந்தரி என்கின்ற உங்கடை தாரகை மந்திரம். இப்ப அண்ணர் காதல் மயக்கத்தில இருக்கிறதால கோபம் இல்லாமல் போயிட்டுது." என்றாள் சொரூபா.

"அதை நான் இல்லை எண்டு மறுக்க ஏலாது தான். சுந்தரி என்னை விளங்கிக் கொண்ட தோழியாய் இருக்கிறாள். இந்தப் புரிந்துணர்வு எப்பவும் பிழைக்காது எண்ட நம்பிக்கை எனக்கு இருக்குது." என்றான் சொரூபன்.

"என்ன என்னைப் பற்றி கதை அடிபடுகுது?" என்ற வண்ணம் தேநீரோடு சுந்தரி அங்கு வந்தாள்.

"என்ன கதைச்ச நீங்கள் எண்டு எனக்குச் சொல்ல மாட்டீங்களா?"

"நீர் நல்ல தோழி... தோழி... எண்டு உம்மைப் பற்றிப் புருசன் உருகுகிறார்." என்றான் அருள்.

"அதில ஏதும் தப்பு இருக்கா அண்ணா?" என்று சுந்தரி அருளைப் பார்த்துக் கேட்டாள்.

"நான் தப்பு எண்டு சொல்ல இல்லை. துளியும் தப்பாக நினைக்க இல்லை. தோழமை பாராட்டுகிற உறவில தானே இன்பம் இருக்கும். இல்லையே சொரூபா?" என்றான் அருள்.

"என்னை ஏன் இப்ப உதுக்க இழுக்கிறீங்கள்." என்றாள் சொரூபா.

"சின்னப் பிள்ளையள் இருந்து விளையாடுகினம். நாங்கள் ஏன் நந்திகளாட்டம் இதுக்க இடைஞ்சலா இருப்பான்.

வீட்டை போவமே அப்பா?" என்றாள் புவனலோசினி திடீரென. அவளுக்குச் சரிஸ்காவின் நினைவு வந்து விட்டது என்பது "TS"க்கு விளங்கியது. அவர் அவளைச் சும்மாய் இரு என்பது போலப் பார்த்தார்.

"நல்லா இருக்குது அக்காவின்ரை கதை. இண்டைக்குச் சாப்பிடாமல் ஒருத்தரும் இங்க இருந்து நகரப்பிடாது. நான் மினக்கெட்டு எல்லா ஆயுத்தமும் செய்து வைச்சு இருக்கிறன். அதோடை உருவத்தில இல்லை அக்கா மனசில தான் வயசு இருக்குது." என்றாள் சுந்தரி.

வாசல் அழைப்பு மணி ஒலித்தது. சுந்தரி பாய்ந்து சென்றாள். வாசலில் தாமோதரன் தம்பதியும், சிவா தம்பதியும் ஒன்றாக நின்றார்கள். அவர்களை உள்ளே அழைத்துக் கதவைப் பூட்டி விட்டு அவர்களுக்குத் தேநீர் தயாரிக்க அவள் சமையல் அறைக்குப் புயலாகச் சென்றாள். அவள் மூளையில் அன்றைய பொழுதுக்கான சாப்பாடு தயாரிப்பது பற்றிய எண்ணங்கள் சுழன்று கொண்டு இருந்தன. மீண்டும் அழைப்பு மணி ஒலித்தது. சொரூபன் பாய்ந்து சென்று திறந்தான். றூபனும் மலரும் வந்தார்கள். உள்ளே இருப்பவர்களைப் பார்த்ததும்,

"புல் கவுஸ் ஆகீட்டுது போல." என்றான் றூபன்.

"இப்பிடி இருந்தால் தான் சந்தோஷம்." என்றான் சொரூபன்.

"எங்களை விடச் சிவாவுக்கு இன்னும் சந்தோஷம்." என்றார் "TS".

"அது சரி... இங்க எல்லாரும் கூடி இருக்கிறம். அப்ப இண்டைக்கு என்ன விசேசம்?" என்றான் சிவா.

"சாப்பாடு தர வேணும் எண்டு சுந்தரி பெரிய பிளான் பண்ணி வைச்சிருக்கிறா." என்றான் சொரூபன்.

"அப்ப சாப்பாட்டை மட்டும் தந்து எங்களைக் கலைச்சு விடுகிற ஐடியாவே?" என்றான் சிவா.

"போற இடங்களிலை எண்டாலும் சும்மா இருக்க மாட்டியளே அப்பா?" என்றாள் மனோகரி.

"மனோ உனக்கு ஒண்டு விளங்க இல்லை. நான் இருக்கோ எண்டு கேட்காமல் இருந்தால் என்னைப் பார்த்து

உனக்கு ஏதும் சுகமில்லையே? பேசாமல் இருக்கிறாய் எண்டு கேட்டு இருப்பினம்." என்றான் சிவா.

"அதுக்குத் தண்ணியப் பற்றியே போற இடம் எல்லாம் கதைக்க வேணும்?" என்றாள் மனோகரி.

"அவையவைக்கு விருப்பம் ஆனதைப் பற்றித் தானே கதைக்கலாம். உன்ன விரும்பி... ஊர் விட்டு, ஊர் வந்து, காதலிச்சு... அடிவாங்கி... பிறகு அது எல்லாத்தையும் மறந்து, உன்னை மட்டும் மறக்காமலே இருந்து... காதல் தூதைச் சளைக்காமல் தொடர்ந்து... கலியாணம் கட்டி, இங்க வாழக் கூட்டி வந்தா, நீ எனக்குச் சினேகிதி மாதிரியா இருக்கிறாய்? என்ரை முதற் பெண்டாட்டிக்கு வில்லியாய் வந்து இருக்கிறாய்." என்றான் சிவா.

"சீ... உங்களுக்கு இப்பிடி ஒரு பெண்டாட்டி ஏற்கனவே இருக்கிறாள் எண்டா உங்களை நான் ஏறெடுத்தே பார்த்து இருக்க மாட்டன்." என்றாள் மனோகரி.

"எனக்கும் நல்ல காலமாய் இருந்து இருக்கும்." என்றான் சிவா.

"பிரச்சனை இல்லை. அப்ப நான் திரும்பிச் சிறிலங்காவுக்குப் போகிறன். எனக்கு அங்க எப்ப போனாலும் வேலை இருக்குது. ரீச்சர் எண்ட மதிப்பும் இருக்குது. இங்க வந்து உங்களோடை குப்பை கொட்ட வேணும்... குடிக்கிற போத்தலை எல்லாம் தூக்கிக் கொண்டு திரிய வேணும் எண்ட கட்டாயம் எனக்கு இல்லை." என்றாள் மனோகரி. அவளுக்குக் கோபம் வந்து விட்டதோ என்கின்ற கேள்வி "TS"சிடம்.

"சரி... சரி... சொறி... சொறி... ஆனா... என்னுடைய அந்தச் சுதந்திரத்தில மாத்திரம் தயவு செய்து கை வைக்க வேண்டாம். பிளீஸ்." என்றான் சிவா.

"நான் சொல்லி நீங்கள் விடப் போறியளா என்ன?" என்று மனோகரி அலுத்துக் கொண்டாள். மனோகரி நீல நிறச் சுடிதாரோடு வந்திருந்தாள். பொது நிறத்தைவிட சற்றுக் குறைந்த நிறம், ஐந்தடி உயரம், சற்றுக் குண்டான உடல்வாகு, முத்து போன்ற பற்கள். மெல்லிய கறுத்த இதழ்கள். துரு துரு என்று ஒளி வீசும் கண்கள். படித்து, வேலை செய்து, உரம் ஏறிய தன்நம்பிக்கை கண்களில் தெறிக்கும் பார்வையாக. ஆங்கிலமும் தெரியும் என்பதால்

உண்டான எல்லைகள் தாண்டிய மனதின் பலம். அடங்கிப் போவது மட்டுமே வாழ்வு அல்ல என்கின்ற கொள்கையில் நம்பிக்கை கொண்டவளாக அவள். அதே வேளைக் காதலுக்கும், அன்பிற்கும் அளவு கடந்த மதிப்புக் கொடுப்பவள். சிவா மீது இருந்த பிரியத்தால் சிவா தேசம் தேசமாய் அலைந்து திரிந்த போதும் அவள் மாறாது அவனுக்காகக் காத்திருந்தாள். காத்து இருந்ததிற்குச் சன்மானமாய் சிவாவையே கைப் பிடித்தாள்.

"அது சரி என்ன போத்தல் இண்டைக்கு?" என்றான் சிவா சொரூபனைப் பார்த்து.

"சுந்தரியும் மனோ மாதிரித்தான். ஒரு மாதிரிச் சமாளிச்சு போத்தில் எடுத்து வைச்சிருக்கிறன்." என்றான் சொரூபன்.

"தம்பிமாரே... அவை உங்கடை நன்மைக்குத் தானே குடிக்க வேண்டாம் எண்டு சொல்லுகினம். உந்தக் குடி இல்லாமல் சந்தோஷமாய் சந்திச்சு, கதைச்சு, சாப்பிட்டுப் போகலாம் தானே?" என்றாள் புவனலோசினி.

"ஐயோ அக்கா... நீங்கள் வேறை தொடங்கீட்டியளே? நாங்கள் இப்ப அனுபவிக்காமல் பொல்லுப் பிடிக்கேக்கையே அனுபவிக்க முடியும்?" என்றான் சிவா.

"தாமோதரன் அண்ணை இண்டைக்கு என்ன மௌன விரதமே? பேசாமல் இருக்கிறியள்." என்றான் அருள்.

"அங்க ஊரில சனம் சாகேக்க நாங்கள் எப்பிடிச் சந்தோஷமாய் இருக்க முடியுமுங்கோ? மனதில ஒரு நாளும் உண்மையான சந்தோஷம் இருக்காது." என்றார் தாமோதரன்.

"நீங்கள் சொல்லுகிறது உண்மை தான். ஆனா... உந்த அவலத்தை என்னத்துக்குத் தொடர வேணும்? ஏதாவது ஒரு முடிவுக்கு வரலாம் தானே? வீர வசனம் பேசப் பேச இருக்கிற கோவணமும் இல்லாமல் போகுது எண்டுகிற உண்மை ஏன் விளங்குது இல்லை." என்றான் அருள்.

"அதுக்காக இவ்வளவு நாளும் போராடிப்போட்டு ஒரு உரிமையும் இல்லாமல் விட்டிட்டு வாறதே?" என்றார் தாமோதரன்.

அவர் தொடர்ந்து தனது கதையை நீடிக்க முடியாது திடீரென அலைபேசி அழைப்பு ஒன்று மனோகரியின்

கைப்பையில் இருந்து ஒலித்தது. அது ஒரு வித புதுமையான சில்லிடும் ஒலியாக காதைத் திருகியது. ஏதாவது அலார்ம் மணிக்கூட்டிற்கு அப்படியான சத்தம் வைத்து இருக்கிறார்களா என்கின்ற சந்தேகம் "TS"சிற்கு முதலில் ஏற்பட்டது. அந்தச் சத்தம் வந்ததும் மனோகரி பதறி அடித்துத் தனது கைப்பையை எடுத்துத் திறந்தாள். அந்த புதிய விதமான நொக்கியா அலைபேசியை எடுத்து அவள் அவசரமாகச் சிவாவிடம் கொடுத்தாள். சிவா அதை வாங்கிக் கதைத்தான். அடுத்த முனையில் சண்முகன். கடைக்கு வர வேண்டிய ஆள் வராததால் தன்னால் இன்று வர முடியாது என்கின்ற தகவலைக் கொடுத்து இருக்கிறான்.

"அது சரி சிவா... உது என்ன கையில வித்தியாசமான ரெலிபோன்?" அருளுக்கு அதைப் பற்றி அறிய வேண்டும் என்கின்ற துடிப்பு. சிவா வேண்டும் என்றே, அதைப் பற்றி நான் உனக்குப் பிறகு சொல்லுகிறன்." என்றான்.

"என்ரை மண்டையை வெடிக்க வைக்கிறதில உனக்கு அவ்வளவு சந்தோஷமே?" என்றான் அருள்.

"சிவா உந்த வித்தியாசமான ரெலிபோனைப் பற்றிச் சொல்லும்?" என்றாள் மாலினி.

"ஓ... உதென்ன நீட்டாக் கறுப்புச் சவக்காரக் கட்டி கணக்கா வைச்சிருக்கிறாய்?" என்றான் அருளன்.

"ப்ப பாருங்க விளையாட்டை. " என்று கூறிவிட்டு அதில் இருந்து சிவா தொடர்பு கொண்டான். வீட்டுத் தொலைபேசி விட்டு விட்டு ஒளி வீசிக் கதறியது. சொரூபன் தன்னிச்சையாக எழுந்து எடுக்கச் சென்றான். சிவா அதைத் துண்டித்து விட்டுச் சிரித்தான்.

"நொக்கியா. நேற்றுத்தான் எடுத்தன். இனி வயர் தேவை இல்லை. எங்கை போய் நிண்டும் போன் பண்ணலாம்." என்றான் சிவா.

"ஓ நானும் அட்டில பார்த்து இருக்கிறன். நேர பார்க்க இல்லை." என்றான் அருளன்.

சொரூபன் அதை வாங்கிப் பார்த்தான்.

"நல்ல கனம். அப்ப சண்முகமும் வைச்சிருக்கிறாரே?" என்றான். பின்பு,

"எனக்கும் ஒண்டு வாங்க வேணும் எண்டு ஆசையா இருக்குது" என்றான்.

"நிரந்தரமா வேலை இருந்தாத்தான் இதை உனக்குத் தருவான்" என்றான் சிவா.

"இதுக்கும் நிரந்தர வேலையா?" என்றான் அருள்.

"இங்க எல்லாத்திற்கும் நிரந்தர வேலைதான்." என்றான் சிவா.

"உங்கடை மெபீலைத் தாங்க பார்க்க வேணும். அது என்ன எண்டு வயர் இல்லாமல் றீங் பண்ணுது?" என்றாள் சொரூபா.

"றேடியோ என்னெண்டு பாடுது?" என்றான் சிவா.

"அலைவரிசையில..." என்றாள் சொரூபா.

"அதுக்கு என்ன தேவை?"

"ம்... என்ன தேவை? ஒரு இடத்தில இருந்து அனுப்ப வேணும். இன்னொரு இடத்தில அதை வாங்க வேணும்." என்றாள் சொரூபா.

"இது அந்த ரெண்டையும் செய்யும். அதை நீண்ட தூரத்துக்கு எடுத்துச் செல்லுகிறதுக்கு பல இடங்களில இதைப் போல பலமடங்கு சக்தி உள்ள கருவிகளை பொருத்தி இருப்பாங்கள். வயர் இல்லாத ரெலிபோன் வசதி இது. இப்ப சாதாரண மனிசரும் இதை வைச்சிருக்கலாம்."

"இதுக்கு உள்ள என்ன இருக்குது?" என்றாள் சொரூபா.

"நீங்கள் தொமஸ் அல்வா எடிசனாகப் பிறந்து இருக்க வேணும்?" என்றான் சிவா.

"பகிடிய விட்டிட்டு சொல்லுங்க சிவா அண்ணை. இதுக்கு உள்ள என்ன இருக்குது?"

"அதுக்குள்ள சின்ன ஆட்கள் குந்தி இருக்கினம். அவை உங்களோடை கதைப்பினம் எண்டு சொல்லட்டே? உதுக்க என்ன இருக்குது எண்டு தெரிகிறதுக்கு நானா அதைச் செய்தன்? ஒரு சின்னச் சிம்காட் நான் போட்டிருக்கிறன்.

அதைவிட வற்றி இருக்குது எண்டும் எனக்கு இப்ப தெரியும். ரெலிபோன்ரை எலக்றொனிக் பற்றி அதுக்கு மேல எனக்குத் தெரியாது." என்றான் சிவா.

"ஓ நான் உங்களை மேதை எண்டு நினைச்சது தப்புத்தான்." என்றாள் சொரூபா.

"அருள் இங்க பார். ஆட்டைக் கடிச்சு, மாட்டைக் கடிச்சு மனிசரைக் கடிக்கிற நிலைக்கு வந்தாச்சுது." என்றான் சிவா.

"எல்லாம் முன்னேற்றம் தான்." என்றான் றூபன்.

அலைபேசி ஒவ்வொரு ஆர்வலர்களினதும் கைகளைத் தாண்டித் தாண்டிச் சென்றது. அது கறுப்பு என்பதை விடச் சாம்பலை பூசியது போன்றதொரு நிறம். அதில் வெள்ளையில் கறுப்பு எண்ணும் எழுத்தும் சேர்ந்த பொத்தான்கள் பல கண்கள் போல ஒளிர்ந்தன. அதைவிடச் சிறிதான திரை ஒன்றும் அதற்கு இருந்தது. அதில் கறுப்பில் யார் தொடர்பு கொள்கிறார்களோ அவர்களது தொலைபேசி எண் காட்டப்படும். அந்த அலைபேசியில் எண்களைச் சேமிக்கின்ற புத்தகம் ஒன்றும் இருக்கிறது என்று சிவா கூறினான். அது எப்படிச் செயற்படும் என்று "TS"சிற்கு விளங்கவில்லை. ஆனால் கணினி போல இதையும் கற்றுக் கொள்ளலாம் என்று அவருக்குத் தோன்றியது. இனி வரும் காலங்களில் இப்படியான அலைபேசிகளை எல்லோரும் பாவிக்கத் தொடங்குவார்கள். அப்போது தானும் ஒன்றை வாங்கிக் கொள்ள வேண்டும் என்று "TS" எண்ணினார்.

அருள் அந்த அலைபேசியை வாங்கிப் பார்த்தான்.

"பெரிய கனமும் இல்லை. பெருப்பமும் இல்லை. டொக்ரர்மார் இறங்குப் பெட்டி சைசில கொண்டு திரிகிறதோடை ஒப்பிட்டால் இது குட்டிதான். சுகமாகக் கொண்டு திரியலாம். நானும் ஒண்டு வாங்கத்தான் வேணும். சொரூபா தனிய இருக்கிற நேரத்தில ஏதாவது நடந்தால் உடனடியாகப் போன் பண்ணிச் சொல்லலாம்." என்றான் அருள்.

"எல்லாற்றை பெண்டாட்டிமாரும் தனியாகத்தான் இருக்க வேண்டி வரும். அப்ப எல்லாரும் போனை வாங்க வேண்டியது தான்." என்றான் சிவா. அவனுக்குத் தான் அப்படிக் கூறியிருக்கக் கூடாது என்பது உடனடியாக

விளங்கியது. அதை எப்படிச் சமாளிப்பது என்கின்ற யோசனையில் இறங்கினான்.

"அப்ப எங்களால வாங்க முடியாது எண்டுறீரோ?" என்றார் தாமோதரன் சண்டைக்குப் புறப்பட்டது போன்று.

"ஐயோ, நான் வாய் தவறி வசனத்தை விட்டிட்டன். இது ஒண்டும் பெரிய விலை இல்லை. அரை மாதச் சம்பளம் தான். வாங்கினா நல்ல வசதி. இனி எல்லாரும் இதைப் பாவிப்பினம். அதோடை நொக்கியா பின்லாண்டுச் சாமான். நல்ல குவாலிற்றி ஆகத்தான் இருக்கும். என்னைத் தொடர்பு கொள்ள வசதியா இருக்கும் எண்டு மூனா அரைவாசிக் காசைப் போட்டு வாங்கித் தந்தார். மிச்சம் என்ரை சம்பளத்தில இருந்து கழிப்பினம். ஏதும் ஆபத்து ஆமந்தரம் எண்டா உதவியா இருக்கும். இனிப் போகப் போக சின்னனா வந்தாலும் வரும் எண்டு நினைக்கிறன். இறங்குப் பெட்டி போலக் கொண்டு திரிஞ்சதை இப்ப இந்த அளவில செய்து இருக்கிறாங்கள் எண்டா இதுவும் சிறுக்கும் தானே?" என்றான் சிவா.

"சிவா நீ சொல்லுகிறது சரி. கொஞ்சக் காலம் போக இதை விடச் சின்னனாக நிச்சயம் வரலாம். ஆரம்பத்தில கொம்பியூற்றர்களும் பெரிசு பெரிசாக வந்ததாம். அறை சைசில இருந்த அதுகின்ரை முளையை இப்ப கைக்கு உள்ள பொத்துகிற அளவுக்குச் சுருக்கியாச்சுது. யுனிவர்சிற்றியில பல காலம் ஆராய்ச்சிப் பொருளாய் இருந்த பிறகு அது சாதாரண ஆட்கள் வாங்கக்கூடிய விலைக்கு வந்ததாம். அதைவிட கொம்பியூற்றர்களை இணைக்கிறதுக்கு இப்ப ஒன்லையின் சிஸ்ரம் இருக்குதாம். ஏதோ அதுக்கு மூடம் எண்டுகிறது வேணும் எண்டு நிமலன் சொன்னான். அடுத்த முறை வரேக்க அதைப் பூட்டிக் காட்டுகிறன் எண்டான். விஞ்ஞான யுகம் விறு விறு எண்டு முன்னேறிக் கொண்டு போகுது. இன்னும் நிறையப் பொருட்கள் நவீனமாக வரப் போகுது." என்றார் "TS".

சுந்தரி தேநீரோடும், பலகாரத்தோடும் அங்கே வந்தாள்.

"தங்கச்சிக்கு நாரி முறியப் போகுது." என்றான் சிவா.

"ஏன் அப்பிடிச் சொல்லுகிறியள் சிவா அண்ணை?" என்றாள் சுந்தரி.

"இல்ல நாங்கள் சமா வைச்சு அதை முடிச்சு வெளிக்கிட்டுப் போகிற வரைக்கும் நீர் ஓடியல்லோ திரிய வேணும்." என்றான் சிவா.

"ஓ அதுவா? அது ஏற்கனவே அவர் உதவி செய்து தந்து இருக்கிறார். கொஞ்ச வேலைதான் மிச்சம் இருக்குது" என்றாள் சுந்தரி.

"நீர் பயப்பிடாதை சுந்தரி. நாங்கள் பிள்ளையை முறிய விடுவமா? நீ வா சொரூபா நாங்களும் போய் சுந்தரிக்கு உதவி செய்வம்" என்று புவனலோசினி எழுந்து கொள்ளச் சொரூபாவும், மாலினியும் எழுந்தார்கள்.

"ஐயோ... அது எல்லாம் வேண்டாம். நான் சமாளிப்பன்" என்று சுந்தரி தடுத்தாள்.

"அவை தண்ணி அடிக்கப் போகினம். இப்ப இனிப்புப் பலகாரம் அவைக்குத் தேவைப்படாது. அதோடை குடிக்கிற அவையின்ரை வாயப் பார்த்துக் கொண்டு இருக்கிறதிலும் உமக்கு உதவி செய்யலாம். வாரும்." என்றாள் மாலினி.

"மாலினி அக்கா உதவி செய்யலாம் எண்ட சாட்டில எங்க எஸ்கேப் ஆகிறியள்? சரி அப்பிடியே மனோவையும் கூட்டிக் கொண்டுபோய் மாதர் மாநாடு வையுங்கோ" என்றான் சிவா.

"நீங்கள் சொன்னா என்ன சொல்லாட்டி என்ன நானும் போய் உதவி செய்யத்தான் போகிறன்" என்று கூறிய வண்ணம் மனோகரியும் எழுந்து சமையல் அறையை நோக்கிச் சென்றாள்.

"பல எலி சேர்ந்தாப் புத்து எடுக்காதாம். இண்டைக்கு எங்களுக்குச் சாப்பாடு கிட்டுமோ தெரியாது" என்றான் அருள்.

"பயப்பிடாதேங்க அருள் அண்ணை... அப்பிடி ஒரு அக்சிடன்ற் நடந்தால் பீச்சா ஓடர் பண்ணினால் ஒரு அரை மணித்தியாலத்தில வந்து இறங்கும் தானே? அவை போகட்டும். அப்பதான் நாங்கள் சுதந்திரமா வாசிக்கலாம், கதைக்கலாம்" என்றான் சொரூபன்.

"நீயும் அப்ப ஐடியாவோடை தான் பேசாமல் இருந்து இருக்கிறாய்?" என்றான் சிவா.

"நீங்கள் என்ன வளமையான கலகலப்பு இல்லாமல் இருக்கிறியள்?" என்றார் "TS" தாமோதரனைப் பார்த்து.

"ஏதோ மனசுக்க ஒரு மாதிரி இருக்குதுங்கோ. ஒரு இனம் புரியாத அந்தரம். என்னத்துக்கு எண்டு தெரியாது." என்றார் தாமோதரன்.

"பெடியளைக் காணேல்லை? ஏன் அவங்கள் இங்க வரேல்லை?" என்றான் அருள்.

"அவங்கள் தங்கடை பிரண்ஸ் வீட்டில இரவு தங்கப் போகிறம் எண்டு போயிட்டாங்கள்." என்றார் தாமோதரன்.

"பெடியள் எண்டாச் சில விஷயங்களில கவலைப்படாமல் இருக்கலாம்." என்றார் "TS".

"யார் உங்களுக்கு அப்பிடிச் சொன்னது? குழந்தைப் பிள்ளைகளைத் தவறாய் பயன்படுத்துகிற மனிசரும் இங்க நிறைய இருக்கினம். அதுவும் பெடியளைத் துஸ்பிரயோகம் செய்கிறவங்களும் இங்க இருக்கிறாங்கள்." என்றான் சிவா.

"எல்லா இடத்திலும் புறநடையான மனிசர்கள் இருக்கவே செய்வினம். நடக்கிறதைக் கண்டு பிடிக்கிற துணிவு, கண்டு பிடிச்சதை வெளிய சொல்லுகிற துணிவு இங்க அதிகமா இருக்குது. மற்றும்படி உலகத்தில இருக்கிற மனிசர்கள் எல்லாரும் மிருகம் பாதி மனிதன் பாதி எண்ட கலவைதான். எப்ப எந்தப் பாதி எப்படி விழிச்சுக் கொள்ளும் எண்டுகிறது விசித்திரமான ஒண்டு தான்." என்றார் "TS".

"உண்மை அண்ணை. மனிதனும் ஒரு மிருகம் தான். அதுவும் தான் பலமாய் இருக்கும் போது ஒரு குணத்தோடை இருப்பான். தான் பலவீனமா இருக்கும் போது இன்னொரு குணத்தோடை இருப்பான். அதைவிட மனசில இருக்கிறதை மறைச்சு வைச்சுப் பௌவுசாக வெளியால கதைச்சு ஏமாற்றத் தெரிஞ்ச ஒரே ஒரு மிருகம் மனிதன் தானே? அவன் அந்த விஷயத்தில எங்கயோ போயிட்டான். எல்லா அழுக்காறுகளும் எங்களுக்குள்ள இருந்தாலும் எதுவும் இல்லாத அப்பாவியளாக வலம் வருகிறதுதான் மனித மிருகத்தின் அற்புத நடிப்பு." என்றான் அருள்.

"அருள் அண்ணை சொல்லுகிறது உண்மை. காட்டில வாழுகிற மிருகம் பசிக்குத்தான் கொலை செய்யும். மனிசன் மாத்திரம் பசி இல்லாத எத்தினையோ விஷயத்திற்கும் கொலை செய்வான். செய்த கொலையைச் செய்ய இல்லை என்றும் மறுப்பான். அல்லது அதைத் தர்ம யுத்தமாய் நியாயப் படுத்துவான்." என்றான் சொரூபன்.

"அநியாயம் நடக்கும் போது கொல்லுதலும் நியாயமாகும். அதைத்தானே கண்ணன் அருச்சுனனைப் பார்த்து கொல்லுவதும் நானே கொல்லப்படுவதும் நானே... பலனை எதிர்பார்க்காது கடமையைச் செய் என்று ஏவினதால செய்விச்சான். ' என்றான் அருள்.

'அப்பிடிப் பார்த்தால் நன்மை, தீமையை யோசிச்சு அதுக்காகக் கொலை செய்கிற மிருகமாகவும் மனிதன் இருக்கிறான் இல்லையாங்கோ?" என்றார் தாமோதரன்.

"உண்மைதான். அநியாயத்தை எதிர்ப்பதற்காய், அதர்மத்தைக் கட்டுப்படுத்துவதற்காய் சட்டங்கள் பயிலப்படாத ஒரு நாட்டில், கொல்லுதலும் தர்மம் ஆகலாம்." என்றார் "TS".

அவர் மனது கொதித்தது. நடந்தவை நடந்தவை தான் என்று மறந்து விட்டு அவரால் இன்றும் இருக்க முடியவில்லை. ஒவ்வொரு கணமும் ஞாபகம் வரும் அந்த நினைவுகளை ஒருவரிடமும் சொல்ல முடியாத தவிப்பு அவருக்கு. மறக்க நினைத்தாலும் மறக்க முடியாத சத்திய சோதனை. இது ஒரு தனி மனித பாதிப்பு என்று ஒதுக்கிவிட முடியாத வாழ்க்கை. எங்கள் நாட்டு அரசியலில் இனவெறி என்னும் ஆயுதத்தை வக்கிர புத்தி உள்ள, பௌத்தர்கள் என்று போலி முலாம் தரித்த அரசியல் வாதிகளும், மத குருமாரும் பாவித்து இருக்காவிட்டால் அதன் சரித்திரமும், அதில் வாழ்ந்த மக்களின் சரித்திரமும் வேறு விதமாக இருந்திருக்கும். சுபிட்சமான பொருளாதாரத்தில் புத்தியைச் செலுத்த முடியாத வங்குரோத்தில் குதர்க்கமான இனவெறி அரசியல் நடத்திய சிங்கள அரசுகளின் அசுரக் கொடுமையால் விளைந்த அவல நிலை இது. பெடியளை இதற்கு ஒரு போதும் குற்றம் சாட்ட முடியாது. யாரோ துவக்கிவிட்டு ஓடியதை அவர்கள் கையில் எடுத்துத் தியாகத்தோடு போராடுகிறார்கள். அவர்கள் செய்யும் சிறிய தவறுகளே மற்றவர்களாலும், உலகத்தாலும் பூதக்கண்ணாடிக்குக் கீழ்

வைத்துக் கழுகுக் கண்ணால் பார்க்கப்படுகிறது. போராட்டம் வெல்லும். எங்களுக்கும் ஒரு நாடு கிடைக்கும். அப்போது இந்தக் கழுகுக் கண்களில் கெஞ்சல் பிறக்கும். அந்தப் புதிய நாட்டுடன் நட்புக் கொண்டாட யாவரும் வருவார்கள். எங்கள் ஈழம் இசுரேல் போல யாராலும் அழிக்க முடியாது எழுந்து நிற்கும் என்று "TS" நினைத்துக் கொண்டார்.

"தமிழர்கள் பாண்டவராய் இருந்தாலும் தமிழருக்காய் போராடுகிறவங்கள் பாண்டவராய் இல்லை. சிங்கள அரசியல்வாதிகள் கௌரவராய் இருந்தாலும் சிங்கள மக்கள் அனைவரும் கௌரவர்கள் இல்லை. இந்தப் பாரதப் போரில் இதிகாசத்துப் பாரதத்து மைந்தரோடும் போராட்டம் நடத்திப் பார்த்தாச்சு. அதுக்குப் பிந்தியவர்களோடும் போராட்டம் தொடருது. நியாயம், அநியாயம் என்பதை உலகம் எப்படி விளங்கிக் கொள்கிறது எண்டதைப் பொறுத்துத்தான் போராட்டத்தின் வெற்றி தோல்வி நிர்ணயிக்கப்படும். நாங்கள் பயங்கரவாதிகள் என்று மற்றவர்களாலும், எங்களாலும் சொல்லப்படும் ஒரு இயக்கத்தை எங்கள் விடுதலை வீரர்களாகப் பார்க்கிறம். இது ஒரு வகையில றவுடியே தெருவில நிண்டு நியாயம் கேட்கிற மாதிரி இருக்கும்." என்றான் சிவா.

"சிவா நாங்கள் ஒரு நாளும் அவங்களைப் பயங்கரவாதிகள் எண்டு சொல்ல மாட்டம். அப்பிடிச் சொல்ல எங்களுக்கு என்ன விசரோ? நீங்கள் எங்கடை போராட்டத்தைக் காட்டிக் குடுக்கிற மாதிரி இனியும் கதைக்கக் கூடாது. இப்பிடி நீங்கள் கதைக்கிறதைக் கேட்க எனக்கு வகித்தப் பிரட்டுதுங்கோ. அவங்கள் உயிரோடை போய் நாட்டுக்காகக் குதிக்கிறாங்கள். நாங்கள் உதவி செய்யாட்டியும் பருவாய் இல்லை பேசாமல் இருக்கோணும். எப்ப பார்த்தாலும் அவங்கள் ஏதோ முஸ்பாத்திக்கு ஆயுதம் எடுத்துக் கொலை செய்கிற மாதிரிக் கதைச்சா மற்றவைக்கு விசர்தான் வரும். அவங்கடை தியாகத்தை மதிக்காட்டிப் பருவாய் இல்லை. அவங்களைத் தயவு செய்து இம்சல்ற் பண்ணாதேங்க." என்றார் தாமோதரன். அவர் கண்கள் சிவந்து இருந்தன. அவர் உணர்ச்சியின் பிடியில் தத்தளிப்பதை "TS" பார்த்தார். "TS"சிற்கு எப்படி அவரைச் சமாதானப் படுத்துவது என்று விளங்கவில்லை. சமாதானம் ஆகாவிட்டாலும் பருவாய் இல்லை. சிவா இதற்குப் பதில்

அளிக்காமல் விட்டால் நன்றாக இருக்கும் என்று அவருக்குத் தோன்றியது. அப்படி அவன் அமைதியாக இருப்பான் என்பதில் அவருக்குச் சந்தேகம் வந்திற்று. அதை எப்படித் தடுக்கலாம் என்று அவர் யோசனை செய்ய முதலே சிவா கதைக்கத் தொடங்கினான்.

"நான் இம்செல்ற் பண்ண இல்லை. அவங்கள் தான் எங்களை இம்செல்ற் பண்ணி ஓட ஓடக் கலைச்சுக் கலைச்சு கொலை செய்தவங்கள். சரி அது இப்ப முடிஞ்ச கதை. எங்களோடை மட்டும் செருகினாப் பருவாய் இல்லை. இப்ப இந்தியாவில என்ன செய்து வைச்சு இருக்கினம்? ஒரு காலத்தில தமிழ்நாட்டில எங்களுக்கு இருந்த வரவேற்பு என்ன இப்ப இருக்கிற வரவேற்பு என்ன? விசா எண்டு சொல்லி இந்தியன் எம்பசியில போய் நிக்கவே அவமானமாய் இருக்குது. எல்லாரோடும் பகைச்சுக் கொண்டு போராட்டம் நடத்த ஏலாது. எங்களை நாட்டில நிக்க விடாமல் ஆயுதத்தால் அச்சுறுத்திக் கலைச்சவங்களுக்கு இங்க வந்து காசு கேட்கிறாங்கள். அப்பிடிச் செய்தா நான் சட்டையைத் தான் பிடிப்பன். வன்னிக்குப் பெயர் பட்டியல் அனுப்புவினமாம். அனுப்பட்டும். இவை ஆட்சி செய்தா போல்பொட்டை விட மோசமாகத்தான் இருக்கும். அந்தக் கண்டுறாவியைப் பார்க்க நான் அங்க போக வேணுமே? அதைவிட எங்கேயோ கண் காணாத தேசத்தில எங்கடை வாழ்க்கை முடிகிறது மேல். நீங்கள் இப்படி உணர்ச்சிவசப் படுகிறியளே அண்ணை... நான் ஒண்டு கேட்டா உங்களால பதில் சொல்ல முடியுமா?" என்றான் சிவா.

"சிவா உந்தக் கதை இண்டைக்குக் காணும். உதை இத்தோடை விடும்." என்றார் "TS".

"அது ஏதாவது தப்பு நடந்து இருக்கலாம். என்ன நடந்தாலும் இப்ப போராட்டத்திற்கு உதவ வேண்டியது ஒவ்வொரு தமிழனதும் முக்கிய கடமை. நீங்கள் தமிழராய் இருந்தால் உதவி செய்ய வேணும்முங்கோ." என்றார் தாமோதரன்.

"ஓ இது நல்லா இருக்குது. அப்ப நாங்கள் எல்லாம் தமிழர் இல்லைச் சிங்களவர் எண்டுறியளே? என்னிட்டைக் காசு கேட்டு வந்தாலும் சிவா செய்த மாதிரித்தான் சட்டையைப் பிடிப்பன். எங்கடை போராட்டத்தையே பயங்கரவாதப் போராட்டம் ஆக்கி எங்களையே கொலை செய்தவங்களுக்கு, அதைத் தொடர்ந்தும் செய்யச்

சொல்லி நாங்களே காசு குடுக்க வேணுமே? சிங்களவன் செத்ததைவிடத் தமிழன்தான் இந்தப் போராட்டத்தில கொத்துக் கொத்தா அழிஞ்சான். அப்பிடி அழிகிறதில அரசியல் ஆதாயம் தேடிச்சினம். அப்பிடி அழிகிற மாதிரியே எப்பவும் போராட்டத்தை நடத்துகிறதில அவை வலு கெட்டிக்காரர்கள். அப்பிடியான இவங்களுக்கு எல்லாம் எப்பிடி நாங்கள் உதவி செய்ய முடியும்? செய்தால் அது எங்கடை மனச் சாட்சிக்கு விரோதமானது. அதில இருக்கிற நியாயத்தை இப்ப பலராலும் விளங்கிக் கொள்ள முடியாது. அதுக்காக நாங்கள் கவலைப்படவும் முடியாது." என்றான் அருள்.

"இப்ப அவங்கள் மட்டும் தான் நாட்டில போராடுகிறாங்கள். அவங்கள் அங்க இருக்கிறதால தான் சனம் வித்தியாசம் பார்க்காமல், கள்ளர் காடருக்குப் பயம் இல்லாமல் வாழுதுகள். அவங்களும் இல்லாட்டா யார் எங்களுக்காகப் போராடுகிறது? இப்பிடி ஒரு தலைவர் இனி வருவாரே? இப்படி ஒரு தலைவர் ஏற்கனவே எப்பவாவது இருந்திருக்கிறாரே? அப்பிடி ஒருத்தர் இனி வரப் போகிறதும் இல்லை எண்டதும் உண்மை. நாட்டுக்கு ஒரு விடுதலை கிடைக்கிறது எண்டா அது இப்பதான் கிடைக்க வேணும். இல்லாட்டி அது எப்பவும் கிடைக்காது. அதுக்கு எல்லாரும் ஒத்துழைப்புக் கொடுக்கிறது தான் நல்லது. பழசையே கதைச்சுக் கொண்டு இருக்காமல் அவங்கடை கையைப் பலப்படுத்தி விடவேணும். நாங்கள் தமிழரா, நடந்ததை எல்லாம் மறந்திட்டு, இனி ஒற்றுமையா நிற்க வேணும். இந்தக் காலத்திலும் வேறுபாடு பார்த்துக் கொண்டு நிண்டா அநியாயமாக எங்கடை இனம்தான் அழிஞ்சு போகும். யாராக இருந்தாலும் நாங்கள் தமிழர் எண்ட உணர்வு இருக்கோணும்." என்றான் றூபன்.

"உங்கடை கண்மூடித்தனமான உந்த ஒத்துழைப்பு வெளிநாட்டிற்கு ஓடி வந்த ஆட்கள் சுகபோகமா இங்கையே தொடர்ந்தும் வாழுகிறதுக்கு மட்டுமே உதவும். இனியும் அவையின்ரை சொந்தங்கள் வெளிநாட்டுக்கு வரவும் உதவும். உருப்படியா தமிழற்றை விடுதலைக்கு மட்டும் ஒரு துளியும் அது உதவாது. முதல்ல நாட்டை விட்டுச் சனம் கொஞ்சம் கொஞ்சமா வெளியேறிடும். இப்பிடியே தற்கொலைப் படையைப் பாவிக்கப் பாவிக்க பயங்கரவாதியள் எண்டு எல்லாரும் ஒதுக்கத் தொடங்கீடுவாங்கள். நீங்கள் குடுக்கிற பணம் ஆயுதமாகி

இன்னும் அநியாயத்தை, சாக்களைக் கூட்டிக் கொண்டே போகும்" என்றான் சிவா.

"இவன் என்ன சாத்தான் மாதிரி வேதம் ஓதுகிறான். இதைக் கேட்டுக் கொண்டு இருக்கவே நான் இங்க வந்தனானுங்கோ?" என்றார் தாமோதரன் கடும் கோபமாக.

"அண்ணை நான் உங்களோடை மரியாதையாய் கதைக்கிறன். அப்பிடி நீங்களும் மரியாதையாய் கதைக்கிறது தான் பண்பு. நான் எதாவது உங்களைப் பற்றித் தரக்குறைவாக் கதைச்சனோ? பிறகு நீங்கள் வரம்பு மீறிக் கதைக்கக் கூடாது." என்றான் சிவா. அவனுக்குக் கண்கள் சிவந்து இருந்தன. பார்வையில் இருந்த சினேகம் சட்டென்று பறந்து போயிற்று.

அரசியல் என்பதை எல்லா நேரமும் எல்லா மனிதர்களோடும் கதைக்க முடியாது என்று "TS"சிற்குத் தோன்றியது. அதுவும் எங்கள் அரசியல் என்பது இரத்தம் கொதிக்கும் வாதமாகச் சட்டென்று மாறிவிடுகிறது. இயக்கத்தை ஏன் இவர்கள் இப்படி எதிர்க்கிறார்கள் என்பது "TS"சிற்கு விளங்கவில்லை. உலகத்தில் விளங்காமல் இருக்கும் விடையங்களே மனிதனுக்கு விளங்கிய விடையங்களைவிட அதிகம். அப்படி இருக்கும் போது எங்களுக்கே எல்லாம் விளங்கியதாக நினைத்துக்கொண்டு இப்படியான குதர்க்கமான விவாதத்தில் இறங்கி அடிபடுவது அவருக்குச் சிறுபிள்ளைத் தனமாகத் தோன்றியது. தாமோதரன் இந்த அரசியலைத் தனது சொந்த விஷயம் போல் கருதுகிறார். அது தெரிந்தும் சிவா கிண்டுவதை நிறுத்துவது இல்லை. அவனுக்குச் சண்டை பிடிப்பது விருப்பம் இல்லாவிட்டாலும் மிகவும் சர்ச்சைக்குரிய விஷயத்தை கதைப்பதில் விருப்பமும் துணிவும் இருக்கிறது. அதில் அவன் விட்டுக்கொடுப்பே காட்டுவது இல்லை. அவனின் அடிமனதில் இந்த இயக்கம் கூடாது என்பதைத் தவிர எதுவும் இல்லையோ என்கின்ற சந்தேகம் சில வேளை "TS"சிற்கு உண்டாகும். அவன் சொல்வதை எல்லாம் இயக்க விசுவாசமே இல்லாமல் பார்த்தால் அதிலும் நியாயம் இருப்பதாகத் தோன்றும். நியாய அநியாயம் பார்த்தால் எங்கள் இனத்தையே அழித்து விடுவார்கள் என்று அவனோடு அப்பட்டமாய் அவர்கள் செய்வது முழுவதும் சரி என்று வாதாட முடியாது. அப்படி

வாதாடினால் தன்னைப் பற்றிய அவன் பார்வை வித்தியாசமாய் இருக்கும் என்று "TS" எண்ணினார்.

"வாதம் வாதமாய் இருக்கட்டும் சிவா... அவர் வயதில மூத்தவர் தானே... கோவிக்காத." என்றார் "TS".

"இங்க அப்பா அம்மாவையும் பெயர் சொல்லித் தானே கூப்பிடுகினம் "TS" அண்ணை? ஆனா... நாங்கள் எங்கடை கலாச்சாரத்தைக் கடைப் பிடிக்கிறம் இல்லையா? அதுக்கு விசுவாசமாகத்தான் நாங்கள் இருக்க வேணும். என்னுடைய வாதம் வாதமாய்த்தான் இருக்குது. ஆனா... அண்ணைதான் மரியாதை இல்லாத சொற்களைப் பாவிக்கிறார். இதைப் பற்றிக் கதைச்சாப் பிரச்சனை வரும் எண்டு எனக்கும் தெரியும். நானும் அவதானமாகத்தான் கதைக்கிறன். இருந்தும் அது கோவப் படுத்தலாம். அப்பிடித்தான் நீங்கள் கதைக்கிறதும். எண்டாலும் நான் அதைக் கேட்டும் அதுக்குப் பண்பாகத்தான் மறுமொழி சொல்லுகிறன். யார்ற்றை மனதையும் நோகடிக்க வேணும் எண்டுகிறதிற்காய் இதைக் கதைக்கிறது இல்லை. என்ன செய்கிறது? எங்கடை அரசியல் கதைச்சாலே பல மனதுகளுக்குப் பலவிதமான வேதனையாகத்தான் இருக்கும்." என்றான் சிவா.

"காகம் இருக்கப் பனம்பழம் விழுந்த கதையா ஏதோ ஒரு சாட்டைப் பிடிச்சுக் கொண்டு நீங்களும் நாட்டை விட்டு இங்க ஓடி வந்து இருக்கிறியள். பிறகு அவங்களைக் காட்டிக் குடுக்கிற துரோகச் செயலைச் செய்யக் கூடாது. ஓமுங்கோ... இவங்கள் எல்லாம் தமிழரைக் காட்டிக் குடுக்கிற ஈனப் பிறவியள். இவங்களுக்குச் சாதி, இனம் எண்டு எந்தப் பற்றும் கிடையாது. இதுக்கு மேல நான் இந்த இடத்தில இருக்க விரும்பேல்லை. மாலினி வா... நாங்கள் வீட்டை போவம்." என்று சமையல் அறையைப் பார்த்துக் கத்திய தாமோதரன் எழுந்து புயல் போல வாசலை நோக்கிப் பாய்ந்தார். யாரும் இதை எதிர்பார்க்கவில்லை. எல்லோரும் சில கணங்கள் கல்லாய் உறைந்து இருந்தனர். வாதங்கள் மனதில் வஞ்சமாய், வெஞ்சினமாய் விளையும் அளவிற்கா சிவா கதைத்து இருக்கிறான்? என்பது "TS"இற்கு விளங்கவில்லை. சிவாவிற்கே தாமோதரன் இப்படிக் கோவித்துக் கொள்வார் அல்லது இந்த நிலைக்கு இறங்கிச் செல்வார் என்கின்ற எண்ணம் இருந்தது இல்லை. அவர் என்ன சொல்கிறார் என்பது அவனுக்கு விளங்கியது. அவர் சொல்வது எதுவும்

சரியில்லை என்பது அவன் புரிதல் ஆகியது. இருந்தும் வந்த இடத்தில் இருக்கும் நட்பை ஒரு சிறு விவாதத்திற்காய் முறித்துக் கொண்டு போவது அவனுக்குச் சங்கடத்தைத் தந்தது. தாமோதரன் கத்திய சத்தத்தில் மாலினி விழுந்து அடித்துக் கொண்டு அவர் பின்னால் ஓடினாள்.

"அண்ணை... அண்ணை... இனி அரசியல் கதைக்க வேண்டாம். தயவு செய்து வந்து இருங்கோ. சிவாவும் இனி அரசியல் கதைக்க மாட்டான். தயவு செய்து திரும்பி வாங்கோ." என்றான் சொரூபன்.

"வாங்க அண்ணை... இது சும்மா ஒரு வாதம் தானே? இதை நீங்கள் இவ்வளவு சீதியஸ்சா எடுத்துக் கொள்ளக் கூடாது." என்றான் றூபன்.

"றூபன்... நீயுமா இப்பிடிக் கதைக்கிறாய்? அங்க சனம் சாகிறது உங்களுக்குப் பொழுது போக்கா?" என்று தாமோதரன் வாசலில் நின்று கத்தினார்.

"என்னங்கோ பிரச்சனை? எதுக்கும் நீங்கள் தயவு செய்து கோவப்படாதேங்கோ. இங்க வந்திட்டம்... கடைசி வரையும் இருந்திட்டுப் போவமே? அவன் சிவா சும்மா பகிடிக்குக் கதைக்கிறான். நீங்கள் ஏன் கோவப் படுகிறியள்?" என்று மாலினி சமாளிக்கத் தவண்டை அடித்தாள்.

"வாயப் பொத்திக் கொண்டு வாடி" என்ற தாமோதரன் படிகளால் இறங்கி நடந்தார். வேறு வழி இல்லாமல் மாலினி தொப்பியையும், மேலங்கியையும் எடுத்துக் கொண்டு அவர் பின்னால் ஓடினாள். அவள் மனது எல்லாம் சந்தோஷமான பொழுதைத் திடீரெனச் சாகடித்த சோகம். இதற்கு மேல் இந்த மனிசனிடம் கதைத்து எதுவும் எடுபடாது என்கின்ற சலிப்பு அவளுக்கு. அவள் எதுவும் கதைக்காது அவர் பின்னே நடந்தாள். வெளியே சில்லெனக் குளிர்ந்தது. தான் இப்படி வருவதோ என்கின்ற எண்ணம் ஒரு கணம் தாமோதரனிடம் வந்தது. "இல்லை... இவங்கள் எல்லாம் தமிழர் இல்லை. இவங்களால போராட முடியாமல் நாட்டை விட்டு ஓடி வந்து இருக்கிறாங்கள். இங்கு வந்த பின்பு ஏதோ காரணம் சொல்லுகிறார்கள். இவர்களுக்காக அங்கு உயிரைக் கொடுக்கும் அந்த உத்தமர்களை விமர்சிக்க என்ன அருகதை இருக்கிறது? வெளிநாட்டிற்கு வந்து விட்டால் எதுவும் கதைக்கலாம், எப்படியும் இருக்கலாம் என்று நினைக்கிறார்களா? ஊரில்

என்றால் பெடியளுக்குப் பயந்து பெட்டிப் பாம்பாக இருந்து இருப்பார்கள். இனி இங்கு வரக் கூடாது. இவர்களோடு எல்லாம் கதைக்கக் கூடாது. துரோகிகள் கூட்டத்தோடு எந்தத் தொடர்பும் வைத்திருக்கக் கூடாது. "TS"சும், ரூபனும் அவர்களைப் போல் இல்லை. அவர்கள் போராட்டத்திற்கு உதவுகிறார்கள். இயக்கத்திற்கு ஆதரவு தருகிறார்கள். மற்றவர்கள் தமிழராய் இருந்தும்கூட இனத்திற்கு எதிரிகளாக இருக்கிறார்கள். இந்த எதிரிகள் தான் எங்கள் விடுதலைக்கே மிகவும் ஆபத்தானவர்கள்." என்கின்ற எண்ணங்களோடே கோபத்தில் தாமோதரன் ஓடுவது போல் நடந்தார். மாலினி அவர் பின் ஓடியே சென்றாள்.

புயல் அடித்து ஓய்ந்ததான அமைதி. அந்த அமைதி சிவாவைக் குற்ற உணர்வாய் வதைத்தது. தான் கொஞ்சம் கவனமாக இருந்திருக்க வேண்டுமோ என்கின்ற கவலை அவனுக்குத் தோன்றியது. ஒரு நல்ல சந்திப்பைத் தன் நாக்கால் குழப்பி விட்டேனோ என்கின்ற கவலை உறுத்த, அவனும் வழக்கத்திற்கு மாறாகப் பேசாமல் இருந்தான். "TS"சிற்கு தர்ம சங்கடமாய் இருந்தது. சென்றவருக்காக இருப்பவர்களும் துக்கம் கொண்டாட வேண்டும் என்பதை அவர் சிறிதும் விரும்பவில்லை. கருத்துக்களைக் கருத்துக்களால் எதிர்க்காது வெளிநடப்புச் செய்வதும் ஒரு வகைக் கோழைத்தனம் என்பது அவர் கருத்து. அவரது கருத்திற்குப் பலமான ஆதரவு இருந்திருந்தால் அவர் போயிருக்கமாட்டார். கருத்தில் தீவிரம் இருக்கலாம். வெறி இருக்கக் கூடாது. அவர் கருத்தில் வெறி இருப்பதாக "TS"சிற்குத் தோன்றியது. சிவாவிற்கு அதற்கு மேல் அமைதியாக இருக்க முடியவில்லை. அவனுக்குத் தான் மன்னிப்புக் கேட்க வேண்டும் என்று தோன்றியது. அதுவும் தான் கதைத்ததிற்கான மன்னிப்பு அல்ல. அதற்கு மன்னிப்புத் தேவை இல்லை என்பது அவன் எண்ணம். உண்மையைக் கதைப்பதற்கு ஏன் மன்னிப்புக் கேட்க வேண்டும் என்கின்ற அவனது அடங்காத் திமிர். இருந்தும் அவன் மன்னிப்புக் கேட்க எண்ணினான். தான் கதைத்த உண்மைகளால் சொரூபனின் விருந்து உபசாரம் குழம்பியதற்காய் அவன் மன்னிப்புக் கேட்க எண்ணினான்.

"சொறி... நான் கதைச்சதால கொண்டாட்டம் குழப்பமாய் போச்சுது. சொறி சொரூபன்." என்றான் சிவா.

"ஐயோ சிவா... அவரை விடு... அவர் அவங்கள் எதைச் செய்தாலும் கண்ணை மூடிக் கொண்டு சரி எண்டுகிற ஆள். அப்பிடியான ஆளோடை ஒரு ஆக்கபூர்வமான விவாதம் நடத்த ஏலாது. இவ்வளவு நாளும் எப்பிடிப் பொறுமையாய் இருந்து கதைச்சாரோ தெரியாது. நான் இதை எதிர்பார்த்து இருந்தன். எப்பவும் நடக்கலாம் எண்டு எதிர் பார்த்தன். அது இண்டைக்கு நடந்திட்டுது." என்றான் சொரூபன்.

"எப்பிடி எண்டாலும் நான் குழப்பின மாதிரி இருந்தா மன்னிச்சுக் கொள்." என்றான் சிவா மீண்டும்.

"அப்பிடி இல்லைச் சிவா. சொரூபன் ஒரு நாளும் அப்பிடி நினைக்க மாட்டான்." என்றான் அருள்.

"சிவாவை இதில குற்றம் சொல்ல முடியாது. நாலு மனிசர் இருக்கேக்கை நாலு விதமாகத்தான் கதைப்பினம். பிடிச்சாப் பதில் சொல்லுகிறது. பிடிக்காட்டிப் பேசாமல் இருக்கிறது. அதை விட்டிட்டு கோவிச்சுக் கொண்டு போகக் குழந்தைப் பிள்ளையளா நாங்கள்? அதைச் சொல்லி இருந்தால் சில வேளை எங்களோடும் சண்டைக்கு வந்து இருப்பார். விடு சிவா. கோபம் அடங்க அவருக்குத் தன்ரை பிழை தெரியும். அப்பிடித் தெரியாட்டிப் பருவாய் இல்லை. நாலுபேர் ஊமையளா இருக்கிறதிலும் மூண்டுபேர் பலதையும் பத்தையும் கதைச்சுக் கொண்டு இருக்கிறது நல்லது தானே?" என்றார் "TS".

"எனக்கும் சிவா கதைக்கேக்க கோபம் வருகுது தான். அதுக்கு என்ன செய்ய முடியும்? ஐஞ்சு விரலும் ஒரே அளவில இருக்க வேணும் எண்டு நினைக்க ஏலாதுதானே. அப்பிடி இருந்தாலும் அது வடிவா இருக்காது. பேசாமல் சொரூபன் போத்தில எடுத்தாரும்... நாங்கள் அடிப்பம்." என்றான் றூபன்.

"றூபனுக்கு விஷயம் நல்லா விளங்கி இருக்குது?" என்றான் அருள்.

"அப்ப நீங்கள் இப்ப மணக்கவா போறியள்?" என்றான் றூபன்.

"அப்பிடி எல்லாம் சொல்லி என்னை விரதம் இருக்கப் பண்ணாதை றூபன்." என்றான் அருள்.

"தண்ணி போட முதல் பிரச்சனை வந்தது ஒரு வகையில நல்லதாப் போச்சுது. இல்லாட்டித் தண்ணியைப் போட்டிட்டு வெறியில கதைச்சது எண்டு மாதர் மாநாட்டில முடிவு எடுத்து இருப்பினம். எனக்குச் சரி எண்டுகிறதை நான் எங்கையும், எப்பவும் கதைப்பன். வேறை யாரும் தங்களுக்குச் சரி எண்டுகிறதை உரிமையோடை கதைக்கிறதையும் கேட்ப்பன். அதுக்கு ஆளுக்கு ஆள் பகைச்சுக் கொள்ளோணும் எண்டு நினைக்க இல்லை. அப்பிடி யாரும் நினைச்சா அந்தப் பயமுறுத்தலுக்கு அடிபணிஞ்சு போகவும் நான் தயாரில்லை." என்றான் சிவா.

# 11 தத்தில் தாமோதரன்

சொரூபனின் விருந்திற்கு அடுத்த நாள் "TS" தாமோதரனைத் தொலைபேசியில் தொடர்பு கொண்டார். சிவா வைத்து இருப்பது போன்று அலைபேசி வாங்க வேண்டும் என்கின்ற ஞாபகம் அவருக்கு அப்போது வந்தது. அந்த நோக்கியா கண்ணை விட்டு அகல மறுத்து அடம் பிடித்தது. அந்த நச்சரிப்பைப் புறம் தள்ளி தாமோதரனுடன் அவர் கதைத்தார். அவரைச் சமாதானம் செய்ய வேண்டும் என்பது "TS"சின் எண்ணமாக இருந்தது. வெளிநாட்டிற்கு வந்த பின்பும் தமிழர்களாகிய நாங்களே எங்களுக்குள் அடிபடுவது அவருக்குப் பிடிக்கவில்லை. அடிபாடு இல்லை இது கருத்து முரண்பாடு மட்டுமே என்பதாக அவரே தன்னைத் தானே திருத்திக் கொண்டார். அப்படித் திருத்திய போது அறிவை வளர்க்கும் கருத்து முரண்பாடே இல்லையா என்கின்ற கேள்வி எழுந்தது. அப்படியான கருத்து முரண்பாடும் இருக்கிறது. சண்டைகளை உருவாக்கும் கருத்து முரண்பாடும் இருக்கின்றன. அதற்காகக் கதைக்காது விடவேண்டிய அவசியம் இல்லை என்று மீண்டும் தனது கருத்தை திருத்திக் கொண்டார்.

தாமோதரன் அன்று போல் இன்று கோபமாகக் கதைக்கவில்லை. அன்றும் "TS" உடன் அவர் கோபமாகக் கதைக்கவில்லை. தான் அப்படி வந்திருக்கத் தேவை இல்லை என்றும், "TS" உடனும், றூபன் உடனும் கதைப்பதைப் பற்றிப் பிரச்சனை இல்லை என்றும் ஆனால் இனிச் சிவாவோடு ஒன்றாக இருந்து விவாதிக்கப் போவது இல்லை என்றும் பிடியாக தனது கருத்தில் நின்றார். சிவாவோடு இவர் வாதிக்க முடியாது. சிவாவின் சில கேள்விகள் பதில் இல்லாமல் தொங்கும் வேதாளங்கள் போல. அது தொங்கும். இறங்கும். மீண்டும் தொங்கும். அதற்கு ஏதாவது சமாளிப்பாகப் பதில் சொல்ல வேண்டும். சில பிழைகளை இப்போது விவாதிக்கக் கூடாது என்பதற்காகச் சடைவதை "TS" தானே செய்தது உண்டு என்பதை எண்ணிக் கொண்டார்.

இனிச் சிவாவைக் கண்டால் தலையை ஆட்டுவதோடு சரி என்றும், மற்றவர்கள் மேல் தனக்கு எந்தக் கோபமும் இல்லை என்றும் தாமோதரன் தொடர்ந்தும் கூறினார். "TS"

அதை விவாதமாக மட்டும் எடுத்துக் கொள்ளுமாறு மன்றாடிக் கேட்டார். தான் அதை விவாதமாய் எடுத்துக் கொண்டாலும் சிவா இருக்கும் இடத்தில் இனித் தானும் இருக்க விரும்பவில்லை என்று தாமோதரன் அடம் பிடித்தார். அப்படிச் சந்திக்க வாய்ப்புக் கிடைத்தால் மீண்டும் பிரச்சனை வேண்டாம் என்று ஒதுங்கினாலும் எப்படியும் பிரச்சனை வந்துவிடும் என்றும் அவர் கூறினார்.

"TS" இயலுமானவரைப் புத்திமதி கூறிப் பார்த்தார். தாமோதரனுக்குச் சிவா மீது ஒரு வெறுப்பு வந்து விட்டது என்பதை அவரால் உணர முடிந்தது. அந்த வெறுப்பை எப்படி அகற்றுவது என்பது அவருக்கு விளங்கவில்லை. பின்பு சிறிது சமாதானமாய் கதைத்து விட்டுத் தொலைபேசியைத் துண்டித்துக் கொண்டார்.

*

இரண்டு நாட்கள் கழித்து மாலினி தொலைபேசியில் தொடர்பு கொண்டாள். அவளது குரலில் இவ்வளவு பதட்டமும் கவலையும் இருந்ததை "TS" இதுவரை என்றும் கேட்டதில்லை. எதற்கு இந்தப் பதட்டம் என்பதைக் கேட்க வேண்டும் என்பதற்கு இடையில் அவள் கதைக்கத் தொடங்கினாள்.

""TS" அண்ணை... அவரை உல்லவோல்ல அட்மிட் பண்ணி இருக்குது. எனக்கு ஒரே பயமா இருக்குது. தெரிஞ்ச ஊர்ச் சனத்தை யாரையாவது உதவிக்கு கேக்கலாமுங்கோ. அதைவிட எனக்கு உங்கடை குடும்பத்தைத் தான் அதிகம் பழக்கம். அதுதான் எடுத்தனான். திடீர் எண்டு...." கூறியதை முடிக்காமல் மறு முனையில் மாலினி அழுவது கேட்டது. அது "TS"சிற்குச் சங்கடமாய் இருந்தது. பக்கத்தில் இருந்த புவனலோசினியிடம் தொலைபேசியைக் கொடுத்தார். புவனலோசினி அவளை ஆறுதல் படுத்துவதற்கு நேரம் எடுத்தது. "TS" பொறுமை காத்தார். கடைசியாக அவளை ஆறுதல் படுத்தித் தொலைபேசியை வைத்த பின்பு,

"பெடியளை எங்க விடுகிறது எண்டு தெரிய இல்லையாம். தான் கொஸ்பிற்றலில்லை நிக்க வேணுமாம். நான் அவங்களை இங்க கொண்டு வந்து விடச் சொல்லி இருக்கிறன்" என்றாள் புவனலோசினி.

"நீ நினைக்கிற மாதிரி அவங்கள் இப்ப சின்னப் பிள்ளையள் இல்லை. மீசை அரும்பின குமரன்கள். எங்கடை சொல்லுக் கேட்டு நடப்பாங்களோ இல்லாட்டிக் குளப்படி செய்வாங்களோ தெரியாது." என்றார் "TS".

"அது எல்லாம் கேட்டு நடப்பாங்கள். அவங்களைச் சரிஸ்காவோடை விட்டிட்டுப் பின்னேரச் சாப்பாடும் செய்து கொண்டு போய் அவரைக் கொஸ்பிற்றலில பார்த்திட்டு வருவம். சரியே அப்பா?" என்றாள் புவனலோசினி.

"சரிஸ்கா அவங்களை மேய்ப்பாளே? இல்லாட்டிச் சரிஸ்காவை அவங்கள் மேய்ப்பாங்களோ? அவங்கள் ஏதாவது சொல்ல இவள் பாய்கிறாளோ தெரியாது. எனக்கு எண்டா இது றிஸ்க் மாதிரி தெரியுது. சொரூபாவிட்ட விட்டிட்டுப் போனாலும் நல்லம்." என்றார் "TS".

"அவை எல்லாம் அவரைப் பார்க்க வருவினம். சரிஸ்காவைக் கேட்டா அவள் மாட்டன் எண்டுதானே சொல்லுவாள். அப்ப இதையாவது செய்யட்டும். அவங்கள் இப்ப தனிய இருக்க மாட்டாங்களே?" என்றாள் புவனலோசினி.

"இருப்பாங்கள். எண்டாலும், காக்கைக்கும் தன் குஞ்சு பொன் குஞ்சு எண்டுகிற மாதிரி அம்மாவுக்குப் பயம். சரி நீ அலுவலைப் பார். நான் மற்றவைக்கும் அடிச்சுச் சொல்லுகிறன். பிறகு சொல்ல இல்லை எண்டு குறை சொல்லுவினம்." என்றார் "TS".

*

ஐந்து மணிக்கு வெளி ஆட்கள் உள்ளே சென்று நோயாளிகளைப் பார்ப்பதற்கு அனுமதி வழங்கப்பட்டது. அருளும், சொரூபனும் வேலை காரணமாக வரவில்லை. றூபனும், மலரும், சிவாவும், "TS" தம்பதியினரும் தாமோதரனைப் பார்க்க வந்து இருந்தார்கள். சிவாவிற்குச் சொன்னாலும் அவன் வருவான் என்று "TS" எதிர்பார்க்கவில்லை. அவன் வந்த போது "TS"சிற்கு சிவாவின் மேல் இருந்த மதிப்பு இன்னும் அதிகம் ஆயிற்று. சிவாவைக் கண்டதுமே,

"ஏன் மனோ வரேல்லை?" என்று "TS" கேட்டார்.

"அவவுக்கும் சுகம் இல்லை. இந்த ரைமில சரியான தலையிடியாய் இருக்கும். ஆள் படுத்து இருக்கிறா." என்றான் சிவா.

"நாங்கள் சாப்பாட்டைப் பற்றி நினைக்க இல்லை." என்று மலர் தனது தவற்றிற்கு வருத்தப்பட்டாள்.

"சிங்கப்பூரில அப்பிடி இல்லை ஆக்கும். யாழ்ப்பாணத்தில இப்பிடியான வழமைகள் எல்லாம் இருக்குது. இங்கையும் நாங்கள் அதைத் தொடருகிறம்." என்று சொல்லிக் கொண்டு நிற்கும் போதே தாதி ஒருத்தி அங்கே வந்தாள். அவள் அழகான தங்க முடித் தாதி. அவள் அழகை இரசிக்கும் மனநிலையில் "TS" இருக்கவில்லை. அவள் தங்க முடியை அள்ளி முடிந்து இருந்தாள். மேலும் கீழும் வெள்ளையிலான சீருடை.

"TS" அவளிடம் தாங்கள் தாமோதரனைப் பார்க்க வேண்டும் என்று கூறினார். தாமோதரன் நிறையவே ஓய்வு எடுக்க வேண்டும் என்றும், அவர் மிகவும் வருத்தத்தோடு இருக்கிறார் என்றும், நீங்கள் இப்போது பார்க்க முடியாது என்றும் அந்தத் தாதி முதலில் கூறினாள். "TS" சோர்ந்து விடவில்லை. தாங்கள் வேலையில் இருந்து விடுப்பு எடுத்துக் கொண்டு வந்து இருப்பதாகவும், தயவு செய்து அனுமதிக்குமாறும் மிகவும் பணிவாகக் கேட்டார். கருணை கிட்டியது. சத்தம் போடாமல் சிறிது நேரம் பார்த்துவிட்டு விரைவாகப் போகுமாறு கூறிவிட்டு அந்தத் தாதி சென்றாள்.

அமைதியாக எல்லோரும் உள்ளே சென்றார்கள். தமிழில் கதைப்பதைக் கேட்டு மாலினி கதவருகே வந்து விட்டாள். அவளுக்கு எல்லோரையும் கண்டதில் சந்தோஷமாய் இருந்தது. முதலில் அந்தச் சந்தோஷத்தில் சிரித்தாள். பின்பு தாமோதரனுக்கு நடந்ததை எண்ணிக் கவலையுற்றாள். அத்தால் அவள் தேம்பித் தேம்பி அழத் தொடங்கி விட்டாள். அவளை மலரும் புவனலோசினியும் தங்களோடு சேர்த்து அணைத்துக் கொண்டனர். பெண்கள் மற்றைய பெண்களை இலகுவாகச் சேர்த்து அணைத்துக் கொள்கிறார்கள். ஆண்களால் அப்படிச் செய்ய முடிவதில்லை. ஆண்களை ஆண்களே கட்டி அணைப்பது என்பது பல ஆண்களுக்கு எப்போதும் அன்னியமாகவே இருக்கிறது. இருவரும் கட்டியணைத்து ஆறுதல் படுத்த மாலினியின் அழுகை அடங்கியது.

இவர்களுக்கு அதிஸ்ரம் இருந்திருக்க வேண்டும். பலபேர் தங்கும் அறையில் விடாது தனியறை கொடுக்கப்பட்டு இருந்தது. அது சிறிது என்றாலும் தூய்மையாக இரண்டு கதிரைகளோடும், ஒரு படுக்கையோடும், மலசலகூட வசதியோடும் இருந்தது. கை கழுவுவதற்கு சிங்கும், அதற்கான திரவச் சவர்க்காரமும் இருந்தன. கையுறைகள் தாராளமாய் வைக்கப்பட்டு இருந்தன. தாமோதரன் படுத்திருந்த அந்த ஆஸ்பத்திரிக் கட்டில் வசதியான கட்டில். அதன் உயரத்தைக் கூட்டிக் குறைப்பது தொடக்கம் அதை மடக்கி முதுகிற்கு இதமாகச் சாய்மனை ஆக்குவது வரையான வசதிகள் அதில் இருந்தன. படத்தைப் பார்த்து ஆழியை அழுத்தக் கட்டில் விரும்பிய கோணத்தில் வடிவு எடுக்கும்.

தாமோதரன் நீல நிற ஆஸ்பத்திரிச் சட்டையோடு படுத்து இருந்தார். அன்று இரவு சாப்பிட்டுவிட்டுப் படுத்திருந்த போதுதான் அவர் நெஞ்சை அடைப்பதாகக் கூறி மயக்கமாகிப் போனார் என்று மாலினி கூறினாள்.

"சும்மா படுத்து இருக்கேக்கையா?" எனத் திடீரென மாலினியிடம் றூபன் கேள்வி கேட்டான். அவள் அதற்குப் பதில் சொல்லவில்லை. அமைதியாக நின்றாள். பின்பு ஏதோ ஞாபகம் வந்தவள் போல,

"இதயத்தில இருக்கிற ஒரு இரத்தக் குழாய் அடைச்சுப் போச்சுதாம். நெஞ்சைப் பிளந்து ஒப்பிரேசன் செய்து இருக்குது. தொண்டைக் குழியில இருந்து வயிறு வரைக்கும் தையல் போட்டு இருக்குது. இதயம் சம்பந்தப்பட்டது எண்டதால பெரிய ஒப்பிரேசன். நான் நிறையப் பயந்து போயிட்டன்." என்றாள் மாலினி.

"சரியான வலி." என்றார் தாமோதரன். சிவாவைக் கண்டதும் ஞானம் கிடைத்ததாய் சிரிக்க முயன்றார். சிவா அவரது கையைத் தனது கையால் அழுத்தினான். அவர் அவனை நட்போடு பார்த்தார். வேதனையில் அல்லது பயத்திலும் ஞானம் பிறக்கும் என்று "TS"சிற்குத் தோன்றியது.

"நானும் இந்த வினைக்கு ஒரு காரணமோ தெரியாது." என்றான் சிவா. அவனுக்கு அப்பிடி நடந்து இருக்குமோ என்கின்ற குற்ற உணர்வு. வாய் மற்றைய மனிதரைக் காயப்படுத்துகிறது. ஆனால் கொல்லும் அளவிற்குப் போகுமா என்கின்ற சந்தேகம் அவனிடம். தனது சொற்கள் அவரைக் காயப்படுத்தி இருக்குமோ என்கின்ற குற்ற

உணர்வு இந்தச் செய்தியைக் கேட்டது தொடக்கம் அவனை வாட்டிக் கொண்டு இருந்தது. அதை அவன் இப்போது வெளியே கூறினான். அப்படிக் கூறினாலே தனக்கு நிம்மதி வரும் என்பதாக அவனுக்குத் தோன்றியது.

"அப்பிடி எல்லாம் நினைக்காத சிவா. அவருக்கு ஏற்கனவே பிறசரும், கொலஸ்ரோலும் இருந்தது. டொக்ரர் அப்பவே, ஆட்டு இறைச்சி, இறாள், வட்டர் எண்ணெய்யள், உப்பு, குடிவகை எல்லாத்தையும் விடச் சொல்லிப் போகிற நேரம் எல்லாம் சொல்லுகிறவர். அவருக்கு ஓம் ஓம் எண்டிட்டு ஆற்றை கதையும் கேளாமல் தன்ரை ஸ்ரத்திற்கு ஆடினவருங்கோ. அது திடீரெண்டு அடைச்சுப் போட்டுது. நல்ல காலம் ஏதோ நானும் நிண்டதால, அம்புலன்சில வந்தவங்களுக்கும் உடன விசயம் விளங்கினதால தப்பீட்டுது. உனக்கும் இந்த ஒப்பிறேசனுக்கும் எந்தத் தொடர்பும் கிடையாது சிவா. இவருக்குத் தான் பகிடி வெற்றி விளங்கிறேல்லை. பிறசரில கோபம் மூக்கில வந்து நிற்கும்" என்றாள் மாலினி.

"ம்... நான்தான் விளையாட்டா நினைச்சிட்டன். கண் எல்லாம் இருண்டு... நான் செத்துப் போயிடுவன் எண்டு பயமாப் போச்சுது. அண்டைக்கு நான் கோவிச்சுக் கொண்டு வந்தது சிறுபிள்ளைத் தனம்தான். சொறி சிவா. அவன் சொரூபனிட்டையும் சொறி சொல்ல வேணும். நான் தேவை இல்லாமல் கோவப்பட்டுச் சந்தோஷமான நேரத்தைக் குழப்பிக் கொண்டு வந்திட்டன்." என்றார் தாமோதரன்.

"அதெல்லாம் முடிஞ்ச விஷயம்... அதைப் பற்றி எல்லாம் கவலைப்படத் தேவை இல்லை. சாப்பாட்டைத் தான் கவனிக்க வேணும். நோஸ்க்குகள் இறைச்சியைச் சாப்பிட்டாலும் சுறுசுறுப்பா இருக்கிறாங்கள். நடக்கிறது, ஓடுகிறது எண்டு உடம்பை இளைக்க வைக்கிறாங்கள். நாங்கள் வேலையால வந்தாக் கீழ கடைக்குப் போகிறத்துக்கே பஞ்சியில காரை எடுக்கிறம். அதுக்கு ஏத்த மாதிரிச் சாப்பாட்டில கவனம் கிடையாது. சாப்பிடேக்கையும் பாம்பு விழுங்குகிற மாதிரி அசைய இயலாத அளவுக்கு அசை போடாமல் அவசர அவசரமா விழுங்குகிறம். எல்லாம் எங்களுக்குக் கூடாத விஷயம் தானே? ஜப்பான்காரர் மாதிரி மீன் சாப்பாடுகளை

அரைவயிறு சாப்பிட்டால் மனிசருக்கு வருத்தம் வராது. இது நாங்கள் ஏவறை எடுக்க முடியாமல் முக்கிற அளவுக்கு முழுக் கொழுப்பாச் சாப்பிடுகிறது. முக்கால் வயித்துக்கு மேல ஒருத்தன் சாப்பிட்டால் அவன் இனி உலகத்தில வாழத் தேவை இல்லை எண்டு இயற்கையே நினைச்சிடும் போல இருக்குது. நாங்கள் அதைவிடச் சோத்தைப் பிளேற் கணக்கில வெட்டுகிறது இன்னும் ஆபத்தான விஷயம். எல்லாத்தையும் தலைகீழா மாத்திச் சோறு கறி இல்லாமல் கறி சோறா அரை வயிறு, முக்கால் வயிறு சாப்பிட்டால் அலைஞ்சு திரியத் தேவையில்லை எண்டு நினைக்கிறன்." என்றார் "TS".

"உண்மை தான். நொஸ்க்குகள் எங்களை மாதிரி ஒரே நேரத்தில நிறையச் சாப்பிடுகிறது இல்லை. அவங்கள் கொஞ்சம் கொஞ்சமாய் நாலு தரம் ஐஞ்சு தரம் சாப்பிடுவாங்கள். அவங்கள் கொஞ்சம் கொழுப்புக் கூடச் சாப்பிட்டாலும் எப்பவும் எக்சசைஸ் செய்கிறதில அக்கறையா இருப்பாங்கள். நாங்கள் அந்த விஷயத்தில சோம்பேறியள். சோத்தைத் திண்டிட்டு சோம்பி இருந்தா வருத்தத்திற்கு அது சொற்கமாய் அமைஞ்சிடும்." என்றான் சிவா.

"உங்க புதிசாக் கரப்பந்தாட்டக் கிளப் ஒண்டு தொடங்கி இருக்கினம். சிவா அண்ணை நீங்களும் விளையாட வரலாம் தானே?" என்றான் றூபன்.

"வரத்தான் விருப்பம். விரும்பினாலும் என்னாலை அங்க வர முடியாது. உங்கை நிறைய திறெயினிங் சென்றர் இருக்குது... ஏதாவது ஒண்டுக்க போய் திறெயினிங் செய்ய வேண்டியதுதான்." என்றான் சிவா.

"அதுக்குக் காசக் குடுத்துச் சேர்ந்து இரண்டு நாள் போயிட்டுப் பிறகு அலுப்படிக்கப் போகாமல் விடப் போறியள்." என்றான் றூபன்.

"நீ சொல்லுகிறதிலையும் ஒரு உண்மை இருக்குது." என்றான் சிவா.

"நான் வந்திடுவன். ஆனா... எனக்கு நேரம் சரி வராது." என்றார் "TS".

"அது பிரச்சனை இல்லை அண்ணை. நீங்கள் ரைம்மை ஏற்படுத்திக் கொண்டு வாறுது தானே? சீனியர் அணியும் அங்க இருக்குது." என்றான் றூபன்.

"ம்... நக்கல்? காவோலை விழக் குருத்தோலை சிரிக்குமாம்." என்றார் "TS".

"நீங்களும் சிரிச்சு இருப்பியள் தானே? இல்லையா?" என்றான் றூபன்.

தாதி வந்து இன்னும் நீங்கள் போகவில்லையா என்பது போன்று ஒரு தரம் எட்டிப் பார்த்துவிட்டுப் போனாள்.

# 12 நிர்மூலமாகிய நிமலன்

வா என்றாலும் வருவதற்கு ஆயிரம் சாட்டுச் சொல்லும் நிமலன் வருகிறேன் என்று "TS"சின் அலைபேசிக்குத் தானே தொடர்பு கொண்டு சொன்னான். அவன் வருவது என்றால் புவனலோசினி சமைத்துச் சாப்பாடு கொடுக்காது விடுவது இல்லை. சமைக்கப் பஞ்சிப்படுவது சிலரின் சுபாவம். தேநீரையும் வைத்து ஏதாவது கடையில் வாங்கும் சிற்றுண்டியையும் கொடுத்துக் காரியத்தைக் கச்சிதமாய் முடித்துக் கொள்வார்கள் பலர். சமைத்துக் கொடுத்து அதை மற்றவர்கள் சாப்பிடுவதைப் பார்த்து மகிழ்பவர்கள் சிலர். அது மனதில் இருந்து வரும் ஆத்ம திருப்பியான விருந்து உபசாரம். அப்படி இல்லாது என்ன செய்வது என்கின்ற அலுப்போடு அல்லது மற்றவர்கள் சொல்கிறார்கள் என்பதிற்காய் சமைப்பது அன்பு மனம் அற்றவர்களின் காதல் அற்ற சமையலாகும். இதற்கு மாறாக புவனலோசினி சுபாவத்தில் கசிந்து உருகும் மனத்தவள். அவள் வீட்டிற்கு வந்து சாப்பிடாமல் யாரும் போனால் அவளுக்குத் தன் ஆத்ம திருப்தியே அழிந்ததான கவலை வந்துவிடும். ஆக்கிப் போடுவதும் ஆட்களோடு கூடி இருந்து சாப்பிடுவதும் அலாதியான சுகம் என்பது அவள் எண்ணம். அது வருத்தத்தால் சில காலம் தடைப்பட்டு இருந்தது. இப்போது நிலமை மாறிவிட்டது. சாப்பிடும் கலாச்சாரமும் காலத்தோடு மாற்றம் ஆகிறது. அது புவனலோசினிக்கும் தெரியும். ஏழை எளியவர்களே கோயில் அன்னதான மடத்தில் சாப்பிடுவது என்பதாக இருந்தது ஒரு காலம். மடத்தில் சாப்பிட்டால் புண்ணியம் என்று சாதி பேதம் இல்லாது சம பந்தியில் எல்லோரும் சாப்பிடுவது முன்னேற்றமான இந்தக் காலம். மதம் சாதியை ஒழித்தது என்றால் அது மடத்தில் சாப்பிடும் போது மட்டுமே என்பது புவனலோசினியின் அனுபவம்.

அந்த எண்ணங்களை ஒதுக்கி வைத்துவிட்டு இன்று நிமலனுக்கு என்ன சமைப்பது, என்ன சமைப்பது என்று இரண்டு முறை "TS"சிடம் கேட்டுப் பார்த்தாள். 'ஏதாவது உனக்கு வசதியானதைச் சமை. உதுக்கு எல்லாம் என்னைக் கேட்க்காதை' என்று "TS" மெதுவாக விலகிக்

கொண்டார், நிமலன் வருவது என்றால் அவன் காதலியும்

வருவாள். அவர்களுக்கு உறைப்புப் பிரச்சனையாக இருக்கும். செய்யும் சாப்பாட்டில் உறைப்பைக் குறைத்துச் செய்ய வேண்டும். இல்லாவிட்டால் தயிரும் சீனியும் சாப்பாட்டோடு சேர்த்து உண்பதற்கும், பால் குடிப்பதற்கும் கொடுக்க வேண்டும். இப்படியாகப் பலதையும் யோசித்த புவனலோசினி இறுதியில் நூடில்ஸ் செய்து அவளுக்கு உறைப்புக் குறைவான கறி வழங்குவது என்று முடிவு செய்தாள். முடிவு செய்ததைச் செயற்படுத்தச் சமையல் அறைக்குச் சென்றாள்.

சரிஸ்கா தனது அறையில் புத்தகம் படித்துக் கொண்டு இருந்தாள். வேலைக்குப் போய் வந்தால் அவளுக்கு உடல் அலுப்பாக இருக்கும். மருத்துவர்களைவிடப் பல் மருத்துவர்கள் அதிக உடல் உழைப்பைச் செலவு செய்ய வேண்டும். இதில் கண்ணுக்கும் கடும் வேலையாக இருப்பதோடு அரிகண்டமான நாற்றங்களையும் தாங்க வேண்டி இருக்கும். அவள் அதைப் பற்றி எல்லாம் அதிகம் புகார் செய்வது இல்லை என்றாலும் வேலை முடிந்தால் அலுப்போடு வந்து அறைக்குள் தனது கதிரையில் அமர்ந்து விடுவாள். அதில் இருந்து நாரியை நிமிர்த்தி அமைதி காண்பாள். அவள் தனது அறையிலேயே வைத்துப் பாவிக்கக்கூடிய மடிக்கணினி வாங்க வேண்டும் என்று "TS"சிடம் கூறியிருக்கிறாள். நிமலன் வாங்கிக் கொடுத்தது போல அது ஆப்பிள் கணினி இல்லை. இது "IBM" வகையைச் சார்ந்த "IBM ThinkPad 700". அதற்குப் பதினைந்து ஆயிரம் குரோணர்கள் செலவாகும் என்றும் கூறி இருக்கிறாள். அதில் வின்டோஸ் மூன்று தசம் ஒன்று பாவிக்கப்படுமாம். அது எப்படி இருக்கும் என்று "TS"சிற்குத் தெரியாது. உலகத்தில் அனேகமானோர் இந்தவகைக் கணினியைத்தான் பாவிப்பார்கள் என்று சரிஸ்கா கூறினாள். அவள் எப்படி இந்தக் கணினி பற்றிய தகவல்களை அறிந்தாள் என்பது "TS"சிற்குத் தெரியாது. வேலை செய்யும் இடத்தில் யாரோடும் கதைத்து இருப்பாள் என்று "TS" முதலில் நினைத்தார். அன்று ஒரு நாள் சரிஸ்கா ஒரு சஞ்சிகையோடு வீட்டிற்கு வந்தாள். அந்தச் சஞ்சிகையில் ஒரு குறுந்தகடு இருந்தது. அது கணினி பற்றிய சஞ்சிகை. அப்போதே அவள் இதைப் படித்துத்தான் இவ்வளவும் தெரிந்து வைத்து இருக்கிறாள் என்பது "TS"சிற்கு விளங்கியது. அதில் மிகவும் முன்னேற்றமான தொழில்நுட்பம் பற்றி எல்லாம் எழுதி இருந்தது. "TS"சிற்கு அதை வாசிக்கச் சற்றுக் கடினமாக இருந்ததால்

அவளிடமே திருப்பிக் கொடுத்து விட்டார். கணினியில் பொதுவாக ஆண்கள் அதிகமாகப் பைத்தியமாக இருப்பார்கள் என்று ஒரு கருத்து இருந்தது. சரிஸ்கா அதற்கு எதிர்மாறாய் கணினியில் மிகவும் அக்கறை காட்டினாள். ஆப்பிள் கணினியில் "கீப்பர்க் காட் "HyperCard" என்கின்ற மென் பொருளை எப்போதும் நோண்டிக் கொண்டு இருப்பாள். இதில் நிறைய அலுவல்கள் செய்யலாம் என்று "TS"சிடம் சில வேளை கூறுவாள். "TS"சிற்கு அதை விளங்கிக் கொள்ளும் அக்கறையோ, பொறுமையோ இருந்தது இல்லை. என்றாலும் சரிஸ்காவை விட நிமலனுக்குக் கணினி பற்றி அதிகம் தெரியும் என்பது அவர் நினைப்பு.

"TS" கதவைத் தட்டித் திறந்து,

"நிமலன் வாறானாம். இண்டைக்கு மூடம் பூட்டித் தரலாம் எண்டும், தான் அதை வாங்கிக் கொண்டு வாறன் எண்டும் சொன்னான். நீ அதை என்ன மாதிரிப் பாவிக்கிறது எண்டு ஒருக்கா வந்து பார்த்துவை." என்றார் "TS".

"அவன் வந்தால் ஏதாவது அலட்டிக் கொண்டு இருப்பான். எனக்குச் சில விஷயம் வாசிக்க வேண்டி இருக்குது. மூடம் பூட்டி முடிஞ்சதும் வந்து சொல்லுங்கோ. எப்பிடிப் பாவிக்கிறது எண்டு பார்க்கிறன்." என்றாள் சரிஸ்கா. அவள் அதைக் கூறிவிட்டு மீண்டும் தனது புத்தகத்தை வாசிக்கத் தொடங்கினாள். "TS" அதற்குமேல் கதைப்பதற்கு எதுவும் இல்லாதவராக அறையை விட்டு வெளியே வந்தார். புவனலோசினி சமையல் அறைக்குள் புகுந்து விட்டாள். "வாசிப்பது நல்ல பழக்கம் தான்." என்று எண்ணிய "TS"சிற்கு தானும் சரிஸ்காவைப் போல் வாசிக்கப் பழகி இருக்க வேண்டும் என்று தோன்றியது. சிறுவயதில் வாசிக்க இருந்த அக்கறைகூட இப்போது இல்லாது போய்விட்டதான வெல்ல முடியாத தோல்வி. ஏன் என்று அவருக்கு அது விளங்கவில்லை. நொஸ்கில் ஆழமான விடயங்களை வாசித்து விளங்கிக் கொள்வது இன்னும் கடினமாகவே இருக்கிறது. சரிஸ்காவிற்கு அது மிகவும் எளிதாக இருக்கிறது. வாசிக்க வேண்டும் என்று அக்கறை இருந்தால் 'டொச்மன்' நூல்நிலையம் என்கின்ற பெரிய நூல்நிலையத்திற்குச் செல்லலாம். அது பிரதம மந்திரியின் அலுவலகத்திற்குப் பக்கத்தில் இருக்கிறது. அங்கே சென்று தமிழ்ப் புத்தகங்கள் எடுத்து வந்து வாசிக்கலாம். ஆனால் ஏதோ ஒருவித பஞ்சியும் அலுப்பும்

அந்தப் பக்கம் இழுத்துச் செல்வது இல்லை. இனி ஆவது அங்கே சென்று தமிழ் புத்தகங்கள் எடுத்து வந்து வாசிக்க வேண்டும் என்று அவர் எண்ணினார்.

கோலுக்குள் வந்த பின்பு திடீரெனத் தன்னை ஆரவாரம் இல்லாத அன்னிய ஊரில் தனிமையில் விட்டதான உணர்வு. ஐரோப்பாவில் நிறைய மனிதர்கள் தனிமையாக வாழ்கிறார்கள். அவர்கள் தனிமைக்குப் பகலிலும் இரவிலும் அதிக நேரம் துணையாக இருப்பது தொலைக்காட்சி மட்டும் தான். அதுவே மனித இருப்பை விட இறப்பை விரைவு படுத்துகிறது. பெரிய திரையில் இப்படித் தொடர்ந்து பொழுது போக்குவதற்குச் சாத்தியம் குறைவு. இந்தச் சின்ன திரைக்கு முன்னால் தனிமையாக இருந்து தவம் செய்பவர்களின் தொகை வர்க்கமூலத்தில் பெருகுகிறது. அது வருங்காலத்தில் வர்க்கமூலத்தை வென்று கனமூலம் அல்லது அதை மிஞ்சும் கணிதம் ஆகலாம். அப்படி ஆனவர்கள் வரிசையில் தானும் சேர்ந்து கொண்டதான எண்ணம் "TS"சிற்கு வந்தது. இருந்தும் அதை விட்டால் இங்கு என்ன செய்வது என்கிற எண்ணத்தோடு தொலைக்காட்சியை இயக்கினார். உடலை வருத்தி வேலை செய்வதால் இந்த அடைகாத்தல் உடல் நலத்தைப் பெரிதாகப் பாதிக்காது என்று அவர் எண்ணினார்.

"TS"சிற்குக் காலத்தோடு நாடு, மொழி, கலாச்சாரம் போன்றவை திரிபு அடைந்து வருவதாய் தோன்றியது. தமிழர் என்று சொன்னாலும் தமிழராய் வாழ்வதில் பிசகு ஏற்படுகிறது. சொந்த நாட்டைவிட்டு மனிதன் வெளியேறும் போது அவன் அடையாளமும் கேள்விக்குறி ஆகிறது. சில வேளை அது சொந்த நாட்டிலேயே நடக்கிறது. அதைத் தக்க வைத்துக் கொள்வது பெரும்பாடு ஆகிறது. பல சந்தர்ப்பங்களில் தங்கள் அடையாளத்தைத் தொலைத்த மனிதக் கூட்டங்களாக அவர்கள் அன்னிய நாட்டில் வாழ வேண்டி வருகிறது. அல்லது அந்த அன்னிய நாட்டுக் கலாச்சாரத்திற்குள் தங்களையும் கரைக்க வேண்டியதாகிறது. சில இடங்களில் அதுவே பாதுகாப்பும் ஆகிறது. ஒவ்வொரு பெரிய இனங்களும், கலாச்சாரங்களும் தங்களுக்குள் சிறிய இனங்களையும், கலாச்சாரங்களையும் அடையாளம் தெரியாது கரைத்துவிடக் காத்திருக்கின்றன. அதற்குத் தப்பித் தனித்துவமாய் வாழ்வது பெரும் போராட்டம் ஆகிறது. அந்தப் போராட்டம் எமது சந்ததிக்கு அவசியமாய்

இருந்தாலும் இனி வரும் சந்ததிக்கு அவசியம் இல்லாது போய்விடும் என்பது புலனாகிறது. நிமலனும் அப்படியான வருங்காலச் சந்ததியில் ஒருத்தனாக இருக்கலாம்... காலப் போக்கில் நொஸ்க் சமுதாயத்திற்கு உள்ளே முற்றுமாய் கரைந்து போய்விடலாம். போராடி வாழ்வதை விடவும் கரைந்து போவது பொது விதியாக அமையலாம். அதையே பெரும்பான்மையான வந்தேறு குடிகள் விரும்பியோ விரும்பாமலோ செய்யப் போகிறார்கள். சிலர் அதற்கு எதிராகப் போராடுவார்கள். குறிப்பிட்ட காலத்திற்கு தங்கள் அடையாளத்தைக் காப்பாற்றிக் கொள்வார்கள். எங்கள் போராட்ட அமைப்பும் அதன் இறுக்கமான கட்டுமானமும் அதற்கு உதவி செய்கிறது. தமிழராய் வாழ வேண்டும் என்று எப்போதும் ஞாபகம் ஊட்டப்படுகிறது. அவர்கள் தங்கள் கட்டுப்பாட்டிற்குள் தமிழ்ச் சங்கங்கள், விளையாட்டுக் கழகங்கள், என்பதாக அனைத்தையும் கொண்டு வருவது அதற்கு வசதியாக அமைகிறது. தமிழர் என்கின்ற அந்தத் தேசிய உணர்வு, தேசியத் தலைவர் இல்லாது போய் இருந்தால், இலங்கையில் வாழும் பறங்கியரைப் போலக் கால ஓட்டத்தில் சிங்களவருக்குள் கரைந்து போவதை தடுக்க முடியாது போயிருக்கும். இந்தப் போராட்டம் மிக விரைவாக ஒரு முடிவுக்கு வரவேண்டும். அந்தத் தனி நாட்டில் உலகத்தில் பரந்து வாழும் தமிழர்கள் மீண்டும் சென்று குடியேற வேண்டும். அப்போதே எங்கள் அடையாளத்தை நிரந்தரமாக யாராலும் நிர்மூலம் செய்ய முடியாது இருக்கும். எங்களின் முதல் அடையாளமே தமிழாகும். அது காப்பாற்றப்பட வேண்டும் என்றால் எங்களுக்கு ஈழம் கிடைத்தாக வேண்டும். அல்லது தமிழும், நாங்களும் உலக வரைபடத்தில் இருந்து இல்லாது ஒழிக்கப்படுவது விதியாகும். எது நடக்கும்? வீரவேங்கைகள் வெல்வார்களா அல்லது சிங்களவர் எங்களை ஆண்டு அழிப்பார்களா? தமிழ் நாடு தமிழ் நாடாய் இருக்குமா?

"என்னப்பா கோலிங் வெல் அடிக்கிறது உங்களுக்குக் காதில விழ இல்லையே? நிமலன் வந்திட்டான் ஆக்கும். கதவைத் திறந்து பாருங்க." என்று சரிஸ்கா அறையில் இருந்து கத்தினாள். தொலைக்காட்சியில் ஏதோ நிகழ்ச்சி போவதையும் தான் நினைவு இழந்து வேறு உலகில் சஞ்சரித்ததையும் உணர்ந்து "TS" துடித்துப் பதைத்து எழுந்தார். ஓடிச் சென்று நிமலனுக்குப் பதில் அளித்தார். கீழ்க் கதவைத் திறந்ததும் அவன் கணத்தில் மேலே வந்து விட்டான். வந்த அவனைப் பார்த்த போது "TS"சிற்கு

அதிர்ச்சியாக இருந்தது. ஆளே தெரியாதவாறு உருவம் உருக்குலைந்து போய் இருந்தான். என்ன நடந்தது இவனுக்கு என்கின்ற தலையிடி "TS"சிற்குத் தொடங்கியது,

"என்னடா உனக்கு நடந்தது நிமலன்? இந்தக் கோலத்தில வந்து நிக்கிறாய்? எங்க அவ?" என்று கேட்ட வண்ணமே "TS" கோலுக்குப் போனார்.

ஆட்டைவிடத் தாடி நீட்டிக் கொண்டு நின்றது. இவனுக்குத் தாடி வளர்க்கும் வயசா என்கின்ற கோபம் "TS"சிற்கு வந்தது. யாரும் கேட்பதற்கு இல்லை என்றவுடன் எப்படி எல்லாம் சுதந்திரம் எடுத்துக் கொள்கிறான் என்று அவருக்குத் தோன்றியது. அவளுக்கு ஆவது இதைப் பற்றிச் சொல்லத் தெரியவில்லையா? ஏன் இவன் இப்படி மெலிந்து போய் இருக்கிறான்? முகத்தில் தசையே இல்லாது எலும்பு தோலை அச்சுறுத்தும் அளவிற்கு என்ன நடந்தது. ஏதும் பிரச்சனை என்றுகூடத் தொலைபேசி செய்யவில்லையே? கண்களில் ஒளியே இல்லை. அது மஞ்சள் படர்ந்து குழிக்குள் பதுங்கிக் கிடக்கும் கோலம். என்ன கதைப்பது என்று விளங்காது தவிப்பது போன்ற அவஸ்தை உடன் வந்து தனது தோழ் பையை வைத்துவிட்டுச் சோபாவில் இருந்தான். எப்படிப் பேச்சை தொடக்குவது என்று "TS"சிற்கும் விளங்கவில்லை. இருந்தும் அவர் அதைத்தான் முதலிற் கேட்டார்.

"நீனா எங்க? ஏன் கூட்டிக் கொண்டு வரேல்லை?"

"அதெல்லாம் முடிஞ்சு போச்சுது அண்ணை." என்றான். அவன் அழுது விடுவான் போன்று இருந்தது.

"என்ன சொல்லுகிறா நிமலன்?"

"முடிஞ்சு போச்சுது அண்ணை. நான் உண்மையாகவே அவளைக் காதலிச்சன். அவள் ஏதோ எங்கடை கலாச்சாரத்தைப் பற்றித் தெரியோணும் எண்டுதான் என்னோடை சேர்ந்தவளாம். தனக்கு எங்கடை கலாச்சாரத்தோடை வாழ்நாள் பூராகவும் வாழச் சரிவராது எண்டிட்டாள்." என்றான் நிமலன்.

"நீ ஏன் எங்கடை கலாச்சாரத்தில அவளை வாழச் சொன்னாய்." என்றார் "TS". அவருக்கு ஒன்றும் விளங்கவில்லை.

"ஆணுக்கும் பெண்ணுக்குமான உறவில் எங்களுக்கும் இவங்களுக்கும் இடையில நிறைய வித்தியாசம் இருக்குது. இங்கையும் இவங்களில சிலர் பெண்களைக் குறைச்சுப் பார்த்தாலும் பொதுவா பெண்களுக்கு எங்கடை நாடுகளைவிட அதிக மரியாதை கொடுக்கிறாங்கள். எங்களுக்குச் சில வேளை அதைப் விளங்கிக் கொள்ள முடிகிறது இல்லை. விட்டுக் கொடுக்க மனம் வாறேல்லை. நாங்கள் அப்பிடியான சமுதாயத்தில வாழ்ந்திட்டம். என்ன விட்டிட்டுத் தனிய டிஸ்கோ போகிறது எண்டால் எனக்குச் சரிவராது. பத்திக் கொண்டு தான் வரும். நான் நினைச்ச மாதிரி உயிருக்கு உயிராய் என்னை அவளால நினைக்க முடிய இல்லை. தனக்கு ஸ்பேஸ் வேணும் எண்டுகிறாள். எனக்கு அந்த லொஜிக் விளங்கேல்லை. உண்மையாக் காதலிச்சா... ஒருத்தரை ஒருத்தர் உயிருக்கு உயிரா நேசிச்சா அது என்ன ஸ்பேஸ் வேண்டிக் கிடக்குது? என்னதான் கவிதை எழுதினாலும் என்னால பலதையும் விளங்கிக் கொள்ள முடியாமல் இருக்குது. சில வேளை நாங்கள் கிணத்துத் தவளைகளாக வளர்ந்திட்டமோ தெரியாது. காதலிச்சாலும் அப்பிடி ஸ்பேஸ் இருக்கிறது நல்லதோ தெரியேல்லை. தனிய டிஸ்கோ போகிறதுக்கு ஸ்பேஸ் வேணும் எண்டுகிற லொஜிக் எனக்குச் சுத்தமா விளங்கேல்லை. ஒருத்தரை ஒருத்தர் விளங்கிக் கொள்ளேல்லை எண்டுகிற நினைவு வாறதே வேதனை. அந்த நினைவு நினைவோடை மட்டும் நிண்டிடாது அண்ணை. அது அப்பப்ப குமுறலா வெடிக்கும். பிறகு தெரியும் தானே நாய்க்கடி, பூனைகடி. போடா நீயும் உன்ரை உறவும் எண்டிட்டு அவள் போயிட்டாள். போன பிறகு எனக்கு உயிரே போன மாதிரி இருந்திச்சு. வாழ்க்கையில முதல் முறை இதயம் நொந்திச்சுது அண்ணை. அது அப்பிடியே நிண்டாக்கூட சுகமாய் இருக்கும் போல இருந்திச்சுது. அது நிக்கேல்லை... தொடர்ந்து நோவோடை அடிக்குது... ஆனாக் கடுமையா வலிக்குது. பையித்தியமாய் இருக்குது. காதல் பித்தாக்கும் எண்டுவினம். இப்ப அது எனக்கு அனுபவத்தில தெரியுது. ஓண்டா இருக்கேக்கை சில வேளை மற்றவையில வைச்சிருக்கிற அன்பு விளங்காது. பிரிவு வந்தால் அதுகின்ரை வேதனை தெரியும். அதுவும் இந்த வேதனை கொடுமையானது அண்ணை. காதல் தோல்வியில தற்கொலை செய்கிறவங்களைக் கோளைகள் எண்டு சொல்லுவினம். அவங்களைக் கோழைகள் எண்டுகிறதை விடப் பையித்தியங்கள் எண்டு தான் சொல்ல வேணும்.

அந்த நேரம் அப்பிடித்தான் பைத்திதியமாய் இருக்கும். வேதனை நெஞ்சப் பிழியும். வேதனையை அனுபவிக்கிறதிலும் செத்துப் போயிடலாம் எண்டு எண்ண வைக்கும். கான்சர் வந்து நோவில வருத்தப்படுகிறவன் தன்னை கொல்லுங்கோ எண்டு கையெடுத்துக் கும்பிடுகிற மாதிரியே இதுவும். கான்சர் கொண்டிடும். இது உயிர் உள்ள வரைக்கும் நினைவா இருந்து வதைச்சுக் கொண்டே இருக்கும். திரும்பத் திரும்ப கோபத்தில கொதிக்க வைக்கும். பையித்தியமாக அலைய வைக்கும். இரத்தம் ஓடாமல், சதை பிய்யாமல் மனது கந்தலான வேதனை. வெளிக் காயம் கெதியா காய்ஞ்சிடும். உட்காயம் காய நிறையக் காலம் எடுக்கும். சில வேளை காயாது போல. எனக்கு எண்டா அது காயும் எண்டே தெரிய இல்லை. ஏன் வாழுகிறன் எண்டும் தெரிய இல்லை. எப்பிடி இனி வாழுவன் எண்டும் தெரிய இல்லை." அவனால் அதற்கு மேல் கதைக்க முடியவில்லை. கண்களில் நீர் முட்டிப் பளிங்கு முத்துக்களாய் உதிரத் தொடங்கின. இதழ்கள் சொற்களை உச்சரிக்க முடியாது நடுங்கிக் கோணின. அவன் தனது முகத்தைக் கைகளால் பொத்திக் கொண்டான். வெட்கம் விட்டு அவர் முன்பு அழுதான். இவ்வளவு வேதனை இவனுக்குள் இருக்கிறதா என்கின்ற பிரமிப்பு "TS"சிற்கு ஏற்பட்டது. அவனைப் பார்க்கக் கவலையாக இருந்தது. அவனைத் தன்னோடு அணைத்துக் கொண்டார்.

"மனதை விடாதையும் நிமலன். எல்லாம் காலப் போக்கில சரி ஆகிடும். பிரிவு இல்லாத வாழ்க்கை இல்லை. நாங்கள் சேரும் போதே பிரிவும் வரும் எண்டு எதிர்பார்க்க வேணும். உந்த வேதனை, அதுகின்ரை அனுபவம் சில வேளை நல்ல கவிதை தரலாம். உன்ரை மனதை அதில செலுத்து. அற்பத்தை விட்டிட்டு அற்புதமானதைப் பற்றிச் சிந்தி, அதைப் படை நிமலன். உன்னால அது முடியும் எண்டுகிற நம்பிக்கை எனக்கு இருக்குது." என்றார் "TS".

"தெரியும் அண்ணை. நான் இனி அப்படித்தான் மனதை மாற்ற வேணும் எண்டு நினைக்கிறன். நினைக்கிற மாதிரி எல்லாம் நடக்கிறது இல்லை. ஆனா... வந்த நாளில இருந்தே நீங்கள் என்னையும் ஒரு பிள்ளை மாதிரிப் பார்க்கிறது எனக்குத் தெரியும். அதுக்குத் தாங்ஸ் அண்ணை." என்றான் நிமலன்.

"என்ன பெரிய வசனம் எல்லாம் கதைக்கிறாய் நிமலன். இதைக்கூடச் செய்யாட்டி நாங்கள் எல்லாம் பக்கத்துப் பக்கத்து ஊர் தமிழர் எண்டுகிறதுக்கே அர்த்தம் இருக்குமா? மனிசர் எண்டுகிறதுக்கே அர்த்தம் இல்லாமல் போயிடும். சரி... கவலைப்படாத. இனி நடக்கிறதைப் பார். எல்லாம் நல்லதுக்கு எண்டு நினை. சரியே?" என்றார் "TS".

"TS"சிற்கும், நிமலனுக்கும் புவனலோசினி தேநீர் கொண்டு வந்தாள். அவளுக்கு இவர்கள் என்ன கதைத்தார்கள் என்பது தெரியாது. நிமலனின் முகம் இருண்டு கிடக்கிறது என்பது தெரிந்தது. அவன் கோலம் அவளை அதிர வைத்தது.

"என்ன நிமலன்? இது என்னடா கோலம்? ஏன் உன்ரை முகம் இப்பிடி பேயறைஞ்ச மாதிரிக் கிடக்குது? ஏதாவது வருத்தமே? உடம்பு எல்லாம் இப்படி மெலிஞ்சு ஓடாக் கிடக்குது?" என்றாள் நிமலனைப் பார்த்து.

"என்ன செய்கிறது அக்கா. என்னோடை ஒரு தேவதை இருக்குது எண்டு நினைச்சன். அது பேயா மாறி என்னை அறைஞ்சு போட்டுப் படு வேகமாய் என்னை விட்டுப் போயிட்டுது. இருந்தும் அந்தப் பேய் இப்பவும் என் கண்ணுக்குத் தேவதை ஆகத்தான் தெரியுது. மறக்க முடியாது நெஞ்சுவலி தொடருதக்கா." என்றான் நிமலன்.

"என்ன இவன் இப்பிடிக் கதைக்கிறான்? இவனுக்குத் தட்டிப் போட்டுதே? இது எல்லாம் எப்ப நடந்தது? ஏன் எங்களுக்குச் சொல்ல இல்லை?" என்றாள் புவனலோசினி. அவளுக்கு நிமலனைப் பற்றிக் கவலையாக இருந்தது. அதே வேளை நிமலனுக்கு நல்ல காலம் பிறந்து இருப்பதான எண்ணம் அவளிடம் தோன்றியது.

"இது ஒரு கிழமைக்கு முதல் நடந்தது. இது என்ன கலியாண விஷயமே சொல்லித் திரிகிறதுக்கு? நான் எப்பிடி அந்த வேதனையில அதைச் சொல்லித் திரிய முடியும்? எனக்குப் பைத்தியமாய் இருந்திச்சு. அப்பிடியே இருந்தா ஏதும் செய்து போடுவனோ எண்டுகிற பயத்தில தான் இப்ப வெளிக்கிட்டு இங்க வந்தனான்." என்றான் நிமலன்.

"நிமலன் உமக்கு நல்ல காலம் எண்டு நினையும். உமக்கு எங்கடை சாதிசனத்தில நல்ல இடமாப் பார்த்து நாங்களே கலியாணம் செய்து வைக்கலாம். நீ

கவலைப்படாத. ஒஸ்லோவில ஒரு வீட்டை வாங்கு. நாங்கள் எங்களுக்குத் தெரிஞ்ச யாரிட்டையும் கேட்டுப் பார்க்கிறம். நல்ல இடத்தில கலியாணம் செய்தா நீ சந்தோஷமாய் இருக்கலாம். நடந்ததை எல்லாம் ஒரு கெட்ட கனவாய் நினைச்சு மறக்கிறது உனக்கும், உங்கடை குடும்பத்திற்கும் நல்லது. நாங்கள் வெளிநாட்டில இருந்தாலும் ஊரில சனம் நாலு விதமாக் கதைப்பினம் எண்டதும் ஞாபகம் இருக்க வேணும். அது உன்ரை, அப்பா, அம்மா, சகோதரங்களுக்குத் தானே சங்கடம்? இப்ப அது எல்லாம் முடிஞ்சுது எண்டு சந்தோஷமாய் இரு." என்றாள் புவனலோசினி.

"நீங்கள் சொல்லுகிறதிலையும் விஷயம் இருக்குது எண்டது உண்மை. என்ரை மனதுக்கு எப்பிடி நிம்மதி வரும் எண்டு மட்டும் தெரிய இல்லை." என்றான் நிமலன்.

"வாரும் நிமலன். ஒஸ்லோவுக்கு வா. உங்கை விளையாட்டு, அது இது எண்டு மனசை வேற திசையில திருப்பும். எல்லாம் மறந்திடுவாய்." என்றாள் புவனலோசினி.

"ம்... வந்த விஷயத்தை விட்டிட்டன்." என்று கூறிய வண்ணம் அந்தப் பெட்டியை தனது பையில் இருந்து எடுத்தான்.

"US robotics modem" வெள்ளையாகச் சாப்பாட்டுப் பெட்டி போல இருந்தது. அதை இயக்குவதற்கு ஒரு ஆழி... பல சிறிய மின்குமிழ்கள் சொல்லும் சமிக்கைகள் சகலருக்கும் விளங்காத விளக்கமாக... பின்னால் மின்சாரம், தொலைபேசி, கணினி போன்ற இணைப்பிற்கான வாய்கள்... என்பதாக அதன் அமைப்பு. நிமலனுக்கு அதைப் பொருத்துவதில் நல்ல பழக்கம் இருந்தது. அவன் விரைவாக அதைப் பொருத்தினான். தொலைபேசி இணைப்பை அதற்குக் கொடுத்தான். அதற்கான மென்பொருளைக் கணினியில் பதிந்தான். "BBS" என்கின்ற அந்த வலைப் பின்னலோடு தொடர்பு ஏற்படுத்தினான். அதில் இருந்து வேறு சில விளையாட்டு மென்பொருட்களைத் தரவிறக்கம் செய்து எப்படிக் கணினியில் பதிவது என்று விளங்கப்படுத்தினான்.

"கொஞ்சம் பொறு நிமலன். இது எல்லாம் சரிஸ்காவுக்குத் தான் சரி." என்று கூறிவிட்டு அவளை அழைத்து வர "TS" தேடிச் சென்றார். அதை அடுத்துச் சரிஸ்கா வந்தாள். அவள் வந்ததும் அவளைப் பார்த்து,

"எப்பிடி இருக்கிறீங்கள்?" என்றான் நிமலன். அவன் இருப்பே அலங்கோலமான போதும் அவன் சரிஸ்கா மீது கொண்ட அக்கறை அவன் மேல் இன்னும் அதிகம் பரிவை "TS"சிற்கு ஏற்படுத்தியது.

"நான் நல்லா இருக்கிறன். என்ன மாதிரி கொனெக்ற் பண்ணுகிறது எண்டு சொல்லுங்க?" என்றாள் சரிஸ்கா விசயத்தை மட்டும் கருத்தில் கொண்டவளாக. அவள் எப்போதும் அப்படித்தான். நிமலனோடு மட்டும் என்று இல்லை. ஆண்கள் என்றாலே கராராகத்தான் அவள் பழக்கம் இருக்கும். அவளது சந்தோஷமான மனநிலை அப்போது பறி போய்விடும். முகத்தில் இறுக்கம் சட்டென வந்து குடி ஏறும். எப்போது அவர்களுடனான அலுவல் முடியும் என்கின்ற அவஸ்தையோடு அவர்களைக் கவனிப்பாள். காரியம் முடிந்ததும் கடுகதியாய் அந்த இடத்தை விட்டு மறைந்து விடுவாள். அவள் மனதின் வேதனை "TS"சிற்கு விளங்கும். நீ அப்படிச் செய்யாதே என்று அவர் புத்திமதி சொல்வது இல்லை. அதை அவள் புத்திமதியாக எடுத்துக் கொள்வாளா அல்லது தொந்தரவாய் எண்ணுவாளா என்கின்ற கேள்வி அவரிடம் இருக்கிறது. அவளிற்குத் தனது புத்திமதி தேவை இல்லை என்பது அவர் எண்ணம். அவளால் சுயமாகச் சிந்திக்க முடியும் என்று அவர் நம்பினார். அவள் மனதில் புதைந்து கிடக்கும் பயத்தைப் போக்கத் தனக்கு அறிவு போதாது என்பது அவருடைய அவிப்பிராயம். மருத்துவர்களே அதற்குக் கஸ்ரப்படும் போது தன்னால் என்ன செய்ய முடியும் என்று அவர் விலகிக் கொள்வார்.

நிமலனுக்கும் சரிஸ்காவின் இந்த நடத்தைப் பழகி விட்டது. அவன் அவள் என்ன சொல்கிறாள் என்பதைப் பற்றி அக்கறை கொள்ளாமல் விடயத்தை விளங்கப் படுத்தினான். அவளும் ஒரு மென்பொருள் தரவிறக்கம் செய்து அதை எப்படிக் கணினியில் பதிவது என்று முயற்சி செய்து பார்த்தாள். அதை அவளால் செய்ய முடிந்ததில் அவளுக்கு அளவில்லாத சந்தோசம். நிமலன் அதைவிட வேறு சில மென்பொருட்கள் பற்றியும் விளங்கப் படுத்தினான். பல் மருத்துவம் பற்றி ஏதாவது மென்பொருட்கள் அறிந்தால் தனக்கு அறியத் தருமாறு நிமலனிடம் சரிஸ்கா கேட்டாள்.

"TS"சிற்கு அதைப் பார்க்கப் புதினமாக இருந்தது. எங்கோ ஒரு இடத்தில் உள்ள சர்வரில் இருக்கும் மென்பொருளை

எத்தனை ஆயிரம் மைல்களுக்கு அப்பால் தரவிறக்கம் செய்ய முடிகிறது. அதை இணைக்கும் போது பக்ஸ் இயந்திரத்திற்கான சத்தத்தை அது உண்டு பண்ணுகிறது. சமிக்கைகள் சத்தமாகிச் சத்தம் சமிக்கையாகும் அந்த வித்தை அவருக்கு வினோதமாகியது. வருங்காலம் எப்படியான வித்தைகளைக் கொண்டு வரும் என்பதை எண்ண அவருக்கு வியப்பாக இருந்தது.

சரிஸ்கா மீண்டும் தனது அறைக்குச் சென்று விட்டாள்.

# 13 திசைமாறிய காற்று

குளிர், வெப்பம், காற்று, மழை, வெள்ளம், இடி, மின்னல், மண் சரிவு, பூமி நடுக்கம் என மனிதனின் சக்திக்கு அப்பாற்பட்ட இயற்கையின் ருத்திர தாண்டவத்தின் பல முகங்கள் இருக்கின்றன. காற்றும் அதை ஒட்டிய குளிரும், திசைமாறி வரும் வெப்பமும் எப்போதும் மீனவர்களைப் போல அனைவரையும் காலநிலையைப் பார்க்க வைக்கும் நாடு நோர்வே.

வடக்கில் இருந்து வரும் காற்று புவியின் உச்சி தடவி ஆலத்தின் குணமான ஊறை குளிர் காற்றாய் உரசிச் செல்லும். அது துப்பாக்கியில் இருந்து எறியப்பட்ட ஊசிகளாக மனித உடம்பைப் பதம் பார்க்கும்... வேதனை தரும். அந்தக் காற்றே பாலைவனத் தேசம் தழுவி ஆலை அறுக்கும் அனல் வாயுவாய் இந்த ஆலத் தேசம் தேடி வந்தால் அது இதம் தரும் தென்றல் ஆகும். அதுவே சில வேளைகளில் தடிமல், காய்ச்சல் என்கின்ற தொல்லைகளையும் கொண்டு வரும்.

சித்திரை கழிந்தால் வடக்கே இருந்து வரும் காற்றின் வலு அதற்கு முந்திய மாதங்களில் இருந்தது போல் இருப்பது இல்லை. குளிர் காலம் முடிந்து கோடை காலம் தொடங்குவதற்கான அச்சாரம் போடப்படும் அரிய சந்தர்ப்பமான காலம் அது. முதலாம் திகதி, பதினேழாம் திகதி என்று விடுமுறைகள் கிடைக்கும் மாதமும் இது. அதன் பின்பு மீண்டும் அரச விடுமுறை என்றால் நத்தார் விடுமுறைக்காகக் காத்திருக்க வேண்டும். கோடைக் காலத்தில் எடுத்துக் கொள்ளும் நீண்ட விடுமுறை இதற்குள் அடங்காது. ஐரோப்பாவில் தொழிலாளர்களுக்கு அதிகமாக நன்மையான சட்டங்கள் உள்ள நாடு நோர்வே என்பது மெய்யே. அந்த மெய்யை மெய் என்று நம்பாத சுதேசிகளும் இந்த மெய்யும் போதாது என்கின்ற வந்தேறுகுடிகளும் இங்கே உண்டு.

சந்தோஷமான செய்தி ஒன்று சொல்ல வேண்டும் என்று "TS"சை தங்கள் வீட்டிற்கு வருமாறு அருள் அழைத்து இருந்தான். சொரூபா இயலும் என்றால் கட்லெட் செய்து வருமாறு கூறி இருந்தாள். புவனலோசினி அதே வேலையாகக் கட்லெட் காலையே செய்து குளிர்சாதனப் பெட்டியில் வைத்து இருக்கிறாள். சரிஸ்காவும் "TS"சும் சுவைத்துப் பார்த்து அது நன்றாக இருப்பதாய் சான்று

பகிர்ந்து விட்டார்கள். சொரூபா கட்லெட் செய்து கொண்டு வருமாறு சொன்னதின் அர்த்தம் "TS"சிற்கு விளங்கியது.

"TS" காலை ஊர்வலத்திற்குச் சென்றிருந்தார். தொழிலாளர் தினம் என்றால் ஒஸ்லோ எப்போதும் திருவிழாக் கோலம் கொள்ளும். இதைவிட வைகாசி பதினேழு தேசிய தினம் வருகிறது. அது இதைவிடப் பெரிய திருவிழாவாக இருக்கும். தொழிலாளர் தினம் என்றால் தமிழர்கள் ஊர்வலம் போவது இப்போது அவர்கள் கலாச்சாரமாய் மாறிவிட்டது. தொழிலாளர்களின் ஒற்றுமை கருதி தமிழர்கள் தொழிலாளர் தினத்து அன்று ஊர்வலம் போவது இல்லை. புலிக் கொடிகளைக் கையில் ஏந்திய வண்ணம் இலங்கையில் நடக்கும் பிரச்சனைக்கு இங்கு ஒரு அறிமுகம் கொடுப்பதற்காக, தங்கள் தமிழ் தேசிய விசுவாசத்தைக் காட்டும் அக்கறையில், அவர்களின் வேசம் கலையாத வீரப் போராட்டமாக அது தவறாமல் நடைபெறும். ஒரு முறை நடந்தால் அது ஊர்வலம். ஒவ்வொரு முறையும் நடந்தால் அது ஒரு சடங்கு. இதுவும் ஒரு சடங்காகக் கலாச்சாரமாக தமிழருக்கு நீதி கேட்டுப் புலம் பெயர்ந்த தமிழர்கள் புலிக் கொடியோடு செல்லும் ஊர்வலம் அது.

தமிழர்களுக்குத் தாயகத்தில் பிரச்சனை இருந்தது. மேலும் அதிக நபர்களுக்கு அந்த ஊர்வலத்தில் கலந்து கொள்ள விருப்பம் இருந்தது. இருந்தும் கொடி விரோதத்தோடு குறுக்கே வந்து அதற்குத் தடையாக நின்றது. கொடி என்றால் அடி வேண்ட வேண்டும் என்பது சிலருக்குப் பட்டு அறிந்த ஞானம். அதுவும் வால்களிடம் தலைகள் குட்டுப்படும் கேவலம். அந்தக் கேவலம் வேண்டாம் என்று பலர் ஒதுங்கிக் கொண்டது ஒரு வகைச் சாபம். அல்லது அவர்கள் திருந்த வேண்டும் என்று நினைத்தும், திருந்தாத சோகம்.

"TS" தன் முயற்சியில் அலுத்து விடுவது இல்லை. தனித்து இருந்து என்ன செய்யப் போகிறாய் என்று இன்றும் வழமை போல் துவங்கினார். தான் இன்று ஏலின் வீட்டிற்குப் போகப் போவதாயும், அங்கு தனக்கு மதிய உணவு இருப்பதாயும் சரிஸ்கா கூறினாள். அதற்கு மேல் அவளை எதுவும் அவரால் கேட்க முடியவில்லை. அவள் அப்படியாவது வெளியே போவதில் அவருக்கு மிகவும் சந்தோசம். பிள்ளைகள் அடிக்கடி வெளியே சென்றால் பெற்றோர்கள் அமைதி இழந்து விடுவார்கள். பிள்ளைகள் எதற்கும் வெளியே செல்லா விட்டாலும் பெற்றோர்கள்

கவலை கொள்ளத் தொடங்கி விடுவார்கள். இரண்டிற்கும் ஒரு சமநிலை வேண்டும். இங்கு வந்தும் ஆணுக்கும் பெண்ணிற்குமான அந்தச் சுதந்திரத்தில் வேறுபாடு இருக்கத்தான் செய்கிறது. காவி வந்த கலாச்சாரத்தை இன்றும் கைவிட முடியாத இரண்டும் கெட்டானான நிலையில் பலர்.

எதற்கும் வெளியே போகாது, வெளி உலகிற்குத் திரை இட்டுக்கொண்டு வீட்டிற்குள் முடங்கிக் கிடப்பது நன்மை தராது என்பது "TS"சின் எண்ணம். கிழமை நாட்களில் அவள் எப்போதும் அலுவலாக இருப்பாள். வீட்டிற்கு வந்தாலும் அவளுக்கு நிறையவே வாசிக்க இருக்கும். அதைவிட இப்போது கணினியில் ஏதோ மென் பொருள் செய்ய வேண்டும் என்று அதனோடு அவள் அதிக நேரம் செலவு செய்கிறாள். தனித்து இருந்தாலும் அவள் ஏதோ செய்து கொண்டு இருப்பது அவளுக்கும் "TS"சிற்கும் ஆறுதலாக இருக்கிறது. சோம்பி இருப்பது அவள் இயற்கை அல்ல... இருந்தும் கலியாணம் செய்து குடும்பமாக வாழ வேண்டிய வயது என்கின்ற ஏக்கம் "TS"சிடம். குடும்ப வாழ்வு பற்றி அவள் எப்போதும் சோம்பி இருப்பது அவர் மனதைப் பிசையும். அதைப் பற்றி அவளோடு கதைக்க முடியாத தவிப்பு. கதைப்பது இல்லை என்கின்ற பிடிவாதம். அந்தப் பிடிவாதமும் அவள் நன்மைக்கே என்கின்ற எண்ணம். அதே வேளை அவளாக மாறுவாளா என்பதிலும் அவருக்கு ஏகப்பட்ட ஐமிச்சம். காலம் ஓடுகிறதா? பூமி சுற்றுகிறதா? அது தன்னைத் தானே சுற்றிய வண்ணம் சூரியனைச் சுற்றுகிறதா? அத்தினையும் அண்டத்தில் கற்பனைக்கு விஞ்சிய அதிவேகத்தில் பயணிக்கிறதா? நாங்களும் அதனோடு சேர்ந்து அத்தினை வேகத்தில் பயணிக்கிறோமா? எமக்கும் எமக்குப் பக்கத்தில் உள்ளவற்றுக்குமான அசைவையே எங்கள் ஊனக் கண்களால் பார்க்க முடிகிறது. அதற்குத் தட்டுப்படாமல் ஆயிரம் ஆயிரம் நிகழ்வுகள் நடந்தேறுகின்றன. நாளைக்கே என்று வாழும் மனித இனம். நாளை என்பது கற்பனையே என்பதை விளக்கிச் செல்லும் வாழ்வு. இந்த உலகும் நாளை ஒரு கறுப்புக் குழிக்குள் அகப்படலாம். அது நிகழ்வதற்கான சந்தர்ப்பம் மிகவும் குறைவு என்பதே ஒரு ஆறுதல். உலகமோ, அது இருக்கும் சூரியக் குடும்பமோ, அதைத் தாங்கும் கலக்சியோகூட நாளைக் கற்பனை ஆகலாம் என்பது பலருக்கும் கற்பனைக்கும் எட்டாத விஷயங்கள். நிஜத்தைத் தொட முடியாத மனித மனதுகள். அதன்

ஆழங்கள். வினை அறிந்தும் விடை இல்லாத தருணங்கள். சரிஸ்கா என்பவள் புதிராக மாற்றப்பட்ட "TS"சின் பொக்கிசம். அவள் விருப்பிற்கு எதிராக வலுவிற்கு எதுவும் செய்வது இல்லை என்று "TS" உறுதியாக இருந்தார். எவ்வளவு வீராப்போடு மனிதன் இருந்தாலும் சில விஷயங்களை எண்ணி அவன் மாய்கிறான். "TS"சின் மன வருத்தத்தால் சிறிதும் மாற்ற முடியாத அவதாரப் பெண்ணின் வாழ்க்கை ஆனது அவள் வாழ்வு.

பெண்கள் அழுவதற்கு அஞ்சுவது இல்லை. புவனலோசினி தனிமையில், சரிஸ்கா இல்லாது இருக்கும் போது, சரிஸ்காவைப் பற்றி எண்ணி அழுது தீர்ப்பாள். ஆனால் அவள் வீட்டில் இருக்கும் போது அழுது குழப்பும் துணிவு அவளுக்கு வருவது இல்லை. சில மனிதர்களின் விருப்பு மற்றைய மனிதர்களுக்குத் தொந்தரவு ஆகிவிடுவது உண்டு. தங்களுடைய விருப்பு சரிஸ்காவிற்குத் தொந்தரவாகி அவள் வெறுப்புக் கொள்ளும்படி தான் நடந்து கொள்ளக் கூடாது என்பதில் அவள் கவனமாக இருந்தாள்.

பிரச்சனை இல்லாத வாழ்க்கை இல்லை என்பதை விளங்கிக் கொண்டதாய் "TS"சும், புவனலோசினியும் தங்கள் சொந்தப் பிரச்சனையைப் புறக்கணித்து மற்றவர்களின் இன்ப துன்பத்தில் பங்கு கொள்வது அவர்கள் வழக்கம். இன்றும் அருளனின் அந்தச் சந்தோஷச் செய்தி என்ன என்பதை அறிவதோடு தொழிலாளர் தினத்தின் இரவு விருந்தை அங்கு உண்டு மகிழும் சித்தம் கொண்டனர்.

*

"TS"சிற்கு ஊர்வலத்தில் கேட்ட செய்தியைச் சிறிதும் நம்ப முடியாமலே இருந்தது. அந்த ஊர்வலத்தில் போனதிற்குப் பெருமைப் படுவதா அல்லது சிறுமைப் படுவதா என்கின்ற எண்ணம் அவருக்கு முதலில் தோன்றியது. இத்தினை அநியாயம் நடந்த பின்பும் பெருமையும், சிறுமையும் என்கின்ற மறுப்பு எண்ணம் அதைத் தொடர்ந்து அவருக்கு ஏற்பட்டது. சாம, தான, தண்ட, பேதம் என்று எதுவும் இயலாது என்றே தந்தையும், கூட்டணியும் கை விரித்தனர். சிங்கள அரசுகள் எமது உரிமையைத் தராது தொடர்ந்தும் கோரிக்கைகளை காலிற் போட்டு மிதித்தன. பொய் பிரச்சாரம் செய்து போராட்டத்தைக் கொச்சைப் படுத்தின. அவர்களுக்கு எப்படிப் பதில் அளிப்பது? அது தான்

அவர்கள் இப்படிச் செய்து இருக்கிறார்கள் என்று அவருக்குத் தோன்றியது. தேவைக்காகச் சிங்கள அரசுடன் கூட்டு வைத்து இருந்தார்கள். அதன் தேவை முடிந்து விட்டது. அவர்களின் ஏமாற்று வித்தை தொடர்கிறது. அதற்கு மறுமொழி இப்படியே கொடுக்க வேண்டும். இப்பிடிப் பதில் கொடுப்பது சிறிது பாதிப்பையும் ஏற்படுத்தும். எங்கள் போராட்டக் கலாச்சாரத்தைப் புரிந்து கொள்ளாத மேற்கு நாடுகள் பயங்கரவாதிகள் என்று கூறிவிடலாம். அப்படி மேற்கு நாடுகள் எங்கள் போராட்டத்தைப் பார்க்கத் தொடங்கினால் பல தீமைகள் வந்து சேரலாம். எங்கள் போராட்டம் பின்னடைவு காணலாம். என்ன நடந்தாலும் எங்களுக்கு ஒரு தனிநாடு கிடைக்கும் வரைக்கும் எங்கள் போராட்டம் ஒரு போதும் ஓயப் போவது இல்லை என்பதில் "TS"சிற்குப் பூரண நம்பிக்கை இருந்தது.

"என்னப்பா வெளிக்கிட்டு வந்து சோபாவில இருந்து யோசிக்கிறியள்? அருள் வீட்டை போக வேணும் எண்ட நினைப்பு இல்லையே? வெளிக்கிடுங்கோ. நேரம் ஆச்சுது. விட்டா... இப்பிடியே இருந்திடுவியள் போல இருக்குது." என்று புவனலோசினி அவரை உலுக்கிய உலுக்கில் அவர் இந்த உலக ஞானத்தைப் பெற்றார்.

பின்பு சரிஸ்காவிடம் கூறிவிட்டுக் கட்லெட்டையும் எடுத்துக் கொண்டு கீழே இறங்கி வந்தார்கள். தெருவின் ஓரத்தில் அவர்களது மிசுபிசி லான்சர் நிறுத்தி வைக்கப்பட்டு இருந்தது. இரண்டு கிழமைக்கு முன்பு "TS" எழுபது ஆயிரம் குரோணர்கள் கொடுத்து என்சோவில் உள்ள கார் விற்கும் கடையில் இருந்து அதை வாங்கி வந்தார். "TS"சிற்கு அதன் வெள்ளை நிறம் பிடித்துக் கொண்டது. புவனலோசினி வெள்ளையில் வேண்டாமே என்றாள். அதற்கு விலை, ஓடிய கிலோமீற்ரர் மற்றும் எத்தனை நபர்கள் அதை முன்பு வைத்து இருந்தார்கள், எந்த எந்த இடத்தில் வைத்து இருந்தார்கள் என்கின்ற தகவல்களை ஒப்பிட்டுப் பார்த்த "TS"சிற்கு இதுவே மிகவும் ஆதாயமானதாய், பொருத்தமானதாய் தோன்றியது. அவர் முடிவு செய்துவிட்டார். அதன் பின்பு அதைப் புவனலோசினியால் மாற்ற முடியாது போய்விட்டது. "TS" சாவியைப் போட்டுக் கதவைத் திறந்து வாகனத்தை இயக்கினார். அவருக்கு மிசுபிசியின் மெல்லிய இயந்திரச் சத்தம் பிடித்துக் கொண்டது.

"இஞ்சின் எண்டா இப்பிடித்தான் இருக்க வேணும்." என்றார்.

"ம்... மெல்லிய சத்தம் தான் அப்பா." என்றாள் புவனலோசினி தானும் ஞானம் பெற்றவளாய்.

"அது மட்டும் இல்லை... குளிருக்கும் பிரச்சனை இல்லாமல் ஸ்ராட் செய்யும். ஜெர்மன் கார்கள் எண்டா மக்கர் பண்ணும்." என்றார் "TS".

"ம்... குளிருக்கு ஸ்ராட் முக்கியம் தானே?" என்றாள் புவனலோசினி.

வாகனம் மெதுவாகத் தனது உறைவிடம் விட்டு நகர்ந்தது. கார் வைத்து இருப்பது செலவு. செலவு என்றாலும் அது பெரும் வசதியாகவும் இருக்கிறது. கார் வைத்திருந்து பழகிவிட்டால் அது இல்லாமல் இருக்க முடியாது. ஒஸ்லோவில் கார் வைத்திருப்பது என்றால் பிரச்சனையாக வந்து நிற்பது தரிப்பிடம். அருள் வீட்டின் அருகில் தரிப்பிடம் தேடிப் பிடிப்பது கடினமாக இருந்தது. பார்த்துப் பார்த்து பல நிமிடம் காத்திருந்து ஒரு சுதேசி வாகனம் எடுத்த இடத்தில் தங்கள் காரைச் சொருகிவிட்டு அருள் வீட்டிற்குச் சென்றார்கள்.

*

அருள் வீட்டிற்கு ஏற்கனவே எல்லோரும் வந்து விட்டார்கள். தான் அதிக நேரமாய் சோபாவில் யோசித்துக் கொண்டு இருந்து விட்டதாக "TS" சிற்குத் தோன்றியது. தான் பிந்தி வந்ததான எண்ணம் அவருக்கு ஒருவித கூச்சத்தைக் கொடுத்தது. அவர் மன்னிப்புக் கேட்கும் விதமாக,

"நாங்கள் பிந்திப் போச்சுது போல இருக்குது? சோபாவில அயர்ந்து போய் இருந்திட்டன்." என்றார்.

"இல்லை "TS" அண்ணை. நாங்களும் இப்பதான் வந்த நாங்கள். இவரும் வீ.வீ.சியில செய்தி பார்க்கிறதை விட்டிட்டு எழும்ப மாட்டன் எண்டு இருந்தார். நான்தான் ரீவிய நிப்பாட்டி ஆளை இழுத்துக் கொண்டு வரவேண்டி இருந்திச்சுது. செய்தியில ஒருக்காச் சொன்னதையே திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டு இருப்பாங்கள். அதையே பார்த்துக் கொண்டு இருந்தால்? இவரோடை சில

விஷயத்துக்கு இப்படித்தான் மல்லுக்கட்ட வேணும்." என்றாள் சுந்தரி.

"பெரிய மல்லுக்கட்டல் தான். ஒவ்வொரு நாளுமா இப்பிடி நியூஸ் பார்க்கிறம்? இண்டையான் புதினம் அப்பிடி." என்று சொரூபன் அந்தக் கதைக்குள் முழுமையாக நுழைவதற்கு முன்பு "TS" குறுக்கிட்டு,

"எங்க தாமோதரனைக் காணேல்லை?" என்றார். அவர் அப்படிக் கேட்டதைப் பார்த்த சிவா நக்கலாகச் சிரித்தான். அவன் நக்கலாகச் சிரிப்பதைக் கவனித்த "TS" இதில் ஏதோ ஒரு வில்லங்கம் இருக்கிறது என்று ஊகித்துக் கொண்டார். தான் கொஞ்சம் அமைதியாக இருந்திருக்க வேண்டும் என்று அவருக்குத் தோன்றியது. சரி தலைக்கு மேல் தண்ணி வந்த பின்பு சாண் என்ன முழம் என்ன என்கின்ற எண்ணத்தோடு,

"என்ன சிவா சிரிக்கிறீர்... என்ன விஷயம்?" என்றார் "TS".

"அது என்ன நான் சிரிக்கிறது உங்களுக்குப் புதுசா இருக்குதே?" என்றான் சிவா.

"அப்பாவியாச் சிரிச்சா சிரிப்பு, அமுக்கமாச் சிரிச்சா அது சுரிப்பு. அதில நீ எதையோ புதைச்சு வைச்சு இருக்கிறாய் எண்டு அர்த்தம். எங்களுக்கும் அர்த்தம் கண்டு பிடிக்கத் தெரியும் எல்லோ." என்றார் "TS".

"ஐயோ அண்ணை நான் இப்ப உங்களிட்டைச் சரண்டர்." என்றான் சிவா.

"அவருக்குச் சொல்லாமல் விடுவனே? அவர் தான் இன்னும் வரேல்லை. வருவார் எண்டு நினைக்கிறன். இல்லாட்டி வளவிற்க நிக்கிற ஹெலியை அனுப்பி வைப்பம்." என்றான் அருள். அனைவரது முகங்களிலும் புன்னகை பூத்தது.

"அருள் நீ நல்லாய், நக்கலாய் சமாளிக்கிறாய்." என்றான் சொரூபன்.

"ஏன் அப்பிடிச் சொல்லுகிறா?" என்றான் அருள்.

"பிறகு என்ன... தெரியாத மாதிரி ஒரு கதை இங்க? "TS" அண்ணை நீங்கள் அவற்றை மகன்களின்ரை வேத்டேக்குப்

போன நீங்கள் தானே? அதுக்கு யார், யார் வந்தது? யார், யார் வரேல்லை?" என்று கேட்டான் சொரூபன்.

"அதுக்கும் இதுக்கும் என்ன சம்பந்தம்?" என்றார் "TS".

"இருக்குது... நீங்கள் சொல்லுங்க..." என்றான் சொரூபன்.

"வந்த இடத்தில சும்மா இருங்க அப்பா?" என்றாள் சுந்தரி.

"நீ சும்மாய் இரடி. வேலை இல்லாட்டிப் போய் ரீ வைக்க உதவி செய்... போ." என்று கலைத்தான் சொரூபன்.

"சரி ஏதோ கதையுங்கோ..." என்று விட்டு அவள் எழுந்து சமையல் அறைப் பக்கம் சென்றாள்.

"ஓம் சொரூபன்… நிறையச் சனம் வந்திச்சினம். புதுசு புதுசா அவருக்குத் தெரிஞ்ச ஊர் சனமாம். எனக்குப் பெரிசா ஆட்களைத் தெரிய இல்லை. எல்லாம் அறிமுகம் இல்லாத முகங்கள். சிலரை ஊர்வலத்தில, மீற்றிங்கில கண்டிருக்கிறன். அந்த அறிமுகம் தான். ஆனா... சிவா, அருள்... உன்னான உங்களை நான் அங்க காணேல்லை? உங்களுக்கு அண்டைக்கு என்ன வேலையே?" என்றார் "TS".

"நீங்கள் என்ன அண்ணை? அவர் சொன்னா எப்பிடி எண்டாலும் வந்திருப்பம் தானே? நான் தான் வேலை எண்டாலும் சுந்தரி ஆவது வரமாட்டாளே? அவர் எனக்குச் சொல்ல இல்லை." என்றான் சொரூபன்.

"இங்கையும் அது தான் கதை. துரோகிகளுக்குச் சொல்லுகிறது இல்லை எண்டு முடிவு செய்து இருக்கிறாராம். பருவாய் இல்லை. எங்களுக்கும் நேரமும், காசும் மிச்சம் தானே." என்றான் சிவா.

"கொஸ்பிற்றல்லை போய் பார்க்கேக்க நல்ல மாதிரி தானே கையைப் பிடிச்சுக் கதைச்சவர்." என்றான் அருள்.

"ம்… அது மனசுக்க ஒண்டு வைச்சுக் கொண்டு வெளியில சமாளிச்சு இருக்கிறார். தனக்கு ஊர்ச்சனம் இருக்கினமாம். காட்டிக் குடுக்கிற சிங்களவர்கள் எல்லாம் தனக்கு இனித் தேவை இல்லை எண்டு யாருக்கோ சொன்னவராம்." என்றான் அருள்.

"நாலு சனம் நாலு விதமாக் கதைச்சு எங்களைப் பிரிக்குங்கள். நாங்கள் தான் நிதானமாய் விசாரிச்சு அறிய வேணும்." என்றார் "TS".

"அவர் திறிக்கில கண்டிட்டு என்னோடை கதைக்காமல் முகத்தைத் திருப்பிக் கொண்டு போகிறார். அவருக்கும் எனக்கும் என்ன பிரச்சனை? நாட்டில நடக்கிற பிரச்சனையில நாலு பேருக்கு நாலு விதமான கருத்து இருக்கும். அதை விளங்கிக் கொள்ள வேணும். தனிப்பட்ட பகையா அதை எடுத்துக் கொள்ளக் கூடாது. அந்தாள் ஏதோ தன்னைப் பற்றி கதைச்ச மாதிரிக் கோபமா இருக்கிறார்." என்றான் சொரூபன்.

இவர்கள் கதைத்துக் கொண்டு இருக்கும் போது சண்முகன் சக்தியோடு உள்ளே வந்தான். புவனலோசினிக்குச் சக்தி வெளிறி இருப்பதாய் தோன்றியது. சக்தி வந்து புவனலோசினிக்குப் பக்கத்தில் இருந்தாள்.

"அக்கா எப்பிடி இருக்கிறியள்?" என்று அக்கறையோடு கேட்டாள்.

"நல்லாய் இருக்கிறம். நீ எப்படி இருக்கிறாய்?" என்று புவனலோசினி பதிலுக்குக் கேட்டாள்.

"சந்தோஷமாய் இருக்கிறம் அக்கா." என்றாள்.

"ஏதோ கடுமையான விவாதம் நடந்தது போல? நாங்கள் வந்து குழப்பிப் போட்டமோ?" என்றான் சண்முகன்.

"அதெல்லாம் இல்லை மூனா. தாமோதரன் கொஞ்சப் பேரைச் சிவாட்ட லிஸ்றில (கறுத்தப் பட்டியல்) சேர்த்து இருக்கிறாராம். அதில நானும் ஒரு ஆள்." என்றான் சிவா.

"அதில என்ன சந்தேகம்? அப்ப மற்ற ஆட்கள்?" என்றான் சண்முகன்.

"நான், அருள், அந்த மற்றைய வீ ஐபிக்கள். எங்க போனாலும் இந்தப் பட்டியல் மாறாது." என்றான் சொரூபன்.

"நீங்கள் ஏன் துரோகிகள் பட்டம் கேட்கிறியள்? கொஞ்சம் அடக்கி வாசிக்கலாம் தானே?" என்றான் சண்முகன் எள்ளலாக.

"துள்ளாத... கெதியா பெரிய தொகைக்குக் கடைக்கு குடுத்து வைச்ச மாதிரி வருவாங்கள். அழிஞ்சு போகிறதுக்கு அடக்கி வாசிக்கோணும் எண்டா நான் அதுக்குத் தயார் இல்லை. இப்ப இவற்றை பங்சனுக்குப் போகாட்டி எங்களுக்கு இனிச் சோறே கிடைக்காது ஆக்கும்? அதுக்கு ஏன் நாங்கள் சரி எண்டுகிறதைச் சரி எண்டு சொல்லாமல் பொய் பேசிக் கொண்டு திரிய வேணும்? மனச்சாட்சி இல்லாமல் கதைக்கிறதிலும் பார்க்க மௌன விரதம் இருக்கிறது மேல். ஆனா... எனக்கு மௌன விரதம் எல்லாம் சரி வராது." என்றான் சிவா.

"அது என்ன அழிஞ்சு போகிறது? அவங்கள் சரியாகத்தானே போராடுகிறாங்கள்? அழிவு அவங்களுக்கு இல்லை. சிங்கள அராஜக அரசாங்கத்திற்குத் தான். பெடியளின்ரை அரசியல் தந்திரத்தை உலகம் மெச்ச வேணும். தேவைக்கு அரசாங்கத்தையே பயன்படுத்தினாங்கள். முடிஞ்சதும் முடிச்சிட்டாங்கள். அவங்கடை அரசியல் உங்களுக்கு விளங்கேல்லை சிவா. விட்டு வைச்சாப் புலியளை அழிக்கிறன் எண்டு பொது சனத்தைத்தானே பலி எடுத்து இருப்பான்." என்றான் சண்முகன்.

"பிறேமதாசா புலியளைத் தேன்நிலவுக்குக் கூப்பிட்டது இப்ப முடிஞ்சு போச்சுது. பிறேமதாசாவோடை இருந்த காதல் இந்தியனை வெளியேத்துகிறது வரைதான். அது முடிஞ்சதும் உங்களை அழிக்கிறது தொடங்கீடும். அதுக்குப் பதிலா அவனைத் தற்கொலைப் படையால அழிச்சாச்சுது. நீங்கள் செய்த அந்த வேலையை எப்பிடிச் சிங்கள அரசும் உலக ஊடகங்களும் பிரச்சாரம் ஆக்கும் எண்டு தெரியுமா? அதுகின்ரை விளைவு எப்பிடித் திரும்பி வரும் எண்டது பற்றி எந்தக் கரிசனையும் இல்லை. ராஜீவ் காந்தி கொலை மாதிரி... இந்தக் கொலையும் எங்களுக்கு விடிவு தரும் எண்டுகிறது பொய் கனவு. இது புலிகளின்ரை கொலைக்கு நியாயம் கற்பிக்கிற பிரச்சாரம். இந்தக் கண்மூடித் தனமான கொலைகள்தான் தமிழற்ற போராட்டத்தையே கண்ணைக் கட்டி கடலுக்க கொண்டு போய் விழுத்தப் போகுது எண்டு ஒருத்தருக்கும் விளங்கேல்லை. அதைச் சொன்னா விஜபிக்களுக்குக் கோவம் வருகுது. நாங்கள் தீண்டத் தகாதவர்களாய் போயிட்டம். என்ன செய்கிறது சொல்லு சண்முகா?" என்றான் சிவா.

"அப்பிடி இல்லைச் சிவா. அவன் இருந்தா ஜெவீப்பியைக் கொண்டு குவிச்ச மாதிரித் தமிழரையும் கொண்டு குவிச்சிடுவான். அவங்கள் எதையும் எழுந்தமானத்துக்குச் செய்ய மாட்டாங்கள். நிச்சயமாய் உந்தக் கொலைகள் பல பிரச்சனைகளைத் தீர்க்கிறதாய் இருக்கும்." என்றான் சண்முகன்.

"தமிழன் எண்டுகிறது சிங்கள அரசுகளுக்கு வேண்டாப் பெண்டாட்டி மாதிரி. எங்கடை புத்திஜீவிகள் இந்தியாவோடை கெட்டித்தனமாய் பகைச்சிட்டினம். இலங்கையோடையும் யுத்தம் தொடங்கீட்டினம். உலகத்திட்டையும் நல்ல பெயர் கேட்டாச்சுது. கொழும்பிலை... அதுவும் தொழிலாளர் தினத்தில குண்டு வைச்சு உலகத்தைப் பகைக்கிற வேலையையும் செய்தாச்சுது. இனி நிச்சயமாத் தமிழீழம் தான் மிச்சம். மலையில கொண்டு போய் தலையை மோதினா தலைக்கா சேதம் மலைக்கா சேதம்?" என்றான் சிவா.

"சிவா உன்ரை ஆதங்கம் முழுக்க முழுக்கப் பிழை எண்டு கண்ணை மூடிக் கொள்ளுகிறதும் சரி எண்டு நான் ஒரு நாளும் சொல்ல மாட்டன். ஆனா... எங்கடை போராட்டம் வித்தியாசமானது. அங்க பேசப்படும் பாசைகள் வித்தியாசமானவை. மனிதம், மனிதாபிமானம், போர் முறைகள், அதற்கான சட்டங்கள் எல்லாம் அங்க செல்லுபடியாகாது. மனிதக் கொலைகளுக்குக்கூட இனத்தைப் பார்த்து நடவடிக்கை எடுக்கும், தண்டனைக் கொடுக்கும், சோரம் போன நீதித்துறையைக் கொண்ட, பௌத்தம் என்கின்ற ஆன்ம ஞானத்தை வெறியாக்கிக் காவி உடைக்குள் புகுந்து கொண்ட பௌத்தர்கள் என்னும் கயவர்களால், அவர்களுக்குப் பயப்படும் பதவி மோகம் கொண்ட சிங்கள அரசியல்வாதிகளால், குறுகியகால அரசியல் ஆதாயத்தைக் கருத்தில் வைத்து ஆளப்படும் அவமானமான வரலாறு கொண்ட நாடு எங்கள் நாடு. இந்த அடக்கு முறைக்கான போராட்டம் எங்களின் மேல் வலுவில் திணிக்கப்பட்டது. அவர்கள் கொடூரமாகக் கொலை செய்தே எங்களை அடிமைகளாகக் கட்டிப் போட நினைத்தார்கள். போராட்டத்தை அடக்க எண்ணி அப்பாவித் தமிழர்களைப் படுகொலை செய்தார்கள். மக்களால் தேர்வு செய்யப்பட்ட அரசே நியாய அநியாயம் பற்றிக் கவலைப்படாத போது அதற்காகக் கவலைப்படுவதாய் இராணுவரீதியில் அவர்களுக்குச் சமன் இல்லாத, வலுவில்லாத நாங்கள், தத்துவம் பேசினால்

அழிந்து போய்விடுவோம். இந்தப் போராட்டத்தில் ஆயுதமும், ஆள் பலமும் அவர்களைத் தாக்குவதால் தான் சேருகிறது. அதுவும் அவர்களுக்கு எவ்வளவு இழப்பு ஏற்படுகிறது என்பதைப் பொறுத்தே அதன் விளைவு அமைகிறது. அதைப் பார்த்துத்தான் சிங்கள அரசும் எந்த விதத்தில் எதிர்வினை காட்டுவது என்று உத்தேசிக்கிறது. நாங்கள் கையைக் கட்டிக் கொண்டு நின்றாலும் அவர்கள் கொலை செய்யாது விடுவார்களா? வன்முறையை ஆயுதமாகக் கையில் எடுத்தது பெரும்பான்மை இனமும் அவர்களது அரசுமே... அதற்குப் பதில் நாங்கள் அந்த நாட்டில் இல்லாது அழிந்து போவதா? நிறுத்தப்படாத கொலைகளின் வரலாற்றை நிறுத்த விரும்பாத நாட்டில் வேறு எப்படிப் போராட முடியும்? பல்லுக்குப் பல்லு, கண்ணிற்குக் கண் அதைவிட அவர்களுக்கு வேறு மொழி இல்லைச் சிவா. புத்தர் பேசிய பௌத்தத்தைப் புரிந்து கொள்ளும் பௌத்த குருக்களே அந்த நாட்டில் இல்லாத போது தமிழர்களின் மண்டை ஓடுகள் மட்டுமே தமிழர்களுக்குப் பிச்சைப் பாத்திரமாகத் தரப்படும். அதில் அவர்கள் வெறியோடு தெளிவாக இருக்கிறார்கள்." என்றார் "TS". அவர் தமிழ் உணர்ச்சியில் இலக்கணச் சுத்தம் பெறுவது உண்டு. பெற்று இருந்தது.

""TS" அண்ணா சொல்வது சரிதானோ? " என்கின்ற எண்ணம் சிவாவிற்கு ஒரு கணம் உண்டாகியது. "இல்லை. அது ஒரு போதும் முடிவாகாது." அவன் மனது அந்த விளக்கத்தை அப்படியே ஏற்க மறுத்தது. "போராட்டம் என்பது ஒரு இனத்தின் இருப்பை அழிப்பதற்கு நடத்தப்படுவது இல்லை. அதன் இருப்பை நிலை நிறுத்தச் செய்யும் யாகம், தியாகம் அது. இங்கு அது திசை மாறிவிட்டது. தொலை நோக்கு அற்ற சுயநலமிகளால் ஒட்டுமொத்தமாக எங்கள் இனம் அழியப் போகிறது. இவர்களுக்கு அதைச் சொன்னாலும் இவர்கள் அதை ஒருநாளும் ஒத்துக்கொள்ளப் போவதில்லை. அதற்காக வாயை மூடிக் கொண்டு இருக்க முடியாது." என்று அவன் எண்ணினான்.

"சிங்கள அரசுக்கும் அதுகின்ரை அருவருடிகளுக்கும் அடி கொடுத்தால் நாங்கள் அதிகம் கவலைப்படத் தேவை இல்லை. அப்பாவிப் பொதுமக்கள் அழியும் போது எங்களின் போராட்டத்தின் மீது வரவேண்டிய அனுதாபம் வெறுப்பாகத் திரிபடைகிறது. இலங்கை இராணுவமோ,

அரசு சம்பந்தப்பட்டவர்களோ அழிந்ததைவிடத் தமிழர்கள் அதிகமாக அழிந்து விட்டார்கள். அதுவும் இராணுவத்தால் அழிந்ததைவிடச் சொந்தச் சகோதரங்களால் அழிந்த தமிழரே அதிகம். இப்படிக் கண்மண் தெரியாது தங்கள் இனத்தையே அழிக்கும் ஒரு குழுவா எங்களுக்கு விடுதலைப் பெற்றுத்தர முடியும்? இன்று கொழும்பில் நடந்ததோ, அன்று தமிழ்நாட்டில் நடந்ததோ எங்களுக்கு நிச்சயம் ஒருபோதும் அனுதாபம் பெற்றுத் தரப் போவது இல்லை. அதற்குப் பதிலாக இது எங்களை நாங்களே அழித்துக் கொள்ளும் கண்மூடித்தனமான வன்முறை. இது போராட்டமே இல்லை. இது போராட்டமே இல்லை. இதுக்காக நாங்கள் இதைத் தொடங்கவில்லை."

என்றான் சிவா. அவன் உணர்ச்சி வசப்பட்டு இருந்தான். கற்பனை செய்த போராட்டமும் அதன் பிறப்பான தமிமீழமும் கற்பனையாகப் போவதான கொதிப்பு அவன் மனதில் வெடித்துக் குமுறியது. நாடு விட்டு நாடு வந்து அகதி வாழ்க்கை தொடங்கினாலும் நாட்டின் நினைவு இடைவிடாது அவன் மனதை எப்போதும் நோண்டி எடுத்தது. மீண்டும் மீண்டும் தொடராகத் திருத்திக் கொள்ள விரும்பாது பிழைகள் செய்வதாய் அவன் மனதுள் வேகினான். இன்னும் எத்தினை கொலைகள்? இன்னும் எத்தினை உயிர்கள்? அதன் பின்பும் எமக்கு உரிமை கிடைக்குமா? உலகத்தால் பயங்கரவாதிகள் என்று முத்திரை குத்தப்பட்டவர்களால் இராணுவ சமபலத்தை எவ்வளவு காலம் காப்பாற்ற முடியும்? அதுவும் இந்தியாவின் தங்கப் புதல்வனைக் கொன்று விட்டு, அதன் தயவு தாட்சண்ணியம் இல்லாது, விதவை ஒருத்தியின் தேசச் சிலம்பிற்கும், அள்ளி முடியாக் கூந்தலுக்கும் முன்பு வெல்வோமா? வீழ்த்தப்படுவோமா? இது வீழ்வோம் என்று தெரிந்தே செய்யப்படும் விரயம் ஆகுமோ? கடவுளே அப்படி இருக்கக் கூடாது. ஏதாவது எங்களுக்குக் கிடைத்து, நாங்களும் அந்த நாட்டில் கௌரவத்துடன் என்றென்றும்... என்பதாகச் சிவாவின் எண்ண ஓட்டம் போயிற்று.

"சிவா நீ எப்பவும் நம்பிக்கை இல்லாமலே எங்கடை போராட்டத்தையும் இயக்கத்தையும் பார்க்கிறாய். யாழ்ப்பாணம் என்ன? வடக்கு என்ன, கிழக்கு என்ன மலை நாட்டையும் பிடிச்சு, அவங்கள் ஒரு நாளைக்கு அகண்ட ஈழமாக ஆளுவாங்கள். அதைப் பார்த்து நாங்கள் பிரமிச்சு நிற்பம். அப்ப நாங்கள் எல்லாம் முந்தி அடிச்சுக் கொண்டு

யாழ்ப்பாணம் ஓடிப் போவம். சத்தியமாய் இது நடக்கும் சிவா. எல்லாத்துக்கும் பொறுமை வேணும். அவங்களுக்கு ஒத்துழைப்பு கொடுக்க வேணும். அதைத்தான் நாங்கள் நம்பிக்கையோடு செய்ய வேண்டியது. அவங்களை வீக்காக்கிற மாதிரி நாங்கள் எதுவும் செய்யக் கூடாது. எங்கடை பெடியளில, எங்கடை போராட்டத்தில எனக்கு நம்பிக்கை இருக்குது சிவா. நம்பு சிவா. நாடு கிடைக்கும் எண்டு நம்பு சிவா. நம்பிக்கைதான் வாழ்க்கை." என்றான் சண்முகன்.

"நம்பிக்கை இருக்கத்தான் வேணும் சண்முகா... ஆனாக் குருட்டு நம்பிக்கை இருக்கக் கூடாது. என்னைப் பொறுத்த வரை இது குருட்டு நம்பிக்கை. எல்லாரையும் பகைச்சுக் கொண்டு, பயங்கரவாதிகள் எண்டு உலகத்திட்டப் பெயர் வாங்கிக் கொண்டு, சொந்த இனத்தையே பந்தயக் குதிரையாக்கி... சீ... நாங்கள் எங்கடை விடுதலைக்காகப் போராடேல்லை. எங்களை அழிக்கிறதுக்கு நாங்களே போராடுகிறம். இது தப்புச் சண்முகா. வரலாற்றுத் துரோகம் சண்முகா." என்றான் சிவா.

"சிவா நீ எவ்வளவு நேரம் உதைப் பற்றிக் கதைச்சாலும் போராட்டம் தப்பு எண்டுதான் சொல்லுவாய்." என்று சொல்லத் தொடங்க,

"போராட்டம் தப்பில்லை. இப்ப போராடுகிற முறைதான் தப்பு." என்று சிவா திருத்தினான்.

"சரி இப்ப போராடுகிற முறை தப்பு எண்டு நினைக்கிறாய். ஆனா... உனக்கு ஒரு விஷயம் தெரியுமோ? தப்பு, சரி எண்டுகிறது எப்பிடி உருவாகுது எண்டு தெரியுமோ?" என்றார் "TS".

"சொல்லுங்க... ஆனா அதுக்கும் இதுக்கும் என்ன சம்பந்தம்?" என்றான் சிவா.

"உன்னுடைய அனுபவத்திற்கும், அதனால் உண்டாக்கப்படுகிற விம்பத்திற்கும் ஏற்பதான் தப்புச் சரி என்பதை நீ முடிவு செய்வாய். அதாவது... உன்னுடைய மூளைக்குள் அடையப்பட்ட தகவலைப் பொறுத்தது அது. அதன் தன்மையைப் பொறுத்து அது வடிவம் எடுக்கும். உனக்குத் தப்பாய் தெரிவது நிச்சயம் மற்றவருக்குத் தப்பாய் தெரிய வேண்டும் என்று இல்லை. அப்பிடியே உன்னுடைய ஒரு சில அனுபவம் பெடியளைத் தப்பாய்

உனக்கு இப்போது காட்டலாம். உனக்குத் தப்பாய் தெரிந்தாலும் அது தப்பாய் இருக்க வேண்டிய அவசியம் கிடையாது. பார்வைக்குப் பார்வை அதன் தன்மை மாறும். அவங்கள் செய்கிறது தப்பா சரியா எண்டுகிறதைக் களத்தில நடக்கிற நிகழ்வும் அதைச் சுற்றிய உள்நாட்டு, வெளிநாட்டு அரசியலும் தான் நிர்ணயிக்க வேணும். அதுக்கு ஏத்த மாதிரி அவங்கள் போராட்டம் நடத்துவாங்கள். அதால நீ இப்ப பார்க்கிறது, நினைக்கிறது உன்னுடைய அனுபவத்தின் உற்பத்தி. அது உலக நியாய, அநியாயங்களுக்குச் சரியாக இருக்கும் எண்டு இல்லை. அப்பிடி இருந்தாலும் நியாயம், அநியாயம் என்பதும் இடத்திற்கு இடம், காலத்திற்குக் காலம் வித்தியாசப்படும். சுயநலத்திற்காக அநியாயத்தை நியாயம் என்பது உலகத்தில் காலாகாலமாக நடந்து வருகிறது. இப்போது இருக்கும் வல்லரசுகள் அதைத்தான் செய்கின்றன. தங்களுக்கு நன்மை விளையும் என்றால் எந்த அநியாயமும் நியாயமாக அவர்களால் கற்பிக்கப்படும். நீ சொல்கின்ற நியாயம் என்பது பெரும்பான்மைத் தமிழரைப் பொறுத்தவரை அநியாயம். நீ அநியாயம் என்பது பெரும்பான்மைத் தமிழரைப் பொறுத்தவரை நியாயம். ஆக யார் சொல்வது, நம்புவது சரி என்பதை வரலாறு மட்டுமே நிச்சயிக்கும்." என்றார் "TS".

""TS" அண்ணை... நீங்கள் சொல்லுகிறது தப்பு. இரண்டாம் உலகமகா யுத்தத்தைப் பாருங்க... நாஜிப் படையில இருந்தவங்களுக்கு யூதர்கள் மனிதர்களே இல்லை. அவர்களைக் கொல்வதும் பாவம் இல்லை. எதிராக அது தியாகம்… தாய் நாட்டிற்காகச் செய்யும் சேவை... உலகப் பொது விதி என்று ஒண்டு இருக்கிறது. ஒரு மனிதனை மற்றைய மனிதன் கொல்ல முடியாது என்பது ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒன்று. மரண தண்டனை வழங்கும் நீதிமன்றங்களே பிழையானவை என்பது மனிதத்தை நேசிக்கும் மானிடனின் எண்ணம். மனிதத்திற்குத் தப்பான விடயங்களை இடம், காலம், நேரம், கலாச்சாரச் சார்பு வைத்து நியாயம் ஆக்கிவிட முடியாது. அப்பாவிகளை, போர்க் கைதிகளை, பெண்களை, குழந்தைகளைக் கொன்றுவிட்டு நாங்கள் எந்தக் காரணம் சொல்லியும் எங்களை நியாயப்படுத்த முடியாது. இலங்கை இராணுவம் அப்படிச் செய்வதை எதிர்த்துப் போராடப் புறப்பட்ட நாங்களே அதைச் செய்வது மிகவும் கேவலமான செயல்.

அதை நியாயப்படுத்த நினைப்பதில் எந்தத் தார்மீக பலமும் எங்களிடம் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. வரலாறு இதை ஒரு நாளும் சரி என்று ஏற்கப் போவதில்லை." என்றான் சிவா.

"எதுக்கு அண்ணை உந்த அரசியல் எல்லாம்? உதைக் கதைக்கப் போனா பிரச்சனை தான்." என்ற வண்ணம் சுந்தரி வந்து சோபாவில் அமர்ந்தாள்.

"நீர் திரும்ப வந்திட்டிரே? அங்க வேறை அலுவல் ஒண்டும் இல்லையே?" என்றான் சொரூபன்.

"பாருங்க இவற்றை அதிகாரத்தை...? பெம்பிளையள் எண்டா ஏதோ அடிமையள் எண்ட நினைப்பு இவருக்கு. ஏன் நாங்கள் தான் மட்டும் வேலை செய்ய வேணுமே? நீங்கள் வெட்டியா இருந்து கொட்டியா அரசியல் பேசுவியள் நாங்கள் உங்களுக்காக முறிய வேணும் ஆக்கும்?" என்றாள் சுந்தரி.

"உங்க பார்... வெட்டியா... கொட்டியா எண்டு எதுகை மோனை எல்லாம் எப்பிடி வருகுது" என்றான் அருள்.

"பிறகு என்ன அருள் அண்ணை... நீங்கள் சாப்பாடு ஓடர் பண்ணி எடுக்கிறியள். குடிக்காதவைக்கு மட்டும் ரீ எண்டு சொல்லி இருக்கிறியள். பலகாரம் எல்லாம் கொண்டு வந்திருக்கினம். அப்ப எங்களுக்குச் சமையல் அறையிக்க என்ன வேலை இருக்குது? சரி வேலை இல்லை, வெட்டியா அரசியல் பேசுகிறவையின்ரை வாயப் பார்க்கலாம் எண்டா அதுக்கும் அதிகாரம். பெம்பிளையள் எண்டாக் கிள்ளுக் கீரை எண்ட நினைப்பு இவருக்கு?" என்றாள் சுந்தரி.

"ஐயோ ராசாத்தி... நீ என்ன எண்டாலும் செய். நான் உன்ரை பக்கமே வரேல்லை. இது போதுமா?" என்றான் சொரூபன். குனிந்து அவளுக்குச் சலாம் வைத்தான்.

"அப்பிடி வாங்க வழிக்கு. உந்த அதிகாரம் எல்லாம் என்னோடை சரிவராது. பெண்கள் படையணி வெளிக்கிட்டா எல்லாம் தூள் தூளாகும் தெரியும் தானே?" என்று கூறிச் சிரித்தாள் சுந்தரி.

"ம்... அது சரி... உங்கடை ஊடலுக்கு இங்கயே மேடை கிடைச்சது? சரி நடத்துங்கோ... நடத்துங்கோ..." என்றாள் புவனலோசினி.

"அக்கா நீங்களே உங்கடை இனத்திற்கு எதிரி மாதிரிக் கதைக்கக் கூடாது. நாங்கள் ஒற்றுமை இல்லாமல் இருக்கிறதால எங்களை எதிரிகள் அடிமைப்படுத்துகினம். எங்கடை சுதந்திரத்தை நாங்கள்தான் கையில எடுத்துக் கொள்ள வேணும்." என்றாள் சுந்தரி.

"நாங்களே எங்கடை இனத்தின்ரை சுதந்திரத்துக்கு எதிராகச் செயற்படுகிறது படு மோசமான வேலை. அதைத்தான் நாங்கள் காலாகாலமாய் செய்து வாறம்." என்றாள் மலர்.

"ஓ இவவும் சேர்ந்திட்டா. வீட்டுக்கையே சுதந்திரப் பறவைகள். ஏற்கனவே சிங்கப்பூரில இருந்த ஒரு திமிர் வேறை. உழைக்கிறம் எண்ட நடப்பு. நாங்கள் உந்த மேக்கப்பிற்கு எல்லாம் மயங்க மாட்டம்." என்றான் றூபன்.

"நீங்கள் எல்லாம் துரோகிகள் மாதிரி. உள் வீட்டுக்க இருந்துகொண்டே காட்டிக் குடுக்கிற ஆட்கள்." என்றாள் மலர்.

"அரசியல், பெண் விடுதலை எல்லாம் வெளியால மட்டும். வீட்டுக்க ஆம்பிளையள் சொல்லுகிறதைக் கேட்க வேணும். இல்லாட்டிக் குடும்பம் உருப்படாது." என்றான் றூபன்.

""TS" அண்ணை இவரைப் பாருங்கோ. இயக்கத்துக்கும், விடுதலைக்கும் சப்போட்டா இருக்கிறார் எண்ட உடன நானும் இவர் ஒரு முற்போக்கானவர் எண்டு நினைச்சன். கடைசியில இப்பிடியான ஒரு படு பிற்போக்கான மனிசனுக்குத் தலையை நீட்டி இருக்கிறன் எண்டு விளங்குது. சிங்கப்பூரிலையே இப்பிடித் துணிஞ்சு யாரும் சொல்ல மாட்டான்கள். இந்த நோர்வேயில இருந்து கொண்டு இவர் சொல்லுகிறதைப் பாருங்க? நாங்கள் உழைப்பம். செலவு செய்வம். அது எங்கடை பிறப்புரிமை. இல்லையா "TS" அண்ணை?" என்றாள் மலர்.

"அது உங்கடை பிழை மலர். இயக்கத்துக்கு உதவுகிறவன் எல்லாம் முற்போக்குவாதி எண்டு யார் சொன்னது? இந்திய அரசியல்வாதிகளை விடக் கேவலமான வேஷதாரிகளும் எங்களுக்கு உள்ள இருக்கினம். அவையும் இயக்கத்திற்கு உதவுகினம். இயக்கத்துக்கு உதவுகிறது இறால் போட்டுச் சுறாப் பிடிக்கிற மாதிரி. அதுக்கு பலவகை தந்திரங்கள் இருக்கும். பெண்டாட்டியை அடிக்கிறவன், சாதி வெறியன்,

ஊரை அடிச்சு உலையில போடுகிறவன் எல்லாரும் அதி தீவிரமா இயக்கத்துக்குச் சப்போட் பண்ணுவாங்கள். அப்பதான் தங்கடை குட்டுக்கள் வெளிய தெரிய வராது எண்டு அவங்களுக்கு நல்லாய் தெரியும். மற்றது தலை தலையில போடும் எண்டதால தான் உந்தக் கிறிமினல்கள் எல்லாம் உத்தமராய் நடிக்கிறாங்கள். தலை ஒரு நாளைக்கு இல்லை எண்டா உது எல்லாம் எப்பிடிப் போகும் எண்டு இருந்து பாருங்கோ. ஆனா... எனக்கு றூபனைத் தெரியும். அவனுக்கு விசுவாசம் இருக்குது. மாதரில நிறையவே மரியாதை வைச்சிருக்கிறவன். உம்மோடை முஸ்பாத்தி விட வேணும் எண்டுதான் இப்ப இப்பிடிக் கதைக்கிறான்." என்றான் சிவா.

"சிவா சொல்லுகிறது எல்லாம் சரி எண்டு நான் நினைக்க இல்லை. ஆனா... இயக்கத்துக்குச் சப்போட் பண்ணுகிறவன், இயக்கத்தில இருக்கிறவன் எல்லாரும் முற்போக்குவாதியள் எண்டு இல்லை. அப்பிடிக் காட்டிக் கொள்ளுகிற வேஷதாரிகள் தான் அதிகம்." என்றார் "TS".

"முதல்ல இயக்கம் முற்போக்கான இயக்கமாய் இருக்க வேணும். கொலை செய்து தமிழீழம் எடுக்கலாம் எண்ட கொள்கையில இயங்குகிற இயக்கத்திற்கு வலதுசாரி என்ன இடதுசாரி என்ன? வன்முறை வாழ்வு தரும் என்கின்ற புதிய இசம் இது." என்றான் அருள்.

"நாங்கள் வேறை எதையாவது கதைப்பமா? தமிழர் எண்டா இயக்கத்தையும் நாட்டு அரசியலையும் பற்றி மட்டும் தான் கதைக்க வேணுமா? உலகத்தில கதைக்க எத்தினை விஷயம் இருக்குது?" என்றாள் சுந்தரி.

"ஈழத் தமிழற்ற உயிர் மூச்சுத் தமிழும் அதைத் தக்க வைக்கிறதுக்கான போராட்டமும்தான். நாங்கள் அதைப் பற்றித்தானே கதைக்க முடியும்? எங்கடை அடையாளம், இருப்பு எல்லாம் அதைச் சுற்றி இருக்குது. அதுதான் நாங்கள் அதைப் பற்றியே எப்பவும் சிந்திக்கிறம். தமிழை ஒரு மொழியா மட்டும் எடுத்துக் கொண்டு, வந்தே மாதரம் என்கின்ற கோசத்திற்குப் பின்பு முள்ளந்தண்டு அற்று ஒளிந்து கொண்டு, நாங்கள் முதலில் காந்தி தேசத்துப் புத்திரர்கள், அதுக்குப் பிறகுதான் எங்களுக்குத் தமிழ் எண்டு அவை சொல்லுகிற மாதிரிச் சொல்லுகிற வசதி எங்களுக்கு இல்லை. அப்பிடிப்பட்ட வசதி ஈழத்தமிழருக்கு ஒரு போதும் தேவை இல்லை. அது வசதியா அல்லது

எங்கடை இனத்திற்கும், மொழிக்கும் ஏற்பட்ட சாபமா எண்டுகிறதை வரலாறு சொல்ல வேணும். நாங்கள் உயிரோடை இருக்கும் வரைக்கும் தமிழுக்கும், அதை அடைகாக்கிற ஈழத்திற்குமான போராட்டம் பற்றி எப்பவும் கதைப்பம். அப்பிடிக் கதைக்காட்டி அப்ப நாங்கள் உயிரோடை திரிகிற பிணங்கள் எண்டு அர்த்தம் ஆகீடும். நாங்கள் இன்னும் உயிரோடைதான் இருக்கிறம் அம்மா. உணர்வோடும் தான் இருக்கிறம். அப்ப அதைப் பற்றியும் கதைக்கத்தான் செய்வம். அது எங்கள் சுவாசம்." என்றார் "TS".

"சொறி அண்ணை... நான் அந்த அர்த்தத்தில சொல்ல இல்லை. அரசியல் கதைச்சுப் பிரச்சனை ஏதும் வந்திடக் கூடாதே எண்டுகிற ஆதங்கத்தில சொன்னனான்." என்றாள் சுந்தரி.

"ம்... நியாயம் தான். சம்பாசனையைச் சம்பாசனையா எடுத்துக் கொள்ளாமல் சபதங்களாய், கோபங்களாய், விரோதங்களாய் எடுத்துக் கொள்ளுகிறதைப் பார்த்தாப் பயமாகத்தான் இருக்கும். பிறகு கதைக்க மனம் வராது. அப்படி சின்னத்தனமா ஒருத்தன் நடந்து கொள்ளுகிறான் என்றால் அவன் இப்பிடியான சம்பாசனையில பங்கு பெறாமல் இருக்கிறது பற்றிக் கவலைப்படத் தேவை இல்லை." என்றார் "TS".

"அது நூறு வீதம் உண்மை. சகிப்புத் தன்மை இல்லாத மனிதர்களோடை சகவாசம் இருந்தால் என்ன இல்லாட்டி என்ன? சகிப்புத் தன்மை இல்லாத மனிதன் கோவப்படுவான். அதால அவன் துஸ்ட்டன் ஆவது தவிர்க்க முடியாது. துஸ்ட்டனைக் கண்டாத் தூர விலகு எண்டுவினம் தானே? அப்பிடி நாங்களும் தூர விலக வேண்டியது தான்." என்றான் சிவா.

"அது சரி... இண்டைய திருவிழாவின்ரை நாயகன் சொல்ல வந்த செய்தி பற்றிக் கவலைப்படாமல் நாங்கள் ஏதோ கதைச்சுக் கொண்டு இருக்கிறம்." என்றான் றூபன்.

"ஓ சொறி... சொறி... ஏதோ சந்தோஷமான செய்தி எண்டு சொன்னீர். அது என்ன எண்டு இப்ப சொல்லும்?" என்றார் "TS".

"சியேஸ் சொல்லிப் போட்டுச் சொல்லுகிறன்." என்று கூறிவிட்டு மதுப் போத்தல்களையும் கண்ணாடிக்

குவளைகளையும் எடுத்து வந்து அவற்றில் மதுவை நிரப்பினான் அருள்.

"நீங்கள் தண்ணி அடிக்கப் போறியள். அப்ப எங்களுக்கு?" என்றாள் மலர்.

"விருப்பம் எண்டா எடுத்து அடிக்கிறது தானே? சும்மா கேட்பியள் தந்தாக் குடிக்க மாட்டியள்." என்றான் சிவா.

"சிவா அண்ணை நல்லாக் கொப்பில ஏத்துவார்." என்றாள் சுந்தரி.

கண்ணாடிக் குவளைகளைக் கையில் எடுத்துப் பின்பு ஒன்றோடு ஒன்று முட்டிச் சியேஸ் என்றார்கள். மீண்டும் "TS" ஞாபகம் வந்தவராய்,

"அது என்ன புதினம் அருள்? எனக்கு விளங்கின மாதிரியும் இருக்குது விளங்காத மாதிரியும் இருக்குது." என்றார் "TS".

"என்ன எண்டு சொல்லுங்க பார்ப்பம்?" என்றான் அருள்.

"சொரூபாவிலதான் எனக்கு ஐமிச்சம். முகமெல்லாம் எலுமிச்சம் பழம் ஆட்டம் வெளிறிப் போச்சுது. விஷேசம் ஆக்கும்? என்ன?" என்ற வண்ணம் அருளைப் பார்த்தார்.

"நீங்கள் அனுபவஸ்தர் எண்டதுக்கு இதைவிட வேறை ஆதாரம் வேணுமே? அதுதான் சங்கதி. நாங்கள் சந்தோஷமாய் இருக்கிற நேரம் இது. அதை உங்களோடை பகிர்ந்து கொள்ளுவம் எண்டு நினைச்சன்." என்றான் அருள்.

"அதுதான் அண்ணா அக்காவில நோகக் கூடாது எண்டு சாப்பாடு ஓடர் குடுத்து எடுத்தவர்." என்றாள் சுந்தரி.

"நீ பிழையா விளங்கீட்டாய் சுந்தரி." என்றாள் மலர்.

"ஏன்?"

"அக்காவிலை இல்லை. பிள்ளையில நோகாமல் எண்டு சொல்லு. லேசாய் யாரும் சொல்லுகிறதை நம்பீடாத. நம்பினால் கவுண்டு போயிடுவாய்." என்றாள் மலர்.

"இந்த மாதர் மாநாடுகளை எல்லாம் நிப்பாட்ட வேணும். இப்பிடியே விட்டா நாங்கள்தான் நொஸ்குகள் மாதிரிக் கரண்டி பிடிக்க வேண்டி வரும்." என்றான் ஹூபன்.

"ஏன் ஒரு நாளைக்கு இரண்டு நாளைக்கு அதைச் செய்தாக் குறைஞ்சு போயிடுவியளே?" என்றாள் புவனலோசினி.

"ஏற்கனவே ஒரு நாளைக்கு இரண்டு நாளைக்கு எண்டு செய்கிறம் தானே? போற போக்கைப் பார்த்தா அதுவே எங்கடை நிரந்தர வேலையாய் போயிடும் போல இருக்குது. சீ நாட்டுப் பிரச்சனை எப்ப முடியும் எண்டு தெரிய இல்லை. நாட்டுக்குக் கூட்டிக் கொண்டு போனாத்தான் மனிசர் நிம்மதியாய் இருக்கலாம்." என்றான் றூபன்.

"நீ பிழை விட்டிட்டா றூபன். சிங்கப்பூர் சிங்காரி உனக்காகச் சிலோனுக்கு வாறம் எண்டுகிறாவோ? சிலோன் பெட்டை எண்டாலும் பருவாய் இல்லை. அதைவிட நாட்டுப் பிரச்சனை தீர்ந்து நீ நாட்டுக்குப் போய்... நடக்கிற கதையாக் கதையன் றூபன்." என்றான் அருள்.

"ஒரு மன ஆறுதலுக்கு எண்டாலும் சொல்ல விடுகிறியள் இல்லை நீங்கள். நான் கொஞ்சம் அவசரப் பட்டிட்டன் எண்டு இப்பதான் தெரியுது." என்றான் றூபன்.

"என்ன தான் கதைச்சாலும் அவருக்கு அவ வேணும். அவவுக்கும் அவர் வேணும். பிறகேன் உந்த விழல் கதையளை. நேரம் போக்காட்டுகிறதுக்கு இப்பிடி ஒரு கதையா?" என்ற வண்ணம் சொரூபா கட்லெட், வடை, பற்றீஸ் ஆகியவற்றைச் சூடாகக் கொண்டு வந்து மேசையில் வைத்தாள். சுந்தரி பால் தேநீர் எடுத்து வந்து பெண்களுக்குக் கொடுத்துத் தானும் எடுத்துக் கொண்டாள்.

"கதைக்கிறதைப் பொறுமையாக் கேட்டு அவதானமாகப் பதில் சொல்ல வேணும். விவாதம் பிரதிவாதம் எண்டுகிறது சண்டை பிடிக்கிறதுக்கு இல்லை. மற்றவையோடை அறிவைப் பகிர்ந்து கொள்ளுகிறதுக்கும் புரிந்து கொள்ளுகிறதுக்குமான களம். சரியான ஒரு தர்க்கத்தைப் பெருந்தன்மையோடு ஏற்றுக் கொள்ள வேணும். நாங்கள் சில வேளை என்ன செய்கிறம் எண்டா மற்றவைக்குக் கேந்தி வருகிற மாதிரிக் கதைச்சு அறிவுக்குப் பதிலாக பகையை வளர்க்கிறம். தயவு செய்து நாங்கள் எப்பவும் எதையும் கதைக்கக் கூடியதா இருக்க வேணும் எண்டா, நாங்கள் அதை முதல்ல விளங்கிக் கொள்ள வேணும். இல்லாட்டி நாங்கள் வாயத் திறந்தாலே பெண்டுகள்

நடுங்கத் தொடங்கீடுவினம். அப்பிடி இருந்தா இந்த மாதிரியான நட்பு நிலைக்காமல் போயிடும்." என்றார் "TS".

""TS" அண்ணை பயப்பிடாதேங்க. மிச்சமா இப்ப எங்களோடை இருக்கிறவை அப்பிடி நினைக்க மாட்டினம். பகிடி வெற்றி எங்களுக்கு நல்லா விளங்கும்." என்றான் சண்முகன்.

"என்ன சண்முகா இண்டைக்கு அடக்கி வாசிக்கிறாய்?" என்றார் "TS".

"இன்னொரு கடை வந்து இருக்குது. அதையும் எடுப்பமோ எண்டு ஒரு யோசினை. அதையும் எடுத்தா பிறகு விட்டு விலக ஏலாது. இவங்களுக்குக் குடுத்தும் கட்டுபடி ஆகாது. காசை மட்டும் உழைக்கிற இயந்திர வாழ்க்கையா இருக்கும். மற்றது எல்லாம் மிஸ் ஆகிப் போயிடும் எண்டு ஒரு யோசினையாய் இருக்குது." என்றான் சண்முகன்.

"உண்மை சண்முகா. உயிர் வாழ்கிறதுக்கு அளவுக்கு மீறிச் சம்பாதிக்க வேணும் எண்டுகிற அவசியம் இல்லை. இப்ப என்ரை அம்மா அப்பாவைப் பாரு... எவ்வளவு பரம்பரைச் சொத்து இருந்திச்சுது. ஊரில பெரிய பணக்காரரா இருந்தவை. அவை போன பிறகு இப்ப நாங்கள் எங்க இருக்கிறம்? எப்பிடி வேலை செய்கிறம்? அவையின்ரை பணம் எங்களோடை வந்திச்சா? அவை படிப்பிச்சு விட்டது ஏதோ நாலு விஷயத்தை அலச உதவுது. இல்லாட்டி அவையின்ரை நினைவா இருக்கிறது அப்பாவின்ரை பெயர்தான். அம்மா பாவம்... அவவுக்கு அந்தக் கொடுப்பினையும் இல்லை. எதுவும் எங்களோடை நிரந்தரமா வரப் போகிறது இல்லை. எப்பவாவது எங்கடை பெயரைப் பார்க்கேக்க ஓ இப்பிடி ஒருத்தர் இருந்தார். அவர்தான் எங்டை மூலம் எண்டு நினைப்பினம் ஆக்கும். அப்ப அவைக்கு நாங்கள் எத்தினை வேலை செய்தம், எப்பிடிக் காசு சம்பாதிச்சம் எண்டு எல்லாம் தெரிய வராது. அதைப் பற்றிய அக்கறையும் இருக்காது. இருக்கிற போது எங்கடை வாழ்க்கையை எப்பிடிச் சிறப்பா அனுபவிக்கிறமோ அதுதான் எங்கடை உலக அனுபவம் ஆகும். அதுவும் அதுக்குப் பிறகு வருமோ தெரியாது. இப்ப வேலை வேலை எண்டு பறந்துபோட்டு வயதான பிறகு கவலைப்படுகிறதில எந்தப் பிரயோசனமும் இல்லை. இதே மாதிரி உன்ரை வாழ்க்கையையும் அனுபவிச்சுக்

கொண்டு ஆட்களை வைச்சு நடத்த முடியும் எண்டா கடையை எடு. இல்லாட்டி யோசிச்சுச் செய். காசு மாத்திரம் வாழ்க்கை இல்லை. இண்டைக்குச் செத்தா நாளைக்குப் பால்தான். அதில எந்த மாற்றமும் யாருக்கும் இருக்கப் போகிறது இல்லை. என்னதான் நீ அதிபதியாய் இருந்தாலும் பாலை ஊத்தி வாய்க்கு அரிசியைத்தான் போட முடியும்." என்றார் "TS".

"உண்மைதான் "TS" அண்ணை. ஆனால் காசு இருந்தாலும் நிறைய விஷயம் செய்யலாம் எண்ட ஒரு உண்மையும் இருக்குது. காசேதான் கடவுளப்பா எண்ட பாட்டு இப்பவும் எல்லாற்றை காதுக்கையும் ஒலிக்கும். எல்லாத்திற்கும் இரண்டு பக்கம் உண்டு. என்ன தான் கடவுளா இருந்தாலும் நிச்சயம் காசு எங்களோடு அடுத்த உலகு இருந்தால் அந்த உலகிற்கும் வரப் போகிறது இல்லை. அந்த வாழ்க்கையைப் பற்றிப் பெரிசா யாரும் கதைக்கவும் மாட்டினம். அது இந்த உலகில் இருக்கும் காலத்திலேயே கேள்வி ஆகலாம். நாங்கள் இல்லாத போதும் எங்கள் இருப்புப் பற்றிக் கதைக்க வைக்க முடிந்தால் அவர்கள் வாழ்ந்ததற்கான அர்த்தம், அடிச்சுவடு பல ஆண்டுகள், அல்லது சில நூற்றாண்டுகள், அதையும் மிஞ்சினால் இந்த உலகம் அழியும்வரை இருக்கலாம். அது கோடியில ஒருத்தருக்குக் கிடைக்குமோ தெரியாது. அது தான் மனித வாழ்வின் இலட்சியமா? அதற்குத்தான் இந்த உலகில் பிறந்து மடிகிறோமா?

பெரும்பான்மை மனிதர்களாகிய நாங்கள் ஒரு வகையில் பாரதி சொன்ன மாதிரி அற்பப் பதர்களா? அதற்குள் எங்களுக்கு எத்தனையோ அவதி எண்டுகிற உண்மையும் எனக்கு விளங்குது." என்றான் சண்முகன்.

"பணம் என்னடா பணம் பணம் குணம் தானடா நிரந்தரம்... எண்டும் ஒரு கவிஞன் சொல்லி இருக்கிறான். பணமோ, தோற்றமோ மனிதனின் நிலைக்கும் விம்பம் ஆகாது. அது அவன் குணத்தால் உருவாக்கப் படுகிறது. அந்த விம்பங்களில் அனேகமானவை காடு போவதோடு அழிந்து போய்விடும். கோடியில் ஒன்றாய் அந்த மனிதனும் மறக்கப்பட்டுவிடுவான். ஆயிரத்தில் ஒன்றாய் அழியா நினைவைச் சிலர் தான் விட்டுச் செல்கிறார்கள். அது எங்களால் முடியலாம் அல்லது முடியாமலும் போகலாம். ஆனால் இருக்கும் வாழ்வைப் பிரயோசனமாய்,

அமைதியாய், இன்பமாய் கழிக்க வேண்டும்." என்றான் அருள் சுத்தத் தமிழில்.

"உந்தப் பணம் இல்லை எண்டு தானே நாங்கள் அடிமையா வேலை செய்ய வேண்டி இருந்தது. சொந்தமாக் காணி இருந்தா நாங்களும் முன்னேறி இருப்பம் தானே?" என்றான் சண்முகன்.

"உண்மைதான். அதுக்காகப் பணம் இருந்தால் போல வெள்ளாளர் கோவிய வீட்டைச் சம்பந்தம் பேச வரப் போகிறது இல்லை. கரையார் பள்ளரிட்டை பெண் எடுக்கப் போகிறதும் இல்லை. காதல் எண்டு... சிந்திக்காமல் ஓடி மொக்கயீனப் படுகிற சில இளசுகளைத் தவிர சாதி என்கிற வெறி தரும் அடையாளம் சீனச் சுவராய்த்தான் எழுந்து நிற்கும். அதை யாராலும் அசைக்க முடியாது. அசைக்கிறதாய் கொடுக்குக் கட்டிக் கூத்தாடுகிறவை அதுக்கு எதிர்மாறான வேலை செய்கினம். எத்தினையோ போராட்டங்கள், அதை முன்னுக்கு நின்று நடத்தின உண்மையான மனிதர்கள் காலத்தோடை வந்து போயிட்டினம். ஆனால்... அது மட்டும் சீனச்சுவராய் நிலைச்சு நிற்குது. அதுக்குக் காரணம் எல்லாச் சாதிக்காரனும் தான் எண்டு சொல்லலாம். ஏன் எண்டால் தங்கடை சாதி ஏதாவது ஒரு சாதியைவிடப் பெரிசு எண்டுகிற மனப்பான்மை எல்லாச் சாதிக்கும் இருக்குது. ஏன் தாழ்ந்த சாதியா இருந்தாலும் தங்கடை சாதிதான் பெரிசு எண்டு நினைக்கிற மனிதர்கள் நிறையவே இருக்கினம். சிறுமை ஆக்கப் படுவதைப் பெருமையாக நினைச்சா சிறுமை தீருமோ? அதுதான் வாய் கிழியப் பேசினாலும், சமபந்தி புல்டா வாழையடி வாழையாகத் தொடருது." என்றான் சிவா.

"சிவா நீ திடீரெண்டு வேறை திசைக்குப் போயிட்டாய். பாகுபாடு பார்க்காத மனித இனமே இல்லை. இங்க வெள்ளை, கறுப்பு. அங்க சாதி. மனித மிருகம் மற்றைய மனித மிருகத்திட்டை இருக்கிற பலவீனத்தைக் காட்டி, இல்லாவிட்டால் பலவீனம் இருப்பதாய்க் காட்டி, மேலாண்மை பண்ணித் தன்னுடைய சுயநலத்தைக் காப்பாற்றிக் கொள்ளப் பார்க்கிறது. அதுக்காகவே இந்தப் பிரிவினைகளை கடவுளின் பெயரால் படைத்துக் காலாகாலமாய் காப்பாற்றி வருகிறது. அது இப்போது இரத்தத்தோடு ஊறின வெறியாக, விஷமாக, பரம்பரை

பரம்பரையாகக் கடந்து போகுது. மாற்ற வேணும் எண்டு நினைக்கிறதும், போராடுகிறதும் எங்கடை கையிலதான் இருக்குது. ஆனா... அது மாற்றம் அடைகிறதா என்பது கருணை வேண்டிக் காலத்தின் கையில்தான் இருக்கிறது." என்றார் "TS".

"குழப்பீட்டிங்கள். எண்டாலும் உண்மை அண்ணை. மற்றைய மனிதர்களின் பலவீனத்தைப் பயன்படுத்தி முன்னேற நினைக்கும் சகமனிதர்கள்... அரசியல்வாதிகள்... அதுக்கு இங்கயே உதாரணமா சில கட்சிகள் இருக்குது எண்டது உங்களுக்குத் தெரியும். பல சனம் அதை எதிர்க்கலாம். சில சனங்கள் அவங்களுக்கு முட்டை எறியலாம். மாற்று மனிதர்களைப் பார்த்து உண்டாகும் பயத்தில் வரும் வெறுப்பில் இங்கும் வாக்கு விளைச்சல் நடக்கத் தொடங்கி விட்டது என்பதே உண்மை. அவர்கள் வெளிநாட்டுக்காரருக்கு எதிராய் பேசி வாக்குச் சம்பாதிக்க இப்பவே தொடங்கி விட்டார்கள். ஆசியா, ஆபிரிக்காவில இருந்து வருபவர்கள் அனைவரும் சோம்பேறிகள், கள்ளர்கள், கொலைகாரர்கள், சட்டத்தை மதிக்காத காட்டு வாசிகள் என்று அவர்கள் சித்தரிக்கிறார்கள். தங்களது வாக்குச் சம்பாதிப்பின் போது, மனிதாபிமானம் காட்டாமல், பெரும்பான்மையின் சுயநலத்தைத் தூண்டும் வகையாகப் பிரச்சாரம் செய்து வாக்கு வேட்டை நடத்துகிறார்கள். எவ்வளவு மனிதர்கள் இரக்கமானவர்களாக இருக்கிறார்கள்? தம் சொத்தையே கொடையாகக் கொடுக்கிறார்கள்? அதற்கு நேர் எதிராக எவ்வளவு மனிதர்கள் சுய நலமிகளாக இருக்கிறார்கள்? இல்லாத பிரச்சனையை இருப்பதாக ஊதிப் பெருப்பிக்கிறார்கள். உலகம் எங்கும் இப்படித் தான் இருக்கும். அநியாயங்களுக்கு எதிராகச் சட்டங்கள் உருவாக்கப்படும். சட்டங்கள் மதிக்கப்படாத நாட்டில் அவை ஏடுகளில் மட்டுமே வாழும். இங்கு சட்டங்கள் தன் கடமையைச் செய்யும். வன்முறை வெறியர்களாக மாறி இவர்கள் தாக்கிய வரலாறு இல்லை. காலப் போக்கில் அப்படி மாறாதிருக்க வேண்டும். நாஜிக்கள் யூதர்களுக்குப் புகட்டியதை மேற்கு ஐரோப்பிய நாடுகள் வந்தேறு குடிகளுக்குப் புகட்டக்கூடாது. அப்படி நடக்காது என்கின்ற நம்பிக்கையிலேயே இப்போது எங்கள் வாழ்க்கை இங்கு கட்டி எழுப்பப்படுகிறது. அப்படி நடந்துவிடுமோ என்கின்ற ஐயத்தை அவர்களது பேச்சு உருவாக்குகிறது." என்றான் சிவா.

"சிவா நீ ஒரு நடமாடும் பல்கலைக்கழகம். சாப்பாடு வந்திட்டுது. நாங்கள் சாப்பிட எழும்புவமே?" என்றான் அருள்.

"வாசம் மூக்கைத் துளைக்குது... நீ சொல்லாட்டியும் நாங்கள் எழும்பி இருப்பம்." என்றான் றூபன்.

அலைபேசி அழைப்பு ஒன்று வந்தது. அருள் எடுத்துக் கதைத்தான். திரும்பி வந்து சாப்பாட்டு மேசையில் இருக்கும் போது,

"தாமோதரன் அண்ணை. யார் யார் வந்திருக்கினமாம்?".

"ம்... அரசியல்..." என்று விட்டுச் சிவா ஆட்டுக் கறியை ருசித்துச் சாப்பிட்டான்.

# 14 இடியாக வந்த செய்தி

பிரபஞ்சம் என்பது எவ்வளவு விஸ்தீரணமானது என்பதை யார் அறிவார்? அது மனிதக் கற்பனைகளைக் கடந்து நிற்கிறது. அந்தப் பிரபஞ்சத்தில் எத்தனை கலக்சிகள் இருக்கின்றன என்று யாருக்கும் தெரியுமா? ஒரு கலக்சியில் எத்தனை சூரியக் குடும்பங்கள் இருக்கும் என்று அறிவார்களா? கற்பனைக்கும் எட்டாத இந்தப் பிரபஞ்சத்தில் நாம் எங்கிருந்து வந்தோம்? இல்லை இந்தப் பூமியில் இயற்கையாகத் தோன்றினோமா? அப்படி என்றால் இந்தப் பூமியில் எப்படித் தோன்றினோம்? பிரம்மா படைத்தானா? அமீனோ அமிலங்கள் அவன் பாதத்தில் இருந்து ஊற்றாக இறங்கியதா? ஈரேழு உலகம் என்பது பதினான்கு உலகமா? அல்லது பதினான்கு விதமான மோட்சங்களா? அல்லது கலக்சிகளா? பிரபஞ்சத்தில் பதினான்கு என்பது? அறிவியல் காட்டித் தரும் இன்றைய பிரபஞ்சத்திற்கும் ஆண்டவர்கள் படைத்ததாகக் கூறப்பட்ட அன்றைய பிரபஞ்சத்திற்கும் ஏதாவது தொடர்பு உண்டா? மேலுலகம், கீழுலகம் என்று நாம் இருப்பதைவிடக் கடவுளிடம் மேலும் இரண்டு பிரபஞ்சங்கள் உண்டா? பிரமனின் அல்லது இயற்கையின் வித்தான டார்வின்சியா? எங்களைச் சூழ உள்ள கோள்கள் பற்றி முன்னோர் எப்படி அறிந்தார்கள்? அதன் அசைவில் காலத்தை கணிக்க எப்படிக் கற்றார்கள்? வேதத்தை இயம்பிய இறைவனின் கிருபையா? கணிப்புக்கு ஏற்ப பருவகாலங்கள், நாட்கள், நேரங்கள், முகூர்த்தங்கள் மாறி மாறி வந்தன. வருகின்றன. இனியும் வரும். மாறாத அந்த உண்மையைக் கண்ட அவர்கள் மார்க்கம் பொய்யாகுமா?

கோடை முற்றிக் குளிர் வெடித்திற்று. குருவிகளும், பறவைகளும் பறந்து தெற்கு நோக்கிச் சூடு தேடிப் போயிற்று. உறை குளிர் தாக்கும் அந்தக் கணங்களில், நாட்டில் இருந்து ஈட்டிகளாகச் செய்திகள் கொடூரமாகக் காதில் பாய்கின்றன.

யுத்தம் என்பது மனித இனம் பிரசவித்தது தொடக்கம் மிருக குணம் மாறாததால் தொடரும் கொடூரமான நர வேட்டை. அடித்துத்தின் அல்லது அழிந்துபோ என்பதான இயற்கையின் படைப்பு. தன்னை மேன்மையானவன் என்கின்ற மனிதனால் அந்த இயற்கையின் விதியை மீற

முடிந்ததா? கடவுளும் வேட்டையாடியதான புராணங்கள். மிருகம் மிருகத்தை வேட்டையாடுவது உணவிற்கு மட்டுமே. சில மிருகங்களைத் தவிர அந்தக் கொலையை எவ்வளவு சீக்கிரம் சித்திரவதை இல்லாது செய்ய முடியுமோ அவ்வளவு சீக்கிரம் அவை முடித்துவிடும். கொல்லுதல் அதற்குச் சுகமல்ல. தவிர்க்க முடியாத வாழ்வாதாரத் தேவை. கொன்ற பின்பு அது உணவாகும். உணவாகும் என்பதற்காகவே அது கொல்கிறது. கொன்றால் பாவம் தின்றால் தீரும் என்பதைப் பயிலும் ஐந்து அறிவு மிருகங்கள். அதைவிட்டால் சந்ததி பரப்பும் வேட்கையில் சில கொலைகள் நடப்பதும் உண்டு. உணவிற்கு இல்லாது மற்றைய நோக்கத்திற்காய் சித்திரவதை செய்து கொலை செய்யும் இரண்டு கால் நோய் பிடித்த மிருகம் மனிதன் மட்டுமே. ஆறறிவு படைத்த மிருகத்திலும் கீழான குணமுடைய மனிதன், மிருகத்தைவிட அசிங்கமானவன்? தோன்றியது தொடக்கம் மாறாது தொடர்ந்து வரும் அவன் இரத்த வெறி. அங்கே குழந்தைகள், பெண்கள் என்கின்ற பரிவு கிடையாது. கொலை செய்யப்படாத பெண்ணைப் பாலியல் அடிமையாகக் கொண்டு செல்லும் கொடூரக் குணம் மனிதன் என்னும் விலங்கிற்கு மட்டும்தான் உண்டு.

பெற்றவர்கள் சிதறிச் சாவதைப், பிள்ளை சிதறிச் சாவதை, உற்றவன் சிதறிச் சாவதை, உடையவள் சிதறிச் சாவதை, சகோதரம் சிதறிச் சாவதை, உறவினர் சிதறிச் சாவதை, நண்பர்கள் சிதறிச் சாவதை, தெரிந்தவன் சிதறிச் சாவதை, சிதறிய பிண்டமும் இரத்தமும் முகத்தில் அள்ளி கொத்தாக வீசப்பட்டதை, குண்டு பட்ட மூளை சிதறிக் கூழாய் கிடப்பதை, ஊசியாக ஏறிய சன்னம் பூதமாக உடலைப் பிளந்து பெரும் துளையாக வெளியே வந்ததை, அதையும் பொருட்படுத்தாமல் உயிருக்காகப் பிணத்தின் மேல் விழுந்து கிடந்ததை, அதன் இரத்த வெடுக்கில் உழன்றதை, தெருவில் தேடப்படாமல் கிடக்கும் பிணத்தைப் பசியில் நாய் தின்னுவதைக் கண்டும் எதுவும் செய்ய முடியாது சென்றதை, யோனியில் குண்டு வைத்துச் சாதனை படைத்த பௌத்த புத்திரர்களைக் கண்டு என்ன செய்வது என்று அறியாது மருட்சி கொண்டதை, குழந்தைகளைக் கோழிகளாகத் தொங்கவிட்ட கொடூரத்தைப் பார்த்ததை, பிறப்பு வாசலைப் பித்தோடு சிதைத்த கொடூரத்தை, இரத்த வாடையும், பிண வாடையும் என்றும் அகலாத் தேசத்தில் விதியே என்று வாழ்வதை, குண்டு துளைத்தலோ, பிண்டம் சிதறுதலோ,

தம் முடிவு என்பது தெரிந்தும் அது எப்போது வரும் என்பது தெரியாது நாட்களை எண்ணும் சித்திர வதையின் தொடர் கதைப் பாத்திரமாக, தரை, கடல், வானம் என்று சாவுக்கான பாசக்கயிறு எப்போதும் தொங்கும் யுத்தம் என்கின்ற நித்தக் கொலைக்களமான ஒரு தேசத்தில் வாழும் உறவுகளின் நினைவுகளில் இன்னொரு தேசத்தில் வாழும் அவர்களின் உறவுகள்.

சிவா சரத்தோடும் வெண்ணியனோடும் இருந்தான். சிவாவை அகதி முகாமில் பார்த்ததிற்குப் பின்பு இப்போதுதான் "TS" சரத்தோடு அவனைப் பார்க்கிறார். சவரம் செய்யப்படாது கறுத்தக் கரடி நிறத்தில் முகம். "TS"சிற்குச் சவரம் செய்யாது விட்டால் பூஞ்சணம் பிடித்தது போல வெள்ளையாக நரை தெரியும். சிவாவிற்கு அப்படி வெள்ளை தெரியவில்லை. தாடி இன்னும் கரு கருவென்றே இளமை மாறாது இருந்தது. றூபனும் மலரும் வந்திருந்தார்கள். சிவாவிற்கு என்ன சொல்வது என்கின்ற அவஸ்தை அவர்களிடம். யுத்தம் என்பது கொடூரமாக நித்தம் உயிர்களைக் காவு கொள்கிறது. யார் உயிர் எப்போது காவு கொள்ளப்படும் என்கின்ற விடை கிடைக்காத இயமனின் புதிர் போல அது ஈழத்தில்.

தாய், தகப்பன் ஆகிய இருவரதும் சட்டத்திற்குள் மாட்டப்பட்ட கலியாணப் புகைப்படத்தை அலுமாரிக்குள் வைத்து, அதன் முன்பு சிறு விளக்கு ஏற்றி இருந்தது. வாய் ஓயாது கதைக்கும் சிவா இன்று வசனங்களை எட்டிப் பிடிக்க முடியாது ஊமையாகத் தவித்தான். மனோ வாங்க என்றாள். கதிரை ஒன்றில் முதலில் போய் இருந்தாள். பின்பு எழுந்து அடுக்களைக்குச் சென்றாள். மலரும், புவனலோசினியும் எழுந்து சமையல் அறைக்குச் சென்றனர். "TS" சிவாவின் கையைப் பிடித்தார். சிவா ஒருமுறை குலுங்கிக் குலுங்கி அழுதான். கையில் வைத்திருந்த கடதாசியால் கண்களையும் மூக்கையும் துடைத்தான்.

"கவலைப்படாத சிவா. நாங்கள் என்ன செய்ய முடியும்? விதி எண்ட ஒண்டு இருக்குது தானே? அது முடிஞ்சா யார் காப்பாத்த முடியும்? யார் தப்ப முடியும் சொல்லு பார்ப்பம்? கவலைப்படாத எண்டு சொல்லுகிறது சுலபம். கவலையா இருக்குது எண்டிட்டு குந்தி இருந்தும் என்ன பிரயோசனம்?" என்றார் "TS".

"இரண்டு மூண்டு நாளைக்கு தண்ணியை அடிச்சுக் கொண்டு உலக நினைப்பே இல்லாமல் இருக்கோணும் எண்ட மாதிரி இருக்குது?" என்றான் சிவா.

"வாங்கி வரவோ?" என்று கேட்டான் ரூபன்.

"வேண்டாம். நினைப்பை மறக்க வேணும். ஆனா... இப்ப என்னால குடிக்கக்கூட ஏலாது. சா எல்லாருக்கும் வரும். சிதறிச் சாகிற மாதிரி விட்டிட்டனே எண்டுகிறதே தாங்க முடியாத மனவருத்தம். அநியாயமாய் இப்பிடியாப் போச்சுது. தாங்கள் நல்ல சுகமாய் இருக்கினம் எண்டு போன கிழமையும் கடிதம் வந்திச்சுது. வீட்டிலையும் நடக்கேல்லை. போன இடத்தில செல் விழுந்து இருக்குது. உருப்படியா ஆட்களை எடுக்கக்கூட இல்லையாம். கிடைச்சதைப் பொறுக்கி அண்ணர் உடனேயே கொண்டு போய் எரிச்சுப் போட்டார். அப்பா அம்மாவுக்கு எப்பிடிச் செய்திருக்க வேணும்? சாவைக் கொண்டாடுகிறதுக்கு ஒரு முறை இருக்குது. அதுக்கு ஒரு கிரியை இருக்குது. அதுவே என் கடமையும். அப்பிடித் தான் முறையா நடந்து இருக்க வேணும். அதையே அவையும் எதிர் பார்த்து இருப்பினம். எதுவுமே செய்ய ஏலாமல் போச்சுது. ஐயோ..." சிவா மீண்டும் குலுங்கிக் குலுங்கி அழுதான். "TS" அவனது முதுகைத் தடவினார். சதையே இல்லாது சிதறிச் சாகும் கொடுமை. அனுபவித்தவருக்கு மட்டுமே விளங்கும் துயரம். தமிழர்கள் என்கின்ற குற்றத்திற்காய் சிதருண்டு சாகும் தீராத கொடூரம்.

சிறிது நேரத்தில் சொரூபன், சுந்தரி, சண்முகன், சக்தி, நிமலன், தாமோதரன், மாலினி ஆகியோரும் வந்து சேர்ந்தார்கள். சுந்தரி கொண்டு வந்த பைக்குள் இருந்து சாப்பாட்டு வாசம் வந்தது. அதைப் பற்றித் தாங்கள் நினைக்க இல்லையே என்கின்ற ஒரு குற்ற உணர்வு "TS"சின் பிடரியில் தட்டி விட்டுச் சென்றது. எல்லோரும் ஒரே நேரத்தில் கொண்டு வந்து கொடுக்காது சிவாவைக் கேட்ட பின்பு கொண்டு வந்து கொடுத்தால் சாப்பாடு வீண் ஆகாது என்று அவர் சமாதானம் ஆனார். தாமோதரனுக்குச் சிவா மீது காய்ச்சல். ஒரே சாதியாக இருந்தும் ஒற்றுமை இல்லாது காட்டிக் கொடுப்பதான கடுமையான காய்ச்சல். செத்த வீடு என்றால் அந்தப் பாகுபாடு எல்லாம் பார்ப்பது இல்லை. அத்தினை பிரச்சனைகளையும் தற்காலிகமாகத் தள்ளி வைத்துவிட்டு ஆறுதல் சொல்வது கடைமை என்பது தாமோதரனின் ஏன்

தமிழர்களின் பண்பாடு என்று சொல்லலாம். தாமோதரன் அந்தப் பண்பாடு கருதி என்பதைவிட மாலினியின் கட்டாயத்திற்கு சா வீட்டிற்கு வந்திருந்தார். அவர் சோபாவில் இருந்த போது முள்ளில் இருப்பதான அவஸ்தை அவருக்கு. விரைவில் காய் வெட்டிவிட்டுப் போக வேண்டும் என்கின்ற தவிப்பு அவருக்கு. தாமோதரன் "Motorola MicroTAC" என்கின்ற அலைபேசி வாங்கி வைத்து இருந்தார். அது நொக்கியாவின் அரைவாசியே இருக்கும். கதைக்கும் போது ஒலி வாங்கியை நீட்டி விடக்கூடிய வசதியும், அன்ரனாவை இழுத்து விடும் வசதியும் அதில் இருந்தது. நொக்கியாவைவிட அது பலமடங்கு முன்னேற்றமான தொழில்நுட்பத்துடன் தயாரிக்கப்பட்டு இருக்கிறது. நொக்கியாவும் அப்படியான புதிய அலைபேசியை அறிமுகப்படுத்தி போட்டிக்குத் தயாராகிவிட்டது. வருங்காலத்தில் உள்ளங் கைக்குள் பொத்தக்கூடிய அளவிற்கு அலைபேசி வந்துவிடும் என்று "TS"சிற்குத் தோன்றியது.

தாமோதரன் தனது அலைபேசியை மடக்குவதும் நிமிர்த்துவதுமாக அங்கு இருக்க முடியாது அவதிப்பட்டார். அவரின் அவதி "TS"சிற்கு நன்கு விளங்கியது. "TS"சோடு தாமோதரனுக்கு எந்தப் பிரச்சனையும் இல்லாவிட்டாலும் "TS" சிவா போன்றவர்களோடு முன்பு போல உறவைப் பேணுவது அவருக்குச் சற்றும் பிடிக்கவில்லை. துரோகிகளோடு ஏன் இந்த ஒட்டு என்பது அவருடைய கேள்வி ஆகியது. கேள்வி மனதில் தோன்றினாலும் நேரே கேட்டுவிட முடியாது. அப்படிக் கேட்டு அவர் மொக்கையீனப்படுவதற்கு விரும்பவில்லை.

இந்தச் சாவீட்டிற்கு வருவதா அல்லது விடுவதா என்கின்ற இழுபறி தாமோதரனிடம் இருந்தது. மாலினி கட்டாயம் போக வேண்டும் என்றுவிட்டாள். எல்லாவற்றிற்கும் அவளை வெருட்ட முடியாது என்பது இப்போது தாமோதரனுக்கு விளங்கி இருந்தது. மாலினி வேலை செய்யத் தொடங்கிய பின்பு தாமோதரனைவிட தெளிவாக, அழகாக, விளக்கத்தோடு நொஸ்க் கதைக்கிறாள். அவள் கதைப்பதைப் பார்க்கும் போது தாமோதரனுக்கே பொறாமையாக இருக்கும். நொஸ்கைத் திறமையாகக் கதைப்பதோடு இந்த நாட்டில் என்ன செய்யலாம், என்ன செய்யக் கூடாது என்பது பற்றியும் மிகவும் விரிவாகச் சொல்கிறாள். சேர்ந்து வராவிட்டால் தான் தனித்துப் போகிறேன் என்று அவள் புறப்பட்டு விடுவாள் என்கின்ற

பயத்தில் தாமோதரன் இழுபாட்டைக் கைவிட்டு இந்தப் பயணத்திற்கு ஒப்புக் கொண்டார். அத்தோடு சாவீட்டிற்கு வராவிட்டால் நிச்சயம் அது ஒரு விடையமாகப் பார்க்கப்படும் என்பதும் அவருக்கு விளங்கியது. சரி என்று வெளிக்கிட்டு வந்தாலும் ஏனோ அவரால் பொறுமையாக இங்கு இருக்க முடியவில்லை. எப்போது இங்கிருந்து போக முடியும் என்கின்ற அவஸ்தையோடு தனது அலைபேசியை நோண்டினார். அவரின் மனநிலையை "TS"சால் ஓரளவு ஊகிக்க முடிந்தது. அந்த இறுக்கத்தைத் தளர்த்த வேண்டும் என்று அவர் எண்ணினார்.

"பாவம் சிவா. எதிர்பார்க்காத இழப்பு." என்றார் "TS". கதைப்பதால் அங்கிருக்கும் இறுக்கம் சிறிது கலையும் என்று அவர் எண்ணினார்.

"ஓ அந்தப் பக்கம் நெடுகத்தான் செல் அடிக்கிறவங்கள். அவங்களுக்கு யார் எண்டாலும் தமிழர் செத்தாச் சரி தானே? என்ன செய்கிறது எல்லாம் விதி. இப்பிடி அநியாயமாகச் சாகிறதிலும் நாட்டுக்குப் பிரயோசனமாய் சாகிற மாதிரி ஏதாவது செய்ய வேணும்." என்றார் தாமோதரன்.

"அப்படி எண்டாச் சீனியர் சிற்றிசன்களுக்கும் குண்டை இடுப்பில கட்டிக் குதிக்க விட வேண்டியதுதான். இவர் இங்க சோக்காப் பிள்ளையளைக் காலில மண் படாமல் காரில ஸ்கூலுக்குக் கூட்டிக் கொண்டு போய் திரும்பக் கூட்டிக் கொண்டு வருவார். என்ன பெரிய மனது பார். ஏன் இவை வெட்டேக்கையும் சிங்களவன் செத்தால் சரி எண்டுதானே வெட்டுகிறவை. கதைக்க வந்திட்டார். இது செத்தவீடா இருக்குது" என்பதாகச் சொரூபன் மனதிற்குள் எண்ணிக் கொண்டான். இது துக்கம் விசாரிக்க வந்த இடம் என்பதை அவன் ஞாபகத்தில் வைத்துக் கொண்டான்.

"என்னதான் விதி எண்டு சொன்னாலும் அவையவைக்குத் தானே வேதனைத் தெரியும். என்ன செய்கிறது சிவா?" என்றார் "TS".

"கவலைப்பட்டு என்ன செய்கிறது? சிங்களவன் அங்க இருக்கும் மட்டும் தமிழரை இப்பிடித் தான் கொல்லுவான்." என்றார் தாமோதரன்.

"இவை மாத்திரம் திறமாக்கும்?" என்று அருள் எண்ணினான். இவரின் இந்தக் கதையை இடை வெட்டி வேறு திசையில் அதை மாற்ற வேண்டும் என்று அவன் எண்ணினான். என்ன கதைப்பது என்று அவனுக்கு முதலில் விளங்கவில்லை. இந்த ஆள் சிவாவை வெறுப்பேற்றுவது போலக் கதைப்பதற்குப் பதிலாக வேறு எதுவும் கதைக்கலாம் என்று அவனுக்குத் தோன்றியது.

""TS" அண்ணை இப்ப ஒஸ்லோவில அடிபாடு குறைஞ்சிட்டுது எண்டதைக் கவனிச்சியளே? துவக்கத்தில நடந்த மாதிரிக் கொட்டன் சண்டையும் கத்திச் சண்டையும் ஓய்ஞ்சு போச்சுது. எப்ப எண்டாலும் இருந்திட்டு ஒண்டு இரண்டு குழப்ப வேலை செய்யுதுகள்." என்றான் அருள்.

"ஓம்... எங்களை மாதிரி முதல் வச்சில வந்த நிறைய ஆட்கள் இப்ப சோடி தேடியிட்டினம் தானே? பெம்பிளையள் வந்த பிறகு அவைக்கு உதுக்கு எல்லாம் நேரம் எங்க இருக்குது? அதால இப்ப சண்டைக்கு எங்க நேரம்? கதைக்கவே நேரம் இல்லாமல் கங்காரு குட்டியோடை அவசரமாக ஓடுகிற மாதிரி ஓடுகிறாங்கள். இனிக் கட்டி வந்த அன்புக் காதலிகளைச் சொகுசாக வைச்சிருக்க இரண்டு வேலைக்கு வேறை ஓட வேணும். அப்ப களிமண் தரையிக்க புதைஞ்ச கலப்பையை இழுக்க முக்குகிற எருதுகளாட்டம் அவைக்குத் தங்கடை அலுவலைப் பார்க்கவே நேரம் இல்லை. அதால நாட்டில பிரச்சனையும் இல்லை. ஆனால் அம்மாமார்றை சீலைத் தலைப்பைப் பிடிச்சுக் கொண்டு தவ்வல்களா நோர்வேக்கு வந்ததுகளுக்கு இப்ப மீசை முளைச்சிட்டுது. அதுகளுக்குத்தான் உடம்புக்குள்ள கோர்மோன் குத்தி முறிய விறைப்பா உரசத் திரியுதுகள்." என்றான் அருள்.

"அருள் நீர் சொல்லத்தான் ஞாபகம் வருகுதுங்கோ. என்ரை பெடியள் எங்க நிக்கிறாங்களோ தெரியாதுங்கோ. நாங்கள் கெதியா வீட்டை போக வேணும். அவங்கள் இப்ப தங்கடை ஸ்ரத்திற்கு வெளியால போகிறாங்கள். இங்க வேறை அவங்களோடை பிரச்சனைப்படவும் ஏலாதுங்கோ. சிவாவுக்கும் நாங்கள் போனாத்தான் அமைதியா இருக்கும். நான் இருந்து குழப்பிக் கொண்டு இருக்கிறது சரியில்லையுங்கோ." என்றார் தாமோதரன்.

அருளிற்கு இந்தத் தந்திரம் பற்றி விளங்கியது. தாமோதரனின் மகன் நரேஸ் சோமாலியாப் பெண் ஒருத்திக்குப் பின்னால் அலையச் சோமாலியா

இளைஞர்கள் ஒரு நாள் சுற்றி வளைத்து அவனை மொத்தியதோடு அவளையும் வெருட்டியதால் அந்தப் பக்கம் இப்போது அவன் திரும்பிப் பார்ப்பது இல்லை. அதற்குப் பதிலாக இப்போது மீண்டும் அவன் வியட்நாம் பெண் ஒருத்தியின் பின் அலைகிறான். அவளின் சோம்பேறித் தகப்பனால் அவளுக்குச் சகோதரங்கள் இல்லை. அத்தால் தனிக்காட்டு இராஜாவாக மேய்ந்து திரிவது அருளுக்குத் தெரியும். தாமோதரன் சொல்லிக் கொள்வது போல இவர் வீட்டிற்குச் சென்றாலோ அல்லது இங்கிருந்து அலைபேசியில் தொடர்பு கொண்டாலோ அவர்கள் கேட்கப் போவது இல்லை. அவர்கள் தாங்கள் விரும்பிய நேரமே கட்டைக்கு வருவார்கள்.

"அவதிப்படாதேங்க அண்ணை... நீங்கள் சொல்லி இப்ப அவங்கள் வரப்போகிறாங்களே? வாற நேரம்தானே வருவாங்கள்?" என்றான் அருள் தாமோதரனைப் பார்த்து.

"என்ன சொல்லுறீங்க அருள். என்ரை பெடியள் நான் கூப்பிட்டா இப்ப வந்து காலுக்க நிற்பாங்கள். நான்தான் அவங்களை அதிகம் கட்டுப்படுத்த விரும்புகிறது இல்லை. அப்படி இங்க செய்யவும் கூடாது தானேங்கோ." என்றார் தாமோதரன். அவருக்கு விட்டுக் கொடுக்க மனம் இல்லை. ஆனால் அவரது மகன்களைப் பற்றிய புதினம் ஊர் முழுவதும் அடிபடும் விஷயம் என்பது அவருக்கு விளங்கவில்லையே என்று அருளுக்குப் பரிதாபமாயும், பரிகாசமாயும் இருந்தது. பிள்ளைகள் செய்யும் திருகுதாளங்கள் பெற்றோருக்கு எப்போதும் கடைசியாகவே தெரிய வரும் என்பது சரியாக இருப்பதாக அவன் எண்ணிக் கொண்டான்.

"அவதிப்படாதேங்க தாமோதரன் அண்ணை. கொஞ்ச நேரம் சிவாவோடை இருந்திட்டுப் போவம். சிங்கப்பூரில, இந்தியாவிலை எல்லாம் கலியாண அலுவல்கள் வியாபாரம் மாதிரி. காசைக் குடுத்தா அலுவல் நடக்கும். காசைத்தான் பார்த்தும் பாராமலும் குடுக்க வேணும். ஐரோப்பாவில இருந்து கலியாணம் செய்ய விருவினம். அவைக்குக் கொஞ்சம் பப்படாக் காட்டினாத் தாராளமாய் காசை இளக்குவினம் எண்டது அவங்களுக்குத் தெரியும். இங்க இருந்து போறவைக்கும் அங்க போய் அலைய மனம் வாறேல்லை. அதைவிடக் காசை இளக்கிப்போட்டு வந்திடுவினம். காசு இல்லாட்டியும் கடன் அட்டை தயாராகத் தானே இருக்குது. எல்லாம் முடிச்சுப்போட்டு

வந்து அந்தக் கடனை எண்ணி இரண்டு வேலைக்கு ஓடுவினம். தேவதைகள் இங்க வந்த பிறகுதான் அது தேவதைகளா பிசாசுகளா எண்டு தெரியும். பிறகு தெரிஞ்சுதான் என்ன செய்கிறது? குடும்பம் நடத்த வேண்டியது தவிர்க்க முடியாத ஒண்டு." என்றான் றூபன் ஏதோ ஒரு எண்ணத்தோடு.

"ஓ இவர் பெரிய மன்மதக் குஞ்சு. இவருக்கு நாங்கள் இப்ப பிசாசுகளாய் தெரிகிறம் ஆக்கும்?" என்றாள் மலர் கோபமாக.

"மலர் நான் உன்னைச் சொல்லுவனா? நீ எப்பவும் என்னுடைய தேவதை தான். அதுவும் சிங்கப்பூர் சிங்காரத் தேவதை அல்லவோ?" என்றான் றூபன்.

"காது இங்க தான்." என்றான் அருள்.

"அப்பிடி ஒரு கொடுப்பினை உந்த ஜீவன்களுக்கு." என்றான் சொரூபன்.

இவர்கள் இருந்து கதைத்துக் கொண்டு இருக்கும் போது நிமலன் அங்கு வந்தான். தாடி மீசை சுத்தமாகச் சவரம் செய்து, தலை முடியும் கட்டையாக வெட்டிக் காவல்காரன் போல நின்றான். ஆடையிலும் இப்போது வித்தியாசம் இருந்தது. டெனிம் அணிந்து இருந்தாலும் மேலே நீலமும் வெள்ளையுமான வரிக் கோடுகள் போடப்பட்ட மேற்சட்டை அணிந்து இருந்தான். அலரியையும் மல்லிகையையும் குழைத்துப் பூசிய வாசம் அவனிடம் இருந்து வந்தது. சிவாவின் அருகில் சென்று அவனது கைகளைப் பிடித்து,

"உங்களுக்கு நான் ஆறுதல் சொல்ல முடியாது. ஆனா... நாங்கள் கவலைப்பட்டு இனி எதுவும் மாறப் போகிறதில்லை எண்டதும் உண்மை. மனதை தேத்திக் கொள்ளுங்க. நடந்ததை இனி யாராலும் றிவேஸ் பண்ண முடியாது எண்டது உங்களுக்கு விளங்கும்." என்றான் நிமலன்.

"நான் என்னடா இனிச் செய்ய முடியும்?" சிவா மீண்டும் கண் கலங்கினான். சாவின் துயரம் உறவை இழந்தவனுக்கே தெரியும் என்பதாக அவன் விழிகளில் இருந்து பளிங்குத் திரவம் உருண்டு புவியீர்ப்புக்குக் கட்டுப்பட்டு கன்னத்தில் வழிய அவன் அதைத் துடைத்துக் கொண்டான். அழுவது அவனுக்குச் சங்கடமாயும் கூச்சமாயும் இருந்தாலும் அதை அவனாற்

கட்டுப்படுத்த முடியவில்லை. சாவீட்டிலும் ஆண்கள் அழுவது இல்லை என்பதாக எமது இறுக்கம். அழுதால் அது நிஜ அழுகையாக இருக்கும். பெண்களுக்குப் விளங்கிய பிரம வித்தைகளில் முக்கியமானது அழுகை ஆகும். ஆளைக் கண்டவுடன் கண்ணீர் வரும் அற்புதம் அவர்களுக்கே உரிய வித்தை. அதைவிட அழுகை வந்த அடுத்த கணமே அது தொலைந்து ஊர்ப் புதினம் சகஜமாய் மெல்லப்படும் விசித்திரமும் அவர்களிடம் உண்டு. அவர்கள் துக்கப்படுவது தனி விதம். வருத்தம் என்று படுக்கையில் கிடந்து செத்தால் இந்தக் கவலை சிவாவுக்கு இருந்து இருக்காது. அவர்கள் சா அவர்களுக்குக் கிடைத்த விடுதலையாக எண்ணத் தோன்றி இருக்கலாம். இது வாழும் வேட்கையோடு, பேரன் பேத்தி பார்க்கும் ஆசையோடு ஓடித் திரிந்த மனிதர்கள். சரி செத்தாலும் பருவாய் இல்லை. சிதறிச் செத்ததை அவனால் தாங்கிக் கொள்ளவே முடியவில்லை. விதிதான். விதி என்றாலும் வேதனைத் தவிர்க்க முடியாத நிஜமே.

"ஆட்சி மாறின மாதிரி நிமலனும் மாறிப் போய் வந்து இருக்கிறான்." என்றார் "TS".

"சீ இந்தப் பழம் புளிக்கும் எண்டுகிற நரியின்ரை ஞானம் இவனுக்குக் கிடைச்சிருக்காம். அது தான் உந்த மாற்றம். உங்கடை வளர்ப்புப் பிள்ளைதானே? எல்லாம் சொல்லி இருப்பானே?" என்றான் அருள்.

"தோழுக்கு மிஞ்சினாத் தோழனாம். நிமலன் இனிச் சொல்லுகிறதும் சொல்லாமல் விடுகிறதும் அவன்ரை விருப்பம். எண்டாலும் தன்ரை கஸ்ரத்தை வந்து அவன் என்னிட்டைச் சொல்லாமல் விட்டது இல்லை." என்றார் "TS".

"நீங்கள் அம்மா கதைக்கிற மாதிரிக் கதைக்கிறீங்கள்." என்றான் சொரூபன்.

"அவ ஒரு மருத்துவர். மேதை. விவேகமான அரசியல்வாதி. அவ கதைக்கிறதோடை எல்லாம் கொண்டு போய் எங்களை ஒப்பிடுகிறதா?" என்று "TS" கேட்டார்.

"அம்மா வந்தால் அகதிகளா வாறவைக்குக் கொஞ்சம் பிரச்சனை குறையுமுங்கோ." என்றார் தாமோதரன். அவர் அலைபேசியை நோண்டும் காரியத்தை ஆர்வத்தோடு தொடர்ந்தார்.

"யார் சொன்னது? அம்மா நினைச்சாலும் காலிகாகன் எதிராகக் கதைக்க எப்பிடியும் அம்மா அதைச் சமாளிக்க எங்களுக்கு எதிரான நடவடிக்கை எடுக்கத்தான் பார்ப்பா. அவ அரசியல் மேதை. அரசியல் தோல்வி வராமல் காப்பாற்றிக் கொள்ளுகிறதிலை எப்பவும் கெட்டித்தனமாய் இருப்பா. எண்டாலும் வலதுசாரியளவிட இடதுசாரியள் எங்களுக்குச் சமதர்ம நோக்கால அதிகமா கருணை காட்டுவினம் எண்டதும் உண்மையே." என்றான் சொரூபன்.

"ஏதோ... தவிச்சு வருகிற மனிசரைத் திருப்பிக் கொலைக் களத்திற்கு அனுப்பாட்டி நல்லது தான். அங்க திரும்பிப் போனா அவங்கள் நாலாம் மாடிக்குக் கொண்டு போய் சித்திரவதை செய்வாங்கள். எங்களுக்கு நேரமாகுதுங்கோ." என்றார் தாமோதரன் மீண்டும்.

"என்ன டேற்றிங் போறத்துக்கு நேரமாகுதோ?" என்று அருளிற்குக் கேட்க வேண்டும் போல் இருந்தது. தாமோதரனுக்கு டேற்றிங் என்றால் என்ன என்று விளங்குமா என்பது தெரியவில்லை. ஆனால் மாலினிக்கு நன்கு தெரிந்து இருக்க வாய்ப்பு இருக்கிறது. தாமோதரன் தீவிரவாதியாக ஒரு பக்கம் சாய்ந்தாலும் மாலினி சமாளித்து இழுத்து வருபவள். அவளைக் குழப்புவது போல் தான் கதைப்பது சரி இல்லை என்பது அருளுக்குத் தெரியும். அருள் தனது அந்த எண்ணத்திற்குச் சொற்கள் கொடுக்காது,

"இதைவிட நாட்டுப் பிரச்சனையை எப்பிடி எண்டாலும் தீர்த்து வைச்சாச் சனம் ஒரு இடமும் அகதிகளா அலையத் தேவை இல்லை." என்றான்.

"ஆருங்கோ வேண்டாம் எண்டுகிறது. அது சிங்களவங்கள் அதுக்கு ஒரு நாளும் இணங்க மாட்டாங்களுங்கோ." என்றார் தாமோதரன்.

அருள் சிரித்தான். சிங்களவர்களைவிட எங்களவர்கள் தான் இன்னும் ஆபத்தானவர்கள் என்று அவனுக்குத் தோன்றியது. அன்னையிடம் ஆயுதம் வாங்கி மகனையே போட்டுத் தள்ளும் ஈனப்புத்தி யாருக்கு வந்திருக்கும் என்று கேட்க வேண்டும் போல் இருந்தது அருளிற்கு. அதைக் கேட்க முடியாது. அப்படிப் பேச முடியாது. பேசினால் அது பெரும் பூகம்பம் ஆகும். இந்தியன் இராணுவத்திடம் ஆயுதத்தைக் கொடுத்துவிட்டு ஒதுங்கி இருந்திருந்தால் பிரேமதாசாவும் இந்தியாவும் ஒரு யுத்தம் நடத்தி

இருப்பார்கள். இலவசமாக எங்களுக்குக் கூடுதல் உரிமைகள் கிடைத்து இருக்கும். இந்திய மேலாதிக்கம் எங்களை மடக்கி வைத்து இருந்தாலும் இவ்வளவு உயிர் இழப்போ அல்லது யுத்தமோ நடக்க வேண்டிய அவசியம் தொடர்ந்தும் இருந்து இருக்காது. சரி புலிகள் சொல்வது போல் அடித்துப் பிடித்தாலும் ஒரு நாட்டைக் காலாகாலமாய் பாதுகாக்கும் வலு இந்தியாவை மீறி எங்களுக்கு இல்லை என்பது சிறு பிள்ளைக்குக்கூடத் தெரியும். தெரிந்து இருந்தும் இரத்தம் ஆறாக ஓட எதற்காக இந்த யுத்தம் நடக்கிறது? யாரின் நன்மைக்காக இது நடக்கிறது? அருளிற்குக் கோபமாக இருந்தது. சிவா இன்று அநாதை ஆகவில்லை. அனாதை ஆக்கப்பட்டான். வங்குரோத்துத் தமிழீழ அரசியல் அவனைக் கொள்ளிகூடப் போட முடியாத அனாதை ஆக்கி இருக்கிறது. அருளின் கட்டுப்பாட்டை மீறி அவனிடம் இருந்து பெருமூச்சு ஒன்று வந்தது.

"என்ன அருள் உந்தப் பெருமூச்சு?" என்றார் அவன் மனதின் எரிமலை புரியாத "TS".

"நடக்கிறதைப் பார்த்துப் பெருமூச்சுத் தான் விடலாம். அதைவிட நாங்கள் என்ன செய்ய முடியும் சொல்லுங்கோ அண்ணை?" என்றான் அருள்.

"மாலினி வெளிக்கிடுவமுங்கோ. அவங்கள் வீட்டை வந்து இருப்பாங்கள்." என்றார் தாமோதரன் மீண்டும்.

"சரி சிவா. நாங்கள் போட்டு வாறம். கவலைப்படாதையும். கவலைப்பட்டும் ஒண்டும் செய்ய ஏலாது. இவருக்கு வேறை வெளியால வெளிக்கிட்டாத்தான் புத்திரர்களைப் பற்றின நினைப்பு அதிகமாக வரும்." என்றாள் மாலினி. அவளுக்குத் தாமோதரன் இடையில் கூப்பிட்டது பிடிக்கவில்லை என்பதை "TS"சால் விளங்கிக் கொள்ள முடிந்தது. வழமையாக இருந்திருந்தால் சிவா இதற்கு நிறையக் கருத்துச் சொல்லி இருப்பான். இன்று அவனுக்குக் கதைக்கவே விருப்பம் இருக்கவில்லை. சிவாவின் தகப்பன் கடத்தல் வேலையே செய்து வந்தார். அப்போது பலாலிக்கும் திருச்சிக்கும் இடையில் விமானம் பறந்தது. அதில் போவது வருவது அவர் தொழில். போகும் போது ஒரு பகுதி பொருட்கள் கொண்டு போவார். வரும் போது இன்னொரு பகுதி பொருட்களோடு இங்கு வருவார். கொழும்பில் காசைக் கொடுத்துவிட்டு வந்தால்

சென்னையில் உள்ள மண்ணடியில் அதை வாங்கும் தொடர்பு அவருக்கு இருந்தது. இதைவிடக் கள்ளத் தோணி மூலம் செய்தால் பெரிய அளவில் சம்பாதிக்க முடியும் என்பது தெரிந்தாலும் அதை அவர் ஒரு போதும் விரும்பியது இல்லை. சில வேளைகளில் அவர் சிங்கப்பூர் போய் வருவதும் உண்டு. மற்றவர்கள் கொண்டு வரும் பொருட்களை விற்றுக் கொடுப்பதற்கும் உதவி செய்வார். அதற்கான தரகுப் பணம் அவருக்குக் கிடைக்கும். அனேகருக்குச் சிவாவின் அப்பாவைத் தெரியும். தட்டுப்பாடாய் இருக்கும் வெளிநாட்டுச் சாமான்கள், இந்தியச் சாமான்கள் தேவைப்படும் போது தொடர்பு கொள்வார்கள். கள்ளத் தோணிச் சாமான்களையோ அல்லது அவர்கள் கொண்டு வருவதையோ அவர் வாங்குவது இல்லை. அது தன்னைச் சிக்கலில் மாட்டிவிடும் என்பதில் அவர் மிகவும் கவனமாக இருந்தார்.

சிவாவின் அப்பாவின் வியாபாரம் பெரிய அளவில் இல்லாவிட்டாலும் சிவாவின் குடும்பத்திற்குப் பொருளாதாரக் கஸ்ரம் இருந்தது இல்லை. யுத்தம் நடக்கும் போதே யாழ்ப்பாணம் கொழும்பு போய் வந்திருக்கிறார். அப்படிப் போய் வரும் போது வெள்ளைச் சதுர மூட்டைகள் நான்கு ஐந்தாவது கொண்டு வந்துவிடுவார். கடை என்று ஒரு இடம் கிடையாது. தெரிந்தவர்கள் தேடி வந்து வீட்டில் வாங்கிச் செல்வார்கள். சிவா சம்பாதிக்க தொடங்கிய பின்பு ஆபத்தை எதிர்கொண்டு அப்படிப் பயணிக்க வேண்டாம் என்று சொல்லி விட்டான். தான் செலவுக்குப் பணம் அனுப்புவதாய் கூறிப் பணம் அனுப்பினான். கொழும்பிற்குப் போகாவிட்டாலும் ஊருக்குள் நடத்திய வியாபாரத்தை அவர் விடவில்லை. அது தொடர்ந்து நடந்தது. சிவாவும் அதைப் பற்றி ஆட்சேபிக்கவில்லை. அதுவும் செய்யாவிட்டால் தான் உயிர் வாழ்வதற்கு என்ன அர்த்தம் என்கின்ற நினைப்பு அவரிடம் உண்டாகி விடுமோ என்கின்ற பயம் அவனிடம் இருந்தது. அன்றும் யாரோ வெளிநாடு சென்று வந்ததாய் கேள்விப்பட்டுப் பொருட்கள் வாங்கச் சென்றார்களாம். அங்குதான் விதியும் அவர்கள் உயிரை வாங்கக் காத்து இருந்து இருக்கிறது.

தாமோதரன் போன பின்பு சுதந்திரமாய் கதைக்கும் மனநிலை அருளுக்கு வந்தது.

"என்ன நிமலன் புது மாப்பிள்ளை மாதிரி வந்திருக்கிறாய்?" என்றான் அருள். நிமலன் அதைக் கேட்டு முதலில் வெட்கப்பட்டான். அதைப் பார்த்த சிவா,

"அருள் நீ கேட்டதிலை ஏதோ உண்மை இருக்குது போல... இல்லாட்டி நிமலன் உந்த நெளி நெளிய மாட்டான்." என்றான் தன் கவலையை மறந்து.

"சிவா அண்ணை சொல்லுகிறது உண்மை. எனக்குக் கலியாணம் முற்றாகீட்டுது எண்டு போன் பண்ணிச்சினம். ஏதோ சீதனத்தில இழுபாடாம். அதால நாள் எடுத்தது. எப்பிடி எண்டாலும் நானும் தனிய இருக்க வேணும் எண்ட எந்தக் கட்டாயமும் இல்லைத் தானே?" என்றான் அவன் தொடர்ந்து.

"ஏன்ரா சீதனம் வேண்டாம் எண்டு சொல்லாதையன்?" என்றான் அருள்.

"அண்ணை நீங்கள் வேண்டாமலா செய்தியள்? எல்லாரும் சீதனம் வேண்டுகினம். அதிலை எந்த வேறுபாடும் கிடையாது. நானும் சீதனம் வேண்டாமல் கலியாணம் செய்தால் நல்லா இருக்கும் எண்டு ஊருக்கு எழுதினன். சீதனம் வேண்டாட்டி மாப்பிள்ளை நொண்டி அல்லது குருடு மாதிரி ஏதோ குறை இருக்கிறதால தான் அதை மறைக்கச் சீதனம் வேண்டாமல் விடுகினம் எண்டு கதைப்பினமாம். தாங்கள் அதை எல்லாம் பார்க்கிறம் எண்டு என்னை இந்தியா வந்தால் சரி எண்டாச்சுது." என்றான் நிமலன்.

"எண்டாலும் நிமலன் அதிஸ்ரக்காரன்." என்றான் சண்முகன்.

"சும்மாய் இருங்க அண்ணை. அனுபவிச்சாத் பிரிவின்ரை வேதனை தெரியும். வாழ வேணும் எண்ட கற்பனையும் வெறியும் செத்துப் போயிடும். இப்ப வாழ வேணும் எண்ட மனிதத் தேவை மட்டும்தான் இருக்குது. இது எல்லாம் சொல்ல இயலாது அண்ணை... அனுபவிச்சால் தெரியும் அந்த வேதனை" என்றான் நிமலன்.

"எனக்கு அனுபவிக்க விருப்பம். இவள் சக்தி விடமாட்டாள். ம்... என்ன செய்கிறது?"

துக்கம் விசாரிக்க வந்ததையும் மறந்து எல்லோரும் சத்தம் இல்லாது சிரித்தார்கள். சிவாவிற்கும் சிரிப்பு வந்து விட்டது.

"எல்லாம் நினைப்புத்தான்... காளியைச் சிலை ஆகத்தான் கோயில்ல பார்த்து இருப்பியள். பத்திரகாளியை உயிரோடை வீட்டுக்க பார்த்து இருக்கிறியளே? பார்த்திருக்க மாட்டியள். பார்க்க வேணும் எண்டும் நினைக்காதேங்கோ. பார்த்தாத் தாங்க மாட்டியள்." என்றாள் சக்தி கண்ணை உருட்டிய வண்ணம்.

"சக்தி நான் சும்மா பகிடிக்குச் சொன்னனான் ராசாத்தி..." என்று சண்முகன் கெஞ்சினான்.

"ஏற்கனவே என்னைக் குறை சொல்லுகிறியள். அதுக்க இப்பிடியும் கதைச்சா மனுசர் ரென்சனாகாமல் என்ன செய்வினம்?" என்றாள் சக்தி.

"சண்முகன் உன்னை என்ன குறை சொல்லுகிறவர் சக்தி?" என்றார் "TS".

"ச்... அதை விடுங்க அண்ணை..." என்றாள் அவள். அவள் அதை ஏனோ சொல்ல விரும்பவில்லை.

"ஒண்டும் இல்லை... பிள்ளை இல்லை எண்டு நான் பகிடியாச் சொல்லிப் போட்டன் எண்டு சக்திக்குக் கவலை. நான் குறையாச் சொல்ல இல்லை. செக் பண்ணுவம் எண்டுதான் சொன்னனான். செக் பண்ணிப் பார்த்தம். இவவுக்குக் கரு வெளியாகிறதிலை பிரச்சனை இருக்காம். பிள்ளை வேணும் எண்டா வெளியாலை கருவை எடுத்துக் குழந்தையை உருவாக்கி பிறகு கற்பப் பையில வைக்கலாம் எண்டு சொல்லுறாங்கள். அதுக்கு இன்னும் ஒரு வருசம் வெயிற் பண்ணி பார்க்கச் சொல்லி இருக்கிறாங்கள்." என்றான் சண்முகன்.

"உது எல்லாம் ஒரு பிரச்சனை இல்லை. கொஞ்ச நாளைக்கு வெயிற் பண்ணிப் பாருங்க. இல்லாட்டி உதவி செய்வாங்கள் தானே?. இல்லாட்டி இந்தியா போய் ஐவிஎப் செய்யுங்க..." என்றார் "TS".

"ஓம்... அது செய்வாங்கள். நான் தான் சக்தியின்ரை மனசை விளங்கிக் கொள்ளாமல் பகிடி விடுகிறன் போல இருக்குது. இந்த அளவுக்கு இவளின்ரை மனதை அது

வாட்டுது எண்டு எனக்குத் தெரியாது?" என்றான் சண்முகன்.

"சக்தி இப்ப மனுசனுக்குப் பிரச்சனை விளங்கீட்டுது. இனி உம்மை மகாராணி போல வைச்சுதுத் தாங்குவார்." என்றான் அருள்.

"அதுக்கு எங்க நேரம் இருக்குது இவருக்கு? கடை, கடை எண்டு அலையவே நேரம் சரியா இருக்குது." என்றாள் சக்தி.

"அளவுக்கு மிஞ்சிக் காசை மட்டும் சம்பாதிக்க ஆசைப்பட்டாலோ இல்லாட்டி வரவுக்கு மிஞ்சிச் செலவு செய்து பழக்கப்பட்டாலோ வாழ்க்கையில அமைதி இல்லாமல் போயிடும். அந்த அமைதி வேணும் எண்டா அறிஞ்சு நிதானமாச் செயல்பட வேணும். எதுவும் அளவோடை இருந்தால் தான் எல்லாம் நல்லது. அதுதானே அளவுக்கு மிஞ்சினா அமுதமும் நஞ்சு எண்டுகினம். சண்முகனுக்கு இதெல்லாம் தெரியாதே?" என்றார் "TS".

"தெரியாமல் என்ன அண்ணை. ஆனா... வியாபாரம் எண்டா உடையவன் நிற்க வேணும். உடையவன் இல்லாட்டி ஒரு முழம் கட்டை எண்டுகிற மாதிரி அது ஒழுங்கா நடக்காது. சில விஷயங்களில விட்டுக் கொடுத்துத்தான் போக வேணும்." என்றான் சண்முகன்.

"விட்டுக் குடுத்துப் போகலாம்... வாழ்க்கையை விட்டு விலகிப் போகக் கூடாது." என்றான் சொரூபன்.

"பாருங்க... யார் யார் எல்லாம் தத்துவம் கதைக்கினம் எண்டு." என்றான் சண்முகன்.

"இப்ப இங்க துக்கம் விசாரிக்க வந்த நீங்களோ? இல்லாட்டி உங்கடை நலம் விசாரிக்க வந்த நீங்களோ?" என்றாள் புவனலோசினி.

"நெடுகத் துக்கம் விசாரிச்சா சிவாவுக்குப் பைத்தியம் தான் பிடிக்கும் அக்கா. அதுதான்... நாலு கதையும் கதைச்சா அவன்ரை மனசுக்க இருக்கிற கவலை குறையும் தானே?" என்றான் அருள்.

# 15 ஜனனம்

பிரபஞ்சத்தின் அசைவோடு அள்ளுப்பட்டுப் போகும் இந்தச் சூரியக் குடும்பத்தை வைத்து அசைவிற்குள் அசைவை வைத்து மனிதன் காலத்தைக் கணிக்கிறான் என்கின்ற உண்மை ஒரு புறம் இருக்க, அதனால் அவனுக்கு இறுமாப்பு எழ முடியாத வகையில் பூமியில் வாழும் தாவரங்களும், மிருகங்களும் ஐந்து அறிவோடு அழகாகக் காலத்தை உணர்ந்து தமது கடமையைச் செய்கின்றன என்பது மாறாத, மறுக்க முடியாத ஜதார்த்தம். குளிர் காலம் என்கின்ற கொடும் பிடி தளர்ந்துவிட வசந்த காலம் வாஞ்சையோடு தழுவும் வெறி கொண்டு எட்டிப் பார்க்க, நிர்வாண தியானம் கலைத்துப் பூமாதேவிக்குப் பச்சைப் பட்டு உடுத்தும் பரவச கோலம் தொடங்கிற்று. குளிர் கண்டு தெற்கே பறந்து சென்ற புள்ளினங்கள் ஆதவனின் கதிர்கள் கரமாகப் பட்ட துணிவில் வடக்கு நோக்கி வருகை தரும் காலத்தின் ஜாலம் பிரமிக்க வைக்கும். இனி இயற்கையின் புணர்தலும், அந்தப் புணர்தலில் உருவாகும் சந்ததிகளுக்குமான சாம்பிராச்சியமாகத் துருவ நாடுகள் மாறும். அதில் ஒன்றான நோர்வேயில் அத்தினை மாயாஜாலங்களும் நடந்தேறும்.

"TS"சிற்கு அந்தத் தொலைபேசி வந்ததில் இருந்து இருப்புக் கொள்ளவில்லை. உல்லவோல் மருத்துவமனைக்குப் போக வேண்டும். அந்த வைத்தியசாலையின் விஸ்தீரணத்திற்கு ஆரம்பக் காலத்தில் எங்கே போவது எப்படித் திரும்பி வருவது என்கின்ற தடுமாற்றம் இருந்தது. அது இப்போது பழகிய நகரமாகி விட்டது. முதலில் தோன்றும் பிரமிப்பு, கவர்ச்சி ஆகியவை பழகப்பழக சில வேளைகளில் இல்லாது போய் விடுகிறது. அது அசையும் அசையாப் பொருள் இரண்டிற்கும் பொருத்தமாகிறது. இன்னும் புவனலோசினி வரவில்லை. நான்கு மணிக்கு வேலையை முடித்துவிட்டு வருமாறு "TS" கூறி இருந்தார். ஐந்து மணிக்கு அங்கு நிற்க வேண்டும். மற்றவர்களும் தாங்கள் வைத்திய சாலைக்கு வருவார்கள் என்று கூறி இருந்தார்கள். மீண்டும் தொலைபேசியில் புவனலோசினியைத் தொடர்பு கொள்வதா என்று யோசித்தார். இன்னும் சற்றுப் பொறுத்து பார்ப்போம் என்று அந்த எண்ணத்தைப் பின்பு கைவிட்டார். சிறிது நேரத்தில் மீண்டும் பொறுமை கரைந்து போயிற்று. அலைபேசியை எடுத்தார். அவர் எடுத்த அலைபேசிக்கு

வேலைக் கொடுக்கும் முன்பு வெளிக் கதவு திறக்கும் சத்தம் கேட்டது.

"கெதியா எல்லே வரச் சொன்னனான்." என்றார் பொறுமை இழந்த குரலில்.

"ஓ வந்தாச்சுது... வந்தாச்சுது... நான் இப்ப வெளிக்கிட்டு வாறன்." என்று கூறிய புவனலோசினி நின்று மேற்கொண்டு கதை வளர்க்காது தங்கள் படுக்கை அறைக்குள் சென்றாள். "TS"சின் ஊமைச் சினம் அவளுக்கு நன்கு விளங்கியது. அதை ஊதி அணைப்பது என்றால் உடனடியாகப் புறப்பட்டு வர வேண்டும் என்பதும் அவளுக்கு நன்கு தெரியும். அவள் விரைவாகக் குளியல் அறைக்குள் சென்றாள். "TS" பொறுமை இல்லாது தொலைக்காட்சியின் அலைவரிசைகளை மாற்றிக் கொண்டு இருந்தார்.

இதற்கு என்று "TS" மருத்துவமனைக்குச் சென்று நிறையக் காலம் ஆகிவிட்டது. மத்தியகிழக்கில் வாழ்க்கை வேலையாகவே கழிந்து விட்டது. அது மனிதன் வாழ்வது வேலைக்கு என்பதான அவதாரம். பணத்திற்காக தங்களைத் தாங்களே விற்றுச் சேவகம் செய்யும் அடிமைத்தனம். இலங்கையின் பொருளாதாரமும், அரசியல் வங்குரோத்தும், ஊழல் அதிகாரிகளும் மக்களை அதற்குத் தூண்டுகின்றன. அடிமையாக வாழ்ந்தாலும் பணத்தை பெற்று வந்தால் போதும் என்று எண்ண வைக்கிறது. நல்ல மனிதர்களும் இருக்கிறார்கள். ஈவிரக்கம் இல்லாதவர்களும் இருக்கிறார்கள். ஈவிரக்கம் இல்லாதவர்களிடம் அகப்பட்டால் வாழ்வு சிறையாகலாம். சில வேளை அது கொலையில் முடியலாம்.

"TS" சின் அந்தப் பாலைவன வாழ்க்கை முடிந்து அகதி வாழ்க்கை தொடங்கியது. இங்கு அகதிகளாக வந்த இளையவர்கள் திருமணம் செய்வதற்கு, அவர்கள் தங்கள் மனைவியரை எடுப்பதற்கு என்று காலம் கரைந்து விட்டது. இப்போது புதிய காலம் கனிந்து இருக்கிறது. சொரூபா ஒரு தொடக்கம் தான். அவளைத் தொடர்ந்து தொடர் கதையாக நிறையவே காத்திருக்கின்றனர்.

"நான் றெடியப்பா. நாங்கள் வெளிக்கிடுவமே?" என்றாள் புவனலோசினி. "TS" தனது பார்வையை அவள் மீது செலுத்தினார். வேலை வேலை என்று அலைவதில் இடுப்பில் இருந்த தசை குறைந்து இருந்தது. இன்னும்

மேனியில் எங்கும் சுருக்கம் விழாத எண்ணை வழுவழுப்பிற்குக் குறைவில்லை. அவளது அந்த வழுவழுப்பான தேகத்தை பார்க்கும் போது மீண்டும் இளமையின் சரசத்திற்கு அவரை அது இழுத்துச் சென்றுவிடுகிறது. வந்த தொடக்கத்தில் அவள் பேய் அறைந்தது ஆகத்தான் இருந்தாள். காலம் அவளை நன்கு மாற்றி விட்டது. இப்போது அதன் சாயல்கள் தெரிவதில்லை. ஆழ்மனதில் இருப்பதை அறியும் வல்லமையும் அவருக்கு இருந்தது இல்லை. இருந்தும் அவள் மறந்து மாறிவிட்டாள் என்கின்ற நம்பிக்கை அவருக்கு இருக்கிறது.

அந்த மருத்துவமனை வளாகத்தில் எண்ணுக் கணக்கற்ற கட்டடங்கள். வெள்ளை, பச்சை, நீலம் என்பதான நிறத்தில் உடுப்பு அணிந்த மருத்துவர்கள், தாதிகள், மற்றும் பணியாளர்கள். சாதாரண உடுப்பு அணிந்த வெளியாட்கள், நோயாளிகளின் உடுப்பு அணிந்த நோயாளிகள் என்கின்ற கலவையில் எல்லாத் திசையிலும் மனித நடமாட்டம்.

மருத்துவமனைக்குச் சென்ற போது சிவாவும், மனோகரியும், சண்முகனும், சக்தியும் கிவி கடைக்குப் பக்கத்தில் இவர்களுக்காகக் காத்து நின்றனர். அது அந்த மருத்துவ வளாகத்திற்கு உள்ளே இருக்கும் கடை ஒன்று. மனோகரி வெளிறிப் போய் இருப்பதாக "TS"சிற்குத் தோன்றியது. அவள் "TS"சைப் பார்த்துச் சிரித்தாள். சிவாவும் பார்த்துச் சிரித்து விட்டு,

"அடுத்தது இவதான்." என்றான். பின்பு ஞாபகம் வந்தவன் போல,

"அயன் காணாதாம். ஒழுங்காச் சாப்பிடுகிறது இல்லை. கிளி கொறிக்கிற மாதிரிக் கொறிக்கிறது. நல்லாச் சாப்பிட்டுத் தயிரியமா இருந்தால்த்தானே எதையும் சமாளிக்கலாம். இது தலையாலதான் நடப்பன் எண்டுகிற கோஸ்ரி அண்ணை. அதைவிட ஊர் எண்டா எவ்வளவு உதவி இருக்கும். இங்க எங்கடை தலை உருழுது. என்ரை வேலைக்கும் இவவின்ரை தொண தொணப்புக்கும் சரிப்பட்டே வருகுது இல்லை." என்றான் சிவா.

"வேலைக்கு யாரும் போக வேண்டாம் எண்டு சொல்லுவினமே? உந்தக் குரன்லாண்டில நிண்டு யார்ற்றையும் வாயப் பார்த்துக் கொண்டு நிக்கேக்க மாத்திரம் வீட்டு நினைவு எல்லாம் மறந்து போயிடும்.

ரெலிபோன் எடுத்து வாங்க வாங்க எண்டாலும் வாறன் வாறன் எண்டிட்டு நிண்டு கதை நடக்கும். உங்களுக்குக் கதை சொல்லேக்க அப்பிடியே தனக்குச் சாதகமானதை மட்டும் சொல்லுகிறது. யாரைக் கதைக்க விட்டாலும் தங்களுக்குச் சாதகமான ஒரு பக்கத்தைத் மட்டுமே சொல்லுவினம். அதையே தான் நம்புவினம். மற்றைய பக்கத்தைப் பற்றி ஏன் இந்த மனிசர்கள் சிந்திக்கிறதே இல்லை எண்டு தெரிய இல்லை அண்ணை." என்றாள் மனோகரி.

"இப்ப விளங்குதே அண்ணை என்ரை கஸ்ரம்? வீட்டுக்குப் போனாக் காதுக்குப் பஞ்சு தேடித் திரிய வேண்டி இருக்குது." என்றான் சிவா.

"ஐயோ..." என்றாள் மனோகரி.

"அது சரி உங்கடை சண்டையைப் பார்க்கவே இங்க வந்த நாங்கள். இப்பிடிச் சண்டை பிடிக்கிறவைக்கு உள்ளதான் நிறைய அன்பு இருக்குமாம். வாங்க போவம். இனி உள்ள விடுவாங்கள்." என்றான் சண்முகன்.

"அப்ப தங்கடை முயற்சியள் என்ன மாதிரி இருக்குது?" என்று சிவா சண்முகனை நோண்டினான்.

"காய்க்காத மரத்துக்கு நிர்வாணமாய் நிண்டு உலக்கையால அடிக்கிறவையாம். அது கணக்கு நாங்களும் விடுகிறேல்லை எண்டு நிக்கிறம். அலுவல்கள் நடக்குது. இயற்கை கை தராட்டிச் செயற்கை முறைதான்." என்றான் சண்முகன்.

"தவம் செய்து பெத்தாத்தான் அருமை தெரியும் எண்டு எங்களுக்குக் கடவுள் இப்படி சோதனை தந்திருக்கிறார். அதுவும் நல்லதுக்குத்தான்." என்றாள் சக்தி.

"கவலைப்படாதையும் சக்தி. நடப்பவை எல்லாமே நல்லதாகவே நடக்கும் எண்டு அவன் சொல்லி இருக்கிறான். உங்களுக்கு ஒரு தவப் புதல்வன் வர இருக்கிறான் ஆக்கும்." என்றார் "TS".

*

அது இரண்டு கட்டில்களைக் கொண்ட ஒரு அறை. இரண்டு கட்டில்களையும் தற்காலிகத் தடுப்புக்களால் மறைத்து இருந்தனர். பிரசவிக்கும் பெண்களுக்குத்

தனியறை வேண்டும் என்பது பலருடைய அவா. இருந்தும் பணக்கார நாடாக இருந்தாலும் அரச செலவிற்குக் கணக்கு உண்டு என்கின்ற கட்டுப்பாடு. அதில் சிறிது அசௌகரியம் என்றாலும் மற்றைய கவனிப்புகள் பற்றிக் குறை சொல்வதற்கு இல்லை.

சொரூபா வதங்கிய கொடியாக கட்டிலில் சுருண்டு படுக்க முடியாத அவஸ்தையோடு படுத்துக் கிடந்தாள். அரவம் கேட்டு எழ முயற்சித்து ஒருவாறு எழுந்தும் இருந்து கொண்டாள். பிரசவம் என்பது எல்லோருக்கும் ஒரே மாதிரியாக இருப்பது இல்லை. சிலரால் பெற்ற அன்றே எழுந்திருக்க முடியும். சிலருக்குப் பல நாட்கள் அதற்குத் தேவைப்படும். சொரூபா கெட்டிக்காரி. என்றாலும் வேதனை பொங்குவதை மறைக்க முடியாத முகத்துடனே சிரிக்க முடியாது சிரித்தாள். இரணத்தின் உத்தரிப்பால் முகத்தின் தோல்கூடக் கருகிப் போனதான தோற்றம். இருந்தும்,

"வாங்க, வாங்க அண்ணை..." என்று சொல்லத் தவறாத தமிழ்ப் பண்பும் மரியாதையும் அந்தக் கணத்திலும் அவளிடம் இருந்து வந்தது. அவள் அருகில் ரோஜா தொப்பியும் ரோஜா அங்கியும் அணிந்த அந்தச் சிசு, பிஞ்சு கைகளையும், பிஞ்சுக் கால்களையும் இடைக்கிடை ஆட்டுவதும், அரை குறைத் தூக்கத்தில் ஆட்களைப் பார்ப்பதுமாய் வித்தை காட்டியது. ஜனனம் சிசுவிற்கு மாத்திரம் ஆனது மட்டும் அல்ல... அந்தச் சிசுவைச் சுற்றி இருக்கும் உறவுகளுக்கும் சமுதாயத்திற்கும், இந்த அகிலத்திற்கும் உரித்தானது. ஒவ்வொரு மகவின் ஜனனமும் இந்தப் பூமிக்குக் கிடைத்த புது வரம்.

முந்தைய நாள் இரவுப் போராட்டத்தில் தாயும் சேயும் களைத்துப் போனதிற்கு அவர்கள் தோற்றமே கட்டியம் கூறியது. இருந்தும் சொரூபா தன் அசௌகரியம் பாராது எழுந்து உட்கார்ந்து கொண்டாள். அன்புத் தொல்லைகள் சில வேளை அசௌகரியமாகி விடுகிறது. அதைக் கொடுப்பவர்கள் அதை உணராது போய் விடுவதுண்டு. அதைத்தான் தானும் செய்கிறேனோ என்பது போல "TS"சிற்கு குற்ற உணர்வாய் இருந்தது. "பாவம் சொரூபாவை இன்னும் நித்திரை கொள்ள விட்டு இருக்கலாம்?" என்று எண்ணினார். பின்பு அருளைக் காணாத "TS",

"அருள் எங்க?" என்று கேட்டார்.

"இரவெல்லாம் நிண்டவர் தானே? நித்திரை வெறி. தாங்கேலாமல் இருக்குது போய் படுத்திட்டு வாறன் எண்டு சொன்னவர். இப்ப வந்திடுவார்." என்றாள் சொரூபா.

"இனிப் பிள்ளைப் பேறுகளுக்கு பஞ்சம் இருக்காது. ஆனா... அருளுக்கும் சொரூபாவுக்கும் கிடைக்கிற கவனிப்பு மற்றவைக்குக் கிடைக்குமோ எண்டது ஐமிச்சம் தான். அது சரி பிள்ளைக்கு என்ன பெயர் வைக்கப் போறியள்? நல்ல காலம் உங்களுக்கு பரிசினி, ஒஸ்லோசினி எண்டு வைக்கிற பாக்கியம் இருக்குது. பெடியனாய் பிறந்து இருந்தாப் பரிசன், ஒஸ்லோவன் எண்டு வைச்சிருக்க வேண்டி வந்து இருக்கும்." என்றான் சிவா.

"என்னால உதுக்கு இப்ப சிரிக்க ஏலாது... சிரிச்சா எனக்குப் பச்சைப் புண்ணா நோகுது. பருவாய் இல்லை நாங்கள் அப்பிடி உங்கடை நம்பிக்கையை பாழடிக்க மாட்டம். நல்ல பெயர் ஏதும் கண்டு பிடிச்சு வைப்பம். வயித்தில இருக்கேக்கையே பெயர் பார்க்கக் கூடாது எண்டு பார்க்கவே இல்லை. இனித்தான் பார்க்க வேணும்." என்றாள் சொரூபா.

"பரிசினி எண்டு வைச்சா என்ன? என்ரை பிறண்ட் ஒருத்தன் அப்பிடித் தான் வைச்சு இருக்கிறான். இவங்கள் கல்லு மண்ணு எண்டு எல்லாம் பெயர் வைச்சு இருக்கிறாங்கள். நாங்கள் ஊரின்ரை பெயரை வைச்சா என்ன?" என்றான் சண்முகன்.

"நரிக்குறவர்கள் அப்பிடித் தான் ஊரின்ரை பெயரை வைக்கிறவையாம். அதால ஊரின்ரை பெயர் வைக்கிறது தமிழுக்குப் புதிசு இல்லை. அதைவிடத் தமிழில நல்ல பெயருக்குப் பஞ்சமா? அதுவும் சங்கம் வளர்த்த தமிழில... அதுக்கும் இப்ப பஞ்சம் வந்ததோ? ஆயிரம் ஆயிரம் அழகான பெயர் தமிழில இருக்குது தானே? கொஞ்சம் அக்கறைதான் வேணும். அவ்வளவுதான்..." என்றான் சிவா.

"அதுவும் உண்மை தான். நாங்களே தமிழைக் கொலை செய்கிற மாதிரி இல்லாமல் இருக்கிறது முக்கியம்தான்." என்றான் சண்முகன். அவனுக்குத் தேசியம் திடீரென ஞாபகத்திற்கு வந்து இருந்தது.

அவளால் தொடர்ந்தும் இருக்க முடியவில்லை. சாய்ந்து படுத்துக் கொண்டாள். ஆண்களும் அவ்விடத்தில் இருப்பதால் அவளுக்குத் தொல்லையாக இருக்குமோ

என்கின்ற எண்ணம் "TS"சிற்கு வந்தது. அவர் எழுந்து கொண்டார். சிவாவும் அவரோடு வெளியே வந்தான். பெண்கள் சொரூபாவின் கட்டிலில் இருந்து கதைக்கத் தொடங்கினார்கள்.

அறைக்கு வெளியே சுவர் ஓரமாக இருந்த கதிரையில் சிவா, சண்முகன், "TS" ஆகியோர் இருந்து கொண்டார்கள். வெள்ளை உடுப்போடு தாதிகள் அங்கும் இங்கும் போய் வந்தார்கள். இவர்களைக் காணும் போது நட்போடு புன்னகைத்துச் சென்றார்கள். அந்தப் புன்னகைக்கு தங்கள் புன்னகையைப் பரிசாக்கிய வண்ணம்,

"இங்க பிள்ளையள் பிறக்கிறது மரத்தின்ரை ஆணிவேர் நிலத்தில பதிஞ்ச மாதிரி இனி எங்களை இந்த நாட்டோடை கட்டிப் போடப் போகுது. நாட்டுக்குத் திரும்பிப் போக வேணும் எண்டு சொல்லுகிறது எல்லாம் நாளையளவில ஓய்ஞ்சு போயிடும். பிள்ளை, பிள்ளையளின்ரை படிப்பு எண்டு ஓடி முடிய எங்களுக்கு நரை விழுந்திடும். அதுக்குப் பிறகு அவங்களுக்குத் துணை தேவைப்படும். அதுக்குப் பிறகு பேரன் பேத்திய விட்டிட்டுப் பிசாசுத் தேசத்தில போய் இருக்கிறதோ எண்டு யோசிப்பம். தேசியம் ஒழுக ஒழுக இப்ப பேசுகிறவையும் கடலில குளிக்க ஊருக்குப் போயிட்டு வந்து தங்கடை அஸ்தியை வட கடல்லதான் கரைக்கப் போகினம்." என்றான் சிவா.

"சிவா நீ எப்பவும் இசகு பிசகாகத்தான் நினைப்பாய். எவ்வளவு சனம் பெட்டியைக் கட்டிக் கொண்டு தங்கடை மண்ணுக்கு ஓடுதுகள் எண்டு பிரச்சனை முடியப் பாரும். நாங்கள் விரும்பியா இங்க வந்தம்? வில்லங்கத்துக்குக் கட்டாயப்படுத்தி அனுப்பி வைக்கப்பட்டு இருக்கிறம். அமைதி வந்தால் எங்களுக்கு இங்க என்ன வேலை?" என்றான் சண்முகன்.

சிவா சிரித்தான். அவனுக்கு அதற்குப் பதில் சொல்ல வேண்டும் என்று தோன்றவில்லை. சுய நலத்தை வென்ற பொது நலம் எங்களிடம் இருக்கிறது என்று நினைத்தால் அது எங்கள் ஞானத்தின் மடமை. சண்முகனுக்குச் சிவா சட்டென்று மௌனம் காப்பது அந்தரத்தைத் தந்தது. அதைப் பார்த்த "TS" அவனுக்கு ஒரு சிறு விளக்கம் கொடுக்க எண்ணினார்.

"அந்தக் காலம் படிக்க எண்டு நாட்டை விட்டு வெளியேறின சனத்தில யாரும் திரும்பி ஊருக்கு வந்தது கிடையாது. சந்திரனில இறங்கின பெருமையோடை அவனவன் போகிற போகிற நாட்டிலேயே பெட்டிக்கும் ஓடர் கொடுத்திடுவான். எங்கடை நாட்டைவிட ஐரோப்பாவில, அவுஸ்ரேலியாவில, அமேரிக்காவில வசதிகள் அதிகம். சுதந்திரம் நிறைய இருக்குது. வருமானத்தைப் பற்றிக் கவலைப்படத் தேவை இல்லாத வாழ்க்கை. மண்ணில கால்படாத கற்பனைக்கு எட்டாத சொகுசு. ஊருக்குப் போக வேணும் எண்டு எல்லாருக்கும் ஒரு ஏக்கம் இருக்கும். அங்க ஆசையோடை போகவும் செய்வினம். அப்ப உடம்பில ஊர்ந்த எறும்பு எல்லாம் இப்ப அன்னியமாய் தெரியும். தாங்க முடியாத அரிகண்டம் வரும். வியர்வை வெறுப்பைத் தரும். குளிரூட்டப்பட்ட அறையில் எப்பவும் இருக்க வேணும் எண்ட எண்ணம் வரும். போன போக்கில அள்ளிக் குடுத்துப் பிறகு ஏலாமல் கிள்ளிக் குடுத்து, இதை எல்லாம் திரும்பிப் போய் எப்பிடி அடைக்கிறது எண்டுகிற வெறுப்பு வரும். அதுக்குப் பிறகு இதில இருந்து எப்பிடித் தப்பிக்கிறது எப்ப குடியேறிய புதிய நாட்டுக்குப் போகிறது எண்டுகிற எண்ணம் எப்பவும் மனதை அரிக்கும். அதுவும் பிள்ளைகளோடை போனாச் சொல்லத் தேவை இல்லை. சிவா சொல்லுகிற மாதிரி என்ன தான் நாங்கள் கதைச்சாலும் எங்கடை அஸ்தி இந்து சமுத்திரம் போகாது. வட கடல்ல கரைகிறதுக்கே பாய்க்கியம் செய்திருக்க வேணும்." என்று ஒரு விளக்கம் கொடுத்தார். அவர் விளக்கம் சண்முகனுக்கு அதிர்ச்சி ஆகத்தான் இருந்தது. இருந்தும் அவன் விளக்கத்திற்கு விளக்கம் கேட்க விரும்பாது அமைதி ஆகினான்.

இவர்கள் அமைதியைக் குலைப்பது போல சொரூபாவின் அறைக்குள் இருந்து பெண்கள் பிரிய முடியாது வெளியே வந்தனர். "TS" சுவரில் தொங்கிய கடிகாரத்தில் நேரம் பார்த்துக் கொண்டார்.

# 16 மீன்பாடும் நகரத்தார்

சிறிய குன்றில் இருக்கும் வாசஸ்தலத்தில் இருந்து கீழே இறங்கி வந்தால் ஒஸ்லோவில் இருக்கும் பெரிய சந்தி ஒன்றிற்கு "TS"சை அது கொண்டு வந்து விடும். அந்தச் சந்திக்கு வரும் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு விதமாகத்தான் இருக்கும். பரபரப்பும் புதிய மனிதர்களும் அலை போல, ஆற்று வெள்ளம் போல என்றும் தொடராக... என்றும் புதிதாக... இன்றும் மாறாத அதே பரபரப்பில் அது. நீல நிற "Tram" இராட்சத அட்டையாக வேகமாகச் சந்தியைக் கடந்து சென்றது. அதற்கு எதிர்த் திசையில் சிவப்பு நிறப் பேருந்து ஒன்று வந்தது. அது இரண்டு பேருந்துகளை ஒன்றாக இணைத்த சிவப்பு அட்டை போன்ற பேருந்து. மனிதனால் உருவாக்கப்பட்ட இராட்சத அட்டைகளின் உலகத்தில் "TS". வேலைக்குச் செல்பவர்களின் வாகனங்களால் ஏற்பட்ட நெரிசல் நேருக்கு நேரே யுத்தத்திற்குத் தயாரான பாண்டவ கௌரவ சேனைகள் போல நிற்கின்றன. சிவப்பு மாறிப் பச்சை விழுந்தால் பாரதப் போரில் சங்கு ஊதப்பட்ட வேகம் இருக்கும். மறு பக்கம் பாயக் காத்திருக்கும் புலிகளாகப் பதுங்கும் பல வாகனம். நான்கு திக்கில் இருந்து வருபவற்றைப் போக்கு வரத்து வளையம் ஒழுங்கு செய்யும் அழகு. இங்கே கூடு கட்டிக் கையை நீட்டி மடக்கிச் சமிக்கை அளிக்க முடியாது. கடும் குளிரில் விறைப்பு அங்கங்களை விழுங்க உயிரை அது விலையாக வாங்கி விடும். "மெனி" என்கின்ற கடை இருக்கிற பக்கத்திற்கு எதிராக ஒரு சாப்பாட்டுக் கடை. அதன் பின்னால் மறு சாலையில் பல கடைகள். அதற்கு அப்பால் பேருந்துத் தரிப்பிடம் ஒன்று. அந்த நான்கு தெருவிலும் எழு தரிப்புகள். சிலவற்றில் "Tram" நிற்கும், பலவற்றில் பேருந்து நிற்கும்.

ஆப்பிரிக்கர் போலத் தனது பொன் நிறக் கேசத்தை தேடாவளையங்களாக முறுக்கிய இளம் பெண் ஒருத்தி இரண்டு நாய்கள் குதிரையாக அவதாரம் எடுத்து அவளைத் தேராக வேகமாக இழுக்க, மெனிக் கடைக்கு எதிர் பக்கமாக இருந்த குடிமனைக்கு உள்ளே சென்றாள். இப்படியான உருப்படியில் இருக்கும் நாய்களை வைத்திருக்க வீட்டு நிருவாகம் எப்படிச் சம்மதித்து

இருக்கும் என்பது "TS"சிற்கு விளங்கவில்லை. சில வேளை யாராவது வீட்டிற்கு நலம் விசாரிக்கச் செல்பவர்களாக இருக்கலாம். அவளை இதற்கு முன்பு இங்கே பார்த்ததாக "TS"சிற்கு ஞாபகம் இல்லை. இந்தச் சந்தியில் பார்ப்பவர்களை ஞாபகம் வைத்திருக்கும் அபாரச் சக்தியும் அவரிடம் இல்லை. இங்கே காணும் காட்சிகள் எல்லாம் கனவு போல அவருக்கு இருப்பது உண்டு. பார்க்கும் மட்டுமான விம்பங்கள் ஆக அவை பின்பு நினைவில் நிற்காத காட்சிகள். அடுத்த முறை வரும் போது புதிய புதிய காட்சிகள். போன முறை பார்த்த காட்சியின் சுவடே இல்லாது அழிந்து போய் இருக்கும் இந்தக் கணங்கள். அவையும் அழியும் மறு கணங்கள்.

மெனிக்கு முன்பு இருந்த குடி இருப்புக்குள் சிறுவர் பூங்கா ஒன்று இருந்தது. அதில் ஊஞ்சல்கள்.... சக்கரங்கள்... துலாக்கள்... ஏணிகள் என்று குழந்தைகளை மகிழ்விக்கும் பொறிகள் பல இருந்தன. அதையும் தாண்டிக் குடிமனையை நோக்கி அந்த நாய்களோடு அவள் சென்றாள். யாரோ நண்பர்களைப் பார்க்கப் போகிறாள் என்பதாகவே "TS"சிற்கு மீண்டும் எண்ணத் தோன்றியது. அம்புலன்ஸ் ஒன்று அவசரமாகச் சத்தத்தோடும், ஒளியோடும் உல்லவோல் மருத்துவமனையை நோக்கிச் சென்றது. இந்தச் சந்தியில் இருந்து போகும் ஒரு பாதை உல்லவோல் மருத்துவமனைக்குப் போகிறது. ஒஸ்லோவில் இருக்கும் பெரிய மருத்துவமனைகளில் அதுவும் ஒன்று. நோர்வேயில் அதன் பெயரை அறியாத மனிதர்கள் இருக்க முடியாது என்று சொல்லலாம். கைவிடப்பட்ட நோயாளர்களைக் காப்பாற்றும் கடைசியிடம் அது. அதுவும் காப்பாற்ற முடியாவிட்டால் காலனின் பாசக்கயிறு கட்டாயம் அந்த ஆன்மாவைச் சிறைப் பிடித்துச் செல்லும். புற்று நோய்க்கு என்று வேறு ஒரு மருத்துவமனை இருக்கிறது. அங்கு அதற்குத்தான் முதன்மையாக வைத்தியம் செய்யப்படும்.

"TS"சிற்கு இந்தக் கனவுகளைத் தொலைத்துத் தான் வந்த அலுவல்களைப் பார்க்க வேண்டும் என்கின்ற ஞாபகம் வந்தது. அவர் மெனிக் கடைக்குள் புகுந்தார். மெனியில் மற்றைய கடைகளைவிட விலை அதிகமாக இருக்கும் என்பது "TS"சிற்குத் தெரியும். தெரிந்தாலும் பல வகையான பொருட்களை இங்கே தெரிவு செய்து வாங்கலாம் என்பது அவருக்குப் பிடித்துக் கொண்டது. ஒவ்வொரு நாளும் இந்தக் கடைக்கு "TS" வருவது இல்லை. அப்படிச் செலவு

செய்வது என்றால் சுதேசிகள் போல ஏதாவது அதிக சம்பளம் தரும் வேலையில் இருக்க வேண்டும். கழுவுதல் மிகவும் கடை நிலைக் கருமம். அதன் குணத்திலும் சம்பளத்திலும் அது கடை நிலைப் பணியாக இருந்தது. ஊரில் சக்கிலியர் என்று முன்னோர்கள் பழித்த பாவத்திற்கு இன்று தாங்களே சக்கிலிய வேலை செய்ய வேண்டி இருப்பதான எண்ணம் "TS"சிடம் உண்டாகியது. அப்படியான சக்கிலியப் பெண்ணைத்தான் விவேகானந்தர் மேன்மையாக வணங்கி நின்றார். அது கருமம். கருமத்தில் உயர்வு தாழ்வு இல்லை என்பதே உண்மை. துடைப்பம் பிடிக்கும் வேலையை ஊரில் பட்டினி கிடந்தாலும் செய்து இருக்க மனது இடம் கொடுத்து இருக்காது. மான அவமானத்திற்கான கேள்வி மலையாக எழுந்து நின்றிருக்கும். அதற்கான விளக்கம் சொல்லும் துணிவும் இருந்து இருக்காது. இங்கு அது தலை கீழாக மாறி விட்டது. தொழிலை வைத்தே சாதிகள் உருவாக்கப்பட்டு இருந்தால் புலம்பெயர்ந்தவர்களில் இனி புதிய சாதிகளைத்தான் கண்டு பிடிக்க வேண்டும். சக்கிலியனான பிராமணனையும், பிராமணனான சக்கிலியனையும் புலம் பெயர்ந்த தேசத்தில் நாங்கள் பார்க்க முடியும். அதையும் மீறி சக்கிலியத் தொழில் செய்தாலும் பிறப்பால் சாதிமானாய் பிறந்தோம் என்கின்ற பேதம் சாபமாகப் பதுங்கி இருக்கும் என்பது "TS"சிற்கு விளங்கியது. பொது எதிரிக்காப் பல பிளவுகளுக்குத் தற்காலிகச் சமாதி வழங்கப் பட்டு இருக்கிறது. அவை உயிர்த்து எழுவதற்காய் பதங்கம் ஆகப், பாதுகாப்பாக… உறை நிலையில் ஆழமான உறை பெட்டியில் தமது நேரத்திற்காய் காத்து இருக்கின்றன.

"TS"சிற்குக் கடைக்கு முன் நின்று சந்தியை வேடிக்கை பார்த்துக் கொண்டு நிற்க வேண்டும் என்கின்ற விருப்பம். தாச்சியில் இட்ட கடுகாகப் புவனலோசினி அலைபேசியில் வெடிப்பாள் என்கின்ற பயத்தில் கடைக்கு உள்ளே சென்றார்.

*

மருத்துவர் புவனலோசினிக்கு இனி வைத்தியம் தேவை இல்லை என்றுவிட்டார். "TS" காட்டிய அன்பும், அரவணைப்பும் இந்த முன்னேற்றத்திற்குக் காரணம் என்று அவர் பாராட்டினார். அது "TS"சிற்குப் பெருமையாக இருந்தது. பல் மருத்துவரானாலும் இப்போதும்

இடைக்கிடை சரிஸ்கா அந்த மருத்துவரிடம் சென்று வருவாள். அவள் இப்போது "TS"சைத் தன்னோடு வர வேண்டாம் என்று கூறிவிட்டாள். "TS"சிற்கும் அது சரியாகவே தோன்றியது. அவளே ஒரு மருத்துவர். பல் என்றால் என்ன மூளை என்றால் என்ன? அடிப்படை அறிவைப் புகட்டித்தானே மேலே கட்டி எழுப்புவார்கள். அப்படியான அவளுக்குத் தான் எதற்குத் துணை என்று அவரும் நின்று விட்டார். அவளும் சில காலத்தில் புவனலோசினி போல் எல்லாவற்றையும் மறந்து விடுவாள் என்கின்ற நினைப்பு அடி மனதில் உயிரோடு இருந்தது. இருந்து என்ன பயன்? "TS" அந்த மாற்றத்திற்காக காத்திருக்கக் காலம் அண்டத்தில் அழிக்க முடியாத விதியை எழுதிச் சென்றது. இருபத்தி எட்டு வயதுக்குள் கலியாணம் என்பது முடிந்து விட வேண்டும். அதன் பின்பு விலை போகாத மாட்டின் பல்லை நோண்டி நோண்டிப் பார்த்துவிட்டுப் பயத்தில் வாங்காது போகும் வியாபாரியைப் போல் ஆகிவிடும் அவர்கள் துணை தேடல். சரிஸ்காவிற்கு இன்னும் வயது இருந்தது. இருந்தும் "TS"சிற்குப் பொறுமை இல்லாது போய் இருந்தது. அவளிடம் அதைப் பற்றிக் கதைக்கும் துணிவு அவரிடம் இருந்தது கிடையாது. எப்படி ஆவது அவள் மனம் மாற வேண்டும் என்கின்ற எண்ணத்தோடு தனக்குப் பிடித்த பாணை எடுப்பதற்குப் பாண்கள் வைத்திருக்கும் பகுதிக்கு "TS" சென்றார். திடீரென,

"நீங்க தமிழா?" என்கின்ற குரல் கேட்டு மின்னல் தாக்கிய வேகத்தில் திரும்பிச் சட்டென அவரைப் பார்த்தார். அந்த மனிதர் ஐந்தடி உயரம்தான் இருப்பார். "TS"சைப் பார்த்துச் சிரித்தார். அவரது நகைப்பு நகைப்பை வரவழைத்தது. அவருக்கு "TS"சை விடச் சில வயதுகள் குறைவாக இருக்க வேண்டும் என்று அவருக்குத் தோன்றியது. அடர்த்தியான சுருள் முடி. மல்யுத்த வீரன் போன்ற பரந்த நிமிர்ந்த மார்பு. முகத்தில் ஒட்டினாற் போல மெல்லிய வாத்தியாரின் மீசை. சவரம் செய்து பச்சையாகப் பளபளத்த கன்னங்கள். பெரிய அகலமான விழிகள். அதில் தவழும் சினேகமும் புன்னகையும். நீல நிறத்தில் மேலங்கி. நீலத்தில் வெள்ளை படர்ந்த காற்சட்டை.

"நீங்கள் ஏன் அப்பிடிக் கேட்டீங்கள்?" என்றார் "TS".

"எப்பிடி?"

"நீங்கள் தமிழா எண்டு...?" என்றார் "TS".

"நாங்கள் மறுவா எங்களை வேறை எப்பிடி அடையாளப்படுத்த முடியும்? தமிழர்கள் நான் இந்து, நீ கிறிஸ்தவன் எண்டு அடையாளப்படுத்துகிறது இல்லை. மதம் தமிழருக்கு உள்ள ஒரு பிரச்சனையா இருந்ததும் இல்லை. நாங்கள் பேசுகிற தாய் மொழிக்குத்தான் முழு மதிப்பையும் கொடுத்து இருக்கிறம். மதத்தை வைச்சு நாங்கள் ஒருக்காலும் எங்களை அடையாளப்படுத்திக் கொள்ள வேணும் எண்ட எண்ணம் வாறதில்லை... அப்பிடி இருக்கிறதுதான் எங்கடை தனித் தன்மை... தேசப் பற்று." என்றார் அவர்.

"நீங்கள் தமிழை நேசிக்கிறியள். அதே வேளை உங்கடை மனசுக்க ஏதோ வேதனை இருக்குது போல?" என்றார் "TS".

"நீங்க யாழ்ப்பாணம் தானே?" என்றார் அவர்.

"நீங்க வற்றிக்கலோ எண்டது எனக்குத் தெரியும்?" என்றார் "TS".

"பேச்சில கண்டு பிடிச்சிட்டியள்." கையைக் கொடுத்துப் பரமேஸ்வரன் என்று தன்னை "TS"சிற்கு அறிமுகப்படுத்தினார். பின்பு,

"நல்லா இருக்கும் இந்தப் பாண்." என்று கூறிய வண்ணம் கோதுமைப் பாணைத் தூக்கினார்.

"ம்... உது சோக்காத் தான் இருக்கும்." இருவரும் கதைத்துக் கதைத்து பொருட்களை எடுத்துக் கொண்டார்கள். "TS" இரண்டு பால் பெட்டிகளை எடுத்தார். பரமேஸ்வரன் இரண்டு தயிரும் ஒரு பாலும் எடுத்துக் கொண்டார். பாலைவிடத் தயிர் உடல் நலத்திற்கு நல்லது என்று கூறுகிறார்கள். இவருக்கும் அந்த விஷயம் தெரிந்திருக்க வேண்டும் என்று அவர் எண்ணிக் கொண்டார்.

பழங்கள் எடுக்கும் இடத்தில் வாழைப் பழத்தை எடுத்தவர்,

"ஊர் மாதிரி இங்க உம்பாரமா வாழைப் பழம் வகையா இல்லை. ஒரே சாதி வாழைப் பழத்தைத் தான் பாவிக்க வேணும். எனக்குக் கடைசியா வாழைப் பழத்தோடை தயிரும் சீனியும் சேத்துச் சாப்பிட்டாத்தான் சாப்பிட்ட மாதிரி இருக்கும்." என்று கூறினார்.

"நல்லா இருக்குமா?" என்றார் "TS".

"சாப்பிட்டுப் பாருங்க. நல்லா இருக்கும்." என்றார் அவர்.

"மாம்பழத்தோடை புட்டு, வாழைப்பழத்தோடை புட்டுச் சாப்பிடுகிற மாதிரி நானும் அதை ஒருக்காச் சாப்பிட்டுப் பார்க்கத் தான் வேணும்." என்று கூறிய "TS" தானும் ஒரு தயிரும், ஆறு வாழைப் பழங்களும் எடுத்துக் கொண்டார்.

இந்தக் கடையில் விலை அதிகமாகவே இருக்கும். தெருவைத் தாண்டி மற்றைய பக்கம் சென்றால் "ரீமி" என்கின்ற கடை வருகிறது. அங்கே விலை இந்தக் கடையைவிடக் குறைவாக இருக்கும். இருந்தும் இந்தக் கடைக்கு நல்ல மரியாதை இருக்கிறது. வகை வகையான பொருட்களை தெரிவு செய்து வாங்குவது சுதேசிகளுக்குப் பிடிக்கும். சுதேசிகளில் ஒரு பகுதியினர் விலையைவிட நல்ல தரமான தெரிவுகளையே அதிகம் விரும்புவார்கள். அவர்களுக்கான கடையாக மெனி தன்னை உருவாக்கிக் கொண்டு உள்ளது. பரமேஸ்வரனும் "TS"சும் காத்து நிற்க வேண்டி இருந்தது. "TS"இன் கண்கள் அதிஸ்ரலாபச் சீட்டிழுப்பு கணினிகளின் மீது படிந்தது. அதிஸ்ரலாபச் சீட்டிழுப்போடு உதைபந்தாட்டம், குதிரையோட்டம் போன்ற பந்தயங்களைக் கணினியின் மூலம் இணைத்து வைத்து இருக்கிறார்கள். இங்கு அதிஸ்ரலாபச் சீட்டிழுப்பை நடத்துவதே அரச நிறுவனம் ஒன்று தான். அதில் வரும் மேலதிக பணம் விளையாட்டிற்கு, கலாச்சார நிகழ்வுகளுக்குப் பயன்படுத்தப்படும். எதற்கு அந்தப் பணம் பயன்பட்டாலும் அரசே சூது விளையாட ஊக்குவிப்பது "TS"சிற்கு பிடிப்பது இல்லை. இருந்தும் யாரைத்தான் ஆசை விட்டது என்பதாக ஆடிக்கு ஒருதரம் அமாவாசைக்கு ஒருதரம் அதிஸ்ரலாபச் சீட்டு கொடுப்பார். மூன்று சரிக்கு மேல் அவருக்கு வந்தது இல்லை. ஏழு சரியாக வந்தால் முதல் பரிசு வரும். அப்படி வந்தால் மில்லியன் குரோணர்கள் பரிசாகக் கிடைக்கும்.

"என்ன நீங்க பார்க்கிற மாதிரிக்கு லொத்தர் வாங்கப் போறியள் போல இருக்குது" என்றார் பரமேஸ்வரன்.

"சீ அப்பிடி எல்லாம் இல்லை. எப்பவாவது வாங்கினது உண்டு." என்றார் "TS". அவருக்கு அதில் சாதுவான வெட்கம் போல நெளிந்து கொண்டார்.

"உதில சிஸ்ரம் விளையாடினாச் சில வேளை சாண்ஸ் அடிக்கும்." என்றார் பரமேஸ்வரன்.

"அதுக்கு நிறையக் காசும் செலவாகும். உதுகளில விடலாம். ஆனாத் திரும்பி வரும் எண்டு எதிர்பார்த்து விடக்கூடாது. அப்பிடி விடுகிறத்துக்கு அண்டைக்கு அண்டைக்கு வேலைக்குப் போகிற எங்களுக்குச் சரிவராது. யாராவது நிறையக் காசு வைச்சு இருக்கிற ஆட்களுக்குத் அது சரி." என்றார் "TS".

"உண்மை. லொத்தோ அப்பிடியான ஒரு சூதாட்டம் எண்டுகிறது நிச்சயம் உண்மை. ஆனாப் பங்குச் சந்தை விஷயம் தெரிஞ்சு செய்தா நிறையச் சம்பாதிக்கலாம். அதிலும் றிஸ்க் இருக்கும். அவதானம் வேணும். ஒரு வகையில எல்லாம் சூது மாதிரியே. நான் பயத்தில வாங்கிறது இல்லை. என்ரை நொஸ்க் பிறண்ட் ஒருத்தன் அதில நிறையக் காசு போட்டு வைச்சு இருக்கிறான். எப்பவும் அதைப் பற்றித்தான் அவன் வாசிச்சுக் கொண்டே இருப்பான். அதுக்குக் கொம்பனிகளைப் பற்றி, அதுகளின்ரை பொருளாதாரத்தைப் பற்றி, வருங்காலத்தில அது என்னவாகப் போகும் எண்டது பற்றி நிறையத் தெரிஞ்சு இருக்க வேணும்." என்றார் அவர்.

"நீங்கள் என்ன வேலை செய்கிறியள்?" என்றார் "TS".

"அண்ணை நீங்கள் வேறை... இலங்கைப் படிப்பைப் பற்றி இவங்கள் கொஞ்சம்கூட விளங்கிக் கொள்ளுகிறாங்கள் இல்லை. நானும் கம்பஸ் போயிட்டுத்தான் இங்க வந்து இருக்கன். எனக்கும் வேலை கிடைக்காமலே இருந்திச்சு. எனக்கு நொஸ்க் காணாது எண்டு வெளியால காரணம் சொல்லித் தட்டிக் கழிச்சாங்கள். உள்ளுக்க இன்னும் பல காரணங்கள் இருக்குது எண்டு எனக்குத் தெரியும். என்ன செய்ய முடியும்? பலரும் செய்கிற மாதிரி கழுவுகிற வேலை தான் செய்தன். போன மாதத்தில இருந்து ஒரு கொம்பனியில தற்காலிகமாக வேலை தந்து இருக்கினம். அப்படியே அது நிரந்தரம் ஆக வேணும் எண்டு விருப்பம்." என்றார் பரமேஸ்வரன்.

"ஊரில என்ன படிச்ச நீங்கள்?" என்று "TS" கேட்டார்.

"எக்கவுண்ட் படிச்சு வேலையும் கொஞ்ச நாள் செய்தன் அண்ணை. அங்க வேலையில இருந்து இருந்தால் நல்ல பொசிசனுக்கு வந்து இருப்பன். அறுவான்கள் நாட்டில

குழப்பத்தை ஏற்படுத்திப் போட்டாங்கள். ஆக்கினை தாங்க இயலாமல் நாங்களும் வெளிக்கிட்டு வந்தாச்சுது." என்றார்.

இருவரும் பணத்தைச் செலுத்திப் பொருட்களை பிளாஸ்ரிக் பைகளில் போட்டு எடுத்துக் கொண்டு வெளியே வந்தார்கள். "TS"சிற்கு அதிக நேரம் நின்று மினக்கெட இப்போது விருப்பம் இல்லை. புவனலோசினி தேடுவாள் என்கின்ற நினைப்பு இருந்தது. அதை மனதில் வைத்திருந்த அவர்,

"சரி அப்ப சந்திப்பம்." என்று விடைபெற முயன்றார்.

"உதில தான் எங்கடை வீடு இருக்கி. சும்மா வந்திட்டுப் போங்க." என்றார் பரமேஸ்வரன்.

"பிரச்சனை இல்லை. இன்னொரு நாளைக்குக் கட்டாயம் வாறன். இப்ப சாமான்களோடை எதுக்கு இழுபட்டுக் கொண்டு?" என்று இழுத்தார் "TS".

"வாங்க அண்ணை. ரோட்டைக் கடந்தா எங்கடை வீடு. இப்ப வந்து வீட்டைப் பார்த்திட்டுப் போங்க. பிறகு வரலாம்." என்று பரமேஸ்வரன் பிடியாக நின்று கொண்டார். "TS" வேறு வழி இல்லாது அவரோடு தெருவைக் கடந்து மறு கரைக்குச் சென்று, அந்தப் பூங்காவிற்குள் நடந்து அடுத்த பக்கத்தில் இருந்த சிவப்பு நிறமான செங்கல் பூச்சால் மறையாத நான்கு மாடிக் கட்டடத்திற்குள் புகுந்தார்கள். அந்தக் கட்டடத்தின் கதவிற்குப் பின்னால் படிகளுக்கு எதிர் புறத்தே பச்சை நிறத்தில் ஒவ்வொரு வீட்டிற்குமான தபால் பெட்டிகள் இருந்தன. உள்ளே மாபிள் தரை தூசு துறந்து துப்பரவாய் மின்னியது. எல்லா வீடுகளுக்கும் புதிதாய் வெள்ளைக் கதவுகள் மாற்றப்பட்டு இருந்தன. அந்தக் கதவுகளை உடைப்பது கடினம் என்பதோடு அவை வீட்டிற்குள் நெருப்பு பற்றினால் அந்த நெருப்பை முப்பது நிமிடங்கள் பரவாமல் தடுக்கும் திறன் கொண்டவை.

பரமேஸ்வரன் திறப்பைக் கொண்டு வரவில்லை. அழைப்பு மணியை அழுத்தியதும் கனகநாயகி வந்து கதவைத் திறந்தாள். கனகநாயகிக்குப் பரந்த ஏற்றமான நெற்றி. கரியை எண்ணெய்யில் குழைத்துப் பூசியது போன்ற கருப்பான சுருள் முடி. பெரிய சிவப்புக்கல் பதித்த தோடுகள் அவள் காதில். துள்ளும் அகன்ற கண்கள் ஒரு கணத்தில் ஆயிரம் கதை பேசும் பவுசு. கிளிச்சொண்டு

போன்ற மூக்கு. குழி விழும் கன்னம். ஐந்து அடியை எட்டாத உயரம். வரிசையாக ஒளிரும் பற்கள். நையிட்டி அணிந்து அதன் மேல் மெல்லிய சுவேற்றர் தரித்து இருந்தாள். "TS"சைக் கண்டதும் அவள் கண்களில் ஊற்றெடுத்த வியப்பு. எதிர்பாராத அவர் வரவை மறைக்க எத்தனிக்காத அவள் பாமரத்தனம்.

"பிளேன்ரீ ஒண்டு போடு கனகி." என்றார் பரமேஸ்வரன். கனகி அடுக்களையை நோக்கிச் சென்றாள். கோலில் சிவப்பு நிறத்தில் வளைவான ஐந்து ஆட்கள் இருக்கக்கூடிய சோபா ஒன்று போடப்பட்டு இருந்தது. அதற்கு முன்பு மரத்தால் செய்யப்பட்ட சோபா மேசை. அதற்கு வழுவழுப்பான பளிங்கு வாணிஸ் பூசப்பட்டு இருந்தது. அதன் மேல் வெள்ளை கண்ணறை உறை ஒன்று போர்வையாகக் கிடந்தது. சிறிது தூரம் தள்ளிச் சாப்பாட்டு மேசையும் நான்கு கதிரைகளும் இருந்தன. அவையும் மரத்தால் செய்து அந்த மரம் தெரியும்படி பளிங்கு வாணிஸ் அடிக்கப்பட்டு இருந்தன. அதனால் அந்த மரம் பொன்னிறமாய் யொலித்தது. சாப்பாட்டு மேசைக்கு மறுபக்கத்தில் மரத்தால் செய்யப்பட்ட அலுமாரி. அதையும் தாண்டினால் மரத்தால் உருவான தொலைக்காட்சிப் பெட்டி வைக்கும் மேசை. கோலின் நிலத்திற்கும் மரம் அடித்திருந்தது. அத்தோடு அரைப் பகுதிச் சுவரும் மரத்தால் வேயப்பட்ட கோலம். அதற்கு மேல் கடதாசி ஒட்டி அழகு செய்யப்பட்டு இருந்தது. வெள்ளைக் கடதாசியில் பெரிய பெரிய நீலப் பூக்கள். அதற்குத் தகுந்தால் போல் திரைச் சீலைகள். கதவுகளும் மரத்தின் நிறத்தில் இருந்தன.

"வாங்கேக்கை எல்லாம் ரிப் ரொப்பாய் இருந்திச்சுது. நாங்கள் அதுக்கு ஏத்த மாதிரி தளபாடங்களை வாங்கி இருக்கிறம். பிள்ளைகளில ஒருத்திக்குப் பதின்மூன்று வயசு. ஒருத்திக்குப் பதினொரு வயசு. சனிக்கிழமையில தமிழ் ஸ்கூலும் போவினம். அவங்கள் கதைக்கிறதும் யாழ்ப்பாணத் தமிழ் மாதிரித் தான். அவையிட பிறண்ஸ்சுகள், ஸ்கூல்ல எல்லாம் யாழ்ப்பாணத் தமிழ் எண்டதால அவைக்கும் அது தான் பழக்கமா இருக்கி." என்றார் பரமேஸ்வரன்.

தேநீரோடு வந்த கனகி,

"இங்க கிட்வா இருக்கீங்க அண்ணா?" என்றாள்.

"ஓ உங்கடை வீட்டுக்கு முன்னால இருக்கிற பிட்டியில." என்றார் "TS".

"அந்த உயரமான கட்டடத்திலையா?"

"சிவப்புக் கட்டடம்." என்றார் "TS".

"எங்கடை வீட்டில நிண்டு பார்க்கவே அது தெரியும். ஊரில வெளிச்ச வீடு கட்டுகிற மாதிரி அந்த உயரத்தில கட்டி வைச்சு இருக்குது. உங்களுக்கு எத்தின பிள்ளைகள் இருக்கினம்?" என்று கனகி கேட்டாள்.

"ஒரு பெம்பிளைப் பிள்ளை இருக்கிறா. அவ இப்ப தன்லேகனா வேலை செய்யத் தொடங்கி இருக்கிறா." என்றார் "TS".

"இங்க வந்து படிச்சவாவா?" என்று பரமேஸ்வரன் கேட்டார்.

"ம்."

"கெட்டித்தனம். இந்த நாட்டு மொழி படிச்சு அதில பிறகு டென்ரல் படிக்கிறது எண்டா உங்கடை மகள் கெட்டிக்காரி. உங்களுக்குப் பல் வருத்தம் எண்டாச் செலவு இருக்காது. இங்க அதுக்குத்தானே நிறையக் காசு எடுக்கிறாங்கள்." என்றார் பரமேஸ்வரன்.

"தேத்தண்ணி நல்லா இருக்குது தங்கச்சி. இங்க அப்பா பல்லு வருத்தம் எண்டு மகளிட்டைப் போனாலும் காசு வேண்டாமல் விடமாட்டாங்கள். அப்பா, அம்மா எண்டுகிறது எல்லாம் வீட்டிலை மட்டும்தான். வேலை செய்கிற இடம் அதுக்கு அப்பாலை எண்டு சொல்லிப் போடுவாங்கள். அவ வேறை ஒருத்தர் நடத்துகிற கிளினிக்கில வேலை செய்கிறா. சொந்தமா தொடங்கினால் அப்பாவுக்குப் பிறியாச் செய்வா எண்டு நினைக்கிறன். எப்பிடி எண்டாலும் எங்கடை கலாச்சாரம் வேறை தானே?" என்றார் "TS" மிகவும் உண்மையாக.

"அது சரி அண்ணை. தாயும் சேயும் எண்டாலும் வாயும் வயிறும் வேறை எண்டுகிறது இங்கதான் நூற்றுக்கு நூறு வீதம் பொருந்தும். என்ரை கடுவன்களிலையும் ஒண்டுக்குத் தமிழ் படிக்கிறது எண்டாச் சத்திராதியா இருக்குது. தனக்குத் தமிழ் வேண்டாம் எண்டு கள்ளம் படிக்க வழி பார்க்குது. நான் விடுகிறது இல்லை. எப்பிடியாவது கூட்டிக்

கொண்டு போயிடுவன். தமிழ் முக்கியம் தானே? அதையும் எங்கடை கலாச்சாரத்தையும் அறியாமல் விட்டால் பிறகு இவைக்கு என்ன அடையாளம் இருக்கும்? நாங்கள் எவ்வளவு காலம், எங்கை இருந்தாலும் தமிழராய் இருக்க வேணும். அதிலை எல்லாம் விட்டுக் குடுக்க ஏலாது. நாங்கள் தமிழர் எண்டதுக்கு ஆகவே ஊரில நிறையக் கஸ்ரப்பட்டம். மட்டக்களப்பு வந்து இருகீங்களா?" என்றார் பரமேஸ்வரன்.

"வரவேண்டிய சந்தர்ப்பம் வந்ததில்லை." என்றார் "TS". அவருக்கு அதைச் சொல்லவே வெட்கமாக இருந்தது. எங்கள் நாட்டில் நாங்கள் பார்க்காத தமிழ் பூமியே எவ்வளவு இடம் இருக்கிறது? குண்டு சட்டிக்குள் குதிரை ஓட்டி விட்டு ஆகாய விமானத்தில் ஐரோப்பா வந்திருக்கிறோம். யாழ்ப்பாணம் வித்தியாசமான பூமிதான். தனக்குத் தேவை என்றால் எதையும் செய்யும். தனக்குத் தேவை இல்லை என்றால் அதைப் பற்றித் துப்பரவாகவும் அக்கறைப்படாது. சூறாவளி அடித்த போது "TS" ஊரில் இல்லை. நின்றிருந்தால் நிச்சயம் மட்டக்களப்பிற்குச் சென்றிருப்பார். அந்தச் சூறாவளிதான் பல யாழ்ப்பாணத்து மனிதர்களுக்கு மட்டக்களப்பு என்கின்ற தமிழ் பிரதேசம் இலங்கையில் இருப்பதை அறிமுகப்படுத்தியது. பின்பு யாவரும் அறிந்த யுத்தம்.

"அங்கை யாழ்ப்பாணம் மாதிரி இல்லை. சிங்களவங்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையில நாங்கள் அகப்பட்டுக் கிடக்கிறம். ஏதும் பிரச்சனை எண்டா அவன் ஆமியோடை வருவான். இவன் அருவாளோடை வருவான். மட்டக்களப்பு தமிழற்ற இடமா இருந்தும் இப்ப தமிழர் பயந்து பயந்து சாக வேண்டியதா இருக்கி. புலியள் வந்த பிறகுதான் அவங்கடை வைத்தியத்துக்குப் பயந்து அவை அடங்கிக் கிடக்கினம். கத்தியோடை வாறவனுக்கு எதிராக் கத்தியைத் தூக்கினாத்தான் அங்க வாழலாம். மற்றைய இயக்கங்கள் மாதிரி தத்துவம் பேசினால்த் தமிழர் சாம்பலாய்த்தான் போயிடுவினம். உந்த ஆக்கினைக்கு உள்ள இந்தப் பிள்ளைகளோடை இருக்க முடியாது எண்டுதான் வெளிக்கிட்டு வந்தம். ஆனா... வெளிநாட்டிற்கு வந்த பிறகுதான் எங்கடை நாட்டின்ரை அருமை தெரியுது. எவ்வளவு பிரச்சனை இருந்தாலும் நம்மடை நாடு சொற்கம்." என்றார் பரமேஸ்வரன்.

"TS" சிற்கும் மட்டக்களப்பில் நடந்த அனர்த்தங்கள் பற்றிய அறிவு இருந்தது. பெடியள் வேறு வழி இல்லாதே அவற்றைச் செய்தார்கள் என்பது அவர் எண்ணம். இருந்தும் அப்படியான செயல்கள் மேற்கு உலகில் எப்படியான அவிப்பிராயத்தை எங்கள் போராட்டத்தைப் பற்றி உண்டு பண்ணும் என்கின்ற அச்சம் அவரைக் குடையும். அதைச் சீர்துாக்கிப் பார்ப்பதற்கு எல்லோரும் தயங்குவதாய் அவருக்குத் தோன்றியது. தான் தனித்து ஒரு விடயத்திற்குள் தலையைக் கொடுக்க முடியாது என்பதோடு தனது பங்களிப்பு சரிஸ்காவை எண்ணி மிகவும் மட்டுப்படுத்தப்பட்ட அளவிலேயே இருக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டார்.

சரிஸ்கா போராட்டம் பற்றிக் கதைப்பது இல்லை. அவளோடு கதைத்தால் அவள் கோபத்தில் தத்தளிப்பாள். எதற்காக இந்தக் கோபம் என்பது "TS"சிற்கு விளங்கவில்லை. அவள் ஆயுதங்களையும், அதைக் கையில் வைத்து இருப்பவர்களையும், வன்முறையான ஆண்களையும் அறவே வெறுக்கிறாள். அதே வேளை அவள் எந்த ஆணையும் தன் அருகே அண்ட விடுவதும் இல்லை. அவள் சிலரிடம் தான் நம்புவது போல் நடிக்கிறாளா என்கின்ற சந்தேகம் "TS"சிற்கு வந்தது உண்டு. அவளில் மாற்றங்கள் உண்டாகும். காலம் காயத்திற்கு மருந்து இட்டுச் செல்லும் என்று "TS" முதலில் நினைத்தார். இப்போது அந்த நம்பிக்கை ஊசலாடுகிறது. அவளைப் புண்படுத்தாமல் காக்க வேண்டும் என்பதே அவரின் பெரும் கடமையாகத் தோன்றுகிறது. தான் உயிரோடு இருக்கும் வரைக்கும் அதை செய்துவிட்டுப் போவது என்று அவர் உறுதி பூண்டிருந்தார். அதன் பின்பும் விதி அவளுக்கு நல்லதாக அமைய வேண்டும் என்பது அவரது பிரார்த்தனை ஆகியது. அதை மறக்காது ஒவ்வொரு நாளும் துர்கையிடம் இறைஞ்சிப் பிரார்த்தித்துக் கொள்வார். துர்க்கை தயவு காட்டுவாளா?

"பல்லுக்குப் பல் எண்டு செய்யவும் கூடாது தான். அதே நேரம் கையைக் கட்டிக் கொண்டு இருந்தால் அழிஞ்சும் போயிடுவம். உந்த அதர்மங்களை எல்லாம் எப்பிடி முடிக்கிறது எண்டு கடவுளுக்குத் மட்டுமே தெரியும். நாங்கள் உரிமையைத்தானே கேட்டுப் போராடினம்? அதைத் தந்து எங்களை வாழ விட்டு இருக்கலாம். எந்தச் சிங்கள அரசுக்கும் அந்த இரக்கம் வந்ததே இல்லை. இனி வரப் போகிறதும் இல்லை. வடக்கில, கிழக்கில

அசைகிறது எல்லாம் எதிரி எண்டு நினைச்சுக் கொண்டு, சப்பாத்தாலும், தாங்கியாலும் எங்கடை பூமியை மிதிச்சுக் கொண்டு, ஆயுதத்தோடை வாறவனிட்டை ஒரு கன்னத்தில அறைஞ்சா மறு கன்னத்தைக் காட்டுவம் எண்டு யாரும் நினைக்க முடியாது? எங்கடை பெடியள் எதுவுமே செய்ய முடியாத கட்டத்திலயே ஆயுதம் தூக்கினவங்கள். அவங்கள் அதுக்கான ஒரு விடை கிடைக்காத வரைக்கும் ஆயுதத்தைக் கீழே வைக்கவும் மாட்டாங்கள். என்ன செய்கிறது... அழிவைத் தவிர்க்க முடியாது தான்." என்றார் "TS".

"பெடியள் ஆயுதத்தைக் கீழே வைச்சால் மட்டக்களப்பில தமிழரே இருக்க முடியாமல் போயிடும். என்னைப் பொறுத்த வரையில பெடியள் செய்கிறது முழுக்கச் சரி. அவங்கள் இல்லாட்டி எங்களைக் கேட்டுக் கேள்வி இல்லாமல் கொலை செய்வாங்கள். இயக்கம் எங்களுக்குக் காவற் தெய்வங்கள் மாதிரி. அவங்கள் ஊருக்க இருந்தால் எல்லையைத் தாண்டி எவனும் வரமாட்டான். என்னைப் பொறுத்தவரை என்னால ஏலுமான உதவிய நான் எப்பவும் அவங்களுக்குச் செய்து கொண்டுதான் இருப்பன்." என்றார் பரமேஸ்வரன்.

தேநீர் குடித்து முடிந்தது. "TS" ஆசனத்தை விட்டு எழுந்தார்.

"இருங்க அண்ணை என்ன அவசரம்?" என்றார் பரமேஸ்வரன்.

"இல்லை வீட்டில தேடுவினம். இன்னொரு நாளைக்கு வாறன். ஆறுதலா இருந்து கதைப்பம்." என்று கூறிவிட்டுத் தனது பைகளை எடுத்துக் கொண்டு வெளியே வந்தார். இருவரும் வாசல்வரை வந்து விடை கொடுத்தார்கள்.

"ஏன் எங்களுக்கு இந்தத் தண்டனை?" "TS"சிற்கு விடை தெரியவில்லை. கால்கள் பழக்கத்தை மீற முடியாது வீட்டை நோக்கி நடந்தன. போராட்டம் என்பது மனித பலவீனங்களின் முரண்பாடு மட்டுமே என்பது போல அவருக்கு ஒரு கணம் எண்ணத் தோன்றியது. அது சரியா என்கின்ற எண்ணம் அடுத்த கணமே தோன்றியது.

# 17 புரியாத அன்னியர்கள்

சரிஸ்கா இன்று வீட்டிற்கு வந்த வரத்தே சரி இல்லை. அவள் என்ன வெப்பியாரத்தில் வந்து இருக்கிறாள் என்பது தெரியாது புவனலோசினி பல்லுக்குள் நோவதாக வந்ததும் வராததுமாய் அவளிடம் கூறினாள். அவ்வளவுதான் அவள் சட்டென இப்படி வெடிப்பாள் என்று யாரும் எதிர்பார்க்கவில்லை. "பல்லுக்க நொந்தா எனக்கு என்ன... பல்லைப் பேர்த்துப் போடுவன். இவவுக்கு ஒரு கண்டறியாப் பல்லுநோ." என்று பெண் சிங்கமாகக் கர்ச்சித்துவிட்டு அவள் தனது அறைக்குள் புயலாகச் சென்று விட்டாள். "TS"சிற்கு அதைக் கேட்க முதலில் சிரிப்பு வந்தது. ஆனால் அதைக் கேட்டுப் புவனலோசினி சிரிக்கமாட்டாள் என்பதை எண்ணக் கவலை வந்தது. சரிஸ்காவுக்கு என்ன நடந்தது என்பது புவனலோசினிக்குத் தெரியாது. அப்படி மகள் பேசியதை அவளால் தாங்க முடியவில்லை. கோலிற்குள் வந்த புவனலோசினி "TS"சிற்குப் பக்கத்தில் இருந்து தேம்பித் தேம்பி அழுதாள். சரிஸ்காவும் நிச்சயமாக அழும் கவலையிலேயே வந்து இருப்பாள். அதை அம்மா மீது கோபமாகக் காட்டிவிட்டுச் சென்று இருக்கிறாள் என்பது "TS"சிற்கு விளங்கியது. அம்மாவால் மாற முடிந்தது போல் தன்னால் மாற முடியவில்லையே என்கின்ற கவலை அவள் அடிமனதில் இருக்கலாம். அவள் நினைத்தாலும் அவளை மாற விடாது அவளது மனமே அவளுக்குச் சத்திராதியாக வேலை செய்கிறது. "TS"சிற்கு முதலில் என்ன செய்வது என்று விளங்கவில்லை. பின்பு புவனலோசினியைத் தன்னோடு சாய்த்து அணைத்தார். தனது கையால் அவளது தோள்மூட்டை அழுத்தினார். அந்த அழுத்தலில் நான் இருக்கிறேன் உனக்கு என்கின்ற ஆறுதலை அவள் பெற வேண்டும் என்று அவர் எதிர்பார்த்தார். அவரின் சொல்லுருப் பெறாத எதிர்பார்ப்புகளையும் மீறிப் புவனலோசினி அழுதாள்.

"அழாத புவனா… அழாத… அவள் ஏதோ பிரச்சனையில வந்தவள் ஆக்கும். நீ விஷயம் தெரியாமல் வந்ததும் வாயக் குடுத்திட்டாய். அதுதான் அப்பிடி பாய்ஞ்சு இருக்கிறாள். ஆறுதலா வரட்டும்... கதைப்பம். அவள் சின்னப் பிள்ளை தானே? இன்னும் பழசை மறக்க முடியாமல் திண்டாடுகிறாள். அவள் எங்களை விளங்கிக்

கொள்ளுவாள் எண்டுகிறதை விட நாங்கள் தான் அவளை விளங்கிக் கொள்ள வேணும்." என்று விளக்கம் கொடுத்தார் "TS".

"அவவுக்குக் கோபம் எண்டா அம்மா எண்டு ஒரு மட்டு மரியாதை இல்லையே? எல்லாம் என்ரை தலை விதி. நான் அப்பவே செத்துப் போய் இருக்கலாம்." என்றாள்.

"என்ன கதை கதைக்கிறாய்? அவள்தான் சின்னப் பிள்ளை எண்டா நீயும் இப்பிடியே கதைப்பாய்? இரண்டு பேரும் பாய்ஞ்சியள் எண்டா நான் எங்கையும் சன்னியாசம் தான் போக வேணும்." என்றார் "TS". அவருக்குத் தலை வியர்த்தது. கைகள் நடுங்கின. எவ்வளவோ சந்தோசமாய் இருந்திருக்க வேண்டிய தனது வாழ்க்கை ஏன் இப்படிப் போனது என்கின்ற கவலை உண்டாகியது. வாழ்க்கை திசை மாறிப்போய் இருக்கலாம். அதற்காகத் துன்பக் கடலிலேயே அமிழ்ந்து போய்விட வேண்டும் என்றல்ல... அதை ஏன் இவர்கள் விளங்கிக் கொள்கிறார்கள் இல்லை என்கின்ற அரிகண்டம் வந்தது. உயிரான அவர்களை "TS"சால் ஒரு கணம் கூட வெறுக்க முடியாது. என்றாலும் கோபம் வருகிறது. அரிகண்டமாய் இருக்கிறது. மனம் நிம்மதி அற்று அலைகிறது. சன்னியாசம் என்பது பிரச்சனைகளில் இருந்து தப்பித்து ஓடுவதா? அது உண்மையான சன்னியாசம் ஆகுமா? கோளையாகத் தப்பி ஓடுவதால் மேலான ஞானத்தைப் பெற்றுவிட முடியுமா? நீங்கள் எக்கேடாவது கெட்டுப் போங்கள். எனக்கு நிம்மதி வந்தால் போதும் என்கின்ற ஓட்டத்தில் ஞானமோ அமைதியோ கிடைக்குமா? நல்ல ஒரு அப்பாவால், நல்ல ஒரு கணவனால் அப்படி நடுக் கடலில் தவிக்கவிட்டுப் போக முடியாது. அது ஞானம் தேடும் சன்னியாசம் இல்லை. குடும்பத்திற்குச் செய்யும் துரோகம். "TS"சால் துரோகம் செய்ய முடியாது. அதைச் செய்யும் வல்லமையும், சுயநலமும் அவரிடம் இல்லை.

"சொறி அப்பா... நான் உங்களைக் கவலைப்படுத்த வேணும் எண்டு சொல்ல இல்லை. அவள் இப்படிப் பாய்ஞ்சா மனது பொறுக்குது இல்லை. ஊட்டி ஊட்டி வளர்த்துவிட எட்டி உதைக்கிற மாதிரி இருக்குது இப்ப." என்றாள் புவனலோசினி.

"நீ அவளின்ரை கஸ்ரம் விளங்காமல் அவளிட்டை இருந்து எதை எதையோ எதிர் பார்க்கிறாய். அதுதான் உன்னால

பொறுக்க முடிய இல்லை. அவளுக்கு என்ன கவலையோ? என்ன கஸ்ரமோ? எங்களுக்குத் தெரிஞ்சது கொஞ்சம்தான். எல்லாராலும் கொடுமையை ஜீரணிக்க முடியாது. அவள் மனது அப்பிடி. மறக்க வேண்டியதை மறக்காமல் வைச்சுக் கொண்டு அந்தரப்படுகிறாள். மற்றவை அவளின்ரை மனசை விளங்கிக் கொள்ளமாட்டினம். நாங்கள் ஆவது அவளை விளங்கிக் கொள்ள வேணும். சரி நாங்கள் அவளோடை இதைப் பற்றி ஆறுதலாக் கதைப்பம். நீ ஒரு ரீ போடு. நான் கொண்டு போய் அவளுக்குக் குடுக்கிறன்." என்றார் "TS".

புவனலோசினிக்குத் தானும் அந்த நேரத்தில் செத்துப் பிழைத்தேன் என்கின்ற கவலை அழுகையாக வந்தது. அவள் அதை "TS"சிடம் தற்போது காட்ட விரும்பாது முகத்தைத் திருப்பிக் கொண்டாள். அவளுக்குத் தன்னை யாரும் விளங்கிக் கொள்ளவில்லை என்பது போல இருந்தது. இருந்தும் தன் கஸ்ரத்தைவிடச் சரிஸ்காவின் கஸ்ரம் பெரியது என்பதை அவளால் ஒத்துக் கொள்ள முடிந்தது. அவள் எழுந்தாள். தலை முடியை அள்ளி முடிந்தாள். பின்பு சமையல் அறையை நோக்கிச் சென்றாள். "TS" அவளை பார்த்துக் கொண்டு இருந்தார்.

புவனலோசினி இளமையில் மிகவும் அழகாய் இருந்தாள். அதுவும் தலை முடியை அள்ளி முடிந்து நீளமான நிர்வாணப் பின் கழுத்தை இரசனைக்குத் தரும் போது நரம்புகள் எந்தக் கட்டுப்பாட்டையும் மீறி முறுக்கு ஏறும். அப்போது அவர் அவளோடு எலிகளைப் போல வளைய வந்தார். அது இளமை வேதனை தணியாத இன்பமான காலம். இயற்கை நிர்ணயித்த மனிதன் புரிந்து கொள்ளாத வினை. அதுவே வாழ்க்கை முழுவதும் வியாபித்து இருக்கலாம். இடையிலே புயலில் சிக்கிய கப்பலாய் வாழ்க்கை பல காரணங்களால் திசை மாறிவிட்டது. எங்கெங்கோ அது இழுத்துச் செல்லப்பட்டு இங்கே கடைசியாக கரை தட்டிற்று. அமைதி திரும்பி வந்து விட்டது. வானம் வெளித்து விட்டது என்று எண்ணும் போது இடைக்கிடை கார்மேகம் மலையாக ஆதவனை மறைத்து ஞாலத்தை விழுங்கக் குவிகிறது. அதில் இருந்து மின்னலாய் வெட்டி இடியாய் முழங்குகிறது.

"எழுதிச் செல்லும் விதியின் கை எழுதி எழுதி மேற் செல்லும்

அழுதாலும் தொழுதாலும் அதில் ஒரு சொற்கூட மாறாதே"

அந்த வரிகளில் எத்தினை உண்மை என்று "TS"சிற்குத் தோன்றியது. நாங்கள் எப்படி நின்றாலும் விதியில் என்ன எழுதி இருக்கிறதோ அப்படித் தான் நடக்கும் என்பது போல் அவருக்குத் தோன்றியது. துர்க்கையாய் இருந்தால் என்ன கந்தனாய் இருந்தால் என்ன மனித விதியை மாற்ற முடியாத தெய்வங்களாய் "TS"சிற்கு இன்று அவர்கள் தோன்றினார்கள். அவர்களால் எதுவும் செய்ய முடியவில்லை. துர்க்கையின் பக்தனான தனக்கு இப்படி ஒரு தண்டனை கிடைக்கும் என்று அவர் கற்பனை செய்து இருக்கவில்லை. அவருக்குக் கிடைத்த தண்டனையை அந்தத் துர்க்கையால் மாற்ற முடியவில்லை. அவள் கல்லாய் சமைந்து இருந்தாள். கதறல்கள் அவள் காதிற்குள் கேட்டும், கல்லாய் சமைந்திருந்தாள். கலியுகத்தில் தான் சிறிதும் அசைவதில்லை என்று அசையாது கற்சிலையாகச் சமைந்திருந்தாள். உடல்கள் சிதற, இரத்தம் பொங்க, துகில்கள் உரிய, பிசாசுகள் வலம்வர, உறை நிலை மாறாது உருவப் பொம்மையாக அசையாது பார்த்து இருந்தாள். கந்தன் என்ன? கணபதி என்ன? சுடலைப் பொடி பூசிய சொற்கன் என்ன? அனந்த சயனத்துப் பெருமாள் என்ன? கல்லாய், கலியுகக் கடவுளாய், அவர்கள் கண்ணை இறுக்கமாக மூடியிருக்கக் கலியின் கொடுமையைத் தன் குடும்பமும் அனுபவிக்கும் காலம் வரும் என்கின்ற கற்பனைகூட "TS"சிடம் இருந்தது இல்லை. இருந்து இருந்தால் கடவுள்கள் மாற்ற முடியாத விதியை தான் ஆவது மாற்றத் தலைகீழாக நின்று முயன்றிருப்பார். அது மாற்ற முடியாத கடந்த காலம். இப்போது வேறு கதை தொடர்கிறது. இதிலும் அரிச்சந்திரனின் சோதனை போன்ற மயான காண்டம் மட்டற்று நீள்கிறது.

தேநீர் வைக்கச் சென்ற புவனலோசினிக்கு "TS"சை எண்ண ஒரு கணம் பரிதாபமாய் இருந்தது. பறைக்கு ஒரு பக்கம் என்றால் மத்தளத்திற்கு இரண்டு பக்கமும் அடி. "TS"சிற்கு இரண்டு பெண்களிடமும் இருந்து வரும் குமுறல்கள் இரண்டு பக்கமும் மூச்சுவிட முடியாத அவஸ்தையை உண்டு பண்ணும். எவ்வளவு காலத்திற்கு அவராலும் பொறுமையாக இருக்க முடியும்? ஒரு நாளைக்கு வெடித்து விட்டால் இருப்பதும் இல்லை என்று அல்லவா ஆகிவிடும். என்ன சுதந்திரம் இருந்தாலும் குடும்பம் என்கின்ற உறவு இல்லாது தனித்த ஓநாய்களாய் வாழ்வது இல்லையே மனிதர்கள் என்கின்ற விலங்குகள். அதில் இப்படியான

சில்லறை விடயங்களுக்காகச் சலனத்தை உண்டு பண்ணக் கூடாது. இனி நான் கவலைப்பட்டாலும் அவரை எதற்காகவும் கவலைப்பட வைக்கக் கூடாது. சரிஸ்கா எதையாவது சொல்லிவிட்டுப் போகட்டும். அவளுக்கு அந்த வயதில் அப்படியான கொடுமை ஏற்பட்டது பெரும் நரகம் தான். அதை அவள் மறக்க முடியாது உள்வதும் உளம் அறிந்த உண்மை தான். உண்மை அப்படி இருக்கும் போது நான் அவள் மீது கோவப்படுவது எப்படி நியாயம் ஆகும் என்று புவனலோசினி தனக்குள் ஒரு விசாரணை நடத்தினாள்.

பெண்களுக்குப் போதி மரங்களிலேயே பிரதான போதி மரம் சமையல் அறை தான். புவனலோசினி போதியின் கீழ் அமைதி அடைந்தாள். தேநீர் தயாரித்துக் கொண்டு மீண்டும் கோலிற்குள் புகுந்தாள். அவள் நடையிலும் பார்வையிலும் இப்போது அமைதியும், நிதானமும் குடி வந்து இருந்தது. மறந்து, மன்னித்த செயலில் மகிழ்ச்சி பொங்கியது. தனது ஒரே செல்வம் கோபத்தில் செய்ததை, சொன்னதை இனிப் பொருட்படுத்தக் கூடாது என்கின்ற தெளிவு பிறந்து இருந்தது. புவனலோசினி கோலிற்குள் வரும் போது "TS" தொலைக்காட்சி பார்க்கத் தொடங்கி இருந்தார். இப்போது அவர் மனநிலையும் வளமைக்குத் திரும்பி இருக்கும் என்கின்ற நம்பிக்கை வந்தது. தேநீரைச் சோபா மேசையில் வைத்த புவனலோசினி,

"ஆற முதல் கொண்டு போய் குடுங்கப்பா." என்றாள். தொலைக்காட்சியில் இருந்து கவனத்தை திருப்பிய "TS",

"ஓம்." என்றுவிட்டுத் தேநீரை எடுத்துக் கொண்டு சரிஸ்காவின் அறையை நோக்கிச் சென்றார். சரிஸ்காவின் அறைக்குள் செல்ல முன்பு செய்ய வேண்டிய கிரிகைகள் எல்லாம் செய்து முடித்து உள்ளே சென்றார். அவள் மென்பொருள் எழுதும் மென்பொருளில் ஏதோ எழுதினாள். அதற்காகப் புத்தகங்கள் வாங்கி வந்து வாசிப்பது அவளின் தற்போதைய வழக்கம். இன்றும் அந்தப் புத்தகத்தில் ஒன்று மேசையில் கிடந்தது. வந்த போது இருந்த கோபம் தொலைந்து சாந்தம் பரவிய முகம். அதைப் பார்த்ததும் "TS"சால் விளங்கிக் கொள்ள முடிந்தது.

"இந்தா... ரீயக் குடி. பிறகு கையக் கழுவிப் போட்டுச் சாப்பிட வா. உனக்கு இருக்கிற பிரச்சனை எனக்குத் தெரியும். ஒவ்வொரு மனிசருக்கும் நிறையப் பிரச்சனை

இருக்குது. அதை மற்றவையில காட்டுகிறதுக்கு எங்களுக்கு எந்தத் தார்மீக உரிமை இருக்குது எண்டதை நாங்கள் நல்லா யோசிச்சுப் பார்க்க வேணும். அம்மா உன்னோடை வந்து பகிடி விடேல்லை. தாங்க முடியாத வேதனை எண்டு தான் சொன்னவா. "empathy" பற்றி உனக்கு நல்லாத் தெரியும். அவையின்ரை நிலையில உன்னை இருத்திப் பார்க்க வேணும். "ethics" உனக்கு முக்கிய பாடம். அப்ப அம்மாவுக்கு குடுக்க வேண்டிய மரியாதை உனக்கு விளங்கும். மொத்தத்தில மனித உணர்வுகள் உனக்கு விளங்காத விசயம் இல்லை. உன்னை யாரும் இம்சித்தால் நீ மற்றவையை இம்சிக்க வேணும் அல்லது அப்பிடிச் செய்கிறதுக்குத் தகுதியானவள் நீ எண்டு இல்லை. அது முறையும் இல்லை. நல்ல பண்பும் இல்லை. அம்மா பல்லுக் கொதிக்குது எண்டு எனக்கு ஏற்கனவே சொன்னவா. தான் எதுக்கும் எடுத்த உடன கொம்பிளையின் பண்ணாமல் நல்லாத் தெரிஞ்சு கொண்டு சொல்லுவம் எண்டு விட்டிட்டா. இப்ப வேதனை கூடிட்டுது. அது தான் தன்ரை வேதனையில நீ எப்பிடி வருவாய் எண்டு யோசிக்காமல் கேட்டிட்டா. சரி அம்மா தான் கேட்டாலும் நீ பொறுத்துப் போயிருக்க வேணும். அப்பிடி பாயக் கூடாது. அது உன்னுடைய படிப்பிற்கும் வேலைக்கும் அழகில்லை. நான் சொல்லுகிறது சரியா?" என்றார் "TS".

"வேலையில ஒருத்தன் குழப்பிப் போட்டான். கலியாணம் கட்டாமல் ஒரு பெம்பிளை இருக்க முடியாதா அப்பா? அவன்ரை பார்வையும் ஆளும்... அப்பிடி யாரும் இருந்தா உடன வெளியால போவமா எண்டு கேட்கிறதா? நீங்களும் உங்கடை குப்பைக் கலாச்சாரமும். நாங்கள் அப்பிடி எல்லாம் வெளியில போகிறது இல்லை எண்டு பேசிப் போட்டன். நான் பேசினது பாமரத்தனமாக இருக்கலாம். இங்கை அது பிழையான விஷயம் எண்டும் எனக்குத் தெரியும். என்னுடைய இயலாமை அதுக்குக் காரணம் எண்டும் எனக்குத் தெரியும். நான் கொஞ்சம் பண்பாய் காய் வெட்டி இருக்கலாம். ஆனா... எனக்கு வந்த கோவத்திற்கு அதைவிட வேறை ஒண்டும் செய்ய தெரிய இல்லை. என்னாலை கோபத்தை அடக்க முடியேல்லை. ஏதாவது கையிக்க அகப்படுகிறதை எடுத்து எறிய வேணும் போல இருந்திச்சுது. நான் அப்பிடிச் செய்யேல்லை. பேசாமலும் என்னால இருக்க முடியேல்லை.

எல்லாம் தெரிஞ்ச பெரிய மனிசர் எண்டு முதல்ல தொடங்கி ஒரே கதையில வந்து நிற்ப்பினம். அப்ப என்ன செய்ய முடியும்? எப்பவும் தங்கடை கலாச்சாரம் பெரிசு எண்ட நினைப்பு அவைக்கு. அந்தக் கலாச்சாரத்தில, அரசியல் பின்னணியில, வாழ முடியாது எண்டுதானே இங்க ஓடி வந்தவை. இங்க வந்தும் பெம்பிளையள் எண்டாக் கிள்ளுக் கீரை எண்டுகிற மனப்பான்மை மாத்திரம் மாறவே இல்லை.

அதே மாதிரியே வேறை கலாச்சாரப் பெம்பிளையள் எண்டாத் தங்கடை நாட்டில அடிமையா வைச்சிருக்கிற மாதிரி இங்கையும் வைச்சிருக்கலாம் எண்ட நினைப்பு. நாங்களும் நிக்கா போட்டுக் கொண்டு குட்டு வாங்குவம் எண்ட நினைப்பா? இது முதல் தரம்... பேச்சோடை தப்பீட்டார். அடுத்த முறை ஏதாவது கதைச்சால் ஒண்டில் அவன் வேலை செய்ய வேணும் இல்லாட்டி நான் வேலை செய்ய வேணும். அடுத்த முறை டொக்ரரோடை கதைச்சு ஒரு முடிவுகட்டாமல் விடமாட்டன்." என்றாள் சரிஸ்கா.

"அது சரி... வெளியில வேலைக்குப் போனா இப்படித்தான் ஆயிரம் பிரச்சனை வரும். அதை வீட்டை எடுத்துக் கொண்டு வரக் கூடாது. அது தான் பிழை. இனிமேலைக்கு ஏதாவது பிரச்சனை எண்டா அதை வெளியாலையே விட்டிட்டு வரப்பார். வீட்டை கொண்டு வந்தால் உனக்கும் பிரச்சனை... எங்களுக்கும் பிரச்சனை. எல்லாற்ற நிம்மதியும் குழம்பிப் போயிடும். உனக்குக் கஸ்ரமாய் இருக்கும் எண்டது எனக்குத் தெரியும். முயற்சி செய்து அப்பப்ப அதை மறந்துபோட்டு வீட்டை வா. உனக்கு உதவி, ஆலோசனை தேவை எண்டாக் கேள். உந்தக் கோபத்தை மாத்திரம் இங்க கொண்டு வராதை. கொண்டு வந்தாலும் அம்மாவில அதைக் காட்டாதை. அம்மாவும் கஸ்ரப்பட்டவா. உனக்கே அது நல்லா விளங்கும். ஏலாமல் இருந்தால் உன்ரை ரென்சனைக் குறைக்க என்ன செய்கிறது எண்டு டொக்ரரிட்டைக் கேட்டுப் பார். அல்லது வாசிச்சு அறிஞ்சு கொள்." என்றார் "TS".

"சொறி அப்பா. கோபத்தில அப்பிடிப் பாய்ஞ்சிட்டன். என்ரை வாயைச் சில வேளைக் கட்டுப்படுத்த முடியாமல் போகுது. யாரை எண்டாலும் பேச வேணும் எண்ட மாதிரி வெறி வருகுது. அம்மா பாவம் தான். நான் தான் சுயம் இல்லாதவள் எண்டு தெரியும் தானே? நான்

மொக்குத்தனமாய் பேசிப் போட்டன். நான் சொறி சொல்லுகிறன். அம்மா பாவம்." என்றாள் சரிஸ்கா.

அவள் "TS"சின் பதிலுக்குக் காத்திராது தாயைத் தேடிச் சென்றாள். "TS" திருப்தியோடு அவளது அறையை விட்டு வெளியே வந்தார். தாயைத் தேடிக் கோலுக்குச் சென்றவள் அம்மாவின் பக்கத்தில் இருந்து அவளைக் கட்டிப் பிடித்துக் கொண்டாள். தாய் என்றும் சேய்க்கு மிகவும் நெருக்கமானவளே.

தொடரும்...